ஸ்ரீ சிற்சபேசாய மங்களம்

சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோயில்

# ஸ்ரீ சிவகாமி அம்பாள் திருக்கோயில்





## திருக்கும்பாபிஷேக மலர்

6-2-1972

(3)

சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோயிலில் அமைந்துள்ள

## ஸ்ரீ சிவகாமி அம்பாள் திருக்கோயில்

# கும்பாபிஷேக




*திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் 26-ஆம் குருமகாசந்நிதானம்*

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

அவர்களால் வெளியிடப்பெற்றது

4-2-1972

விலை ரூ. 2

63-1

உ

சிவாயநம:

சித்ஸபேசாயமங்களம்

சிதம்பரம் ஸ்ரீ நடராஜப்பெருமான் ஆலயத்தில் விளங்கும்

ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்பிகை திருக்கோயில்

# ஜீர்ணோத்தாரண மஹா கும்பாபிஷேக

## கமிட்டி உறுப்பினர்கள்

போஷகர்கள் :

ஸ்ரீலஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள்
சங்கராசார்ய ஸ்வாமிகள்

,, சிருங்கேரி சங்கராசார்ய ஸ்வாமிகள்

,, தருமபுரம் ஆதீனம் ஸ்வாமிகள்

,, திருவாவடுதுரை ஆதீனம் ஸ்வாமிகள்

,, திருப்பனந்தாள் ஆதீனம் ஸ்வாமிகள்

,, குன்றக்குடி ஆதீனம் ஸ்வாமிகள்

டாக்டர் ராஜா M. A. முத்தய்யாச் செட்டியார் அவர்கள்,
செட்டிநாடு.

திருப்பணி குழுத் தலைவர்

திரு N. M. பொன்னம்பலம் பிள்ளை அவர்கள்,
கஸ்தூரிபாய் கம்பெனி.

உதவி தலைவர்கள் :

திரு வைத்தி சுப்பிரமணிய அய்யர், சென்னை.

,, R. கனகசபை பிள்ளை, பிரஸிடெண்டு, தமிழ்நாடு சென்ரல்
கோவாப்ரேட்டிவ் பேங் லிமிடெட், சென்னை.

,, K. கனகசபை பிள்ளை, பிச்சைக் கட்டளை எஸ்டேட்,
திருக்கடையூர்.

,, அறப்பணிச்செல்வர் டாக்டர் K. அரங்கசாமி பிள்ளை.

,, டாக்டர் நடராஜ ஜடாவல்லபர்.

,, டாக்டர் M. நடராஜன், சென்னை.

செக்ரட்டரி & டிரஷரர் :

திரு S. R. பாலசுப்ரமணியம் செட்டியார்,
ஸ்ரீ நடராஜ ஜுவல்லரி, சிதம்பரம்.

## உதவி செக்ரட்டரிகள் :

திரு R. சம்பந்தம் பிள்ளை, வடக்குவீதி.
,, K. பழனி முதலியார், வாணி பார்மஸி.
,, K. சுவாமிநாதன், பி.எஸ்ஸி., பி.டி., தலைமை ஆசிரியர், ஆறுமுகநாவலர் உயர்நிலைப்பள்ளி.
,, S. திருநாவுக்கரசுப் பிள்ளை, கனகசபை நகர்.

## ஆலோசனைக் குழு உறுப்பினர்கள் :

### ஸ்ரீ சபாநாயகர் கோயில் நிர்வாகக் குழு உறுப்பினர்கள்

திரு சிரோமணி T. துரைசாமி ரத்தின தீக்ஷிதர், செக்ரட்டரி.
,, ச. சிவசுப்பிரமணிய தீக்ஷிதர், உதவி செக்ரட்டரி.
,, வெ. சபாநாத சோமபூஷண தீக்ஷிதர்.
,, ரா. ஐ. ஆனந்த நடராஜ தீக்ஷிதர், M. A.,
,, நி. த. நிர்தராஜ தீக்ஷிதர்.
,, நி. பாலதண்டாயுத தீக்ஷிதர்.
,, ந. ஸபாநந்த நடராஜ தீக்ஷிதர்.
,, வெ. குருமூர்த்தி தீக்ஷிதர்.
,, சு. ச. ஸ்ரீமூல தீக்ஷிதர்.

## உறுப்பினர்கள் :

திரு டாக்டர் P. S. வெங்கடேசம்பிள்ளை.
,, டாக்டர் இரத்தினவேல் சுப்பிரமணியம், சென்னை.
,, டாக்டர் M. K. சுப்பிரமணிய அய்யர், குடந்தை.
,, G. வாகீசம் பிள்ளை, தலைவர் மத்திய வீடுகட்டும் கூட்டுறவு வங்கி, சென்னை.
,, R. ராமலிங்கம் பிள்ளை, கனகசபை நகர்.
,, A. K. தாண்டவம் செட்டியார், ''ஜுவல்லரி'' ஆபரண மாளிகை.
,, மஹாலிங்கம், தொழில் அதிபர் பொள்ளாச்சி.
,, மனைத்துணைநாத தேசிகர், வலிவலம்.
,. M. சுப்பராயப் பிள்ளை
,, V. M. ராஜாங்க நாடார், தில்லை டாக்கீஸ்.
,, A. பாலசுப்பிரமணிய அய்யர், ஆடிட்டர்.
,, தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், மதுரை.
,, T. M. நாராயணசாமி பிள்ளை, திருச்சி.
,, A. K. சிதம்பரம் செட்டியார், கிருஷ்ண ஜுவல்லரி.
,, ஜி. கல்யாணம் பிள்ளை, கோவை.
,, டாக்டர் V. K. சிங்காரம் பிள்ளை.

## மலர் வெளியீட்டுக் குழுவினர்

1. திரு. N. M. பொன்னம்பலம் பிள்ளை அவர்கள்
2. Dr. S. நடராஜ ஜடாவல்லபர் அவர்கள்
3. திரு S. R. பாலசுப்ரமணியம் அவர்கள்
4. திரு T. துரைசாமிரத்ன தீக்ஷிதர் அவர்கள்
5. Dr. K. அரங்கசாமிப் பிள்ளை அவர்கள்
6. வித்துவான் திரு. K. வெள்ளைவாரணன் அவர்கள்
7. திரு. R. சம்பந்தம் பிள்ளை அவர்கள்
8. திரு K. சுவாமிநாதன், அவர்கள்
9. வித்துவான் திரு. T. S. நடராசன் அவர்கள்

63-A

# பதிப்புரை

பொன்னம்பலக் கூத்தனின் ஆனந்தத் திருநடனத்தை உடனிருந்து அனுபவித்து வருபவள் அன்னை சிவகாமவல்லி. இதைக் குமரகுருபரர் கூறும்போது அம்பலக் கூத்தனை ஆனந்தத் தேன் சொரியும் கரும்பாகவும், சிவகாம வல்லியை அக்கரும்பை விரும்பி உண்ணும் பெண் யானை யாகவும் கண்டு மகிழ்கிறார். இவ்வன்னை தாம் பெற்ற இன்பத் தேனை குழந்தைகளாகிற உயிர்களுக்கு வாங்கி வழங்குகிறாள்.

இத்தகைய பேருபகாரம் செய்கிற அன்னைக்கு இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்தில் தனிக்கோயில் எழுப்பப் பட்டது. தண்ணருள் சுரக்கும் அம்பிகையின் திருக்கோயில் ஓவியம், சிற்பம், நாட்டியம் ஆகிய கலைகளுக்கும் நிலைக்களனாக விளங்கி வருகிறது. அம்பிகையின் திருவருள் கூட்டுவிக்க இத்திருக் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் செய்ய வேண்டும் என்ற நல்லுணர்வு தில்லை வாழந்தணர்கள் மற்றும் அன்பர்கள் பலர் உள்ளத்தில் தோன்றியது. அத்திருக் கூட்டத்தார் அமைத்த தொண்டர் குழுவில் அடியேன் தலைவனாகயிருக்கும் பேறுகிடைத் தமைக்கு அம்பிகையின் திருவருளைப் போற்றுகின்றேன்.

இக் கும்பாபிஷேகத்திற்குப் பொன்னையும், பொருளையும் வழங்கியவர் பலர். அந்தணரும் கைவினைஞரும் அரும்பணி யாற்றியுள்ளனர். ஆதீன கர்த்தர்களும், அருளாளர்களும் அரசினரும், அறநிலையத்தாரும் பலவகையிலும் உதவி புரிந்துள்ளனர். அனைவருக்கும் கும்பாபிஷேக விழாக்குழு வினரின் சார்பில் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

விழாக்குழுவினர் இக் கும்பாபிஷேகத்தை ஒட்டி மெய்யன்பர்கள் பலரின் கட்டுரைகளைத் தொகுத்து ஒரு மலர் வெளியிட வேண்டுமென்று உறுதி செய்தனர். இம் மலரைத் தயாரிக்கும் பெரும் பொறுப்பை ஏற்ற தவத்திரு ஆறுமுக நாவலர் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர் திரு. க. சுவாமிநாதன் B. SC., B. T., அவர்களுக்கும், இம்மலர் நல்ல முறையில் வெளி வருவதற்கு அருளாசி வழங்கிய அருளாளர்களுக்கும், வாழ்த்துச்செய்தி அனுப்பிய நல்லோர் களுக்கும், கட்டுரைகளையும் கவிதைகளையும் வழங்கிய பெரி யோர்களுக்கும், அவ்வப்பொழுது தக்க ஆலோசனைகளைக் கூறியும் வேண்டிய உதவிகளைச் செய்தும் மலரை மணம் கமழச்செய்த அறப்பணிச் செல்வர் டாக்டர் K. அரங்கசாமிப் பிள்ளை அவர்களுக்கும், மலர் கைப்பிரதிகளைத் திருத்தியும் செப்பம் செய்தும் நல்லதொரு பதிப்பாக வெளிவருவதற்குப் பேருதவி புரிந்த அண்ணாமலைப் பல்கலைக்கழக தமிழ்ப் பேராசிரியர் திருமுறை ஆராய்ச்சிக் கலைஞர் திரு. க, வெள்ளைவாரணனார் அவர்களுக்கும், தவத்திரு ஆறுமுகநாவலர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் திரு. து. சோ. நடராசன் அவர்களுக்கும் மலர்க் குழுவில் உறுப் பினர்களாகப் பணியாற்றிய மற்ற உறுப்பினர்களுக்கும் விளம்பரங்களைச் சேகரித்துத் தந்த நண்பர்களுக்கும் விளம்பரங்கள் கொடுத்துதவிய அன்பர்களுக்கும், புகைப் படங்களும், பிளாக்குகளும் கொடுத்துதவிய தருமையா தீனம் ஞானசம்பந்தம் அச்சகத்தாருக்கும் மாயவரம் திரு. N. இராமகிருஷ்ணன் அவர்களுக்கும் என் இதயம் கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இம் மலரை குறுகிய காலத்தில் அழகிய முறையில் அச்சிட்டு குறித்த காலத்தில் வெளிவர உதவி செய்த சிதம்பரம் அழகு அச்சக உரிமையாளர் திரு. ப. இராதா கிருட்டினன் அவர்களுக்கும் என் நன்றி உரியதாகும்.

இங்ஙனம்

**N. M. பொன்னம்பலம் பிள்ளை**

விழாக்குழுத் தலைவர்

1891-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 12-ஆம் தேதி நடைபெற்ற
கும்பாபிஷேகப் பத்திரிகையின் பிரதி



உ

திருச்சிற்றம்பலம்.

## சிதம்பரம் ஸ்ரீசித்ஸபா மகா கும்பாபிஷேக சித்விலாஸ பத்திரிகா சங்கிரகம்



இப்பூவுலகத்திலே விராட்புருடனுடைய இருதயகமலமாய்ச் சிறப்புற்றோங்கி விளங்கும் மகாமகிமை பொருந்திய ஸ்ரீ சிதம்பர க்ஷேத்திரத்திலே, ஸ்ரீமதகண்ட பரிபூரண சச்சிதானந்த சிதாகாச சின்மயதேஜோருபியாய் விளங்கி, ஆன்மாக்களுய்யும் பொருட்டுச் சிவகாமியம்மையாரோடு அநவரதமும்பஞ்சகிருத்திய திருநடனஞ் செய் தருளா நின்ற ஸ்ரீ நடராஜ பெருமான் எழுந்தருளியிருக்கும் சித் ஸபைக்கும், கனகசபை, திருமூலஸ்தானம் முதலியவைகளுக்கும் அடியிற்கண்ட விவரப்படி கும்பாபிஷேக மஹோத்ஸவம் நடக்கப் போவதால், சிவபக்த சிரோமணிகளனைவரும் அக்காலத்து வந்திருந்து அம்மஹோஸ்வ தரிசனஞ்செய்து பரமானந்த பரிதாரம்படி தெரிவிக்கின்றோம்.

கும்பாபிஷேக மகோத்ஸவ விவரம் :—

| | |
|---|---|
| விகிர்தி௵ பங்குனி௴ ௨௭௳ 1891௵ ஏப்ரல்௴ 8௳ | திருமூலஸ்தானம், சிவகாமி அம்மன் பரிவாரங்கள் இவைகளுக்குக் கடஸ்தாபனமும் சிவயாககிரியாரம்பமும் |
| பங்குனி௴ ௨௮௳ ஏப்ரல்௴ 9௳ | மகாமகிமை பொருந்திய சித்ஸபை கனகசபைகளுக் குக் கடஸ்தாபனமும், சிவயாக கிரியாரம்பமும். |
| கர௵ சித்திரை௴ ௧௳ 1891௵ ஏப்ரல்௴ 12௳ | திருமூலஸ்தானம், சிவகாமியம்மையார், பரிவாரங்கள் இவைகளுக்குக் கும்பாபிஷேகம். |

| | |
|---|---|
| சித்திரைமீ சாஉ<br>ஏப்ரல்மீ 15உ | மகாமகிமை பொருந்திய சித்ஸபை கனகசபை சம்புரோக்ஷண கும்பாபிஷேகம். |
| ஷை இரவு | பஞ்சமூர்த்திகள் ரிஷபவாகனக் காட்சி. |
| சித்திரைமீ ருஉ<br>ஏப்ரல்மீ 16உ | ஸ்ரீமந்நடராஜமூர்த்திக்கும் சிவகாமசுந்தரியம்பாளுக்கும் மகா ரதோற்சவம். |
| சித்திரைமீ சாஉ<br>ஏப்ரல்மீ 17உ | ஆயிரக்கால் மண்டபத்தில் மகாபிஷேகமும், மகிமை பொருந்திய சித்ஸபா பிரவேசமும் ரகசியதேவ தரிசனமும். |

சிதம்பரம் கோயில் பொது தீக்ஷிதாள்.

# PROGRAMME OF THE CONSECRATION CEREMONIES (KUMBHABHISHAKAM) OF NATARAJA'S TEMPLE AT CHIDAMBARAM (MADRAS)



| | |
|---|---|
| Thirumulasthanam and Amman Koil Ghatasthapanam. | 8th April 1891 |
| Ghatasthapanam of Chitsabha and Kanakasabha | 9th do. do. |
| Kumphabishakam of Thirumulasthanam and Amman Koil | 12th do. do. |
| Kumbhabishakam of Chitsabha and Kanakasabha. | 15th do. do. |
| Car Procession | 16th do. do. |
| Abishakam Entrance of God into Chitsabha and Rahasiya Deva Derisanam | 17th do. do. |

26th February 1891
Chidambaram.

*Chidambaram Temple Deekshadhars.*

உதவியது: தில்லைத் திருமுறைக்கழகத் தலைவர்
திரு. ஆ. சு. கணபதியாப் பிள்ளை அவர்கள்.



செட்டிநாட்டரசர்
டாக்டர். M. A. முத்தையாச் செட்டியார் அவர்கள்

சிதம்பரம் ஸ்ரீ நடராசாப்பெருமான் திருக்கோயில்

# பரம்பரைத் திருப்பணிச் செல்வர்

# செட்டிநாட்டரசர் டாக்டர் ராஜா சர் முத்தைய செட்டியார் அவர்கள்

அறப்பணிச் செல்வர் டாக்டர் K. அரங்கசாமி பிள்ளை

இவர்கள் தில்லைப்பதியின் எல்லையிலே செழுங் கலைக்கோயிலாகத் திகழும் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் நிறுவிய தனவணிகச் செல்வர் செட்டிநாட்டரசர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரவர்களின் மூத்த மைந்தர்; அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் இணைவேந்தராக வும், தமிழ்நாட்டில் அரசியல் நெறியும், சமுதாய வாழ்வும், கல்வியும், தொழிலும் வளம் பெறு தற்கு இன்றியமையாத நல்லறங்கள் பலபுரியும் பெருங்கொடை வள்ளலாகவும் திகழ்கின் றார்கள்.

கானாடுகாத்தான் என்னும் நகரில் தனவணிகர் மரபில் இளையாற்றங்குடிக்கோயில் பட்டினச்சாமி குடியில் தோன்றிய இவர்தம் பாட்டனார் முத்தைய செட்டியார் அவர்கள், சென்ற நூற்றாண்டில் தில்லைப் பெருங்கோயிலைப் புதுபித்துக் கூத்தப்பெருமான் ஆனந்தத் திருக்கூத்தாடியருளும் பொன்னம்பலத்திற்குப் பொன்வேய்ந்து குடமுழக்கு நிகழ்த்தினார்கள். அன்னம்பாலிக்குந் தில்லையில் அன்னசத்திரம், தேவார பாடசாலை, வேத பாடசாலை முதலியன தொடர்ந்து நிகழப் பல அறக்கட்டளைகளை அமைத்துள்ளார்கள்.

பிற்காலத்தில் அயலவர் படையெடுப்பினால் தில்லைப் பெருங்கோயில் சிதைவுற்ற நிலையில் அச்சிதைவுகளை நீக்கித் திருப்பணி புரிந்த முத்தைய செட்டியாரும் அவர்தம் வாழ்க்கைத் துணைவியார் மீனாட்சி ஆச்சியவர்களும் தில்லைச் சிற்றம்பலத்தில் திருவிளக்கேந்தி கூத்தப் பெருமானை வழிபட்டு நிற்கும் நிலையில் அமைந்த பாவையுருவங்கள், அவர்கள் தில்லைப் பெருங்கோயிலுக்குச் செய்த திருப்பணியின் சின்னங்களாகத் திகழ்கின்றன. தில்லைத் திருப்பணி புரிந்த முத்தைய செட்டியாரின் மைந்தர் நால்வருள் இரண்டாமவரான இராமசாமிச் செட்டியாரவர்கள் 1908 முதல் 1916 வரை சிதம்பரம் நகரமன்றத் தலைவரா யமர்ந்து தில்லை நகருக்குத் தம் செலவில் குடிதண்ணீர்த் திட்டத்தை யமைத்துதவினர். இன்றைக்கு ஐம்பதாண்டுகளுக்கு முன் சாதிமத வேறுபாடின்றி எல்லாவினத்தாரும் கல்வி பயிலுதற்கேற்ற நகர உயர்நிலைப் பள்ளியினை அமைத்தார். இவர்தம் இளைய சகோதரரும் நம் மதிப்புக்குரிய டாக்டர் ராஜா சர் முத்தைய செட்டியார் அவர்களின் அருமைத் தந்தை யாரும் ஆகிய அண்ணாமலையரசரவர்கள், ஞானத்திரளாய் நின்ற நடராசப்பெருமான் ஆடல் புரியும் தில்லை யெல்லையில், தம் அன்னையின் பெயரால் மீனாட்சி கல்லூரியினைத் தொடங்கினர் கள். அதன் கண் பலகலைகளும் வளம்பெற்று வளரத் தம் பெயரால் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் என்னும் ஞானப்பெருங்கோயிலை நாடு நலம்பெற அமைத்தார்கள். தில்லைப் பெருங் கோயிலில் கோவிந்தராசப்பெருமாள் சந்நிதியமைப்புப்பற்றி நெடுங்காலமாகச் சைவர் களுக்கும் வைணவர்களுக்கும் இடையேயிருந்த பூசலை அறவே போக்கித் தில்லைக் கோவிந்த ராசப்பெருமாள் சந்நிதியையும் நடராசப்பெருமான் முன் மண்டபத்தையும் திருப்பணி செய்து 1934-இல் குடமுழுக்கு விழாச் செய்த பெருமை அண்ணாமலையரசர்க்கேயுரிய தனிச் சிறப்பாகும்.

அண்ணாமலையரசரின் மூத்த மைந்தராகிய ராஜா சர் முத்தைய செட்டியாரவர்கள் தமிழ் மக்களின் முன்னேற்றத்தையே குறிக்கோளாகக்கொண்டு செய்துவரும் பணிகள் பலவாகும். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் இணைவேந்தராக விளங்கும் இவர்கள், இயல் – இசை – நாடகம் என்னும் முத்தமிழ் வளர்ச்சியிலும் கல்வி நலம், தொழில் வளம், பொருளாதாரம், அரசியல், சமுதாயம், சமயம் முதலிய பல துறைகளிலும் ஈடுபட்டு உழைத்துவரும் சீர்த்திமிக்க செந்தமிழ்ச் செல்வராவார்கள். தெய்வ வழிபாடு, தாய்மொழிப்பற்று, பெரியோர்பால் அன்புடன் பணிந்தொழுகுதல், சுற்றந்தழுவுதல், விருந்தோம்புதல், புலவர்களைப் போற்றுதல், பணியாளர்களைத் தம் குடும்பத்தவராக எண்ணி ஆவன செய்தல், யாவருடனும் இனிமை யாகப் பழகுதல், இரவலர்க்கு உளமுவந்து ஈதல் முதலிய உயர்ந்த பண்புகள் அனைத்தும் இவர்களிடம் சிறப்பாக அமைந்துள்ளன. தில்லைப் பெருங்கோயில் பரம்பரைத் திருப்பணிச் செல்வராகிய இவர்கள் சிதம்பரம் சிவகாமியம்மை திருக்கோயில் திருப்பணி என்று தெரிவித்த அளவிலேயே முப்பத்தையாயிரம் ரூபா உளமுவந்தளித்தமை குறிப்பிடத்தகுவதாகும். சிவகாமியம்மை காணத் தில்லைப் பொன்னம்பலத்தில் ஆனந்தத் திருக்கூத்தியற்றியருளும் நடராசப்பெருமான் திருவருளால் செட்டிநாட்டரசர் ராஜாசர் முத்தைய செட்டியாரவர்களது குடும்பம் 'மன்னுக தில்லை வளர்க நம் பத்தர்கள்' என்றவாறு தமிழகம் வளம்பெற வாழையடி வாழையென வளர்ச்சி பெற்று விளங்குக எனச் சிவகாமியம்மை காண அருள் நடம் புரியும் அம்பலவாணர் திருவடிகளை வாழ்த்துவோமாக.

# திருப்பணிச் செல்வர்

சிவகாமியம்மை திருக்கோயில் திருப்பணி சுமார் இருபதாண்டுகளுக்கு முன்னரே தொடங்கப்பெற்றதாகும். இத்திருப்பணியை முன்னின்று நடத்தியவர்களுள் காலஞ் சென்ற S. V. கல்யாணராம பிள்ளையவர்கள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவராவார். திருப்பணிக்கு வேண்டிய பொருள் வந்து சேராமையால் இத்திருப்பணி இடையில் நின்று போயிற்று. இதனை மீளவும் தொடங்கி விரைவில் நிறைவேற்றிக் கும்பாபிஷேகத்தினைச் செய்தற்கென திருப்பணிக்குழு அமைக்கப்பெற்றது. இக்குழுவிற் செயலாளராகவும் பொருளாளராகவும் இருந்து அன்பர்களிடம் நன்கொடைப் பொருளைத் திரட்டியதுடன் எதிர் பார்த்தபடி நன்கொடை விரைவில் வாராத நிலையில் நூருயிர ரூபா அளவில் தமது கைப்பொருளைத் தந்து இத் திருப்பணி முட்டின்று நிறைவேற உதவிய திருப்பணிச் செல்வர் தரும பூஷணம் செ. இரத்தினசாமி செட்டியார் ஆவர். இவர்கள் இராமநாதபுரம் மாவட்டம், புலவர் வேந்தன் என்ற ஊரினராய அணிகல வணிகர் செல்லஞ் செட்டியார், காமாட்சியம்மை என்னும் இருவர் தம் தவப்புதல்வராக பிலவங்க கார்த்திகை 23 ஆம் நாள் (8—12—1907) ஞாயிற்றுக்கிழமை உத்திராட விண்மீன் கூடிய நன்னாளில் தோன்றினார்கள்.

அணிகல வணிகம் புரிந்து, ஈட்டிய பொருள்களினால் அன்னதானங்கள் பல புரிந்தும், தில்லைப் பாண்டியநாயகம் திருக்கோயில் திருப்பணி செய்து, இருமுறை குடமுழுக்கு விழாச் செய்தும், நடராசப் பெருமான் திருக்கோயில் திருப்பணிகள் பலவற்றிலும் பெரும் பங்கு கொண்டும், சிதம்பரம் இளமையாக்கினார் திருக்கோயிலில் வார வழிபாடு, திருவாதிரைச் சொற்பொழிவு நிகழச் செய்தும், திரு இராமகிருட்டிண ஆதாரப் பள்ளி, உயர்நிலைப் பள்ளிகளைத் தோற்றுவித்தும் கடவுட் பணியும் சமுதாயப் பணியும் புரிந்துள்ளார்கள். சிதம்பரம், சிவகாமியம்மை திருக்கோயில் திருப்பணி நிறைவேறுவதற்குப் பெரிதும் உழைத்தார்கள்

இவர்களது புதல்வர்கள் திரு. பாலசுப்பிரமணியன், செல்வன் இராமநாதன், செல்வன் திருநாவுக்கரசு என்பவராவர். முதல் மைந்தர் திரு செ. ரெ. பாலசுப்பிரமணியன் அவர்கள் தந்தையார் மேற்கொண்ட அறச் செயல்களை மேற்கொண்டு இடையீடின்றி நடத்தி வருகின்றார்கள். ஸ்ரீ சிவகாமியம்மை திருக்கோயில் குடமுழுக்கு விழாக் குழுவின் செயலாளராகவும், பொருளாளராகவும், இருந்து அயராமல் உழைத்து இத்திருப்பணி இனிது நிறைவேறப் பாடுபட்டு வருகின்றார்கள். செல்வமல்கிய தில்லையம்பதியில் நல்லறங்கள் பலவற்றுக்கும் உறுதுணையாய் விளங்கிய தரும பூஷணம் இரத்தினசாமி செட்டியாரவர்களது நல்லுயிர் சிவகாமியம்மை திருக்கோயில் கும்பாபிஷேக நிறைவினைக் கண்டு மகிழும் என்பது திண்ணம். செட்டியாரவர்கள் முன்னின்று நிகழ்த்திய இத் திருப்பணியை அவர் தம் புதல்வர்களும் மருகர் முதலிய உறவினர்களும் உடனிருந்து நிறைவேற்றியுள்ளமை மகிழ்ந்து பாராட்டத் தகுவதாகும்.



தருமபூஷணம்
திரு. செ. இரத்தினசாமி செட்டியார்

# பொருளடக்கம்




Press Secretary
To the President of India
Rashtrapathi Bhavan
New Delhi

January 20, 1972.

*Dear Shri Swaminathan,*

*The President has asked me to thank you for your letter of 13th January, 1972, and to convey his best wishes for the success of the endeavours cf the Renovation and Maha Kumbabisheka Committee of the Ambal temple.*

*Yours sincerely,*

A. M. Abdul Hamid

உ

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

# ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீ மடம்

## காஞ்சீபுரம்.

முகாம்: கோழிக்கோடு : : தேதி: 18—1—1972

பஞ்சபூத ஸ்தலங்களுள் ஆகாச க்ஷேத்ரமாக அமைந்திருக்கும் சிதம்பரத்தில் ஆவிர்பவித்து பயமென்னும் முயலகனை அடக்கி பதஞ்சலி, வ்யாக்ரபாதர் முதலிய முனிவர்களுக்கு அனுக்ரஹம் செய்வதற்காக ஆனந்தத்துடன் அம்பலக் கூத்தாடும் ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் ஆலய ஸமீபத்தில் விளங்கும் ஸ்ரீ சிவகாமஸௌந்தரி அம்மனின் ஆலயத்தை அவசியமான திருப்பணி செய்து ஸமீப காலத்தில் கும்பாபிஷேக மஹோத்ஸவத்தை நடத்தி வைக்க இதற்கான கமிட்டியினர் முன்வந்திருப்பதை அறிந்து ஸந்தோஷிக்கிறோம்.

ஆஸ்திகர்கள் இவ்வைபவத்தில் கலந்துகொண்டும் ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் ஆலய ஸம்பந்தமான மற்ற திருப்பணிகளில் ஒத்துழைத்தும், ஸ்ரீ சிவகாமஸௌந்தரீ ஸமேத ஸ்ரீ நடராஜமூர்த்தியின் க்ருபையினால் எல்லா மேன்மைகளையும் அடைவார்களாக.

**Sri Sri Sringeri Jagadguru Mahasamsthanam,**
**Sringeri Math Sharada Peetham**
P. O. SRINGERI – KADUR (*Mysore State*)

Vidwan K. PADMANABHA UPADHYAYA
Personal Assistant to His Holiness the
Jagadguru Sri Shankaracharya of
Sri Sringeri Mutt

*Camp*: *Sringeri*

*Date*: 18-1-72

தாங்கள் அனுப்பிய திருக்கும்பாபிஷேக மலர் கிடைக்கப் பெற்ருேம். மகா சந்நிதானத்தின் திருவடிகளில் சமர்ப்பிக்கப் பட்டது. மகா சந்நிதானம் ஷ ஸ்ரீ சிதம்பர சபாநாயகர் கோவில் ஸ்ரீ சிவகாமி அம்பாள் கோயில் திருப்பணி கும்பாபிஷேகம் சிறப் பாய் நல்ல முறையில் நடந்து திருமூர்த்தி சாந்நித்யம் பெற்று பக்தர்களின் இஷ்டார்த்தங்கள் பூர்த்தியடைய வேண்டுமெனவும், உலகத்தில் சுபிக்ஷம் ஏற்பட்டு யாவரும் நல்வாழ்வு வாழ வேண்டு மெனவும் ஆசீர்வதித்து அருளிய மந்தராக்ஷதை ஸ்ரீ சாரதா சந்திர மௌளீஸ்வரப் பிரசாதம் இத்துடன் அனுப்பியிருக்கிறது.

இப்படிக்கு,

*K. Padmanabha Upadhyaya.*

உ

குருபாதம்



தருமையாதீனம்
ஸ்ரீலஸ்ரீ
சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

தருமபுரம், மாயூரம் P. O.

26—1—1972.

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே"

நாட்டின் நலத்திற்குக் கோயில்களே அடிநிலை என்பது அருளாளர் கண்ட உண்மை. அத்தகைய கோயில்களுக்கு நம் நாட்டில் ஓர் அளவில்லை. ஆயினும், 'கோயில்' என்று சிறப்பித்துச் சொல்லப்பெறுவது தில்லைத்திருக்கோயிலே. இதற்குக் காரணங்கள் பல.

பஞ்ச பூதத் தலங்களில் தில்லை ஆகாசத் தலம். பஞ்ச பூதங்களுள் ஆகாசமே முதலாவது ஆதலின், ஆகாசத் தலமாகிய தில்லை முதன்மையுடையதாகின்றது. அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் என்னும் முறையில், மக்கள் உடம்பில் ஆகாசமாய் உள்ளது இதய வெளி. இது தகராகாசம் எனப்படுகின்றது. எனவே தில்லையில் சிற்றம்பலத்தில் இறைவன் நடனம் புரிதல் ஆன்மாக்களுடைய உள்ளத்தின் இருதயத்தில் செய்யும் நடனத்தையும் குறிப்பதாகும். இதனை,

"சிறைவான் புனல்தில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும்
உறைவான்"

என விளக்கினார் மாணிக்கவாசகர்.

உயிர் உடம்பொடு கூடி வாழும் வாழ்க்கை இருதயத் துடிப்பினாலே அமைவது. இத்துடிப்பு என்பது இறைவன் உயிர்களின் இருதயத்தில் புரியும் நடனத்தையே குறிக்கின்றது. எனவே இத் துடிப்பு நின்றால் உயிர் இயக்கம் நின்றுவிடும். இதுபோலவே, இறைவனது ஆட்டம் நின்றால், அனைத்துலக இயக்கமும் நின்றுவிடும் என்பதும் விளங்கும். எனவே, உலகம் அனைத்திற்கும் தில்லை இருதயத் தானமாயும், அதன்கண் திருச்சிற்றம்பலத்தில் இறைவன்

புரியும் நடனம் உலக இயக்கத்திற்கு முதலாயும் நிற்றல் தெளிவு. இதுபற்றியே தில்லைத் திருக்கோயில் ஒன்றே 'கோயில்' எனச் சிறப்பித்து வழங்கப் பெறுகின்றது.

இச் சிற்றம்பலத்தில் இறைவன் செய்யும் நடனம் உலகத்தை இயக்கும் பஞ்ச கிருத்திய நடனமாதலேயன்றி அனைத்து உயிர்கட்கும் ஆனந்தத்தைப் பொழியும் ஆனந்த நடனமும் ஆகும். ஆடற் பெருமானது அனவரத தாண்டவத்தில் உண்டாகும் ஆனந்தம் அளவிலாப் பேரானந்தமாதலின் அதனை உயிர்கள் நேரே பெற்றுப் பருக இயலாது. இது வாய்க்கால்கள் வழியாகவும், சில கொள்கலங்கள் வழியாகவும்தான் பருகுதல் இயல்பாகும். அது போல் கூத்தப் பெருமானது எல்லையில் தனிப்பெருங் கூத்தின் வரும் பேரானந்தப் பெருக்கை உயிர்கள் நேரே பெற இயலாது. அதனைப் பெற்று உயிர்கட்கு வழங்குபவர் அன்னை சிவகாமி யம்மையே யாவாள். இதனைக் குமரகுருபரர்,

"பாலுண் குழவி பசுங்குடர் பொறுக்கென
நோயுண் மருந்து தாயுண் டாங்கு,

என்னும் உவமையால் விளக்குவார். பாலுண்ணும் பச்சைப் பிள்ளைக்கு நோய் வருமாயின் அதற்கு மருந்தூட்டுதல் இன்றியமை யாதாயினும், அம்மருந்தின் வேகத்தை அதன் மெல்லிய குடல் தாங்க மாட்டாமை கருதி அம்மருந்தைத் தாய் உண்டு தனது பால் வழியாகவே அதனை அக்குழவிக்குத் தருதல் போல, கூத்தப் பெருமானது திருக்கூத்தின் ஆனந்தத்தைச் சிவகாமியம்மையே இடையறாது நோக்கிப்பெற்று உயிர்கட்கு வழங்குகின்றாள். இவள் அனைத்துயிர்கட்கும் பால் ஊட்டி வளர்க்கும் அன்னையாதலைச் சரவணப்பொய்கைக் கரையில் முருகனுக்குப்பால் கொடுத்தமையே யன்றி, அப்பெருமானது அவதாரமாகச் சொல்லப் பெறுகின்ற திரு ஞானசம்பந்தருக்குச் சீர்காழியில் திருமுலைப்பால் கொடுத்த செய்தி யாலும் நன்கு தெளியலாம். இதுபற்றியே உமாபதி சிவாசாரியார் தாம் அருளிச் செய்த சேக்கிழார் புராணத்துள் சிவகாமிசுந்தரியை,

"பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய இருள்நீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றின் ஒளிவிளங்க
அரந்தை கெடப் புகலியர்கோன் அமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி"

என்று போற்றினர்

அம்பலத்தில் அல்லும், பகலும் அனவரதமும் ஓய்வின்றி ஆடுகின்ற பெருமானும் அருகில் நிற்கும் அம்மையை நோக்கியே

ஆடுகின்ருர். அம்மையும் உயிர்களின் பொருட்டு அந்நடனத்தை ஆராக்காதலுடன் இடையருது கண்டு கொண்டிருக்கிருள். இப் பெருமாட்டிக்குத் தில்லையில் தனிக் கோயில் இருப்பது பலரும் அறிந்ததே. அது நல்லவகையில் திருப்பணி செய்யப் பெற்று மகா கும்பாபிடேகம் நடைபெற இருப்பது மகிழ்ச்சிக்குரியது.

கூத்தப் பெருமான் எழுந்தருளியுள்ள இடம் பொன்னம்பலம். அதில் அவன் இரத்தினசபாபதியாய்க் காட்சியளிக்கின்ருன். அப் பெருமானது திருமுன்பில் கிடந்த கோலத்தில் இருப்பவர் கோவிந்த ராசர். இந்த முறைக்கு ஏற்ப இத் திருக்குழுவின் தலைவர் பொன்னம்பலமாகவும், இத்திருப்பணிக்கும், பிறவற்றிற்கும் தமது பொருளாலும் முயற்சியாலும் தொண்டாற்றி அண்மையில் மறைந் தவர் இரத்தினசபாபதியாகவும், இத்திருப்பணி முற்றுப்பெற்று மகாகும்பாபிடேகம் நடைபெற உடன் இருந்து துணை புரிபவர் அரங்கசாமியாகவும் அமைந்திருத்தல் திருவருள் அமைப்பேயாகும்

மகாகும்பாபிடேக விழா இனிது சிறந்து விளங்கவும் கும்பாபி டேக மலர் நன்கு மலர்ந்து, அருள் தேனைப் பெருக்கி, அனைவர்க்கும் நல்லன பலவும் நல்கவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைப் பிரார்த்திக்கின்ருேம்.

உ

TELEPHONE: 22793 TELEGRAMS: "AADHEENAM", MADURAI



HIS HOLINESS THIRUVARUL THAVAYOGA

*Sri-la-Sri Somasundara Sri Gnanasambanda Desika Paramachariya Swamigal*

MADURAI AADHEENAM

70, South Avani Moola Street,
MADURAI,
(S. INDIA)

28—1—1972

13—1—72 தேதி கடிதம் கிடைத்து, 6—2—72, தேதியன்று சிதம்பரம் ஸ்ரீ சிவகாமி அம்பாள் கோவில் மகா கும்பாபிஷேகம் நடைபெறத் திருவருள் கூட்டியிருப்பதையும், அதையொட்டி மலர் ஒன்று வெளியிடத் தீர்மானித்திருப்பதையும் அறிந்து மகிழ்கின்றோம்.

கும்பாபிஷேக வைபவம் யாதொரு விக்கினமுமின்றி, வெகு சிறப்பாக நடந்தேறவும் அதில் கலந்து கொண்ட பக்தர்களும் உதவி செய்த புண்ணிய சீலர்களும் எல்லா நலன்களும் பெற்றுத் திகழவும் திருவருள் பாலிக்குமாறு எல்லாம் வல்ல ஸ்ரீ சிவகாமி அம்பாள் சமேத ஸ்ரீ சபாநாயகப் பெருமானைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கிறோம்.

திருஞானசம்பந்த தேசிகர்.

உ

சிவ சிவ

HIS HOLINESS
Kasivasi Arulnandi Tambiran Avl.,

TIRUPANANDAL,
(TANJORE DT.)

சிதம்பரம் ஸ்ரீநடராசப்பெருமான் கோயிலில் உள்ள ஸ்ரீ சிவகாம சுந்தரி அம்பாள் கோயில் திருப்பணி செவ்வனே நிறைவுபெற்று 6—2—1972ல் கும்பாபிஷேகம் நடத்தப்பெறுவது சிறந்த சிவ புண்ணியச் செயலாகும்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பாடிய நூல்களில் சிதம்பர மும் மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, தில்லைச் சிவகாமி யம்மை இரட்டைமணி மாலை என்பன தில்லையைப் பற்றியனவாம். அவற்றுள்ளும் இரட்டைமணி மாலை சிவகாமசுந்தரி அம்பாளைப் பற்றியதாகும்.

சிதம்பரச் செய்யுட்கோவையுள் அம்மையின் கருணை பொழியும் விழி இறைவனுகிய தேனைப் பருகும் வண்டென உருவகப்படுத்தப் பட்டுள்ளது:–

''பொன்மன்றம் பொற்றாமரை ஒக்கும்; அம்மன்றில்
செம்மல் திருமேனி தேனொக்கும்; அத்தேனை
உண்டுகளிக்கும் களிவண்டை ஒக்குமே
எம்பெரு மாட்டி வாழி''

என்பது அப்பாடல் /14/

செய்யுள் 31-ல் ''முன்புலகீன்ற முகிண்முலைக்கன்னி'' என்று அம்பிகை குறிப்பிடப் பெற்றுள்ளார்.

செய்யுள் 33-ல் பெருமானுக்கு அம்பிகை ''மனைவி தாய் தங்கை மகள்'' ஆக விளங்குதல் சொல்லப் பெற்றுள்ளது.

செய்யுள் 37-ல் இறைவன் அம்மை காண நடனமாடுதல் ''கருங்கொண்டலோடும் குழற்கோதையோடும் கறைக்கண்டன் ஆடும் திறன் காண்மினோ'' என்று கூறப்பெற்றுள்ளது.

கற்பகதரு காமவல்லியோடு படர்வது போல இறைவனோடு அம்பிகை இருத்தலைப் பின்வரும் நாற்பத்தோராம் பாடல் கூறும்:-

"பொற்றுது பொதிந்த சிற்சபை பொலியப்
பச்சிளங் கொடியொடு படரும்
செக்கர் வார்சடைக் கற்பக தருவே."

குழந்தையின் குடல், மருந்தைச்சீரணம் செய்யும் வலிமை உடையதல்ல; ஆகவே தாயானவள்தான் மருந்தை உண்டு அதன் பயனைப்பால் வழியாகக் குழந்தைக்கு அளித்துக் குழந்தையின் நோயைப் போக்குவள். அதுபோல அம்பிகை நடராஜமூர்த்தியின் திருநடனத்தைத் தரிசித்து அதன் பயனை உயிர்கள் நுகருமாறு செய்வர், – என்று சிதம்பர மும்மணிக்கோவையில் சொல்லி இருக்கிறது.

சிவகாமி அம்மை தன்னை வந்திப்பவர்க்கு உலகேழும் அளிப்பார் என்று சிவகாமி அம்மை இரட்டைமணி மாலை செய்யுள் 2-ல் சொல்லப் பெறுகிறது.

இங்ஙனம் பல படித்தாக ஸ்ரீகுமரகுருபர சுவாமிகளால் போற்றப் பெற்ற ஸ்ரீ சிவகாமி அம்பாள் எழுந்தருளியுள்ள கோயில் கும்பாபிஷேக நினைவாக வெளியிடப்பெறும் மலர் தில்லைக் கூத்தப் பெருமான் சிறப்பு இயல்புகளையும் சிவகாமி அம்மையின் அருட்டிறனையும் தெரிவிப்பனவாய் மிளிர்வதாகுக!

கோயில் திருப்பணியை நன்கு நிறைவேற்றிய திருப்பணிக் குழுவினர்க்குச் செந்திலாண்டவன் திருவருள் மல்குக.

அருமறை நான்கினோடு ஆறங்கமும் பயின்று வல்லார்களும், உறுவது நீற்றின் செல்வம் எனக்கொளும் உள்ளம் மிக்கார்களும் ஆன தில்லைவாழந்தணர்கள் பெறுவது சிவன்பால் அன்பாம் பேறு பெற்று நடராஜப்பெருமான் திருவருளால் பெருகி வாழ்வாராகுக!

*சிவ சிவ.*

Sri-La-Sri
Ambalavana
Pandarasannadhi Avl.,
Adheenakarthar
THIRUVAVADUTHURAI MUTT.



THIRUVAVADUTHURAI
(THANJAVUR DT.)
19—1—1972.

# ஆசியுரை

சிதம்பரம் என்னும் திருத்தலம் உபநிடதங்களுள் கூறப்பெறும் வித்தைகளுள் தலைசிறந்ததாகிய தகர வித்தையைக் கட்புலனாகும் படி உணர்த்தும் திவ்விய தலமாகும்.

"பெரும்பொருள் உண்மை, அறிவு, அளவைக்கடந்து; இதய குகையில் பரம ஆகாயத்தில் உள்ள இதனை எவன் அறிகிறானோ அவன் முற்றுணர்வுடைய பெரும்பொருளோடு உடனாகி எல்லா விருப்பங்களும் நிரம்பப் பெறுகின்றான்" என்பது தைத்திரீயத்தில் வரும் மறைப்பொருள். இதில் குறிக்கப்பெறும் பொருளே சபா நாயகர்; பரம ஆகாயமே அருள்ஞான ஒளியாகிய திருச்சிற்றம்பலம். "சிற்பரவியோமமாகும் திருச்சிற்றம்பலத்துள் நின்று" என்னும் சேக்கிழார் திருமொழி சிந்தனைக்கு உரியது.

பின்னும் அவ்வுபநிடதத்தில், அப்பரமான்மா பிரசைகளின் தோற்றத்தின் பொருட்டுப் பலவாக ஆவேன் என விரும்பிற்று (ஸோ காமயத பஹுஸ்யாம் பரஜாயேயேதி") என்னுந் தொடர் உலக சிருட்டியைக் கூறத் தொடங்குகையில் வருகின்றது. இத் தொடரில் உள்ள அகாமயத (விரும்பிற்று, சங்கற்பித்தது) என்னும் சொல்லால் குறிப்பிக்கப்படும், பேரின்பசத்தியே சிவகாமவல்லி. இங்குக் காமம் என்னும் சொல் ஆனந்தத்தைக் குறிக்கும்.

நிட்கள சொருப நிலையில் பேரின்பம் நல்கும் இன்பசத்தியோடு உடனாகியுள்ள பேரின்பப்பிழம்பாகிய முழுமுதற் பொருளே சகளம் எனப்படும் உரு நிலையில் சிவகாமவல்லியோடு உடனாகிய ஆனந்த நடராசமூர்த்தியாகக் காட்சி தருகிறது என்பதே வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம் உணர்த்தும் பேருண்மை.

பேரின்பமான பிரமக் கிழத்தியோடு
ஓரின்பத் துள்ளான்என் றுந்தீபற
உன்னையே ஆண்டதென் றுந்தீபற

— திருஉந்தியார், 34.

அகளத்தில் ஆனந்தத்(து) ஆனந்தி யாயே
சகளத்தில் தையலுடன் தங்கி — நிகளத்தைப்
போக்குவதும் செய்தான் தன்பொன்னடி என்புன்தலைமேல்
ஆக்குவதும் செய்தான் அவன்.

— திருக்களிற்றுப்படியார், 94.

என்னும் மெய்கண்ட நூல் திருவாக்குகள் ஓர்ந்து உணரத்தக்கவை.

இத்தகைய விழுமிய செம்பொருளை உணர்த்தா நிற்கும் கோயில் எனச் சிறப்பிக்கப்படும், சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோயிலில், சிவகாமி அம்பாள் கோயில் திருப்பணி முற்றுப் பெற்றுத் திருக்கும்பாபிஷேகம் நடைபெற இருப்பதும், அதன் நினைவு மலர் வெளிவர இருப்பதும், நமக்கு மிகுந்த மகிழ்ச்சியை விளைக்கின்றன.

திருக்கும்பாபிஷேக நினைவு மலர், சொல்லும் பொருளும் நனி சிறந்து, உண்மை, நன்மை, அழகு என்னும் ஒளியும், சுவையும், மணமும் கொண்டு மலர்ந்து, மக்களுக்கு உணர்வும் இன்பமும் ஒருமையும் பெருக்குக என நமது ஆதீன பூஜாமூர்த்தியாய் எழுந்தருளி அநுக்கிரகித்துவரும் — ஸ்ரீ ஞானமா நடராசமூர்த்தியின் பூங்கழல்களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

உ
சிவமயம்
சாந்தலிங்க இராமசாமியடிகள்

தொலைபேசி எண்: 26479
பேரூராதீனம்
பேரூர் (அஞ்சல்)
கோயமுத்தூர்-10

நாள்: 18—1—1972

# வாழ்த்துரை

தமிழகத்தின் பழந்தமிழ்ச் சமயமாம் சிவநெறிக்குத் தாயகம் தில்லை. திருச்சிற்றம்பலத்துள் நின்று பொற்புடன் நடஞ்செய்யும் ஆனந்தக் கூத்தன் அருட்காட்சி காண்பது மனிதப் பிறவிபெற்ற பயனாகும். "அத்தாநின் ஆடல் காண்பான் அடியனேன் வந்த வாறே" என்பர் அப்பரடிகள். தில்லை மூதூர் ஆடிய சேவடி காண நால்வர் பெருமக்கள் நாற்றிசைகளிலிருந்தும் போந்தனர். நாற்றிசைக்கு விளக்கான பெருமானை பாடிப் பரவிக்கசிந்தனர். தில்லை நகரில் பார்வாழத் திருவீதிப் பணி செய்தார் அப்பரடிகள். வருணனும், காற்றும், நீர் தெளித்து பெருக்கித் தூய்மையாக்கும் திருநகர் தில்லை. அவர்கள் பயன்கருதிப் பணி செய்பவர்கள் ஆனால் அப்பரடிகள் "என்கடன் பணி செய்து கிடப்பதே" எனப் பணி யாற்றும் பயன் கருதாப் பண்பாளர். ஆதலின் அவர் பணி குறை வுடையது எனப் பெருமான் நிறைவுடைய அப்பரடிகள் பணியை விரும்பி ஏற்றார்.

திருச்சிற்றம்பலத்தில், திருவாசகம் முகிழ்த்தது. மறைகளால் தொடருதற்கரிய ஆநந்தக் கூத்தன் திருவாசகத்தைத் தம் திருக் கரத்தால் எழுதி மலரச் செய்தார். இத்தகு சிறப்பால் சைவ நெறி ஏழுலகும் பாலிக்கும் தகுதி வாய்ந்தது தில்லைச் சிற்றம்பலம்.

இத்திருக்கோயிலில் உலகமெலாம் ஈன்றவளாகிய அன்னை சிவகாம சுந்தரி காண நடனமாடுகிறான், இறைவன். அந் நடனத்தைக் கொடுகொட்டி பாண்டரங்கம், நாபாயம் எனக் கூறு வர் ஆன்றோர். நடனத்திற்கு ஏற்ப, தாளம் இடுகிறாள் பழம் பாடல்

தொடையின் பயனும் அன்னே. தாளத்தின் பகுதிகளாகிய சீரும், தூக்கும், பாணியும், ஆடலுக்கு ஏற்பத்தருகிருள். புவனங்கடந்து நின்ற ஒருவன் திருவுள்ளத்து அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிரோவியமாகிய எம்பெருமாட்டி. இறைவன் உளக் கோயிலில் தங்கும் மரகதக் கொடியாம் சிவகாம சுந்தரிக்கு நம் முன்னேர் விண்ணளாவும் கோபுரத்துடன் கற்கோயிலில் எடுத்தனர். அத் திருக்கோயில் செப்பனிட்டுப் புதுப்பிக்கப் பெற்றுப் பொலிவுடன் திகழ்வது நம் உள்ளத்தைப் புனிதமாக்கி மன்னுயிர்களை வாழச் செய்வதற்குரியது. பொறிபுலன்களில் மனதை விடுத்துப் பாழான கீழ்நிலைக்குச் செல்லும் சூழல்களினின்றும் காப்பதற்கு, ''நன்றின் பாலுய்ப்பதற்கு உரிய இத்திருப்பணியை நிறைவேற்றும் அன் பர்களை எவ்வளவு பாராட்டினுலும் தகும். எமது சாந்தலிங்கப் பெருமான் தான்மலரை நினைந்து வாழ்த்துதலை தெரிவிக்கின்ருேம்.

''மன்னுக தில்லை, வளர்க நம் பத்தர்கள்.''

PHONE : 66-2918

RAMAKRISHNA MATH
P. O. BELUR MATH, DT. HOWARH

*Chidambarm has been for centuries a seat of learning and Hindu Culture with the temple of Nataraj as its centre of life. Along with this temple on the northern side there is the temple of His Shakti the Shivakamasundari Ambal. These temples are held in great reverence by the Hindus all over India. It must be our endeavour always to maintain the sanctity of these temples. I therefore appreciate very much the work that you have undertaken in connection with the Mother's temple. May She bless your endeavour with success is my earnest prayer to Her.*

Swami Vireswarananda
*President*
Ramakrishna Math & Mission.

January 22, 1972.




Secretary
To the Vice-President of India
New Delhi

January 17, 1972.

*Shri Swaminathan,*

*The Vice-President is glad to know that Maha Kumbabishekam Ceremony of Sri Sabanayagar Sri Sivakami Ambal will be held on Sunday, the 6th February, 1972 at Ambal Temple. He sends his best wishes for its success.*

*Yours sincerely*

V. Phadke



RAJ BHAVAN
Madras-22,

17th January 1972.

*I offer my best wishes for the success of the Maha Kumbabhishekam of the shrine of Goddess Sivakamasundari, Chidambaram.*

K. K. Shah
Governor of Tamil Nadu

கே. எஸ். நரசிம்மன், B.A. B.L., I.A.S.,
ஆணையாளர்,
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை.

சென்னை-34.
17—1—1972.

# வாழ்த்துச் செய்தி

நமது தமிழ்நாடு, பழமையும் பெருமையும் வாய்ந்த எண்ணிறந்த பல தலங்களையும், கோயில்களையும் பெற்று விளங்குகின்ற தெய்வீகத் திருநாடு ஆகும். ஆழ்வார்களும் நாயன்மார்களும் அவதரித்து, தமது கால் தரை தோய நடந்து தரிசித்து மகிழ்ந்தும், திருவருள் நலம் புரிந்த தமது செந்தமிழ்த் திருப்பாடல்களால் துதித்துப் போற்றிச் சிறப்பித்தும் உள்ள திருத்தலங்கள் பற்பல, நம் தமிழ் நாட்டின் பெருமைக்கும் புகழுக்கும் காரணமாக நிலைபெற்று விளங்கி வருகின்றன.

அவைகளுள் எல்லாம் சிதம்பரம் என்னும் திருத்தலம் மிகவும் தலை சிறந்து திகழ்ந்து வருகின்றது. எத்தனையோ பல கோயில்கள் இருப்பினும், 'கோயில்' என்று பொதுவாகக் குறிப்பிடுங்கால், அது சிதம்பரம் என்னும் தில்லைத் தலத்தையும், அங்கு எழுந்தருளியுள்ள சபாநாயகர் எனப்படும் நடராசப் பெருமான் திருக்கோயிலையுமே சிறப்பாகக் குறிப்பிடும். வைணவ சமயத்தில் 'கோயில்' என்றால் திருவரங்கம் கோயிலையே குறிப்பது போல, சைவ சமயத்தில் 'கோயில்' என்பது சிதம்பரம் கோயிலையே குறிக்கும். சைவத் திருமுறைகளில் எல்லாம் சிதம்பரம் என்னும் திருத்தலம், 'கோயில்' என்றே குறிக்கப் பெற்றிருத்தல் காணலாம்.

சிதம்பரம் கோயில், மிக மிகப் பழமையானதொன்றாகும். அத்தலத்தின் பெருமை, வடமொழி வேதாகம உபநிடதங்களிலும், தென்றமிழ் மொழியில் சைவத்திருமுறைகள் முதலிய பலவற்றிலும் பெரிதும் புகழ்ந்து போற்றப்பட்டுள்ளது. நடராசப் பெருமானது திருவுருவத்தின் சிறப்பினை, இந்நாளில் அனைத்துலக நாடுகளிலுள்ள அறிஞர்கள் அனைவரும், விரும்பி வியந்து பாராட்டி மகிழ்கின்றனர். பல்லவர், சோழர், பாண்டியர் விசயநகர அரசர்கள் ஆகிய பலரும் இக்கோயிலின்பால் ஈடுபட்டு, வழி வழியாகத் திருப்பணிகள் செய்து தொண்டு பூண்டு உய்ந்துள்ளனர்,

இத்தலம் சைவர்களுக்கு மட்டுமேயன்றி, வைணவர்களுக்கும் ஒரு சிறந்த திவ்வியதேசமாக விளங்கி வருகின்றது. தில்லைத் 'திருச் சித்திரகூடம்' என்று குலசேகர ஆழ்வாரும், திருமங்கையாழ்வாரும் இத்தலத்திற்கு மங்களாசாசனம் செய்து மகிழ்ந்துள்ளனர். எனவே சைவ-வைணவ சமரச ஞானத்திற்குச் சிதம்பரம் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக இலங்கி வருகின்றது.

இத்தகைய பல பெருஞ் சிறப்புக்களை உடைய சிதம்பரம் சபா நாயகர் கோயிலில், சிவகாமியம்மை சந்நிதி தனிப்பெரும் சிறப்பு வாய்ந்ததாக விளங்குகின்றது. பெரிய புராணம் அருளிச் செய்த சேக்கிழார் பெருமான் காலத்தில் விளங்கியிருந்த, இரண்டாம் குலோத்துங்கன் (கி.பி. 1133-1150) என்னும் அநபாய சோழன், சிவகாமியம்மையின் சந்நிதியினை மிகப் பெருஞ் சிறப்பாகவும், அழகு ஓங்கவும் அமைத்தருளினுன். இதன்கண் காண்போர் கண்ணையும் கருத்தையும் கவரும் அரிய அழகிய நடனக்கலைச் சிற்பங்கள் பற்பல, அற்புதமாகச் செதுக்கப்பெற்று மிளிர்கின்றன. அருங்கலை நுண்ணறிஞர்கள் அனைவரும் இவற்றைக் கண்டு வியந்து அக மகிழ்ந்து போற்றுகின்றனர்.

இத்தகைய, இணையற்ற எழிற் சிற்பக்கலை நலம் வாய்ந்த சிவகாமியம்மையின் சந்நிதிக்குத் திருப்பணிகள் செய்யப்பெற்று, அண்மையில் திருக்குட முழுக்கு விழா நிகழவிருப்பது, அன்பர்களுக் கெல்லாம் மிக்க பெரும் மகிழ்ச்சியளிக்கும் அரும்பெரும் நிகழ்ச்சி யாகும்.

சிவகாமி யம்மையாகிய உலகன்னையே இவ்வுலகு உயிர்களை யெல்லாம் தன்னுடை எல்லையற்ற பெருங்கருணையினுல் போற்றிக் காப்பாற்றி வருகின்ருள். நடராசப் பெருமான், ஆனந்தப் பெருங் கடல். அக்கடலில் திளைத்து ஆடுகின்ற அன்னப் பறவையாகச் சிவகாமியம்மை திகழ்கின்ருள். பல்லாயிரக் கணக்கான உலகங் களாகிய அண்டங்களை (முட்டைகளை), தனது திருவயிற்றினின்று ஈன்றெடுப்பவள் அவளே. அவற்றில் சரம் அசரமாகிய ஈர்ங் குஞ்சுகளை வெளிப்படச் செய்து, அவற்றைத் தன் இருகைகளாகிய சிறகுகளால் அருளோடு அணைத்து, அவற்றுள் ஒவ்வொரு குஞ்சுக்கும் ஏற்றஇரை தேர்ந்து அளித்து உண்பித்துக் காப்பாற்றி வருபவள் சிவகாமியம்மை என்னும் சிறந்த உலகன்னையே ஆவள்

"வன்னம் செறி வளைக்கைச் சிறகால்,
தன் வயிற்றினுள் வைத்து,
இன்னம் சராசர ஈர்ங்குஞ்சு
அணைத்து, இரைதேர்ந்து அருத்திப்,
பொன்னம் பலத்துள்ஓர் ஆனந்த
வாரி புக்கு ஆடும் பச்சை
அன்னம் பயந்தன கொல்ஆம்!
பல்லாயிர அண்டமுமே!"

எனவரும் பாடலில், குமரகுருபர அடிகள், சிவகாமியம்மையின் திருவருட் சிறப்பினைப் போற்றித் துதித்திருத்தல் காணலாம்.

இத்தகைய திருவருட் சிறப்பு மிக்க, உலகப் பேரன்னையாகிய சிவகாமியம்மையின் திருக்கோயில் திருப்பணிகள் இனிது நிறைவு பெறவும், திருக்குடமுழுக்கு விழா சிறப்புற நிகழுவும், எல்லாம் வல்ல தில்லை நடராசப் பெருமானின் திருவளையும், சிவகாமியம்மை யின் திருவருளையும் மனமொழி மெய்களால் துதித்து வணங்கி, திருக்குடமுழுக்கு விழா மலருக்கு எனது அன்பார்ந்த வாழ்த்துதல் களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

'பரந்தெழுநத சமண்முதலாம்
பரசமய இருள்நீங்கச்,
சிரம்தழுவு சைவநெறித்
திருநீற்றின் ஒளிவிளங்க,
அரந்தைகெடப் புகலியர்கோன்
அமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம
சுந்தரி, பூங் கழல்போற்றி''.

K. S. நரசிம்மன்

K. RAJAH, B. A., B. L.,
DEPUTY COMMISSIONER,
H. R. & C. E. (ADM) DEPARTMENT

MADRAS-34.

26—1—1972

## "ஓர் நற்செய்தி"

''பழுதில் தொல்புகழாள் பங்கநீ அல்லால்
பற்று நான் மற்றிலேன் கண்டாய்!
செழுமதி அணிந்தாய் சிவபுரத் தரசே
திருப்பெருந்துறை யுறை சிவனே!
தொழுவனே பிறரைத் துதிப்பனே எனக்குஓர்
துணையென நினைவனே சொல்லாய்''

என்று அழுது அடி சேர்ந்த மணிவாசகப் பெருமான் பணிந்து வணங்கியது போல, நாமெல்லோரும் ஆனந்த கூத்தனின் திருவருள் கிடைக்கப்பெற ஸ்ரீ சிவகாமி அம்பிகையின் தனிக்கோயில் திருப்பணி நிறைவுபெறும் அஷ்டபந்தன கும்பாபிஷேக நன்னாளில் நம்முடைய நெஞ்சமெலாம் இறை உணர்வு நிரம்பப்பெற்று நாமெல்லோரும் தர்மமும் சத்தியமும் வாழ்க்கையின் குறிக்கோள்களாக வைத்துக்கொண்டு, அவைகளை அடைவதற்கு நம்முடைய மனது பண்பு அடையவேண்டி, பிரார்த்தித்துக் கொள்ளவேண்டுகின்றேன். இந்த வைபவத்தில் கலந்து கொள்ளும் அன்பர்கள் எல்லோரும் மக்களுடைய நலன்களுக்காகவே இத்திருப்பணியைப் பூர்த்தி செய்து பணியாற்றி இருக்கிறார்கள் என்று நினைவுகூர்ந்து, திருப்பணிக்குழுவில் உள்ள எல்லா அன்பர்களையும் பாராட்டி, அவர்களுக்குச் சகல நன்மைகளும் உண்டாகவும் பிரார்த்திப்போமாக!

K. ராஜா.

இரா. தண்டபாணி, பி.எஸ்ஸி., பி.எல்.,
உதவி ஆணையர்.

அறநிலைய நிர்வாகத்துறை,
கடலூர்,
19—1—1972.

## வாழ்த்துரை

அன்புடையீர்,

உலக இயக்கம் சிவத்தோடு சக்தி சேர்ந்து இயங்குவதால் தான் நடைபெற்று வருகிறது. அம்முறையில்தான் ஆடல் உகந்து ஆடிய கூத்தன் தில்லையிலே சிவகாம சுந்தரியுடன் இணைந்து காட்சியளித்து அடியார்களுக்கு அருளமுது அளித்து வருகிறன். அத்தகைய ஆடலுகந்தான் திருக்கோயிலில் அமைந்துள்ள சிவகாம சுந்தரி அம்மன் திருக்கோயில் திருப்பணி முடிவுற்று குட முழுக்கு நிகழும் நிலையில் நினைவு மலர் ஒன்று வெளியிடுவதறிந்து மிக மகிழ்கின்றேன். அவ்வாடா மலர் ஆடும் கூத்தன் அருள் போல் மணக்க விழைகின்றேன்.

அன்புள்ள,
இரா. தண்டபாணி.

வி. சௌ. கோதண்டபாணி, பி.எஸ்ஸி., பி.எல்.,
துணை ஆணையர்,
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை.

தஞ்சை
12—1—1972

அன்புடையீர்,

தங்களது 11—1—1972 தேதியிட்ட கடிதம் கிடைக்கப் பெற்றது. மிக்க மகிழ்ச்சி. சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் ஆலயத்தில் அமைந்துள்ள ஸ்ரீ சிவகாமி அம்மன் ஆலயத்தில் திருக்குடமுழுக்கு விரோதிகிருது ஆண்டு தைத் திங்கள் 23-ஆம் தேதி (6-2-1972) நடைபெறுவதை அறிந்தும், அவ்வமயம் திருக்குடமுழுக்கு விழா நினைவு மலர் ஒன்று வெளியிடுவதை அறிந்தும் மிக்க பேரானந்தம் உற்றேன்.

இக்குடமுழுக்கு விழா இனிதே நடைபெறவும், விழா நினைவு மலர் சிறப்பாக அமையவும் எல்லாம் வல்ல ஸ்ரீ சிவகாமி அம்பாள் சமேத தில்லை ஸ்ரீ நடராஜ பெருமானை வேண்டிக்கொள்கிறேன்.

இவ்வாலயத்தின் திருப்பணியும், குடமுழுக்கு விழாவும் நடைபெறுவதற்கு அயராது உழைத்த திருப்பணிக் குழு மெய்யன்பர்கள் அனைவருக்கும் எனது பணிவன்பான வணக்கங்களும், நன்றியும் உரித்தாகுக.

இப்படிக்கு அன்புள்ள,
வி. சௌ. கோதண்டபாணி.

அ. வேங்கடாசலம், பி.எஸ்.சி., பி.எல்.,
துணை ஆணையாளர்,
இந்து சமய அறநிலையத்துறை.

தமிழ் நாட்டில் எவ்வளவோ கோயில்கள் இருந்தாலும், கோயில் என்ற அளவில் சைவ சமயத்தில் சிதம்பரத்தையே குறிக்கும். இங்கே எழுந்தருளி விளங்கும் நடராஜப்பெருமானின் சிறப்பை இக்காலத்தில் வெளிநாட்டாரும் வியந்து போற்றுகின்றார்கள். இன்று தெய்வத் திருவுருவங்களில், மேலை நாட்டவரும் வியந்து போற்றுவது நடராஜத் திருவுருவமேயாகும். இவ்வளவு சிறப்பு வாய்ந்த நடராஜப் பெருமானின் புகழ் பெற்ற கோயிலில், சிவகாமி அம்மையின் சந்நிதி தனிப்பெரும் சிறப்பு வாய்ந்தது. அச்சந்நிதியிலுள்ள சிற்பங்களின் சிறப்பும், கலை அழகும், அறிஞர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொள்ளும் மாட்சிமையுடையன. இச்சந்நிதிக்குத் திருப்பணிகள் செய்யப் பெற்று, மிகவும் சிறப்பாகத் திருக்குடமுழுக்கு விழா 6—2—1972 அன்று நடைபெற இருப்பது, பெரு மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். நடராஜப்பெருமானின் திருவருளாலும், சிவகாமி அம்மையின் திருவருளாலும், திருக்குடமுழுக்கு விழா மிகவும் சிறப்பாக நடைபெறப் பிரார்த்தித்து என்னுடைய மனமார்ந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

A. Venkatachalam.
25—1—72.

உ
சிவமயம்

மருத்துவமாமணி

# டாக்டர் இரத்தினவேலு சுப்பிரமணியம்

## வாழ்த்துச் செய்தி

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே. [திருநா. தே]

சிதம்பரம் அம்மன் கோயில் திருப்பணிக் குழுவினர் என்னை யும் பொருட்படுத்திக் கட்டுரை ஒன்று எழுதித் தரும்படி கேட்டுக் கொண்டனர். நான் ஓர் எழுத்தாளன் அல்லன். அப்படி இருந்தும் எனக்கு ஓர் எழுத்தாளனுக்குரிய வாய்ப்பு கிடைத்ததென்ருல் மகிழாமல் இருக்க முடியுமா? இது சிவகாமி அம்மையின் திருவருட் செயலே எனக் கருதி, அம்மையாரின் ஆசியை வேண்டி இதை எழுதுகின்றேன்.

தன் மகன் பிழை செய்தால் தந்தை அதை எளிதில் மன்னிக்க மாட்டார். ஆனுல் தாயோ, பிழை செய்கிருன் என்று தெரிந திருந்தும், அப்பிழை தன்னையும் பாதிப்பதை அறிந்திருந்தும் அம் மகனை மன்னிப்பதோடன்றி அவனிடத்தில்தான் பேரன்பு செலுத்து கின்ருள். இத்தகு தாயன்பு ஒன்றே இவ்வுலகத்தில் கைமாறு கருதாத அன்பாகும். மற்றவர் அன்பனைத்தும் கைமாறு கருதியே செய்யப்படுகின்றன.

எனக்குத் தெரிந்த செல்வர் ஒருவர் குடும்பத்தில் சுமார் எண்பது வயதுக்கும் மேற்பட்ட அம்மையார் ஒருவர் இருந்தார். அவ்வம்மையாருடைய மகனுக்குச் சுமார் அறுபது வயது இருக்கக் கூடும். பெரியம்மாள் உடல் நலமின்றி இருந்தமையால் அவர்களைக் கவனித்துக் கொள்ள செவிலித் தாயாரை நியமித்திருந்தனர். ஒரு நாள் அவளுடைய மகன் சாகப்போகும் இக்கிழத்திற்கு எதற்காகச் செவிலித் தாயார்? வீணுகப் பணத்தைச் செலவழிக்கிறீர்களே! என்று சத்தம் போட்டுக் கொண்டே வெளியே போய்விட்டான். இதைக் கேட்டுக் கொண்டிருந்த பெரியம்மாள், "மகன் குரல் கேட்டதே, சாப்பிட்டானு?" என்று கேட்டார். ஏன் இதைக் கூறு கிறேன் என்ருல், தனக்குச் செவிலித் தாயார் போட்டிருப்பது பணச்செலவு என்று கருதுகிருன், மகன் என்பதைத் தெரிந்து

கொண்டும், மகன் குரல் திடீரென்று குறையவே, கோபத்தினுல் சாப்பிடாமல் போய்விட்டானே? என்னும் கவலை தான் அவளுக்கு முதலில் எழுந்தது. இவ்வன்பை வேறு எவரிடத்திலாவது காண முடியுமா?

எனக்கு வயது ஐம்பத்து மூன்று இருக்கும். அப்போது என் தாயார் ஒரு நாள், ''என்ன உன் தலை வழுக்கையாகிவிட்டதே, தலைமயிரும் நரைக்கிறதே'' என்று கேட்டார்கள். ''என்ன அம்மா எனக்கு வயது ஐம்பத்து மூன்று ஆகவில்லையா?'' என்றேன். அதற்கு அவர்கள், ஐம்பத்து மூன்று வயது ஒரு வயதா? அதற்குள் வழுக்கை விழலாமா? ஏதாவது நல்ல தைலமாகத் தடவிக் கொள் அப்பா'' என்ருர்கள். தம் மகன் என்றும் இளைஞனுகவே இருக்க வேண்டும் என்பது அவர்கள் கருத்து போலும்! அஃது இயலுமா? ஓர் இரவு - நான் மாடியில் உறங்கிக் கொண்டிருக்கிறேன். ஒரு முக்கியமானவருக்கு உடம்பு சரியில்லை என்று போன் வந்தது; என்னை எழுப்புதற்காக வேலையாள் மாடிக்கு வந்தான். என் தாயாருக்கு அப்போது எண்பத்தைந்து வயதிருக்கும். அவர்களும் மாடியில் படுத்திருந்தார்கள். வந்தவனைப் பார்த்து, ''ஏன் மேலே வந்தாய்?'' என்று கேட்டார்கள்,

''யாரோ பெரிய மனிதர் வீட்டில் உடம்பு சரி இல்லையாம்; டாக்டர் உடனே வரவேண்டுமாம்; அதனுல் ஐயாவை............ என்று இழுத்தான்''......உடனே என் தாயார், ''என்ன இழுக்கிருய்? எழுப்பலாம் என்று வந்தாயா? அப்படியெல்லாம் எழுப்பக் கூடாது; பகல் எல்லாம் வேலை செய்துவிட்டு, இப்பத்தான் சிறிது ஓய்வு எடுத்துக் கொள்கிருர்; இந்த நேரத்திலும் எழுப்பிவிட்டால் நாளைக்கு என் மகனுக்கு ஒரு சீக்கு வந்துவிட்டால் இந்தப் பெரிய மனிதர்கள் எல்லாம் வந்து பார்ப்பார்களா? எழுப்பாதே போ'' என்று சொல்லி அனுப்பிவிட்டார்களாம்.

இப்படித் தந்தையைவிடத் தாயின் கவனிப்பு தான் இந்தச் சாதாரணமான உலகத்திலும் அதிகமாக இருப்பதைக் காண் கிருேம். மனித வடிவில் திகழும் தாயார் நிலையே இஃதெனில் — இந்த உலகத்திலுள்ள உயிரினங்கள் அனைத்தையும் பெற்ற தாயாகிய சிவகாமி அம்மையின் அன்பை அளவிட இயலுமோ? அம்மை நிலையும் இதற்குப் புறம்பன்று; தந்தை நடராசப் பெரு மானைவிட அதிகமாகக் கருணை காட்டுவார்கள் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. அவ்வம்மையின் திருப்பணி இனிதே முடியும் என் பதில் ஐயம் என்ன? திருப்பணிக் குழுவினர் அனைவரும் அம்மை யின் அருளால் நீண்ட ஆயுளும் நிறைந்த செல்வமும் பெற்று மகிழ்வோடு வாழ்வார்களாக.

phone: 61546

Justice SADASIVAM

"ANANDASHRAMAM"
*21/4, Ormes Road, Kilpauk,*
MADRAS-10.

19—1—1972.

## கும்பாபிஷேக வாழ்த்துச் செய்தி

"பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே"
— அப்பர்.

கோயில் என்ருல் அது சிறப்பாகச் சிதம்பரத்தையே குறிக்கும் 'சித்' என்பது ஞானம் என்றும் 'அம்பரம்' என்பது ஆகாயம் என்றும் பொருள்படும். சித் + அம்பரம் = சிதம்பரம் ஆயிற்று. இதனுல், இது பஞ்ச பூத தலங்களுள் ஆகாயத்தலமாக விளங்குதல் புலனுகும். அறிவு வெளியில் ஆனந்த நடனம் புரியும் ஆட வல்லான் எழுந்தருளிய தலம் இதுவே ஆகும்.

சிதம்பரத்தில் இருத்தல்-தங்கியிருக்கும் நாள்தோறும் தில்லைக் கூத்தனை வழிபடுதல், முக்தி அடைதற்குரிய வழி என்று சான்ரேர் கூறுவர்.

இறைவி சிவகாமி அம்மை எழுந்தருளியிருக்கும் திருக்காம கோட்டத்தில் 6—2—72 ஞாயிறு அன்று கும்பாபிஷேகம் நடக்க யிருப்பதறிந்து பெரிதும் மகிழ்கிறேன். கும்பாபிஷேக திருப்பணிக் குழுவினர் விழாவை ஒட்டி சிறப்பு மலரொன்று வெளியிடுதலும் பாராட்டுதற் குரியது.

திருப்பணிக் குழுவினரின் முயற்சி வெற்றி பெற அருள் புரியு மாறு, எல்லாம் வல்ல அம்பலவாணனின் திருவருளை வேண்டு கின்றேன்.

இர. சதாசிவம்.

# Kumbabhishekam of Ancient Temple

Kulothunga Chola II, son of Vikrama Chola of the imperial Chola dynasty being an ardent devotee of Lord Nataraja was crowned at Chidambaram in the twelfth century. Structural additions were made to the temple of Lord Nataraja during his period. Noteworthy among them is the temple of Sivakami referred to in inscriptions as Thirukkamakotta Peria Nachiar, a magnificient structure situated to the west of the Sivaganga Tank. It is a separate unit in the temple precincts of Lord Nataraja with high compound walls with porches all around and a base. All around the base are found exquisitely artistic sculptures in relief of a variety of dance poses of graceful women accompanied by musicians playing a variety of instruments. The other wall of stone was added by Naraloka Vira, a pious vassal under Kulothunga III (1178-1216). According to Fergusson the shrine is principally remarkable for its parts which is of singular elegance. As the whole is enclosed in a court surrounded by gallaries two storeys in height, the effect of the whole is singularly pleasing. From the top of one of the pillars in the temple hangs a chain of three small circular movable links cut out of the same piece of stone.

The deity is facing east and holding Akshamala and Nilotpala in the two right hands and a parrot on a left hand, the fourth resting beneath the hips.

Kulothunga Cholan Ula, Raja Raja Cholan Vla and Takkayagaparani speak about the royal benefactors of the temple. Sekkishar, the author of Periapuranam, contemporary of Kulothunga Chola II, Venkatakrishna Dikshtar, author of Natesa Vijayam and a court poet under King Shahaji of Thanjavur, Kumaraguruparar, the author of Sivakami Ammai Irataimanimalai are some of the poets who have sung the glory of Sivakami the consort of Lord Nataraja enjoying His cosmic dance of at the same time enabling the souls to share that ecstasy in a measure they can experience.

Legends narrate how Adi Sankara was able to understand the import of the statement in Kenopanished viz., "Umam Haimavattimbasusobhamanam" by the grace of Goddess Sivakami and how the founder Saint of Dharmapuram Adhinam, Gurujinanasambandha was offered while was in meditation in the thousand pillard mandapam, a cup of sweet milk by the Goddess Sivakami herself.

The temple received the benefactions of several kings from days of the imperial Cholas down to the days of the Rajas of Chettinad. The temple is being renovated on the initative of the Dikshatas and pious devotees in and around Chidambaram with the help and co-operation of philanthropists, Saiva maths and temples and the department of Hindu Religious and Charitable Endowments.

P. THIRUGNANASAMBANDAN, M.A., L.T.,
*Registrar Madras University & Formerly Chief Professor of Sanskrit Presidency College, MADRAS.*

*(Courtesy — The Hindu, Thursday, January 27, 1972.)*

# சிவநெறி

## திருமுருக கிருபானந்தவாரியார்

இறைவன் என்ற சொல் இறு என்ற பகுதியடியாகப் பிறந்தது. எல்லா உயிர்களிலும் எல்லாப் பொருள்களிலும் இறைவன் நீக்கமற நிறைந்து நிற்கின்ருன். இனி எல்லாம் அவனிடத்திலே இருக்க, அவன் அவைகட்கு உறைவிடமாக இருக்கின்ருன். இது இறைவனுடைய விசுவரூபம்.

எல்லாப் பொருள்களிலும் தங்க வேண்டுமானுல் சிறிய—மிகச் சிறிய பொருளாக இருக்கின்ருன். மேருகிரி முதலிய பொருள்கள் யாவும் அவனிடத்திலே தங்கும்படி அப்பெருமான் மிகப் பெரிய பொருளாக விளங்குகின்ருன். இதனை உபநிடதம் "அணோரணியாந்-மஹதோ மஹீயா நாத்மா" என்று கூறுகின்றது.

அணுவுக்கு அணுவாகவும், மகத்துக்கு மகத்தாகவும் விளங்குபவன் இறைவன். ஒரு பழங் கதை—"பழம் கதை"

திருக்கயிலாய மலையில் உமாதேவியாருடன் சிவபெருமான் வீற்றிருக்கின்ருர். விநாயகப் பெருமானும் முருகப் பெருமானும் தாய் தந்தையரை வணங்கி வழிபடும் பொருட்டுச் சென்ருர்கள்.

தினந்தோறும் பழங்காலத்தில் மைந்தர்கள் தந்தை தாயரை வழிபடுகின்ற வழக்கம் இருந்தது.

"வைகறை யாமம் துயில் ஒழிந்து தான் செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து வாய்வதின்
தந்தையும் தாயும் தொழுது எழுக என்பது
முந்தையோர் கண்ட முறை"

என்று ஆசாரக்கோவை கூறுகின்றது.

ஆனைமுகனும் ஆறுமுகனும் அம்மையப்பரை வலம் வந்து வணங்கிஞர்கள். சிவமூர்த்தியின் திருக்கரத்தில் ஒரு தெய்வ மாதுளங்கனியிருந்தது. அதனை இருவரும் கேட்டார்கள்.

அரனுர் "அகில உலகங்களையும் ஒரு நொடிப் பொழுதுக்குள் வலம் வருபவருக்கு இக்கனி தரப்படும்" என்று அருளிச் செய்தார்.

முருகப் பெருமான் மயிலின்மீது ஏறி அகில உலகங்களேயும் ஒரு நொடிப் பொழுதுக்குள் வலம் வந்தார்.

‘ ஆகமம் விளேத்தகில
லோகமும் நொடிப்பொழுதில்
ஆசையொடு சுற்று
மதிவேகக்காரனும் ”
“ இலகுகனி கடலேபய
ருெடியல் பொரி அமுதுசெயும்
இலகு வெகு கடவிகட
தடபார மேருவுடன்
இகலிமுது திகிரி கிரி
நெரிய வளே கடல் கதற
எழுபுவியை ஒரு நொடியில்
வலமாக ஒடுவதும் ”

—திருவகுப்பு.

“ எல்லாம் சிவத்துள் ஒடுக்கம்” என்று கூறிய சீரிய மதியால் சிந்தித்து ஆனேமுக அண்ணல் அம்மையப்பரை வலமாக வந்து கனி பெற்ருர்.

இந்தப் பழங்கதை ஒரு பெரிய தத்துவத்தை உணர்த்துகின்றது.

1. தந்தைக்கு உபதேசித்த தயாபரனுக்கு சிவத்துக்குள் எல்லாம் ஒடுக்கம் என்பது தெரியாதா? தெரியும்.

2. எல்லா உலகங்களேயும் சர்வ வல்லமையுடைய வல்லபை விநாயகரால் வலம் வர இயலாதா? இயலும்.

3. சிவபெருமான் இருமைந்தர்களும் கனி கேட்டபோது உள்ள கனியை உடைத்துப் பகிர்ந்து தரக் கூடாதா ?

4. அல்லது ஒரு புதிய கனியை உண்டாக்கித் தரக் கூடாதா? வீதியில் விளேயாடுகின்றவன் கூட ஏதேதோ பொருள்களேத் தருவிக்கின்ருனே.

5, “ தம்பிக்கே தந்துவிடுங்கள், எனக்கு வேண்டாம்” என்று விட்டுக்கொடுக்கின்ற குணம் விநாயகரிடம் இல்லேயா ?

6. ‘ அப்பா! அண்ணுவுக்கே கொடுங்கள், நான் பிறகு வாங்கிக் கொள்ளுவேன் ’ என்று ஒதுங்கிப் போகின்ற தியாக புத்தி வேலவன்பால் இல்லேயா ?

7. ஒரு சிறிய கனி காரணமாக உலகத்தை வலம் வந்தால் கூலீ கட்டுமா ?

8. பழம் காரணமாகத் திருக்கயிலாய மலேயில் முருகனும் விநாயகரும் போட்டியிடலாமா ?

9. பழத்தின்மீது ஞானமே வடிவான விநாயகருக்கும், ஞான பண்டிதனுக்கும் அத்தனே ஆசையா ?

என்ற வினுக்கள் அடுக்கடுக்காக எழுகின்றன.

இத்தனே வினுக்களும் தவிடு பொடியாகுமாறு விடை பகர்கின்றேன்.

இறைவனேப் பற்றி நாம் முன் என்ன சிந்தித்தோம்? “எல்லா இடங்களிலும் எல்லாப் பொருள்களிலும் அவன் தங்கி இருக்கின்ருன் ” “ அவனிடம் எல்லாம் தங்கியிருக்கின்றன ” என்று இருவிதமாக நினேத்தோம் அல்லவா ?

சிவத்துக்குள்ளே எல்லாவற்றை யும் பார்த்தார் கணபதி.

எல்லாவற்றுக்குள்ளும் சிவத் தைப் பார்த்தார் முருகர்.

இந்த அரியபெரிய உண்மையை உணர்த்துகின்றது அப்பழங்கதை.

இதனைத் தாயுமானவர் கூறுகின் றார்.

" அங்கெங்கெனாதபடி
எங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி

அருளொடு நிறைந்ததெது ?
தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடி எல்லாம்

தங்கும் படிக்கிச்சை
வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது ?

இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்றானே ? உலக மாயை அவனைப் பற்றாதோ ? என்ற வினா எழும்.

உம்பு விளைகின்ற இடம் கடல். கட லில் உவர்நீரில் பிறந்து, உவர்நீரைப் பருகி, உவர்நீரில் வாழ்கின்ற மீனுக்கு உவர் ஏறுவதில்லை. மீன் உண்போர் கடல்மீனுக்கும் உப்பிட்டுத்தான் சமைத்து உண்பார்கள். அதுபோல் இறைவன் யாண்டும் உறைகினும் உலக மாயை அவனைப் பற்றாதென உணர்க.

எங்கும் நிறைந்த பொருள் இறை வன் என்றால், ஏன் அது நமது கண் ணுக்குத் தெரியவில்லை? என்பாரும் உளர். விறகிலே நெருப்பு இருக்கின் றது. பாலில் நெய் இருக்கின்றது ஆனால் கண்ணுக்குத் தெரிகின் றனவா? இல்லை; விறகிலே தீயும், பாலில் நெய்யும், கண்ணுக்குத் தெரி யாமையால் இல்லையென்றால் நமக்கு அறிவு இல்லை என்று உலகம் சிரிக் காதா?

விறகைக் கடைந்தால் தீ வெளிப் படும். பாலைக் கடைந்தால் நெய் வெளிப்படும். அதுபோல தியானம் புரிந்தால் இறைவன் வெளிப்பட்டுக் காட்சி தருவான். சாதனைகள் செய் தால் தேவரும் மூவரும் காணமாட் டாத சிவம் தானே வந்து வெளிப்பட் டுத் தோன்றும்.

" விட்டேன் உலகம் விரும்பேன்
இருவினை வீணருடன்
கிட்டேன் அவருரை கேட்டுமிரேன்
மெய்கெடாத நிலை
தொட்டேன் சுகதுக்கம்
அற்றுவிட்டேன் தொல்லை
நான்மறைக்கும்
எட்டேன் எனும்பரம் என்னிடத்தே
வந்து இங்கெய்தியதே "

என்கின்றார் பட்டினத்தடிகளார்.

கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியும் மற்றவர் அறியா மாணிக்கமலையும் ஆகிய இறைவன் சொரூப நிலையில் 'சிவம்' என்றும், உலகை நோக்கில் தடஸ்த நிலையில் 'பதி' யென்றும் பேர் பெறுகின்றான்.

இறைவனைப் பற்றியும், உயிர் களின் தன்மைகளைப்பற்றியும் உயி ரின் இயற்கைக் குற்றமாகிய ஆண வத்தைப்பற்றியும், நமது சைவ சித் தாந்த நூல்கள் தாம் தெளிவாகக் கூறுகின்றன. ஏனைய நூல்களில் ஆணவத்தின் பேர் தானும் கூறுமா றில்லை.

அத்வைதம் :--அத்வைதம் என்ற சொல்லுக்குப் பலர் பலவாறு பொருள் கண்டார்கள். திருவருள் துணை செய்யாமையால் மற்ற மதாசிரியர்கள் மாறுபட்ட கருத்துக்களைக் கூறிக் குழப்பஞ் செய்தார்கள்.

"ஏகம் ஏவ அத்வீதியம் ப்ரம்ம" என்பது வேதவாக்கு. இதன் பொருள் "ஒன்றே தான் பொருள், இரண்டாவதில்லை" என்பது. இதை வைத்துக் கொண்டு சங்கரர் முதலியோர், பிரம்மத்தையன்றி வேறுபொருள் இல்லையென்று முடிவுகட்டிவிட்டார்கள்.

பிரம்மத்தைத்தவிர வேறு பொருளே இல்லையானல் இதனை யார் யாருக்குக்கூறுவது. இந்த வார்த்தையினல், சொல்பவன் ஒருவன், கேட்பவன் ஒருவன் இருக்கவேண்டும் அன்றோ? பிரமமே மயங்குகின்றதா? பிரம்மத்தைத் தவிர வேறு பொருள் இருந்தால்தானே இந்த வசனம் உண்டாகும்.

பிரம்மத்தைத் தவிர தலைமைப் பொருள் வேறு இல்லையென்பதே இந்த வேத வசனத்தின் உட்பொருள் என உணர்க. இங்ஙனம் அறியாது மயங்கி மருண்டார்கள் பலர்.

ந-த்வைதம் என்ற சொற்கள் சேர்ந்து அத்வைதம் என்றுயிற்று. ந என்ற சொல்லுக்கு "சப்த கல்பத்ருமம்" என்ற நூலில் ஆறுபொருள்கள் கூறியுள்ளது. அவற்றுள் மூன்று, அன்மை, இன்மை, மறுதலை. என்பனவாம். இன்மையென்ற பொருளில் அப்பிரகாசம் எனக் கொண்டு ஒன்றேதான் என்ருர் சங்கரர்—மறுதலைப் பொருளில் அநீதி, அதர்மம் எனக் கொண்டு இருபொருள்கள் என்ருர் மத்வர், மெய்கண்டார் அப்பிராமண தருமம் கெட்டவன் என்று அன்மைப் பொருளில் கூறியருளினர். பொன்னும் மணியும் போல் உலகமும் இறைவனும் ஒன்றே என அபேதவாதங் கூறினர் சங்கரர். இதில் ஆபரணத்திற்கு வரும் குறைபாடுகள் யாவும் பொன்னுக்கும் வரும். ஆதலால் இவை பொருந்தாதென உணர்க.

இறைவனும் உலகமும், ஒளியும் இருளும்போல் வேறு வேறு என்றனர் மத்வர். இது பேதவாதம். இருளும் ஒளியும் பகைப்பொருள்கள். ஆதலால் உலகமும் இறைவனும் தொடர்பில்லாமல் போவதால் இது பொருந்தாமையறிக.

பாஞ்சராத்திரிகள், சொல்லும் பொருளும் போல் பேதாபேதம் என்பர். சொல்லும் பொருளும் வேறு வேறு பொருளே யாதலால் இவர் கூற்றும் பொருந்து மாறில்லை.

சிவாத்துவித சைவர்களும், மரமும் கிளையும்போல் என பேதாபேதமே கூறி மயங்குவர். அபேதவாதம், பேதவாதம், பேதாபேதவாதம் என்ற மூன்றுமே பொருந்தாது என்ருல், உலகத்துக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்புதான் எவ்வகைப்பட்டது?

மேலே கூறிய மூன்றனுள் ஒன்றையே கூருது, மூன்று தன்மைகளும் தன்னுள் காணப்படும் அத்வைதத் தொடர்பே உலகிற்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு என்கின்ருர் மெய்கண்ட சிவம்.

எண்ணுப் பொருளில் அகரம் அன்மைப் பொருளிலேயே வரும்.

அ ஏகம் அநேகம் என்பது போல, அ த்வைதம் அத்வைதம் என வந்தது.

அத்வைதம் என்பது இரண்டல்லாமை பிரிவின்மை என உணர்க. பிரிவின்மை என்றதனுல் பொருள் இரண்டுதான். இரண்டாயினும் வேறு வேருய் நில்லாது ஒன்றியே நிற்கும்.

இறைவனும் உலகமும் ஒன்றி நிற்குங் கலப்பினுல் ஒன்ருகியும். பொருள் தன்மையால் வேருகியும், உலகத்துக்கு உதவும் பொருட்டு உடனுகியும், இறைவன் ஒன்ருகி, வேருகி, உடனுகி நிற்கின்ருன்.

உடலும் உயிரும் போல்
ஒன்ருகியும்,
கண்ணொளியும் கதிரொளியும்
போல் வேருகியும்
கண்ணொளியும் உயிரறிவும்
போல் உடனுகியும்
ஒன்றுபட்டு அருள் புரிவன்.

இந்த விரிந்த கருத்துக்களை மெய்கண்டார் சுருங்கிய சொற்களால் "அவையே தானேயாய்" என்று கூறியுணர்த்துகின்ருர்.

அவையேயாய் :—உயிரும் உடலும்போல்
ஒன்ருகியும்
தானேயாய் :—பொருள் தன்மையால்
கண்ணொளியும் கதிரொளியும்
போல் வேருகியும்
அவையேதானேயாய் ;— கண்ணொளியும்
ஆன்ம அறிவும் போல் உடனுகியும்

நின்று இறைவன் அருள் புரிகின்ருன்.

ஈருய் முதல் ஒன்ருயிரு பெண்
ஆண்குணம் மூன்ருய்
மாருமறை நான்காய் வரு பூதம்
அவை ஐந்தாய்
ஆருர்சுவை ஏழோசையோடு
எட்டுத்திசை தானுய்
வேருய் உடன் ஆனுன்
இடம் வீழிம்மிழலையே"

என்று திருஞான சம்பந்தர் இதனை விளக்குகின்ருர்.

எனவே உயிர்களை உய்விக்கும் பொருட்டு இறைவன் ஒன்ருய் வேருய் உடனுய் நிற்கின்ருன்.

இறைவனுடைய அருட் பெருங் கருணையை நினைந்து நினைந்து நாம் உருகி வழிபாடு செய்தல் வேண்டும். இல்லையேல் நன்றி மறந்த பாவத்துக்கு ஆளாவோம்.

இறைவனுடைய திரு ஐந்தெழுத்தை இடையருது ஓதினுல் பிறவிப் பெருங்கடலை எளிதில் கடந்து விடலாம்.

சித்தத்தில் தித்திக்கும் மந்திரம் பஞ்சாட்சரம். சித்திக்கும் முத்திக்கும் அதுவே காரணம்.

ஒன்று கண்டீர் உலகுக்கு ஒருதெய்வம்
ஒன்று கண்டீர் உலகுக்குயிராவது
நன்று கண்டீர் நமச்சிவாயப் பழம்
தின்று கண்டேற்கிது தித்தித்த வாறே

சிவபஞ்சாட்சரத்தை அன்புடன் ஓதும் உத்தமர்க்குத் தரித்திரம் உண்டாகாது. இம்மை மறுமை வீடு என்ற மும்மை நலங்களும் உண்டாகும்.

விச்வேச்வராய நரகார்ணவ தாரணாய
கர்ணாம்தாய சசி சேகர தாரணாய
கர்ப்பூர காந்தி தவளாய ஜடாதராய
தாரித்ரய துக்க தஹனாய நமச்சிவாய.

"நரகமாகிய கடலைத் தாண்டச் செய்கின்றவன் சிவன். தரித்திர மாகிய துக்கத்தைத் தகனஞ் செய்கின்றவன்!" என்று வசிட்ட முனிவர் சிவபெருமானைத் துதி செய்கின்றார்:

ஆயிரம் எழுத்தல்ல, நூறு எழுத்தல்ல, பத்தெழுத்தல்ல. ஐந்து எழுத்துத்தானே. இதைக் கூட உச்சரிக்கக் கூடாதா? என்கின்றார் இராமலிங்க அடிகளார்.

ஆயிரமன் றேனூறு மன்றே ஈரைந்தன்றே
ஆயிரம்பேர் எந்தை எழுத் தைந்தேகாண்
—நீயிரவும்
எல்லும் நினைத்தியென ஏத்துகினும்
எந்தாய் வீண்
செல்லுமனம் என்செய்கேன் செப்பு,

நமக்கு இறைவன் தந்த வாழ்நாள் சிலவே, ஒவ்வொரு நாளாகக் கழிந்து கொண்டே போகின்றது. நாம் அன்றாடம் தேதித்தாள் கிழிக்கின்றோமே? தாளா அது? இல்லை, நம் வாழ்நாள். பொழுது விடிந்து பொழுது போனால் வாழ்நாளில் ஒருநாள் வீணாகி விடுகின்றது. ஒரு நாளைக்குத் தேதித் தாளை நாம் கிழிக்கமாட்டோம். மனைவி "தினம் காலண்டரைக் கிழித்துப் பற்பொடி மடிப்பீரே இன்று கிழிக்கவில்லையே?" என்று கூறியழுவாள்.

ஆறு நாளில் கண்ணப்பர் முத்தி பெற்றார் என்று அறிகின்றோம். அதி தீவிரமாக இறைவனிடத்தில் அன்பு செலுத்தினால் கண்ணப்பர் பெற்ற பேற்றை நாமும் பெறலாம்,

திருச்சிராப்பள்ளிக்கு அருகில்ஆனை பூசித்த தலம் திருவானைக்காவும், எறும்பு பூசித்த தலம் திரு எறும்பூரும் காட்சி தருகின்றன, பெரிய பிராணி யானை, சிறிய பிராணி எறும்பு. எறும்பு முதல் யானை யீருக என்பார்கள். யானையும் இறைவனை வழிபட்டது. எறும்பும் இறைவனை வழிபட்டது. மனிதராகப் பிறந்த நாம் இறைவனை வழிபடவேண்டாமா?

இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ? ஆதலால் ஒவ்வொருவரும் சிவபூசை செய்தல் வேண்டும். திருமுறைகளை ஓதுதல் வேண்டும். திருவெண்ணீறணிந்து கண்டிகை புனைந்து ஆலய வழிபாடு செய்தல் வேண்டும். இறைவனிடத்தில் இடையறாத அன்பு செய்யவேண்டும். மால் என்றால் அன்பு. மால் ஆனார்க்கு அவன் எளியவன். அன்பு செய்வார் நெஞ்சில் நீங்காது நிற்பன்.

"அன்றுமா லானார்க் கரிதாகி நீயுலகில்
இன்றுமா லானார்க் கெளிதன்றோ —
கொன்றைசேர்
பொன்னார் சடாமகுடப் புண்ணியா
பொற்சபையின்
மன்னா சிதம்பரதே வா.

தானவரு மாலும் சதுர்முகனும் மற்றுமுள
வானவரும்தேடி மயங்கவே—ஞானமுடன்
நேயம் பெறுமடியார் நெஞ்சினுள்ளே
நிற்பதென்ன
மாயம் சிதம்பரதே வா,

என்கின்றார் குருநமசிவாயர்.

எனவே என்பும் உருக அன்பு செய்து எல்லோரும் பாசநீக்கம் பெற்று சிவமாம் பெற்றி பெறல் வேண்டும்.

இதுகாறும் கூறியவற்ருல், இறைவன் எங்கும் உளன் என்பதும், முருகனும் கணபதியும் சிவனது அத்வைத நிலையைக் காட்டிஞர்கள் என்பதும், இறைவன் உலகமெங்கும் உறையினும் கடல் மீன்போல் உலக மாயை ஒட்டாதவன் என்பதும், தியானத்தால் அவனைக் காணலாம் என்பதும், அத்வைதம் என்ற சொல்லின் உண்மைப் பொருள் இது என்பதும் இறைவன் ஒன்ருய் வேருய் உடனுய் நின்று தண்ணருள் புரிகின்ருன் என்பதும், அப்பரமனை வழிபட்டு ஒவ்வொருவரும் உய்தல் வேண்டும் என்பதும் பற்றிச் சிந்தித்தோமாக.

ஒன்பதில் ஒன்ருனுய் ஒன்றில் ஒன்பதும் ஆனுய்
என்பதில் நன்ருனுய் ஏனம்மா எனை வீணுய்
இன்பம் இழந்தோனுய்த் துன்பம் அடைந்தோனுய் (உன்)
அன்பை மறந்தோனுய் ஆக்கியதே னம்மா (சிவகாம)

## அழகான மயிலேறி வருவான்

ராகமாலிகை : ஆதி தாளம்

பல்லவி

அழகான மயிலேறி வருவான் அன்பு
வடிவானவன் என்னுள் உறைவானவன் மிக (அழகான)

அனுபல்லவி

குழலூதுவனின் மருகன் குன்று
தோருடுவான் செந்தில் போராடுவான் அவன் (அழகான)

சரணம்

உருவாயும் அருவாயும் உள்ளவன் உண்மை
உரைப்போர்க்கே மிகமிக நல்லவன்
பெரும் வயிறனுக்கு அவன் சின்னவன் (எந்தை)
பெருமானுக்கே பொருள் சொன்னவன் அன்னவன் (அழகான)

ஒரு கோலைக் கையில் கொண்டான் பழனி
திருக்கோயில் மலையில் நின்ருன் அங்கு
வருவோர்க்கே அருளுகின்ருன் அல்லல்
அறுத்தே நல்பொருள் சொல்கின்ருன் (அவன்) (அழகான)

பெருநாவல் மர மீதிருந்தான் அவ்வை
செருக் கறுக்கும் கனி எறிந்தான் அதைப்
பொறுக்கி எடுத்தூதி உணர்ந்தாள் குகன்
இருக்கும் இடம் தேடத்தெரிந்தான் (அவன்)
(அழகான)

—

# அனைத்தும் அவள்தான் !

மதுரகவி
உளுந்தூர்ப்பேட்டை திரு சு. சண்முகம், எம்.ஏ., எம். லிட்.

இராகமாலிகை { ஆனந்தபைரவி / சம்க்ரந்தனப்ரியா / பாகேஸ்வரி

அவள்தான் அனைத்தையும் ஆட்டுபவள்
அருளால் இருளினை ஓட்டுபவள்
(அவள் தான்)

மழையாய்ப் பொழிவாள் மனத்தினிலே
சுடராய்ப் பொலிவாள் கணத்தினிலே
(அவள் தான்)

தில்லையில் அவள்பெயர் சிவகாமி
திருக்கட ஹுரினிலே அபிராமி
நெல்லையில் காந்திமதி அன்னையவள்
நீலக் கடலோரம் கன்னியவள்
(அவள் தான்)

மணமகளா யிருப்பாள் மதுரையிலே
மலருடைகள் தரிப்பாள் மயிலையிலே
கணவனை வேண்டிடுவாள் காஞ்சியிலே
கடைக்கண் காட்டிடுவாள் காசியிலே
(அவள் தான்)

ஞானப் பால்தருவாள் காழியிலே - சீர்
காழியிலே

நம்பிக்கை ஒளிதருவாள் வாழ்வினிலே – நம்
வாழ்வினிலே
மோனப் பழம்தருவாள் கயிலையிலே – திருக்
கயிலையிலே
முற்றும் உணர்ந்தவர்க்கு மயில் அவளே – ஆடும்
மயில் அவளே !
(அவள்தான்)

# திருநாவுக்கரசரின் தில்லைத் திருப்பதிகங்கள்

செஞ்சொற்கொண்டல்
**வித்துவான் செ. சிங்காரவேலன்** எம். ஏ:, டிப். லிங்.

எட்டுப் பதிகங்கள் :-

தில்லைச் சிற்றம்பலம் எனப்படும் சிதம்பரத்தைச் சிவ தலங்களில் முதன்மை பெறுவதாக எண்ணிப் போற்றுவது சைவர் மரபு. 'கோயில்' என்ற பெயர் தில்லை ஒன்றையே குறிக்கும் என்பர். நால்வர் திருப் பாட்டும் பெற்ற இத் திருத்தலம் இலக்கிய வளம், வரலாற்று வளம் முதலிய அனைத்து வகையினும் சிறப் புடையதாகும். அப்பர் அடிகள் இத் திருத்தலத்திற்குப் போந்து வழி பட்டுப் பல பதிகங்களைப் பாடினர். அவற்றுள் இப்போது கிடைப்பன எட்டுப் பதிகங்களே ஆகும்;

ஆடும் ஆடலைக் கண்டு மகிழ்ந்து, அதனை விளக்கு முகத்தான் "செஞ் சடை" எனத் தொடங்கும் பதிகமும், கண்ட மகிழ்ச்சியில் வேறு எதனையும் கருதாத பேரின்ப நிலையை உரைக்கு முகத்தான் "பாளையுடை" எனத் தொடங்கும் பதிகமும், இத்தகு விழுப்பொருளாம் இறைவனைப் பெரும்பற்றப் புலியூர் இடங்கொண்ட பெரும்பொருளைப் பேசாத நாள் எலாம் பிறவா நாளே என்ற அடிப் படைக் கருத்தை அறிவுறுத்து முகத் தான் "அரியானை' எனத் தொடங் கும் பதிகமும், எல்லாத் தலங்களிலும் உள்ள சிவ கலைகள் அர்த்தயாம வழி பாட்டில் தில்லையிற் புக்கொடுங்கும் மரபினை எடுத்துக் குறிப்பாக உணர்த் தும் வகையான் "மங்குல்" எனத் தொடங்கும் புக்க திருத்தாண்டகப் பதிகமும் அடுத்து அடிகளாராற் பாடப்பெற்றன. இரண்டு குறுந் தொகைப் பதிகங்களும் திருவேட் களம், திருக்கழிப் பாலை முதலிய திருத்தலங்கட்குச் சென்று மீளுங் கால் பாடப்பட்ட வழிநடைப் பதிகங் கள் ஆகலாம், இனி, இப்பாகுபாட் டிற்குட்பட்ட இப்பதிகங்களின் பொருள் நோக்கினையும், அதனுற் புலப்படும் அடிகளின் திருவுளப் போக்கினையும் தெளிவுபடுத்தலாம். இப்பதிகங்களைத் திருமுறைகளாக அமைந்த வரிசையில் நோக்குதல் நலம் பயக்கும். சேக்கிழார் இவ் வரிசையிலேயே புராணத்து உரைத் துள்ளார்.

திருநேரிசைத் திறம் :

(i) இரண்டு திருநேரிசைகளில், முதலாவது "செஞ்சடை" எனத் தொடங்குவது. கொல்லிப்பண்ணில், அமைந்த இத்திருப்பதிகத்தில் அடி களார் இறைவனுடைய திருக் கூத்

துத் தெய்வீகக் கலை எழிலை விளக்கி ஓவியமாக்கியுள்ளார்.

சிவந்த சடைக் கற்றையில் நிலா ஒளி வீச, தில்லைச் சிற்றம்பலத்தில் இருள் கிழிய, எரியேந்தி ஆடுகின்ருன் கூத்தப்பிரான். மருங்கிலே சிவகாமித்தாய் நின்று மகிழ்கின்ருள். நீறு மெய்பூசி, ஆறுடைய சடையுடன் அண்ணல் ஆடுகின்ருன்; திருவடிக் கழல்கள் ஆர்க்கின்றன; காதில் வெண்குழைகள் தாழ்கின்றன; பூதங்கள் சூழ்ந்து ஆடுகின்றன; ஒருடம்பு இருவர் ஆகி ஒளிநடம் விரிகின்றது. ஏத்துவார் இடர்கள் தீர்க்கும் எம்பிரான் ஆடும் வண்ணம் இது. விருத்தனுய், பாலனுய், அங்கே பலகோலம் வெளிப்படுகிறது. நீலஞ்சேர் கண்டம் தெளிவாகிறது; அனல் எரி ஏந்தி நின்று ஆடும் இந்த ஆனந்தக் கூத்து 'ஓர் அதிசயம்' என்று வியக்கின்ருர் அடிகள். 'அதிசயம் போல நின்று அனல் எரியாடுமாறு' என்று பதிகம் நிறைகின்றது. தில்லையைச் சூழ்ந்த பூஞ்சோலைகள் நான்கு இடங்களிலும், (1,2,3,7,) வயல்கள் (4) ஒரு பாடலிலும், கூறப்பட்டன. இத்திருப்பதிகம் 'வியப்பு' என்ற மெய்ப்பாடு விளைத்த தீந்தமிழ் ஓவியமாக இவ்வாறு திகழ்கின்றது.

(ii) இந்த 'அதிசய' அநுபவத்தினின்றும் விடுபட்டுத் தாம் வந்தது இத்தெய்வக் கூத்தெழிலைத் தேக்கிப் பேரின்பம் பெறவே என்ற குறிக்கோளைக் கூறுவதே "பத்தனுய்" எனத் தொடங்கும் பதிகம். தம்முடைய சிறுமை உணர்வு அவ்வப்போது அவர் திருவுள்ளத்தே அலைமோதுகின்றது. இந்தப் பேரழகுக் காட்சி தமக்குக் காணக் கிடைத்ததே என்ற விம்மிதம்;

பத்தனுய்ப் பாடும் திறன் இயலாதவன் யான்; கருத்து ஒன்றிப் பாடும் திறன் இல்லாதவன்; சுற்றத்தைப் பிரிந்து வாராத பற்றுடையவன்: திகைக்கும் சிந்தை உடையவன்; கண்டவாறு திரிந்து நாளும் திரிபவன்; பொய்யினை நீங்கி அடிமை செய்ய இயலாதவன்; என் மனமோ திகைத்து நாளும்மாண்பற்ற நெறிகள் மேலே செல்லுகின்றது; ஆம்; இதனை மாற்றுவது உன்னுலேயே இயலும். என் நெஞ்சத்தைத் தூய்மைப்படுத்தி, நினைக்கும் நெறியில் நினைப்பிக்கவேண்டிய தலைவனுகிய நீ, வாளா இருந்தால் யான் வாழ்வது எப்படி? வஞ்சகமாக இருந்தாய் என்று நின்னைக் கூறுதலே தகும். நின் திருப்பாதத்தை என் நெஞ்சில் நாட்டியிருக்கிறேன் நான். என் அடிமை 'செறிவுடை அடிமை' யாக அமைய, 'புறமலா அடிமை' யாக அமைய, 'எத்தினுல் பத்தி செய்யும் என் நிலை மாற அருளிச் செய்வாயாக"

என்று இப்பதிகத்துள் கனிகின்ருர் அடிகளார். தம் கடந்த காலப் புறச்சமய வாழ்வு பற்றிப் புழுங்கும் புழுக்கமே இத்தகைய கண்ணீர் ஓவியமாக வெளிவருகின்றது என்று கூறலாம். ஆகவே, இப்பதிகத்தின் சொல் நோக்கும் பொருள் நோக்கும் கொண்டும், அழுகை என்ற மெய்ப்பாட்டின் விளைந்தன இந்தப் பாடல் தொகுப்புக்கள் என்று உரைத்தல் பொருந்தும்.

திருவிருத்த மாண்பு:—

(i) திருவிருத்தம் இரண்டு பதிகங்களில், "கருநட்ட" எனத் தொடங்கும் திருப்பதிகம், திருக்

காட்சி அளவில் எழுந்த உணர்ச்சிப் பெருக்கின் விளைவு என்று கொள்ள லாம் என்று முன்னும் கூறப்பட்டது. அளவற்ற பெருமகிழ்வு இப்பதிகப் பாடல்களில் இழைக்கின்றது.

நஞ்சு அடக்கிய கண்டனாக, அண் டங்களின் தலைவனாக, கருதியன தரும் கற்பகமாக, திரிபுரம் எரித்த தெய் வீகப் பெருவீரனாக, எரி ஏந்தி ஆடும் திருநட்டம் ஆடியாக, தில்லைக்குத் தலைவனாக, வாழ்த்துகின்றார் அடிகள். என்று வந்தாய் என்று கேட்கும் திருக் குறிப்பை உணர்ந்து உணர்த்துகின் றார். அடுத்து. பொன்மலை ஒன்றில் வெள்ளிக்குன்று ஒன்றுபோல இலங் கும் பெருமான் தம் மனத்திற்குள் சுவடுதெரியாமற் போந்த அற்புத அநுபவத்தைக் கூறி மகிழ்கின்றார் பின்னர்.

குனித்த புருவம்; கொவ்வைச் செவ் வாய்; அதிர்க்குமின் சிரிப்பு; விரித்த சடை; செம்மேனி; அதிற்பால் நீறு; இனித்தம் ஆகிய முத்திப்பேற்றைத் தருகின்ற எடுத்த பாதம். ஆகிய இவற்றைக் காணப்பெற்றால் இந்த மாநிலத்தில் மனிதப் பிறவியும் வேண் டும் என்று முழங்குகின்றார் அடுத்து. இப்பெருமானுக்கு ஆட்பட்டிருப்பதே நம்கடன்; இதனாலேயே 'நமக்கு இப் பிறவி வாய்த்தது; இதனை மதித்திடுக' என்று அறிவுறுத்துகின்றார். தில்லை யம்பலக் கூத்தன் குரைகழல் தம் நெஞ்சில் குடிகொண்ட திறன் கூறி அடைக்கலமாகத் தம்மைக் காணிக்கையாக்கும் செய்தியை அடுத்து உரைக்கின்றார். இந்தப் பேருலகம் என் அத்தன் ஆடல் கண்டு இன்புற்றது என்று மகிழ்ந்து, எடுத்த பொற்பாதத்தின் வீரத்திறன் பேசி நிறைவிக்கின்றார். தக்கனுடைய வேள்வியில் சந்திரனை அழித்தது; காலனை அழித்தது; திரு மாலும் பிரமனும் தேட எடுத்தது;— ஆம்; இத்தனையும் தில்லைச் சிற்றம் பலத்து நட்டம் ஆட எடுத்திட்ட பாதமே; இதுவன்றோ 'நம்மை ஆட் கொண்டது' என்று பெருமிதத்தால் விம்முகின்றார் பெருமுனிவர். இப்பதி கத்து ஆறும் பாடல் அகப்பொருள் நெறியில் பொருள் கொள்ளுமாறு மலர்ந்துள்ளது.

(ii) இரண்டாவது திருவிருத்த மாகிய "பாளையுடை" என்ற தொடக்கத்துப்பதிகம், ஆனந்தக்கூத் துத் தரிசனம் பெற்றபின் வேறொன் றும் பொருள்இல்லை என்ற செம்மாப்பு பெருமிதம் என்ற நிலையில் எழுந்துள் ளது. சிற்றம்பலத்து அரன் ஆடல், திருவடி, உடுத்த துகில், மேல் அசைத்த கச்சு, கைந்நின்ற ஆடல், அணிந்த பன்றி எயிறு, சிரித்த முகம், நெற்றிக்கண், அணித்த மத்த மலர், திருவடி விரல்-அழகு ஒவ்வொன்றாக எடுத்துரைத்து இவற்றைக் கண்ட "கண்கொண்டு மற்று இனிக் காண் பது என்னே" என்று உரைத்துப் பெருமிதம் எய்துகின்றார் அடிகளார்.

தில்லை நட்டத்துடன், தில்லை நக ரத்தையும், அங்கு வாழும் சான்றோர் முதலிய புற அழகுகளை இப்போது கண் திறந்து காண்கின்றார் அடிகள். சென்ற பதிகத்தில் ஆடல் தவிரப் பிறிதொன்றில்லை. இங்குத் தரிசன அநுபவத்தினின்றும் தனியே பிரிந்து நின்று களிப்பு மீதூர பிற புறக் கோலங்களிலும் உள்ளம் சென்று நிலைக்கின்றது. பாளை உடைய கமுக மரங்களும், பல மாட மாளிகைகளும்,

வாளை பாயும் வயல்களும் அடிகளார் கண்முன்னே விரிகின்றன. வயல்களில் நீல மலர்கள் பூத்திருக்கும் அழகுக் காட்சி அடிகளார் பார்வையில் படுகிறது. திருவுடைய அந்தணர்கள், இணையடிகள் தரித்த மனத்தவர்கள், சித்தத்து எழுந்த செழுங்கமலம் போன்ற சேவடிகள் வைத்த மனத்தவர்கள், தூயவாழ்வு அடிகளார் உள்ளத்தில் எழுகின்றது.

'தன்னுடைய ஊனத்தை நீக்கி, உலகறியத் தன்னை ஆட்கொண்டு தேனாய் இனிக்கும் இறைவன்' திருவருள் வீறு அடிகளார் உள்ளத்தில் இப்படிப் பொங்கி நிறைகின்ற வியத்தகு விந்தையை இப்பதிகப் பாடல்கள் சுட்டி நிற்கின்றன.

திருக்குறுந்தொகை எழில்:

(i) ஐந்தாம் திரு முறையாகிய திருக்குறுந்தொகையில் உள்ள முதல் திருப்பதிகம் "அன்னம் பாலிக்கும்" எனத் தொடங்குகின்றது. திருவேட்களம் முதலிய தல யாத்திரைகளில் இப்பாடல்கள் பாடப் பட்டிருக்கலாம் என்று முன்னம் கூறப்பட்டது. 'இந்தப் பிறவி வேண்டும்' என்று முன்னே கருதிய திருவுள்ளத்தில், 'இத்தகு பிறவி இன்னும் வேண்டும்' என்று ஏங்கும் மறுநிலை பிறக்கிறது இங்கே; "இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே" என்று. திருவருட்பேறு, பொன், அன்னம் எல்லாம் பாலிக்கும் தில்லையைச் சென்று தொழுக என்ற உபதேசம் உருவாகிறது. யாக்கை அழிவதற்கு முன்பாகத் "திருச்சிற்றம்பலம் சென்றடைந்து உய்க"; இங்கு வழிபட்டால் காலன் வாரான்; தில்லையின் எல்லையினை வழிபட்டாலேயே வினை விரைந்து நீங்கிவிடும் என்று கூறுவது உண்மை ஆகும்; நான் இச் சிற்றம்பலவனுக்கு அடிமை பூண்டேன்; அல்லல், அருவினை, பழவினை முதலிய எதுவும் என்னை இனி என்ன செய்து விடமுடியும்? என்னுடைய உடம்பிலே உயிர் மூச்சுக் காற்றாக உள்ளும் வெளியும் போக்கு வரவு புரியும் எப்போதும் நான், அம்பலத்து ஆடும் அந்நாதனை நான் பொருந்தியிருக்கும் பேறு பெற்றேன்,

தம்முடைய 'அடியாரை அறிவர்' சிற்றம்பலத்து இறைவன்; ஆதலால் திருவருட்பேறு உறுதி' என்றெல்லாம் தம் அநுபவத்தோடு இணைத்துப் பாடுகின்றார் அடிகளார்.

உலகத்தார்க்கு அறிவுறுத்தும் பகுதியாகவே பெரும்பாலான செய்திகள் இப்பதிகத்துக் காணப் பெறுகின்றன. ஆகவே, 'பெற்ற பெருவளம், பெறார்க்கு அறிவுறீஇச் சென்று பயன் எதிரச் சொன்ன பக்கம்' ஆக இவற்றை மதிக்கலாம்.

(ii) 'பணைக்கை' எனத் தொடங்கும் பிறிதொரு குறுந்தொகைப் பதிகமும், முன் போன்ற யாப்பமைதி உடையதேனும், பொருள் நோக்கத்தால் வேறுபட்ட பாங்குடையதாக உள்ளது. 'தில்லைப் பெருமான் திருவருளை நான் மறந்து உய்வேனோ' என்று பாடல்தோறும் உருகுகின்றது அடிகளார் திருவுள்ளம். அம்பலத்தாடும் அரும்பொருளின் பல்வேறு அருளியல்புகளைக் கூறிக் கூறிக் குளிர்ந்து தம்முடைய மறவா நிலையை உறுதிப் படுத்துகின்றார் அடிகள்.

வேழம் உரித்தவன்; பார்த்தனுக் கருளியவன்; மார்க்கண்டர்க் கருளியவன்; இராவணனை ஊன்றிய சேவடியினன் ஆகிய திருவருட் செயல்கள் குறிக்கப் பெற்றன. நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்' என்பது தம் நெஞ்சுட் புகுந்தாண்ட திறம் நினைந்த குறிப்பும் ஆகலாம்.

'அம்பலக் கூத்தன்', அம்பலத்துள் நின்ற தாணு' 'அம்பலத்து ஆதி' 'சிற்றம்பலத்து எங்கள் ஐயன்', என்ற பல தொடர்கள் இங்குப் பயில்கின்றன. தினை, எள் ஆகிய அளவு சிறு பொழுது கூட நான் மறவேன் என்ற உறுதி இரண்டிடங்களில் எடுத்துரைக்கப் பட்டது. சிவகாமி யம்மையுடன் சிற்றம்பலத்தே அடிகள் கண்ட காட்சி,

'செய்ய மாதுறை சிற்றம்பலத்து'
'வாருலாவிய மங்கை மணாளன்'

என்ற தொடர்களால்தெளிவுறலாகும். இனி, தில்லைச் சிற்றம்பலத்தின் பொன் ஓடுகளில் திருவைந்தெழுத்து எழுதி அவற்றை அங்கே வேய்ந்தவர்கள் வானுலகத்துத் தேவர்கள் என்ற பெருண்மையை, "முழுதும் வானுலகத்துளதேவர்கள், தொழுதும் போற்றியும், தூய செம்பொன்னினால் எழுதி. வேய்ந்த சிற்றம்பலக் கூத்தனை" என்ற பகுதி விளக்குகின்றது. தம்முடைய நிலையை எண்ணிய அடிகள், 'கொடியேன்', 'தமியேன்', 'அடியேன்' பாங்கிலாத் தொண்டனேன்' என்ற சொற்களால் உரைத்துள்ளனர்

பொதுவாக நோக்கினும், இப்பதிகம் பெருமிதம், அழுகை என்ற இரு மெய்ப்பாடுகளின் சீரிய விளைவாக உள்ளமையை உணரலாம்.

பெரிய திருத்தாண்டகப் பேரெழில்:

அடிகள் பாடியுள்ள பெரிய திருத்தாண்டகம், "அரியானை" என்று தொடங்குவது. பேருண்மைகள் பல பொதிந்துள்ளமையாலும், பெரும் பற்று ஆக விளங்கும் தில்லைப் பெருமானைப் பொருளாக் கொண்டமையாலும், பெரிய தாண்டகம் என்ற பெருமையை உடையது இப்பதிகம். 'பேசாத நாள் எல்லாம் பிறவா நாள்' என்று அடிகளார் கூறி, தில்லைத் திருத்தலத்தைச் சைவர்கள் எப்போதும் மனத்தாலும், வாயாலும் பேசிப்பயன் பெருக்குதல் வேண்டும் என்று அறிவுறுத்தும் சிறப்பை இப்பதிகம் பெற்றுள்ளது.

'அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள் செய்யும்' பெருங்கருணையை நினைந்து உருகுகின்றார் அடிகளார். அருந்துணைவன் ; அல்லல்தீர்க்கும் அருமருந்து போல்வான்; பொதுநீக்கித் தனை நினைய வல்லோர்க்கு என்றும் பெருந்துணைவன். கரும்பமரும் மொழி மடவாளாம் சிவகாமி பங்கன். துறந்தோர் உள்ளத்தே பெரும் பயனாக உள்ள பெரியான். ஆராயிருந்தாலும் அடியார்கட்கு அணியவன். சிந்தைதனில் மயக்கம் தீர்க்கும் ஒளியாக உள்ள கடவுள். என்றெல்லாம் போற்றிப் பரவுகின்றார் அடிகள்.

புக்க திருத்தாண்டகக் கவின்:

தில்லைச் சிற்றம்பலத்து, எல்லாத் தலத்திருந்தும் அருள் பாலித்த முதல்வன் வந்து புகுகின்றான் என்ற

அருட்காட்சியைத் தெளிவுற எடுத்துரைப்பதே 'புக்க திருத்தாண்டகம்', "மங்குல் மதி தவழும்" எனத் தொடங்குவது இப்பதிகம். தில்லைச் சிற்றம்பலத்தே பட்டு உடுத்துத்தோல் போர்த்துப், பாம்பு ஆர்த்துப் பாரிடங்கள் சூழ, ஆடும் பெருமானைத் தில்லைச் சிற்றம்பலத்தே இந்நாள் கண்டோம் என்று மகிழ்கின்றார் அடிகள். 'கறைமிடற்று எம் கபாலி யாரை'ச் சென்று காணீர் என்று ஆற்றுப்படுத்தி முடிகின்றது திருப்பதிகம். கயிலாயம் நீங்கலாகப் பத்தொன்பது திருத்தலங்கள் இப்பதிகத்து எடுத்தேத்தப் பெறுகின்றன. இதன் இரண்டாம் திருப்பாட்டு, தில்லைக் கூத்தப் பெருமான் சில தலங்கட்கு எழுந்தருளிச் சிலநாட்கள் ஆங்காங்குத்தங்கி மீண்டும் சிற்றம்பலத்துப்புகும் நிலையை உரைப்பதாக உள்ளது. இதன்பிற விளக்கங்கள் புலனாகவில்லை.

இப்பதிகத்தின் ஒன்பதாவது பாட்டு அகப்பொருள் நெறியில் பொருள் நோக்குடையதாகப் பொலிகின்றது. 'கோவண உடையர்; பூணூல் அணிந்தவர்; சங்கரனைக் கண்டீரோ?' —இது கேள்வி, 'கண்டோம் இந்நாள்' —இது விடை. 'விடைமேல் ஏறி, தலை ஏந்தி வந்து, என் வளையும் அழகும் பிறவும் கொண்டார்; சிற்றம்பலத்துப் புகுந்தார்' —என்பது விளக்கம். தலைவியின் கூற்றாக இத் தெய்வத் தமிழ் ஓவியம் மலர்ந்துள்ளது.

பாடியபோது உளநிலை:

திருநாவுக்கரசர் பாடியருளிய தில்லைத் திருப்பதிகங்கள் அனைத்தும். (இப்போது கிடைத்துள்ள பதிகங்கள் எட்டும்) இவ்வாறு பொருள் நோக்குடையனவாக உள்ளன. தில்லைத் திருத்தலத்தே வழிபட்ட அடிகளாருடைய அருள் அநுபவம் இத்தகு விழுமிய பாடல்களாக வெளிப்பட்டு, அதனைப் படிப்போர் மனத்து மீண்டும் பதிக்கும் திறன் உடையவையாய்ப் பிறங்குகின்றன. திருப்பெண்ணாகடத்துத் தூங்கானை மாடத்தில் இடபக்குறியும் சூல முத்திரையும் பொறிக்க வேண்டும் என்று இறைவனை வேண்டிப் பெற்று உள்ளம் திருந்திய மலர்ச்சியுடன் தில்லைக்கு வந்து வழிபட்டார் அடிகள் என்பது பெரியபுராணத்தால் விளங்கும் செய்தி ஆகும். இந்த நினைவில் சிலவரிகளை இப்பதிகங்களிற் காணலாம். இவற்றைத் தொகுத்துக் காண்பது, அப்பரடிகளின் திருவுள்ளத்தில் எழுந்த நிறைவையும், மாசு நீங்கிய நிலையில் மனத்தகத்தே எழுந்த பேரமைதியையும், அதனால் மேலும் பலதலங்களுக்குச் சென்று வழிபடும் நோக்கினை விளைத்த நிலையையும் அறிவதற்குப் பெருந்துணை ஆகின்றமை தெளிவு.



# சத்தியும் சிவமும் ஆயதன்மை

கலைச்செல்வர்
திரு க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ.,எல்.டி.,

'உலக முதல்வன் சிவம்,சத்தி எனத் தன்கண் இருதன்மை தோன்ற உளன்' என்பது தலையாய பிரமாண நூல்களின் துணிபு. அதுமட்டும்அன்றி மெய்ப்பொருளைத் தலைப்பட்டு உணர்ந்து, அவாவறுத்து, இன்பம் இடையறுது ஈண்டப் பெற்ற செம்புலச் செல்வர்களின் துணிபும் ஆகும்.

திருஞான சம்பந்தப் பிள்ளையார், உள் நிறைந்து பொழிந்து எழுந்த உயர் ஞானத் திருமொழியால் முதற்கண் அருளிய திருப்பதிகத்தின் முதல் தொடர் "தோடுடைய செவியன்" என்பது. தோடு பெண்கள் அணியும் காதணி; அதனை உடைய செவியன் என்றமையின், இறைவன் தன் ஒரு கூற்றில் பெண் உருவினன் எனக் குறிப்பித்ததாயிற்று. 'ஒருமை பெண்மை உடையன்' எனப் பின்னரும் வெளிப்படக் கூறியருளினர்.

"பெண் உரு ஒரு திறன் ஆகின்று அவ்வுருத்-தன் உள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்" "நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன்" என்பவை சங்க இலக்கியக் கடவுள் வாழ்த்துப் பாடல்களில், திறவோர்காட்சியில் தெளிந்து வைக்கப்பெற்ற தொடர்கள்.

கேனுேபநிடதம் மூன்றும் அத்தியாயத்து இறுதியில் இந்திரன், தன்னையும் அங்கிவாயக்களையும் ஒற்றைத் துரும்பில்,வலியின்மை காட்டிய இயக்கர் மறைந்த அவ்வெளியிடத்தில், "மிகுந்க அழகொளியுள்ள உமையும் ஹைமவதியும் ஆன அம்மையை"க் கண்டு, "போற்றத்தக்க, மறைந்த அவ்வியக்கன் யாவன்?" என வினவியதாகக் கூறுகின்றது.

சுவேதாசுவதர உபநிடதம் வெளிப்படையாக, "இவருக்கு இயல்பாக உள்ள பராசக்தி ஒன்றே அறிவு என்றும், வன்மை என்றும், செயல் என்றும் பலவாக(ச் சுருதிகளிற்)கேட்கப்படுகின்றது" என எடுத்தோதுகின்றது. "பராஸ்ய சக்தி விதைவச் ரூயதே—ஞானபலக் க்ரியாச" என்பது மூலமறை

"அவர் பவாக ஆவேனுக, உயிர்களுக்காக என விரும்பினுர்" (ஸோ காமயத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி) எனத் தைத்திரீயமும், "அது உயிர்களின் பொருட்டுப் பலவாக ஆவேன் எனச் சங்கற்பித்தது" தத்ஐக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயதி) எனச் சாந்தோக்கியமும் கூறுகின்றன இங்குத் தைத்திரீயத்தில்

வரும் "அகாமயத" "விழைந்தது" என்பதனுல் குறிக்கப்படும் விழைவு, அருள், எனத்தக்க முதற்பொருளின் பேராற்றலேயே "சிவகாமவல்லி" என்னும் திருவுருவில் சிற்சபையில் கண்டு தொழுது இறைஞ்சுகின்றேம். இதனையே மெய்கண்டதேவர் "அருள் உண்டாம் ஈசற்கு; அது சத்தி என அருளிச் செய்வாராயினர்.

சிவநெறியில் பரார்த்தம் சுவார்த்தம் என்னும் இருவகையிலும், திருக்கோயில்களிலும், வீடுகளிலும்,கிரியை நெறியில் கொண்டு போற்றப்படும் குறிகள், அடையாளங்கள், மந்திரங்கள், பாவனைகள் என்பவை திரு நான்மறை முடிவாக உள்ள வேதாந்தத்தின் மேலானதெளி நுண்பொருள் களைத் தியானஞான யோகங்களால் உணர்ந்துபற்றி நிற்றற்குச் சிறந்த சாதனங்களாம் என்பதை மக்கள் உணர்தல் வேண்டும். அவை எல்லாம் வெறும் நம்பிக்கை பற்றிப் புற வழிபாட்டிற் கொள்ளப்படும் சமய சங்கேதங்கள் என்னும் அளவில் நின்றுவிடாமல், முதல்வனைத் தலைப் பட்டுணரும் அனுபவமெய்யுணர்வின் வெளிப்பாடாகவும், நடைமுறை மெய்ம்மைக்கு ஒத்தனவாகவும் நிலவுவன.

திருக்குறளின் புறன் அடையாக அதன் குறிப்புப் பொருண்மையை வெளிப்படையாக •எடுத்தோத எழுந்த திருவருட் பயன்" என்னும் ஞானநூலில், உமாபதி சிவனுர், இரண்டாவது பாட்டாக, அருளிச் செய்துள்ள குறட்பா மேற்காட்டிய வேதாகமப் பொருண்மையைத் தெளித்து வடித்து உணர்த்துவது.

'தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்
தருஞ்சத்தி
பின்னமிலான் எங்கள் பிரான்'

எனவரும்.

வைதிக சைவத்துட் கொண்டு தொழப்படும் முதல்வன், தனக்கே உரிய குறைவிலா மங்கலக் குணங்களை, நிலையுள்ள, பல உயிர்களும் தன்னைச் சார்ந்து, பெற்றுப் பேரின்பு உறும்படி உதவும் தன்சிற்சத்தியினின்றும் பிரிப்பின்றி நிற்பன்– என்பது பாட்டின் பொருள்.

தன் ஒளியுள்ள சூரியன் தன்னைக் காட்டி நிற்கையில் கதிரோன் (ஒளியுடையோன்) எனப்படுகின்றுன்; பிற பொருள்களை விளக்கிக்காட்டும் நிலையில் (ஒளி) எனப்படுகின்றுன். சூரியன் இங்ஙனம் தனக்குள் இரு தன்மைதோன்ற (சுவகத பேதம் தோன்ற) நிற்குமாறு போல, உலக முதற்பொருளும் தன்கண் சிவம்சத்தி என இருதன்மைதோன்ற உளன். சொயம்பிரகாசமாக (தன் ஒளி உடையவனுக) உள்ள முதல்வன் முத்தான்மாக்களுக்கு இன்பப் பேரொளியாக அனுபவப்பட்டு நிற்கும் நிலையில் சிவம் எனப்படுகின்றுன்; உயிர்களுக்கு மாயை என்னும் தன்கண் அடங்கியுள்ள சடசத்தியைக் காரியப்படுத்தி, உடம்பு, உலகு முதவியவற்றைக் கொடுத்து, அறிவித்து நடத்தும் நிலையில், சத்தி (வல்லமை) என மெய்ந்நூல்களால் குறிக்கப்பெறுகின்றுன்.

இதனால், உலக முதல்வனை அம்மை யப்பர் எனத் தெளிந்து வழிபடுவதே அவன் பொருள்சேர் புகழுக்கு ஒத்த தாகி, வினை நீக்கமும், இஷ்டசித்தி முத்திகளையும் கொடுக்கவல்லது என்பது உணரப்படும்.

"அம்மையப்பரே உலகுக்(கு)
அம்மையப்பர் என்றுணர்க
அம்மையப்பர் அப்பரிசே
வந்தளிப்பர்"

—திருக்களிற்றுப்படியார்

# குமரகுருபர சுவாமிகளும், சிவகாமி அம்மையும்

முதுபெரும் புலவர்
திரு ப. வடிவேற் பிள்ளை

குமரகுருபரர்:

தமிழகத்தில் தோன்றி விளங்கியருளிய அருட்பெருஞ் சான்ேறோர்கள் பலருள், ஞானத் தவமுனிவராகிய குமரகுருபர சுவாமிகள் தலைசிறந்த ஒருவராவார். குமரகுருபர சுவாமிகள், திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தில் 4-ம் பட்டத்தில் குருமூர்த்தியாக விளங்கியிருந்த திருவார் திரு. மாசிலாமணி தேசிகர் அவர்களை யடைந்து, தமக்கு ஞானோபதேசம் புரியவும், துறவு நிலை வழங்கவும் வேண்டிக்கொண்டனர். மாசிலாமணி தேசிகர், குமர குருபரரை நோக்கிக் "காசிக்குத் தல யாத்திரை சென்று வருக, வரின், பின்னர் யாம் ஞானோபதேசம் புரிந்து, துறவு நிலை வழங்குகின்றோம்" எனத் தமது ஆதீனமரபு நெறியின்படி திருவாய் மலர்ந்தருளினார்.

அதுகேட்ட குமரகுருபரர், மாசிலாமணி தேசிகரை மிகவும் அன்புடன் பணிந்து வணங்கி, "காசிக்குச் சென்று வருவதாயின் வாழ்நாளில் நெடுங்காலம் கழிந்துவிடுமே" என்று தம் கவலையைப் புலப்படுத்திக் கொண்டனர். குமரகுருபரரின் தீவிர தர பக்குவ நிலையைக் கண்டுணர்ந்த மாசிலாமணி தேசிகர், மிகவும் மனம் இரங்கி, "அங்ஙனமாயின், சிலகாலம் சிதம்பர வாசமேனும் செய்து வருக" என்று பணித்தருளினார். அதன்படியே குமரகுருபரர், சிதம்பரம் போந்து சிலகாலம் தங்கித் தில்லை நடராசப் பெருமானையும், சிவகாமி அம்மையையும், நாள்தோறும் முறையே தரிசித்து மகிழ்ந்து வந்தார்.

நூல்கள்:

அதனால், குமரகுருபர சுவாமிகளின் ஆன்மீக அருள் வாழ்க்கையில், சிதம்பரம் ஒரு பெரும் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றது. குமரகுருபரர் தில்லை நடராசப் பெருமானிடத்தும், சிவகாமி அம்மையினிடத்தும், எல்லையில்லாத பெரும் பக்திமை பூண்டு வழிபட்டு மகிழ்ந்தார். அதன் பயனாகச் சிதம்பரமும்மணிக் கோவை, சிதம்பரச் செய்யுட் கோவை, தில்லைச் சிவகாமியம்மை இரட்டை மணிமாலை, என்னும் சிறந்த மூன்று செந்தமிழ்க் கவிதை நூல்கள் குமர குருபரரால் அருளிச் செய்யப்பெற்றன. இணையற்ற எழிலும் இனிமையும் மிக்க இம் மூன்று சிறந்த கவிதை

நூல்களாலும், குமரகுருபர சுவாமி கள், சிதம்பரம் என வழங்கும் தில்லைத் தலத்திலும், அங்கு எழுந்தருளி விளங்கும் நடராசப் பெருமானிடத்தும் சிவகாமி அம்மையினிடத்தும் கொண்டிருந்த எல்லையற்ற பேரன்பின் பெற்றிமை தெற்றெனச் செவ்வி தின் விளங்கும்.

"தீர்த்தம் என்பது சிவகங்கையே
ஏத்தரும் தலம் எழிற்புலி யூரே
மூர்த்தி அம்பலக் கூத்தனது
உருவே"

—சிதம்பர மும்மணிக்கோவை.

வழுத்துக எம்பிரான் மன்று:

"இளமையானது நீரில் தோன்றும் குமிழி போன்று நிலையில்லாதது; செல்வமானது கடலில் தோன்றும் அலைகளைப் போல மாறிமாறி பிறழ்ந்து சென்று அழிந்தொழிவது; உடம்போ நீரின் மேல் எழுதப்படும் எழுத்துப் போல ஒரு நொடிப் பொழுதில் மாய்ந்து மறையும் இயல்பினது;-ஆதலால் இவற்றையெல்லாம் நிலை யென்று எண்ணி மயங்காமல், எம்பெருமான் திருநடம் புரிந்தருளும் தில்லையம்பலத்தை இப்பொழுதே தொழுது உய்தி பெறுங்கள்" என இவ்வுலக மக்களுக்கெல்லாம் அறிவுறுத்தியருளும் குமர-குருபரர், சிவகாமி அம்மையின் சிறப்பினையும் திருவருளையும், இம்மூன்று நூல்களிலும் மிகவும் எழிலமையப் புகழ்ந்து போற்றித் துதித்து மகிழ்கின்ருர். அவற்றுள் ஒரு சில பாடல்களின் கருத்துக்களை மட்டும் இங்குச் சுருக்கமாகக் கண்டு மகிழ்வோம்.

(1) தாயின் செயல்:

தில்லையில் சிவபெருமான் ஐந்தொழில் புரியம் திருக்கூற்று இயற்றுகின்ருன். அவனது தமருகம் (உடுக்கை) ஏந்திய கரம் எல்லா உலகங்களையும் படைக்கின்றது; அமைத்த பொற்கரம் (அஞ்சேல் என அருளும் திருக்கை), உலகங்களையெல்லாம் காப்பாற்றுகின்றது. அழல் ஏந்தியுள்ள கரம், உலகங்களையெல்லாம் ஒடுக்கி, உயிர்களை இளைப்பாறச் செய்கின்றது: அவனது ஊன்றிய திருவடி, உயிர்கள் ஈட்டிய வினைப் பயன்களை எல்லாம் மறைத்து நின்று நுகரும்படிச் செய்து ஊட்டுவிக்கின்றது; எடுத்த திருவடியாகிய குஞ்சித பாதம், உயிர்களுக்கெல்லாம் பேரின்பமாகிய வீடுபேற்றை வழங்கியருள்கின்றது. இங்ஙனம் ஐந்தொழில் புரியும் நடராசப் பெருமானின் அற்புதத் திருக்கூத்தினை, சிவகாமி அம்மை தான் தரிசித்து, அதன் பயனை உயிர்கள் நுகரும்படிச் செய்தருள்கின்ருள். அஃது எது போல்வதெனின், "குழந்தையின் குடர், மருந்தைச் செரிக்கும் திறனற்றது என்று, ஒரு தாய் தானே அம் மருந்தை உண்டு, அதன் பயனைத் தனது பாலின் வழியாக அக் குழந்தைக்குச் சேரும்படி செய்வது. போன்றதாகும்'' என்று சிவகாமி அம்மையின் பேரருட் டிறனைக் குமரகுருபர சுவாமிகள் போற்றித் துதித்து மகிழ்கின்ருர்.

"பாலுண் குழவி பசுங்குடர்
பொறுதுஎன
நோயுண் மருந்து தாயுண் டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக்குத்
தன் அருள் கிடைப்ப

வையம்ஈன் றளித்த தெய்வக்
கற்பின்
அருள்சூற் கொண்ட ஐயரித்
தடங்கண்
திருமாண் சாயல் திருந்திழை
காணச்
சிற்சபை பொலியத் திருநடம்
புரியும்
அற்புதக் கூத்தன் ....”

(2) கரும்பும் பிடியும்:

உலகில் நடனம் புரிவார் பலர் உண்டு. அவர்களுக்கெல்லாம், ஆட்டுவிக்கின்ற நட்டுவனுர் என்பவர் ஒருவர் இருப்பார். ஒருவர் தம்மை ஆட்டுவிக்கவே, உலகில் பலர் நடனமாடுவார். ஆனல் தம்மை ஆட்டுவிப்பார் எவரும் இல்லாமல், தாமே ஆடி, ஏனைய எல்லோரையும் ஆட்டுவிக்கின்றவராகத் திகழ்பவர், தில்லையம்பலவாணர். அவர் தில்லையம்பலத்தில் ஆனந்தத் தேன் காட்டுகின்ற ஓர் அரிய முக்கட் கரும்பாகத் திகழ்கின்ருர். அம் முக்கட் கரும்பினை விரும்பிப் பொருந்தி நெடுநாளாக, விநாயகர் என்னும் யானை எழில் இளங் கன்றைப் பயந்த, சிவகாமி என்னும் பெண் யானை உண்டு மகிழ்ந்து கொண்டிருக்கின்றது.

ஆட்டுகின்ரோர் இன்றிமன்றுள்
ஆடும்ஆ னந்தத்தேன்
காட்டுகின்ற முக்கட்
கரும்பொன்று, — வேட்டதனை
உற்றுநெடு நாளாக உண்ணுமோர்
மால்யானை
பெற்றதொரு கூந்தற் பிடி

எனவரும் சிதம்பர மும்மணிக் கோவைப் பாடலில் குமரகுருபரர் கூத்தப்பெருமானை “ஆனந்தத் தேன் காட்டுகின்ற முக்கட் கரும்பு ஒன்று” என்றும், விநாயகரை “மால்யானை” என்றும், சிவகாமி அம்மையை “மால் யானை பெற்றதொரு கூந்தற் பிடி (பெண்யானை)” என்றும், யானை கரும்பை விரும்பி உண்ணுதல் இயல்பாதலின் “வேட்டு (விரும்பி திருமணம் செய்து கொண்டு), உற்று நெடுநாளாக உண்ணும்” என்றும் கூறியுள்ள பொருத்தமும் நுட்பமும் பெரிதும் போற்றற்பாலன.

(3) கைம்மானும் விழிமானும் :

சிவகாமி அம்மையின் கண்கள் மிகவும் அழகு வாய்ந்தன. அருள் பெருகி வெள்ளமிகும் ஊற்றுத்தடம் போன்றவை. அன்பர்களுக்கு எல்லா நலங்களும் தருபவை. ஆதலின் அம்பிகையின் அருட் கண்களின் அழகில் குமரகுருபரர் பெரிதும் ஈடுபடுகின்ருர். அவற்றின் அழகினைப் பின்வருமாறு புகழ்ந்து போற்றுகின்ருர். சிவபெருமான், தனது சடைமுடியில் திங்களும் பாம்பும் அணிந்துள்ளான். பாம்பைக் கண்டு அஞ்சுதல் திங்களுக்கு இயல்பாயினும், சிவபெருமானின் சடைமுடியிலுள்ள காரணத்தால் திங்கள் பாம்பைக் கண்டு அஞ்சவில்லை. ஆயினும் அதற்கு அச்சம் நிகழாமல் போகவும் இல்லை. ஓர் அச்சம் தீர்ந்தாலும், திங்களுக்கு வேருேர் அச்சம் நேருகின்றது. சிவபெருமானின் அருகே அம்பிகை விற்றிருக்கின்ருள். அவளது நறுநுதல் (நெற்றி), மிகவும் அழகு வாய்ந்து, குறுகியதாய், வளைந்ததாய் விளங்குகின்றது. அம்பிகையின் அத்தகைய நெற்றியின் அழகைக் கண்டதும், அவ்வழகும் சிறப்பும் தனக்கு

இல்லையே என்று கவன்று, திங்கள் நாணமுற்று அஞ்சுகின்றது.

இத் திங்களைப் போலவே, சிவ பெருமான் ஏந்தியுள்ள மானும் நாணி அஞ்சி நிற்கின்றது. மான் புலியைக் கண்டு அஞ்சுதல் இயல்பு. சிவ பெருமான் தனது கையில் ஏந்தியுள்ள மான், வியாக்கிரபாதராகிய புலிக்குச் சிறிதும் அஞ்சவில்லை. ஆனால் சிவ பெருமானுக்கு அருகில் இருக்கும் சிவகாமி அம்மையின் விழிகளாகிய மானைக் கண்டு, அவற்றின் சிறப்பும் அழகும் தனக்கில்லையே என்று நாணி அச்சம் கொள்கின்றது. அங்ஙனம் மானும் அஞ்சும் மாண்புடையன வாகச் சிவகாமி அம்மையின் அழகிய திருக்கண்கள் சிறப்புற அமைந்து திகழ்கின்றன என்கின்றார் குமர குருபரர்.

கறையரவுக் கஞ்சுரு தஞ்சுறாஉம்
திங்கள்
இறைவி நறுநுதலைக் கண்டு —
பிறைமுடியோன்
கைம்மான் நடம்உவந்த
காற்புலிக்கஞ் சாதஞ்சும்
அம்மான் விழிமானைக் கண்டு

(4) தேனும் வண்டும் :

பொன்னம்பலமானது பொற் றாமரை போன்றுள்ளது; அதன்கண் எழுந்தருளியுள்ள நடராசப் பெருமா னின் திருவுருவம் தேனாகத் திகழ் கின்றது; அத்தேனை உண்டு மகிழ் கின்ற களி வண்டுகளைப்போல, எம் பெருமாட்டியாகிய சிவகாமி அம்மை யின் திருவிழிகள் திகழ்கின்றன.

''பொன்மன்றம் பொற்று மரைஒக்கும்;
அம்மன்றிற்
செம்மல் திருமேனி தேனொக்கும்;
அத்தேனை
உண்டு களிக்கும் களிவண்டை ஒக்குமே
எம்பெரு மாட்டி விழி.''

(5) மனைவி தாய் தங்கை மகள் :

பொன்னம்பலமாகிய புனித மன்றத்தில் குற்றமற்ற ஐந்தொழில் நாடகம் புரிகின்ற நடராசப் பெரு மானுக்கு. எம் அன்னையாகிய சிவ காமி அம்மை ஒருத்தியே, மனைவி-தாய்-தங்கை-மகள் என்னும் பல நிலைகளில் திகழ்கின்றாள்.

''கனக மார்க வின்செய் மன்றில்
அனக நாடகற் கெம் அன்னை
மனைவி தாய் தங்கை மகள்''

''எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பாள்' என்றபடி, அம் பிகை இறைவனின் செயலுக்கும் இய லுக்கும் ஏற்பத் துணை நிற்பவள் ஆத லின் மனைவி என்றும்; சக்தி தத்துவத் தினின்று சதாசிவ தத்துவம் தோன்று தலின் தாய் என்றும்; சிவதத்துவம் தோன்றிய பின்னரே சக்தி தத்துவம் தோன்றுதலின் தங்கைஎன்றும்; சிவமே தன்னினின்று சக்தியைத் தோற்று வித்தலின் மகள் என்றும்; குமரகுரு பரர் அம்பிகையை விதந்து வியந்து குறிப்பிட்டருளினர். இங்ஙனம் ஒரு வரே பலவேடமும் நிலையும் கொள்ளு தல் நாடகங்களில் நடிகருக்கே இயல் பாதலாலும், இறைவன் இயற்றும் இந்நாடகம் ஏனைய உலகியல் நாட கங்களைப் போல இழிந்ததன்றி உயர்ந்ததாகலாலும், நடராசப் பெரு மானை "அனக நாடகன்" என்று சிறப்பித்த அருமைப்பாடும் அறிந்து மகிழற்பாலது.

(6) தில்லை வனத்தில் மயில் :

சிவபெருமான் ஆலாலம் என்னும் விடத்தை உணவாகக் கொண்டான்; நஞ்சரவைக் கச்சாக அணிந்தான் என்று வேதங்கள் புகழ்ந்தோதுகின்றன. ஆயினும் அங்ஙனம் வேதங்கள் சிவபெருமானைப் புகழ்வது பயனிலதே யாகும். ஏனெனில், அச்செயல்களெல்லாம் அச் சிவபெருமான் தன்னுடைய ஆற்றலால் புரிந்தன என்பதற்கில்லை. தில்லை வனமாகிய காட்டில், சிவகாமி அம்மையாகிய மயில் தனக்கு அருகாக இருக்கும் திறத்தினுலேயே, சிவபெருமானுல் அங்ஙனம் செய்ய முடிந்தது. மயில் பாம்பின் விடத்தை மாய்க்கவல்லது ஆதலின், சிவகாமி அம்மையாகிய மயில் தனக்கு அருகே நிற்கப் பெற்றிருக்கும் சிறப்பினுலேயே, சிவபெருமான் நஞ்சரவைக் கச்சாக அணியவும், நஞ்சை உணவாகக் கொள்ளவும் முடிந்தது என்பது கருத்து.

கறைகொண்டு நச்சரவக் கச்சணிந்தார்
என்று
மறைகொண்டு வாழ்த்துவதும் வம்பே—
இறைகொண்டு
அயிலிருக்கும் முத்தலைவேல் அண்ண
லுக்கென் னேயோர்
மயிலிருக்கத் தில்லை வனத்து.

(7) ஆனந்தவாரியில் அன்னம்

சிவகாமி அம்மை மயிலாக மட்டுமே விளங்குகின்றிலள்; அவள் அன்னமாகவும் அமைந்து திகழுகின்றுள். “பொன்னம்பலத்தில், ஆனந்தப் பெருக்கு என்னும் கடலில் புகுந்து திளைத்து ஆடுகின்ற சிவகாமி அம்மையாகிய அன்னம், பல்லாயிரக் கணக்கான அண்டங்களை (உலகங்களை, முட்டைகளை) ஈன்று, சரமும் அசரமுமாகிய இளங் குஞ்சுகளைப் பயந்து, அழகிய வளைகள் செறிந்த தனது கைகளாகிய இரண்டு கைகளால் தழுவி அணைத்து, தன் வயிற்றிலுள்ளே வைத்து, அவைகளுக் கெல்லாம் இரைதேடி ஊட்டி மிகவும் அன்புடன் பாதுகாத்து வருகின்றது” என்று, குமரகுருபரர் சிவகாமி அம்மையை இவ்வுலகுயிர்களை யெல்லாம் செவ்விதின் போற்றிப்பாதுகாத்து வரும் திறனைப் புகழ்ந்து பாடியருள்கின்றுர்.

வன்னஞ் செறிவளைக் கைச்சிற கால்தன்
வயிற்றினுள்வைத்து
இன்னம் சராசர ஈர்ங்குஞ் சணைத்திரை
தேர்ந்தருந்திப்
பொன்னம் பலத்துள்ஓர் ஆனந்த வாரி
புக்கு ஆடும்பச்சை
அன்னம் பயந்தன கொல்லாம்பல் ஆயிர
அண்டமுமே

முடிவுரை :

இங்ஙனமெல்லாம், குமரகுருபரர் பல்வேறு வகைகளில் போற்றிப் புகழ்ந்து பாடித் துதிக்கும் சிவகாமி அம்மையின் திருவடிகளை, நாம் அணைவரும் இம் மகாகும்பாபிடேகப் புனித நாளில் அன்புடன்போற்றி வணங்கி, வையத்து வாழ்வாங்கு வாழ்து உய்ய முயலுவோமாக.




# ஆளுடையாள் அருட்கருணை

**திரு. பெ. திருஞானசம்பந்தன்**, எம்.ஏ.,எல்.டி.,

பரந்தெழுந்த சமண்முதலாம்
பரசமய இருள்நீங்கச்
சிரந்தழுவு சைவநெறித்
திருநீற்றின் ஒளி விளங்க
அரந்தைகெடப் புகலியர்கோன்
அமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாமசுந்தரிபூங்
கழல் போற்றி.

—உமாபதி சிவாசாரியார்

'கோயில்' என்று போற்றப்படும் தில்லையை எண்ணும்போது, பொன்னம்பலக் கூத்தனின் திருவுருவம் எல்லோருக்கும் தோன்றுவது இயல்பு. ஆனந்தக்கூத்தனின் திருநடனத்தை அருகில் இருந்து அனுபவிக்கும் சிவகாமியம்மையை நினைவு கூர்ந்து மாணிக்கவாசகர், குமரகுருபரர்,வேங்கட கிருஷ்ண தீக்ஷிதர் போன்ற அருளாளர்கள் போற்றியுள்ளமையைப் பார்க்கிறோம்.

சிவனும் சக்தியும் பிரிவற நிற்கும் நிலையைச்சைவசமயர் கூறும். காணும் பொருள்கள் அனைத்திலும் அம்மையப்பனைக் காண்பது நாவுக்கரசர்போன்ற அருளாளர்க்கே இயல்வதொன்று. மணிவாசகப் பெருமான் ஒருநாள் வானம் மின்னுவதைக் காண்கிறார். அம்மின்னலில் மெல்லிடையாளான நம் பிராட்டியின் சிற்றிடையைக் காண்கிறார். மின்னலைக் கண்ட மறுகணம் இடியோசை எழுகின்றது. அதில் பெருமாட்டியின் திருவடிச் சிலம்போசையைக் கேட்கிறார், மேகத்தில் வானவில் பளிச்சிடுகிறது. அம்பிகையின் திருப்புருவத்தை அதில் காண்கிறார். கருமேகம் திரண்டு வருகிறது. கார்மேனியனின் உடன்பிறந்த அம்மையின் திருவுருவம் அவருக்குத் தோன்றுகிறது. அடுத்துக் கருமுகில் பெருமழைபெய்ய இருக்கிறது. மழை வேண்டி நிற்கும் நாம் மழைப் பொழிவால் விளையும் பயிர்ப் பெருக்கத்தை எதிர்நோக்கியிருக்கிறோம். மணிவாசகரோ நம்மை ஆண்டருளும்பெருமாட்டியிடமிருந்து பிரிதலில்லாத எம்பெருமானுடைய உயிர்ப் பயிர்களை உய்வித்தற் பொருட்டு அவ்வம்மை பொழியவிருக்கும் அருள் மழையை எதிர்நோக்கியிருக்கிறார். எழுகின்றது திருவெம்பாவைப் பாடல்.

முன்னிக் கடலைச் சுருக்கி
யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை
ஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி
திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித்
திருப்புருவம்

என்னச் சிலேகுலவி நந்தம்மை
ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான்
அன்பர்க்கு
முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும்
இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோர்
எம்பாவாய்.

அத்வைத ஞானேபதேசத்தை அருளிய ஆதிசங்கரர் சிதம்பரத்தோடு தொடர்புடையவராகக் கூறும் வரலாறும் உண்டு. அவர் பக்திப் பனுவல்களேயும் பாடியுள்ளார். உமா மகேசுவரனேச் சில பாடல்களில் போற்றி வணங்கியிருக்கிருர். உமை மகேசுவரன்என்ற இருவரையும் ஒரே பாடலில் வைத்து வணங்குகிருர். 'சிவனுக்குவணக்கம்' என்ற பொருள் கொண்ட ஒருமையில் அமைந்த 'நமச்சிவாய' என்ற மந்திரச்சொல்லே வடமொழிக்கே உரித்தான இருமை உருபைக் கொடுத்து 'நமச்சிவாப்யாம்' என்று அமைத்துப் பாடுகிருர். சிவன் சுந்தரன், சிவகாமி சுந்தரி, ஒருவர் இதயத்தாமரையில் மற்றவர் இருக்கிருர். இத்தகைய ஆராக் காதலேத்தான் மணிவாசகரும் 'உடையாள் உன்றன் நடுவிருக்கும், உடையாள் நடுவுள் நீ இருத்தி' என்கிருர். இத்தகைய சிவனும் சிவையுமான சங்கரபார்வதி என்னும் இணே பிரியா இரட்டையருக்கு என் வணக்கம் என்று போற்றுகிருர் சங்கரர்.

நமச்சிவாப்யாம் அதிசுந்தராப்யாம்
அத்யந்தமாஸக்த
ஹிருதம்புஜாப்யாம்
அசேஷலோகைக ஹிதங்கராப்யாம்
நமோநம: சங்கரபார்வதிப்யாம்.
– உமாமஹேஸ்வர தோத்திரம், 6

வானம் உருவில்லாதது. அளவிறந்தது. வண்ணமற்றது. நம்பெருமான் தில்லேயிலே அத்தகைய ஆகாச சொரூபனுகக் காட்சி தருகிருன் என்ருல் அவனே எப்படிக் காண்பது? காணஅரிதாகிய ஒன்றைக்காண இயலாத ஒன்ருல் காட்டுவது எங்ஙனம் இயலும்? ஆகவே அது ஒரு 'சிதம்பர ரகசியம்' என் தானே கூறவேண்டும். அதை ஒருவாறு நாம் உணர்வதற்காக சிற்சபையில் பில்வதளத்தை ஒளியில் காட்டிவருகிருர்கள்.

பதினேழாம் நூற்ருண்டில் ஒரு புலவர் தில்லேக்கு வந்தார். அருந்தமிழ்ப் புலவர். சிவநெறிச் செல்வர். இவர் காலத்தில் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்து ஞான ஆசிரியராய் இருந்த மாசிலாமணி தேசிகரிடம் ஞானேபதேசம் பெற்றுத் துறவு பூண்டவர். இந்த சிதம்பர ரகசியம் அவருக்கும் காட்டப்பட்டதோ என்னவோ. கவியுள்ளம்பெற்ற புலவராயிற்றே! காட்டவியலாத ஆகாயத்தை அங்குள்ள வானவில்லேயோ சந்திரனேயோ காட்டி அதோ ஆகாயம் என்று உணர்த்துவது போல, ஆகாச சொரூபனுன நம்பெருமானே ஒரு மின்னலேக் காட்டி உணர்த்துகிருர் குமரகுருபர சுவாமிகள். மின்னலேக் கண்ட ஒரு மனிதன் அதன் பொன்னெளியை இயற்கை எழிலேக் காண்கிருன். பக்தியுள்ளம் படைத்த புலவர் பெருமானுக்கோ மின்னிடையாளான சிவகாமசுந்தரியைத்தான் அது நினேவூட்டுகிறது. மின்னலின் அருகில் மேகம் உண்டல்லவா? அம் மின்னலின் அருகில் ஆகாசசொரூபியான பொன்னம்பலத்தானேக் காண்கிருர். நாமும் அவர் காட்டிய வழி காண்போம்.

அண்டந் திருமேனி அம்பலத்தார்க்கு
என்பதுரை
கொண்டங் குணர்தல் குறைபாடே
— கண்டளவில்
விண்ணம் பொலிந்ததொரு மின்
கொடியே சொல்லாதோ
வண்ணம் பொலிந்திருந்த வா.
— தில்லைச் சிவகாமியம்மை

இரட்டை மணி மாலை, 11

இம்மின்கொடி அங்கே ஏன் இருக்கிறார், என்ன செய்கிறார் என்று எண்ணுகிறார் குமரகுருபரர். மின்னலைப் போல் பளிச்சிடுகிறது ஒரு கருத்து அவர் கற்பனையுள்ளத்தில். ஆனந்தத் தேன் சொரிந்து கொண்டிருக்கிறான் அம்பலவாணன். அத்தேன் பெரு வெள்ளமாகப் பாய்கிறது நாலாபுறத்திலும். உலகத்திலுள்ள உயிர்களை யெல்லாம் ஈன்றதாய்க்குப்பரிவு உணர்ச்சி பிறக்கிறது. இப்பேரானந்த பெருவெள்ளத்தைப் பருகமுடியாமல் நம் குழந்தைகள் திக்குமுக்காடி அல்லற்படக்கூடாதே என்று கருதுகிறாள். அப்பெருவெள்ளத்தைத் தானே வாங்கி உயிர்கள் அதைப் பருகும் அளவிற்குப்பகிர்ந்து தருகிறாள். குழந்தையின் குடல் மருந்தைச் சீரணம் செய்யும் சக்தியற்றது என்று கருதி, தான் அம்மருந்தைஉண்டு, அதன் பயனைப் பாலின் வழியே அக்குழந்தை பெறும் படிச்செய்கின்றதாயைப்போல, திருந்திழையாம் சிவகாமி அம்மை நடராச மூர்த்தியினின்றும் பொங்கி வழியும் ஆனந்தத்தேனைத் தான் பருகி அதன் பயனை உயிர்கள் தம் பக்குவத்திற்கு ஏற்ப நுகருமாறு செய்கிறாள். இதைக் கூறுகிறார் குமரகுருபரர்

பாலுண் குழவி பசுங்குடர்
பொறாதென
நோயுண் மருந்து தாயுண் டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக் கின்னருள்
கிடைப்ப
வையமீன் றளித்த தெய்வக் கற்பின்
அருள்சூற் கொண்ட வையரித்
தடங்கண்
திருமாண் சாயல் திருந்திழை காணச்
சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
அற்புதக் கூத்த, .........
— சிதம்பர மும்மணிக் கோவை

பதினேழாம் நூற்றாண்டில் தஞ்சை சஹாஜிமன்னரின் ஆஸ்தான வித்வானாக வாழ்ந்தவர் **வேங்கடகிருஷ்ண தீக்ஷிதர்** 'நடேசவிஜயம்' என்றசம்ஸ்கிருத காவியத்தை எழுதியவர். அம்பிகையுடனிருக்க ஆனந்த நடம் புரியும் சிவபெருமானைத் தில்லை மன்றுள் ஒருநாள் தரிசிக்கிறார். பொற்கொடியையும் விரிசடைக் கூத்தனையும் ஒரு சேரக் காண்கிறார். அவர் கவியுள்ளத்தில் மின்னலோடுகூடிய மேகம் பளிச்சிடுகிறது. பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே அருந்தவப் பயனால் இக்காட்சியைக் கண்ட முனிபுங்கவர்களான பதஞ்சலி வியாக்ரபாதர்களும் இவர் நினைவில் தோன்றுகின்றனர். பாடல் உருவாகிறது.

தத்ருசது: சிவம் அம்பிகயா சமம்
சபலயா சரதப்ரமிவாத்புதம்
பரிணதை: சுகிருதை: ப்ரணயாந்
மித: சமுதிதௌ முதிதௌ
முனிபுங்கவௌ

திருமூலரும் தில்லைப் பெருமன்றினுள் கோல்வளையாளோடும் கலந்திடும் சிவானந்தக் கூத்தனை இன்புற நாடி அன்பில் வைத்துகந்தார்.

நாமும் தில்லைக்கூத்தனைக் காணுந் தோறும் 'அனைத்துலகுந் தொழுந் தில்லை அம்பலத்தே கண்டேனே, என்ன புண்ணியம்செய்தனை மனமே' என்று எண்ணி, 'அவனைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' ஆதலின் 'பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி' என்று வாயாரப்போற்றி, 'காதலால் அவன் கழற் சேவடி கைதொழுது', 'அன்ன நடை மடவாள் உமைகோன் அடியோமுக் கருள்புரியும் சிற்றம்பலத்தே நட்டம் பயில்வானுக்குப் பல்லாண்டு கூறுவோமாக!

# ஈழத்துச் சிதம்பரம்

திரு. தி. க. இராசேசுவரன், B.A.,

ஈழம் என்பது இலங்கையைக் குறிக்கும். சோழ மண்டலம், பாண்டி மண்டலம், தொண்டை மண்டலம் எனப்படுவது போல ஈழ மண்டலம் என்னும் வழக்காறும் உண்டு. இந்த வழக்காற்றினுல் வடக்கில் வேங்கடமும் தெற்கில் குமரிக்கோடும் எல்லேயாகக் கொண்ட தமிழகத்திற்கும் ஈழத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பு நன்கு புலப்படும். இத் தொடர்பு பண்டைக் காலம் தொட்டு வருவது; எக்காலத்திலிருந்து ஏற்பட்டது என்று சொல்லுதற் கொண்ணுத் தொன்மை வாய்ந்தது.

வரலாற்றினுல் தெரிய வரும் தொடர்பே இங்குக் குறிக்கப்பட்டது. வடவேங்கடத்திற்குத் தெற்கிலும் குமரிக் கோட்டுக்கு வடக்கிலும் பரந்துள்ள தமிழகத்திலிருந்து பல நூற்றுண்டுகளுக்கு முன்னர்த் தமிழ் மக்கள் ஈழத்தில் குடியேறினுர்கள் என்பது ஒரு சாரர் கொள்கை; தென்னிந்தியாவும் ஈழமும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அவற்றைத் தன்னகத்தே கொண்ட பரந்த நிலப் பிரிவின் பகுதிகளாக இணைக்கப் பட்டிருந்தன என்றும், பின்னர் கடல் கோளால் அந்த நிலப்பரப்பின் பெரும் பாகம்மறைய இவ்விரண்டுபகுதிகளும் பிரிவு பட்டன என்றும் மற்ருேர் சாரர் கூறுவர். இதனுல் பெறப்படுவது என்னவெனின் இத்தொடர்பு வரலாற்றுக் காலவரை யற்றது என்பதேயாம்.

இவ்வாராய்ச்சியில் ஈடுபடாமல் இப்பொழுதுள்ள நிலேமையை நோக்குங்கால் ஈழம் தனி நாடாகவும் ஈழ நாட்டுத் தமிழரின் பழக்க வழக்கங்கள் தமிழகத்து உள்ளவாறே மாறுதலின்றியும் காணப்படுகின்றன. இவ்வேறுபாடற்ற பண்பாட்டின் தன்மை சமயத் துறையில் பெரிதும் காணப் படுகிறதென்ருல் அது மிகை யாகாது. இருநாடுகளிலும் கோயில்களின் அமைப்பும் பெயர்களும், அவற்றில் நடைபெறும் வந்தனே வழிபாடுகளும் பெரும்பாலும் ஒத்துள்ளன. ஈழத்திலுள்ள திருக்கோணமலேயும் திருக்கேதீசுவரமும் தேவாரப்பாடல்களும், கதிர்காமம் திருப்புகழ் பாடல்களும் பெற்றுள்ளன. திருக்கோணமலே தக்ஷிண கைலாயம் என்றும் கதிர்காமம் முருகப்பெருமான் ஆறுபடை வீடுகளில் ஒன்று என்றும் சொல்லப் படுகின்றன.

ஈழத்துச் சிதம்பரம் என்னும் பெயரும் முன்பு கூறப்பட்ட நெருங்கிய

சமயத் தொடர்புக்கு ஏற்றதோர் சான்ருகும். தமிழகத்துத் தலங்கள் போலவே இதற்கும் தலபுராணம் உண்டு. இது ஈழத்துச் சிதம்பர புராணம் எனப்படும். இந்நூலில் ஈழத்துச் சிதம்பரம் என்று கூறப்படுவது ஈழத்திலே காரைநகர் என வழங்கும் காரைநாட்டின் கண் உள்ள திண்ணபுரமாகும். இறைவன் பெயர் சுந்தரேசப் பெருமான்; அம்மன் பெயர் சௌந்தராம்பிகை. இப் புராணத்திலுள்ள பத்துச் சருக்கங்களில் மூன்ருவதான திண்ணபுரச் சருக்கத்தில் சுந்தரேசராகத் தில்லைநகர்த் திருக்கூத்தனும் சௌந்தராம்பிகையாகச் சிவகாமியம்மையாரும் இத்தலத்தில் எழுந்தருளியுள்ளார்கள் என்னும் கூற்று ஈழத்துச் சிதம்பரம் என்னும் பெயர்க்குக் காரணம் காட்டியவாருகும். மேலும் இந்நூலில்ஆருவதான சுந்தரேசர் கோயில்காண் சருக்கத்தில்,

"தில்லைத் தலமே யீழத்திற்
திண்ண புராமத் திகழ்ந்திடுக
அல்லல் நீக்குங் கூத்தனுட
னம்மை அங்கே யெழுந்தருள்க"

என்னும் செய்யுள் பகுதியும் அப் பெயர்பெற்ற காரணத்தை அரண் படுத்தும்.

ஈழத்துச் சிதம்பர புராணம் புலவர் மணி இளமுருகனுரால் இயற்றப்பட் பட்டது. இஃது அண்மையில் எழுதப்பட்டதாயினும் தமிழிலுள்ள புராணங்களின் இலக்கணங்கள் பலவும் அமைந்து காணப்படுகிறது. இதற்கு அரியதோர் விமரிசன நூல் சிவத்திரு வைத்தீசுவரக் குருக்களால் எழுதப் பட்டு வெளிவந்துள்ளது. இவர்கள் இருவரும் சிவபக்தியும் தமிழ்ப் புலமையும் வாய்ந்த ஈழத்துப் பெருமக்கள் ஆவர், விமரிசனக்காரர் ஈழத்துச் சிதம்பரப் புராணச்சுருக்கம் என்னும் தமது விமரிசனத்தில் "இந்நூலாசிரியர் பொதுவாகக் காப்பிய மரபுகளையும் சிறப்பாகப் புராண காப்பியச் சம்பிரதாயங்களையும் படித்து நூலைத் திறம்பட யாத்திருக்கின்ருர்" என்று சிறப்பித்துக் கூறியுள்ளார். அவர் எடுத்துக்காட்டாகத் தந்துள்ள செய்யுட்கள் ஒன்றில்,

"ஒளிமு கத்தினுக்
கொண்மதி யொக்குமோ
ஒக்குமாலினேர் மேகத்தொ
னிக்குமோ
வளைபி றைக்கலை
வாணுதல் மானுமோ
மானு மாயினேர்
வேணியொ ளிக்குமோ
மழைமு கிற்குலங்
கூந்தலை மானுமோ
மானு மாயின்கண்
ணீர்வார்ந் திரங்குமோ
உழைக ளின்விழி
யொள்விழி ஒக்குமோ
ஒக்கு மாயினீள்
காட்டிலொ ளிக்குமோ.'

எனக் 'காரைநாட்டில் மருத நிலங்களிற் களைபறிக்கும் கடைசியர் வனப்பை' வர்ணித்திருக்கும் அணி நயம் மிக்கது

இந்நூலின் பத்துச் சருக்கங்களுள் இரண்டாவதாகத் திகழ்வது காரை வளச் சருக்கம். இச்சருக்கத்தில் காரை நாட்டு வளப்பத்தை எடுத்துரைக்குங்கால் "இந்நாட்டின்" ஆறில்லாக்குறையை நீக்க விரும்பிய ஆசிரியர், ஆறுமுக நாவலரின் ஒழுக்க நெறிகளைக் கடைப்பிடித்து வாழும் இந்நாட்டு மக்களின் ஒழுகலாற்றையே ஆருக உருவகித்துக் கூறுகின்

ணர்'' என்று பாராட்டியுள்ளார் விமர்சனகாரர். இப்பாடல் வருமாறு :—

''நல்லை நாவலன் நன்மலை யூற்றெழுந்
தெல்லை யில்பதி யெங்கணும் பாய்ந்தது
சில்ல மென்கினை யுள்ளொன்றிச்
சீர்ப்பதி
புல்லி யெங்கும் புகுந்தது பேசுவோம்''

இந்த நல்லைநாவலர் மேதகையார்தான் சென்ற நூற்றுண்டில் ஈழத்திலிருந்து தமிழகத்திற்கு வந்து சிதம்பரத்தில் சைவப் பிரகாச வித்தியாசாலையையும் சென்னைமாநகரில் வித்தியாநுபாலன அச்சியந்திரசாலையையும் அமைத்து, நமதரும் தமிழ்மொழியும் நமதுயர் சைவசமயமும் அக்காலத்துத் தாழ்ந்திருந்த நிலையினின்றும் விழித்தெழுந்து மறுமலர்ச்சி பெற வழிகோலியவராவர். தமது அரும் பெருஞ் செயலால் ஈழத் — தமிழகத் தொடர்பு மேலும் வலிமை பெற்று விளங்கவும் இருநாட்டிலும் தமிழரின் மொழியும் சமயமும் செழித்தோங்கவும் செய்த நாவலர் பெருந்தகையைத் தமிழ்மக்கள் தனிப்பெருந் தலைவராகப்பேணிப் பெருமிதங்கொள்ளல் நாவலர் பெருமானுர் மாட்டு அவர்களுக்குள்ள நன்மதிப்புக்கும் பணிவன்புக்கும் எடுத்துக்காட் டாகும்.

ஸ்ரீ ஆறுமுக நாவலர் பெருமானுர் தன்னலமற்ற நற்பணிகளினுல் உலகப்பெருமகனுக விளங்கும் தகுதியினை நன்குணர்ந்து, அதைப் பன்னுட்டினருக்கும் நன்குணர்த்த இப்பொழுதுள்ள இலங்கை அரசினர் "சைவங்காத்த சான்ருேன் தமிழ் மறுமலர்ச்சியின் தந்தை. ஈழத்து விடுதலை இயக்க முன்னேடி" என்று அன்னுரைப் புகழ்ந்து பாராட்டி அவர்தம் நினைவைக் கொண்டாடும் முகத்தான் தபால்தலை ஒன்றை 1971-10-29ம் நாள் வெளியிட்ட உயரிய செயலை இங்குக் குறிப்பது சாலவும் பொருத்தமுடைத்து.

தாய்நாட்டின்கண் சேய்நாட்டினருக்குள்ள ஈடுபாட்டினுல் ஈழத்திலிருந்து சிதம்பரத்தை நாட்டினுர் 'நல்லை நாவலர்' ஈழத்திலேயே சிதம்பரத்தை நாட்டினர் நல்லீழ வாசிகள்.



# திருக்கோயிலில் சிவ மூர்த்தங்கள்

சைவாகம இரத்திஞகரம்
திரு S. சுவாமிநாத சிவாசாரியார்

ஊரிலான் குணங்குறியிலான்
செயலிலா னுரைக்கும்
பேரிலா ஞெருமுன்னிலான்
பின்னிலான் பிறிதோர்
சாரிலான் வரல் போக்கிலான்
மேலிலான் றனக்கு
நேரிலா னுயிர்க்கடவுளா
யென்னுளே நின்றுன்.

ஆஸ்திக மக்கள் அனைவரும் சென்று வழிபட்டுய்ய ஆலயங்கள் ஏற்பட்டுள்ளன. பாமர மக்களும் எளிதாய் வழிபட வேண்டிய நிலையினை ஒட்டியே வழிபடும் சாதனங்களும் அமைந்திருக்கின்றன. இவ்வாறு எளிதாய் வழிபட வழிசெய்வன விக்ரஹங்கள்.

குணம் குறியற்ற இறைவனைக் குணம் குறிகளால் வகுக்கும் எல்லைக்குள் அகப்படுத்திப் புறத்தோற்றங் கொடுத்து மக்கள் கட்புலன்களுக்குள் அடங்கச் செய்யும் முயற்சியின் விளைவே நாம் வழிபட நிறுவும் விக்ரஹம். உருவமற்றவன் ஆன்மாக்களுய்ய வேண்டிக் கருணை மேலீட்டால் உருக் கொள்ளுகின்றுன். அவன் பல நிலைகளை மேற்கொண்டு அருள் பாலித்ததனுல் உருவங்களும் பல திறத்தனவாகின்றன. பல நிலைப்பட்டவர்கள் நிலைக்கும் அவர் அவாவும் விருப்பங்களுக்கும் ஏற்றவாறு, வழிபடுவதற்கேற்றவையாய் இவை பலவகைப்பட்டு விளங்குகின்றன. இந்திரியங்களால் கிரஹிக்க முடியாத இறைவனை அறிய வகையறியாது தடுமாறும் சிற்றறிஞர்களுக்குள் விவேகமும் பக்குவமுமிக்கவர்க்கு உரியது சிவலிங்கத் திருமேனி. இதைக் கிரஹித்து இறைவனை உணரமாட்டாதார்க்கே கை, கால் முதலிய உறுப்புக்கள் பொருந்திய இதர தோற்றங்கள்.

சிவனுக்கெனச் சிறப்பாக உள்ள திருமேனிகள் மூன்று. ஒனறு அருவத் திருமேனி, இது ஊனக் கண்களுக்குப் புலப்படாதவாறு நுண்ணியது. அகக்கண் கொண்டு உள் நோக்கும் யோகியர் நோக்கிற்கு மட்டும் எட்டுவது. மற்றது கை கால் முதலிய உறுப்புக்களுடன் கூடிய உருவத் திருமேனி. இவ்விரண்டிற்கும் புறம்பானவாறு உருவமும், அருவமும் கலந்த தனி நிலையில் புது உருவம் ஒன்றுமுண்டு. இது, உருவத்திற்கு வேண்டுவனவான கை, கால் முதலிய உறுப்புக்கள் இல்லாததினுல் அருவமாகியும், கண்ணுல் பார்க்கும்பொழுதும் கையால் தொடும்பொழுதும் உணரத்தக்கதனுல் உருவமாகியும், இருநிலைகளும் விரவப் பெற்ற அருவுருவம். இவ்வருவுருவத்திருவுருவம் சிவனுக்குமட்டிலும் சிறப்பாயமைந்தது. இதுவே இலிங்கம். சிவனுக்கெனச் சிறப்பாயுரியதனுல் இது சிவலிங்கம் எனப்படலாயிற்று.

இலிங்கம்:— சலலிங்கம், அசலலிங்கம் என இரு வகைப்படும். மண்ணுலும்,

உலோகத்தாலும், இரத்தினத்தாலும், மரத்தாலும், அமைக்கப்படுவன சலலிங் கங்கள். இதுபோல பூஜை நிகழும்வேளை உடனே உருவாக்கிப் பூஜை முடிந்ததும் களையப்படும் இலிங்கம் க்ஷணிகலிங்கம் எனப்படும். மணல், அரிசி, சமைத்த சோறு, மண், கோமயம், வெண்ணெய், உருத்திராக்கம்; விபூதி, சந்தனம், தர்ப் பையாலமையும் கூர்ச்சம், புஷ்பமாலை, வெல்லம் மா ஆகியனவும் க்ஷணிகலிங்கம் அமைப்பதற்கு உரியவை.

அசலலிங்கம், ஸ்தாவரலிங்கம் என்றும் பெயர்பெறும். இவ்வினத்தைச் சார்ந்த இலிங்கங்கள் ஏழுவகையின. அவை சுயாம்புவம், தைவிகம், திவ்யம், மானுஷம், ஆர்ஷம், ராக்ஷஸம், பரண லிங்கம் என்பன. இவைகளின் இலக்ஷ ணங்களைக் காமிகம் முதலிய ஆகமங் களில் காணலாம்.

"லயம் கச்சந்தி பூதாநி
ஸம்ஹாரெநிகிலாநிச,
தேந லிங்கமி திப்ரோக்த்தம்
சூக்ஷ்மத்வாத் லிங்கமுச்யதெ"

—கிரணகமம்.

"லிங்கே ஸர்வம் சமுத்பன்னம்
லயஸ்தத்ரைவசொச்யதே.
ஸ்ருஷ்டி சம்ஹார கார்யத்வாத்
லிங்கநாமாஸ்ய சொதிதம்"

—வாதுளாகமம்.

இலிங்கத்திலே சிருட்டி காலத்திலே தோற்றமும், சங்கார காலத்திலே ஒடுக்க முமாம். "சங்கார காலத்திலே சமஸ்த சேதன சேதனப் பிரபஞ்சங்களும் லய மடைந்து பின் சிருஷ்டி காலத்தில் அங்ங னம் உற்பந்தியாகின்றமையினால் லிங்கம் எனப்படும்.

'சத்தியுஞ் சிவமுமாய தன்மை
யிவ்வுலக மெல்லா
மொத்தொவ்வா வாணும் பெண்ணு
முயர்குண குணியுமாகி
வைத்தன னவளால் வந்த
வாக்க மிவ்வாழ்க்கை யெல்லா
மித்தையு மறியார் பீட லிங்கத்தி
னியல்பு மோரார்.'

—சிவஞானசித்தியார்.

ஞான சக்தியாகிய சிவலிங்கத்தின் கீழ்க் காணப்படும் ஆவுடையாள் கிரியா சக்தியைக் குறிக்கும். பரவெளியைக் குறிக்கும் சிவலிங்கத்திலே எப்பொழுது மோர் அசைவுண்டு. அதுவே பராசக்தி யாகும். ஆன்மாக்களின பாசத்தைக் கெடுப்பதற்காக அசைதற்சத்தி இலிங் கத்தைச் சுற்றிக் கொண்டிருக்கிறது. அவ்வசைவு லிங்கத்திலுண்டென்பதை உணர்த்துவதற்கு ஆவுடையாள் இலிங் கத்தைச் சுற்றி கீழடங்கி அமைந்திருக் கிறது. ஆவுடையாளின் ஒரு பக்கத்தில் நீண்டிருப்பதாகிய கோமுகியானது ஆன் மாக்களைத் திருநோக்கம் செய்கின்ற குறிப்பாக அமைந்திருக்கிறது.

அவ்விலிங்கம் பிரமபாகம், விஷ்ணு பாகம், உருத்திரபாகமென்னும் மூன்று பாகங்களுடையதாயிருக்கும். அவற்றுள் பிரமபாகம் நபுஞ்சகலிங்கமும், விஷ்ணு பாகம் ஸ்திரீ லிங்கமும், உருத்திரபாகம் பும் லிங்கமுமாகும்.

ஆண் பெண் அலி வடிவமாயிருப்பது அவன், அவள் அதுவாக இருக்கும் உல கத்திலேயுள்ள உயர்திணைப் பொருளும் அஃறிணைப் பொருளும் தம்மிடத்திலே தோன்றி ஒடுங்குகின்றன என்பதை உணர்த்துதற்காகும்.

உருவொடு குணஞ்செயலொன்று
மின்றியே
திருமலமாய்ச் சிவனிறைந்து நின்றதும்
பரவிய வுயிர்த்தொகைப் பந்த நீக்குவா
னொருதனிச் சத்தியாலுன்ன லுற்றதும்.

கந்தபுராணம்.

உருவு, குணம், செயல் இறந்துநின்ற சிவ பெருமான் உயிர்களைப் பந்தித்த பாசத்தை ஒழிக்கும் பொருட்டுத் தம்மோடொற் றுமையுடைய சத்தியைக்கொண்டு படைத்தல், காத்தல், அழித்தல், மறைத் தல், அருளல் என்ற ஐந்தொழில் நடத்து வர்.

முற்கூறப்பட்ட உருவத் திருமேனி யாகிய சதாசிவத்தினின்று இருபத்தைந்து கேவல வடிவங்க்ள் தோன்றின.

இதனுள் ஐந்து தொழில்களால் சிறப் பிக்கப்படும் ஐந்து மூரத்திகள் நினைவிற்குக் கொண்டுவரப்படுகிறுர்கள்.

''கல்யாணசுந்தரமூாத்தி'' இது சிருஷ்டிமூர்த்தி "வைவாஹ்யம் பஞ்சமம் வித்யாத்'' என்றபடி ஐந்தா வது வடிவமாகும்'' ஆன்மாக்கள் போக மோக்ஷத்தை யடைதற்பொருட்டும் இமையமலையரசனது தவத்தை நிறை வேற்றுதற் பொருட்டும் தக்கன் பயந்த மகளெனப் பொருள்படும் தாக்ஷாயணி என்னும் பெயரையும் அவனிடத்து வளர்ந்த சரீரத்தையும் நீக்குதற்பொருட் டும் சிவபெருமானது கிருபையினுல் உமா தேவியார் திருவுளங்கொண்டு சிவாக் ஞைப்படி சிறுபிள்ளையுருவத்தோடு சென்று, இமயமலையிலுள்ள பத்மை என் னும் தடாகத்திலுள்ள ஒரு தாமரை புஷ் பத்தின்மீது விற்றிருந்தனர்.

உமாதேவியார் தமக்குப் புத்திரியாக வேண்டுமென்று நினைத்துத் தவஞ்செய்த இமவான் அவரைக்கண்டு மகிழ்ந்து கண்ணில் ஆனந்த அருவிநீர் சொரியச் சென்று வணங்கி எடுத்துச்சிரசில் வைத் துச்சென்று தமது மனைவியாகிய மேனை யின் கையில் கொடுத்து நிகழ்ந்தவற் றைக் கூறினுன் மேனை உலகமாதா வாகிய உமாதேவியாரைப் போற்றி வளர்த்தனள்,

உமாதேவியார் சிவபெருமானைக் குறித் துத் தவஞ்செய்யச் சிவபெருமான் அம்மை யார் தம்மிடத்துக் கொண்ட அன்பை உல கினர்க்குக் காண்பிந்து, உலகத்திலே இல்வாழ்க்கை நிகழ்தற்பொருட்டுத் திரு மணம் செய்தருளிய காரணத்தினுல் கல் யாணசுந்தரமூர்த்தியாயினர்.

இக்குறிப்பை நம்பியாரூரர் திருக்கலய நல்லூர் என்னும் பதியில் இறைவனைத் தொழுது பாடியருளியிருக்கிருர்.

'' குரும்பைமுலை மலர்க்குழலி
கொண்ட தவங்கண்டு
குறிப்பினொடுஞ் சென்றவள் தன்
குணத்தினை நன்கறிந்து
விரும்பும் வரங்கொடுத்தவளை
வேட்டருளிச் செய்ந
விண்ணவர்கோன் ''

என்பது அத்திருப்பாடற்பகுதியாகும்.

இடபாரூடர் :—ஸ்திதிமூர்ந்தி, (காத் தல்)

இடபடத்தை வாஹனமாகக் கொண்ட வர்.

தஸ்மாத் தர்ம ஸ்ஸதாசம்போர்வ்ருஜ ரூபேண வாஹனம்'' என்று கந்தபுரா ணம் கூறுகிறது: தருமமாகிய இடபத் தில் ஆரோஹணித்தவர், சிவபெருமான் தம்மைச்சார்ந்து போற்றுகின்ற தருமக் கடவுளாகிய இடபத்திற்கு இறவாத் தன் மையையும் வாஹனமாய்த் தம்மைத் தாங் கும் வன்மையையும், அன்பையும் மெய் யுணர்வையும் கொடுத்து அதனை வாகன மாகக் கொண்டனர்.

திருமால் திரிபுர சங்கார காலத்தில் சிவ பெருமானை இடபமாய்த் தாங்கினுர் என் றும் புராணங்கள் பகரும். ''திரியுமுப்புரந் தீப்பிழம்பாகச் செங்கண்மால் விடைமேற் றிகழ்வானை'' என்று சுந்தரர் கூறியுள் ளார். எனவே மஹாவிஷ்ணு இடப தேவ

ராக இருந்து இறைவனைத் தாங்கினுர், திருமால் பலவழிகளாலும் சிவபெருமானை வழிபட்டார் என்பதை ஸ்ரீ சங்கராசாரியார் கூறுகிருர் சிவானந்த லஹரியில். அது,

" பாணத்வம், வ்ருஷபத்வ
மர்த்தவபுஷா பார்யாத்வமார்
யாபதே:
கோணித்வம் ஸகிதா ம்ருதங்க
வஹதாகாசேத்யாதிருபம்
ததௌ,
தவத் பாதே நயனுர்ப்பணஞ்ச
சக்ருதவான் த்வத்தேஹ
பாகொஹரி
பூஜ்யாத் பூஜயதரஸ்ஸ ஏவஹி
நசேத் கோவா ததன்யோதிக :"

மஹாவிஷ்ணுவானவர் இறைவா! உனக்கு அம்பாக இருந்து உதவினுர். விருஷபமாக விருந்து உன்னைத் தாங்கினுர், பாதி சரீரத்தில் மனைவியாக இருந்தார். (சங்கர நாராயணன்) பன்றியாக இருந்து உபாசித்தார், இதை "பிறை யெயிற்று வெள்ளைப்பன்றிப் பிரியாது பலநாளும் வழிபட்டேத்தும் சீரவன் காண்" பிறைபோன்ற கோரப் பல்லையுடைய வெள்ளைப்பன்றி (இது திருமால்கொண்ட வடிவம்) உருவெடுத்த திருமால் பிரியாது பலகாலம் வழிபட்டார் என்று நாவுக்கரசர் சிவபுரம் திருத்தாண்டகத்தில் கூறியுள்ளார். தோழமை பெற்ருர், இறைவன் ஆனந்ததாண்டவம் செய்யும்போது மிருதங்கம் வாசித்து சந்தோஷிக்கச்செய்தார். " விஷ்ணுஸ்ஸாந்திர மிருதங்கவாதன படு :" என்று ஸ்காந்தம் கூறுகிறது. மற்றும் உன்னுடைய பாதத்தில் கண்ணையும் அர்ப்பணம் செய்தார், என்ருர்.

காமாரி :—(மன்மதனை எரித்தவர்,-சங்காரமூர்த்தி, (அழித்தல்) சிவபெருமானைத் தேவர்களிலொருவரென்று மன்மதன் நினைத்துப் புஷ்ப பாணத்தைத் தொடுத்தான். கடவுளுடைய நெற்றிக்கண் அக்கினியாற் சாம்பலாயினுன்.

ஆன்மாக்களிடத்தில் பகையும் அன்பும் சிறிதுமின்றி எல்லா வுயிர்களுக்குமுள்ள கன்மங்களை யறிந்து அவற்றிற்கேற்ப முறை புரிபவரென்பதும், தம்மை எதிர்த்து அகங்கரித்து வந்த பாவத்தை நீக்குதற் பொருட்டும், அவ்வாறு எதிர்த்தவர்கள் தண்டிக்கப் படுவர் என்பதும் உணர்த்துதற்கு மன்மதனை எரித்தருளினுர் என்பது உணரப்படும்.

சிவபெருமான் ''வேண்டாமை வேண்டுவதுமிலார்'' (திருநாவுக்கரசுசுவாமிகள்) என்பது குற்றஞ் செய்யாது மன்மதன் பக்லாக நின்ற இரதியை அழிக்காமையாலும், மீள மன்மதனை எழுப்பித்தொன்மை போல அரசுரிமை முதலியன கொடுத்து இன்பஞ்செய்தமையாலும் நன்கு விளங்கும்.

" அர்ச்சாமீதி தியாயதேவ குசுமம்
க்ஷிப்த்வாஜனோ முச்யதெ
வித்யாமீதி தியாததேவ
விகிரன்பஸ்மீக்ருதோ மன்மத:,
கித்யாப்யந்தர வ்ருத்திமாத்ரஸிகொ
பாஹ்யான பேக்ஷஸ்சய:
ஸஸ்வாமீ மம தைவதம் ததிதரொ
நாம்னுபி நாம்னுயதெ."

—நீலகண்டதீக்ஷிதர்.

பூஜிக்கிறேன் என்று நினைந்து புஷ்பத்தை எறிந்த அடியவன் முக்தி பெறுகிருன். அடிக்கிறேன் என்று நினைத்து அதே புஷ்பத்தை இறைத்த மன்மதன் சாம்பலாக்கப்பட்டான். ஆதலால் செயல் எவ்வாறு இருந்தாலும் உள்ளத்தினுல் நினைத்துச் செய்யும் செயலுக்குத் தக்க பயனளிப்பவர் இறைவன் என்பது புலனும்.

நடராஜமூர்த்தி — திரோபவம்.
(மறைத்தல்)

இந்தத் தாண்டவமூர்த்தியோவெனில், ஆனந்த தாண்டவமூர்த்தி, சந்தியா தாண்டவமூர்த்தி, கௌரீ தாண்டவ

மூர்த்தி, திரிபுர தாண்டவமூர்த்தி, காளீ தாண்டவமூர்த்தி, முனிதாண்டவமூர்த்தி, ஸம்கார தாண்டவமூர்த்தி என ஏழு பேதமுடையவர். இதனுள் தில்லைப் பொன்னம்பலத்திலுள்ள பெருமான் ஆனந்த தாண்டவமூர்த்தியாவார்.

"அரவும் அம்புலியும் போற்றும்
 தில்லையம்பதியில்
பரவும் ஆனந்த தாண்டவம்
 செய்வோம் பைம்பொற் பாவாய்."

என்று புராணம் கூறுகிறது.

பரமசிவன் பஞ்சாட்சரத்தைத் திரு மேனியாகக் கொண்டு பராசத்தியாகிய திருவம்பலத்தில் நின்று உமாதேவியார் காணும்படி வியாக்ரபாத முனிவர் பதஞ் சலி முனிவர் இருவரும் மெய்யுணர் வாற்றெழ ஆடி அருளுகின்ற திருக் கூத்தை விரும்பியவர்கள் மோக்ஷமடை வார்கள்.

மாயை தனை உதறி வல்வினையைச்
 சுட்டு மலம்
சாய அமுக்கி அருள்
 தானெடுத்து—நேயத்தால்
ஆனந்த வாரிதியில்
 ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தையார் பரதம் தான்.

—உண்மைவிளக்கம்.

உடுக்கை ஏந்திய திருக்கரத்தினாலே மாயாமலத்தை நீக்கி அக்னி யேந்திய திருக்கரத்தினாலே கன்ம மலத்தைச் சுட்டு ஊன்றிய திருப்பாதத்தினாலே ஆணவமல மேலிடாமலமுத்தி தூக்கிய திருவடியினாலே அருளே உடம் பாக நிறுத்தி அமைத்த திருக்கரத் தினாலே ஆனந்த வெள்ளத்திலே ஆன் மாவை அழுத்துதலே எமது தலைவர் நிருத்தம் செய்கின்ற முறைமை என்பது இவ்வுண்மை விளக்கத்தின்பொருளாகும்.

சோமாஸ்கந்தர் — அனுக்ரஹம்
(அருளல்)

உமையுடனும் கந்தனுடனும் ஒருங்கு வீற்றிருக்கும் இம்மூர்த்தி சோமாஸ்கந்தர் எனப்படுவர். இறைவன் பெருந் தத்து வங்களை அடிப்படையாகக் கொண்டு தோற்றம் பெறும் பெரும் நிலையினையே சுட்டுகின்றது இந்த மூர்த்தி.

மூர்த்தியின் வலதுபுறத்திலும் இடது புறத்திலும் இரு சக்திகள் இடம் பெறுவர். இடப்புறத்திலிருக்கும் சத்திக்கும் இறைவ னுக்கும் நடுவில் கந்தன் நிற்பான். எனவே இந்த சோமாஸ்கந்தமூர்த்தியின் நிலை இச்சா சத்தியையும் கிரியாசத்தியை யும் ஞானசத்தியாகியகந்தனையும் செயல் படுத்திப் பஞ்சகிருத்தியங்களையும் லீலை யாகப் புரிந்து நிற்கும் நிலை. இந்த மூர்த்தி மூலஸ்தான மூர்த்திக்குப் பிரதி நிதியாகும்.

'பராஸ்ய சக்த்திர்விவிதை வச்ருயதெ, என்பது சுருதி. இறைவன் எண்ணிறந்த சத்திகளையுடையவன். ஆனால் ஒரு சத் தியே அநேக சத்திகளாகத் தோற்ற மளிக்கின்றது.

நாயகி நான்முகி நாராயணி
 கை நளின பஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி
 சாமளை சாதி நச்சு
வாயகி மாலினி வாராகி
 சூலினி மாதங்கி யென்
றாயகி யாதி யுடையாள்
 சரண மரணமக்கே.

—அபிராமி அந்தாதி

நாயகி நான்முகி முதலாயின அவசர பேதங்களால் அம்மை அடைந்திருந்த திருநாமங்கள், ஆதலால் அவற்றைக் கொண்டு அடியார்களுக்கு அருளும் வெற் றியை அறிவிக்கின்றார்.

இத்தகைய சக்திகளுள் சிவகாம சுந்தரியும் பராசக்தியின் அம்சம் 'ஸ்ரீ நடராஜப் பெருமானுடைய அருட்சத்தி, ஸ்ரீமன் நடராஜமூர்த்தியின் அருள் சக்தியாகிய சிவகாமிஅம்மையின் ஆலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்து மஹாகும்பாபிஷேகம் செய்து வைப்பதின் புண்ணியத்தை அளவிட்டுச் சொல்லமுடியாது.

புல்லினல் ஐந்துகோடி
புதுமண்ணிலால் பத்துக்கோடி
செல்லுமா காலமெல்லாம்
செங்கலால் நூறு கோடி
அல்லியங் குழலாய் கேளாய்
ஆலயம் நமக்கு நல்ல
கல்லினல் கட்டி வைத்தோர்
கையிலே விட்டு அகலார்தாமே.

என்ற வாக்கின்படி ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்பாள் கோயில் திருப்பணி, கும்பாபிஷேகக் குழுவினர்களும் அதன் பொருட்டு உதவிய யாவரும் அன்னை சிவகாமசுந்தரியின்திருவருளால் நோயின்மை கல்வி, தனம், தான்யம், அழகு, புகழ், பெருமை, இளமை, அறிவு, சந்தானம், வலிவு, துணிவு, வாழ்நாள் வெற்றியுடன் தேவியின் அருளுக்குப் பாத்திரராகுவார்கள் என்பதற்கு யாதும் ஐயமில்லை.

மழை வழங்குக மன்னவ னேங்குக
பிழையில் பல்வள மெங்கும் பெருகுக
தழைகவஞ் செழுத்தோசை தரையெலாம்
பழைய வைதீக சைவம் பரக்கவே.

# எங்கள் பிராட்டி

திரு. ஆ. இராமசாமிப் பிள்ளை, எம்.ஏ., எம்.லிட்.,

உலகம் உய்ய, உயிர்கள் இன்புற்று வாழ, அறம் தழைக்க, அன்பு நெறி ஓங்க இறைவன் அம்மையப்பனாக, மாதொருபாகனாக, மங்கையொருபங்கனாக அர்த்தநாரியாகக் காட்சியளிக்கிறான். சக்தியில்லாமல் சிவமில்லை; இறைவனுடைய அருளே சக்தியாகும். எனவே தான் 'நந்தம்மை யாளுடையாள் தன்னிற் பிரிவிலா எங்கோமான்' என்று பாவைப்பெண்கள் பாடிப் பரவுகின்றனர். உலக போக வாழ்வை விரும்புவோர் சக்தியோடு சேர்த்துச் சிவனைவழிபடுவர்; பரலோக வாழ்வை நச்சுவோர் சிவனை மாத்திரமே வலம் வந்து வணங்குவர் என்பதை பிரிங்கி முனிவரின் வரலாற்றால் அறிகிறோம். இவ்வுண்மை நம் தமிழகக் கோயிலமைப்பிலும் அதனை யொட்டி வாழும் மக்களது வாழ்விலும் இன்றும் கண்கூடாகக் காண்கிறோம். சிவனது சந்நதித் தெருவைவிட அம்மனது சந்நதித் தெருவிலேயே மக்கள் அதிகம் வீடமைத்து வாழ்கிறார்கள். அப்பனுக்கு நேர் நிற்பதற்கு அஞ்சி அம்மையினது அருட் பார்வையிலேயே குழுமித் திளைக்கின்றனர். குழந்தைகள் தந்தையை அணுக, அவரது முன்னிற்க அஞ்சுவதும் அம்மையிடம் கொஞ்சி; கெஞ்சி, முழு உரிமையோடு வேண்டுவதைக் கேட்டுப் பெற்று மகிழ்வதும் இயற்கைதானே. அன்புக்கு உறைவிடம் அம்மையும் ஆற்றலுக்கு இருப்பிடம் அப்பனும்தானே. அப்பனுக்கு முன் நிற்க, விரும்புவதைக் கேட்க, அஞ்சும் பிள்ளைகள் அம்மையிடம் சொல்லி அவள் மூலமாக அப்பனிடம் வேண்டியதைப் பெற்றுக் கொள்வது உலகியல்பே. இதனையே 'பிராட்டியை அடைந்து பிரானுடைய அருளை அவள் மூலமாகப் பெறுவது' என்று வைதீக சமய விதிமுறை கூறும். பிள்ளைகளிடம் காணும் குற்றங்களைத் தன் கருணையால் பொறுத்து அவைகளைத் தன் அன்பு அரவணைப்பால் நீக்கிப் பிள்ளைகளைப் பேணி வளர்த்து நல்லாற்றுப் படுத்துதல் அம்மையின் அருட்செயலாம். இதனையே

'கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி' என்றும், 'நம்மையாட் கொண்ட குளிக் கோதாட்டும் சீலமும்' என்றும், 'பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை' என்றும் பாவைப் பாடல் அடிகள் பகரும்.

எனவே ஆன்மாக்கள் உய்தியடைய அருட்சக்தியாம் அம்மையின் துணையையே நாடுவது சமய நெறியாம். அவ்வம்மையிருக்கும் அருளிடம் எது? 'பேதையொருபால் திருமேனியனாக' மாதொரு பாகனாக இறைவனிருப்பதாகக் கூறினாலும் 'சத்திநிபாதம்' இறைவனுடைய திருவடிகளே. அம்மை அவ்விடத்திலிருப்பதனுல்தான், அப்பனுடைய அருள் நோக்கை நாடும் ஆன்மாக்கள் அவள் திருவடியையே வணங்குகின்றன; தஞ்சமாக அடைகின்றன. அம்மை எப்போதும் அவனது திருவடியிலேயே தங்கி, அவனது அருள் முகத்தையே அண்

ணுந்து பார்த்து இருக்கிருள் என்பதை 'முதுகாடுறை முக்கண்ணனே வாக்கே நோக்கிய மங்கை' என்ற திருவங்கமாலே யில் அப்பர் முறையிடுகிருர்.

இறைவனும் சக்தியாம் அம்மையின் அன்பு வலேப்பட்டவர். அவளே எப்போதும் பிரியாவுடையாளாகக் கொண்டிருக்கிருர். 'நந்தம்மையாளுடையாள் தன்னிற் பிரிவிலா எங்கோமான்'; பேதையொருபால் திருமேனியான்', 'ஏழை பங்காளன்' என்று திருவெம்பாவை அடிகள் குறிப்பிடுகின்றன. அத்தகைய 'சிறுமருங்குலம்மையார் தடங்கண்மடந்தைமணவாளனுக' விளங்கும் இறைவன் அவள் பால்மிக்க காதலுடையவனுய்த்தன் திருவுள்ளத்தில் அழகொழுகும் உயிரோவியமாக எழுதிப் பார்த்து' மகிழ்கிருன் என்று குமரகுருபரச் சிறுபிள்ளே போற்றிப் பரவசமடைகிறது. அத்தகைய பேரன்புக்குரியாளாகிய அம்மையுருவை இறைவனது இணேயடிகளாகக் கொண்டு அடியார்கள் தாள்தலேக் கொள்கின்றனர். இறைவனுடைய புகழ் பாடுவோரெல்லாம் அவனது திருவடிச் சிறப்பையே விதந்து கூறுகின்றனர். மணிவாசகரும் பாவை நோன்பு நோற்கும் கன்னிப் பெண்கள் அருட்பெருஞ்சோதி அம்பலக் கூத்தனே அவனது திருவடிகளேப் பாடியே பரவுவதாகவும், தோழிமாரை எழுப்புவதாகவும் கற்பனே செய்து மகிழ்கிருர் :—

'மாதேவன் வாக்கழல்கள்
 வாழ்த்திய வாழ்த்தொலி' (1)
'மலர்ப்பாதம் தந்தருள
 வந்தருளும் நேசன்' (2)
'தலேயளித்தாட் கொண்டருளும்
 வான் வார் கழல்பாடி' (6)
'உன் கழல் பாடி' (11)
'உடையான் பொற்பாதம் ஏத்தி'(12)
'ஆட்கொள்ளும் வித்தகர்தாள்
 .........பாடி (15)
'செங்கமலப் பொற்பாதம்
 தந்தருளும் சேவகன்' (17)
'கண்ணுரமுதமாய் நின்ருன்
 கழல் பாடி' (18)

திருவெம்பாவையின் இறுதிப் பாடல் இவ்வகையில் தனிச் சிறப்புடையது. இறைவனது உலகுக்கு ஆதியந்தமான நிலேயையும் அவனது ஐந்தொழிலேயும் குறிப்பிடுகின்ற பாவைப் பெண்கள் அவனது திருவடிக்கே அப்பண்புகளேயேற்றிப் போற்றியிருப்பது மகிழ்ந்தின்புறுதற்பாலதாம். அதுதான்:

'போற்றி யருளுகநின் ஆதியாம் பாதமலர்
 போற்றி யருளுகநின் அந்தமாம்
 செந்தளிர்கள்
போற்றிஎல் லாஉயிர்க்கும் தோற்றமாம்
 பொற்பாதம்
 போற்றிஎல் லாஉயிர்க்கும் போகமாம்
 பூங்கழல்கள்
போற்றிஎல் லாஉயிர்க்கும் ஈரும்
 இணேயடிகள்
 போற்றிமால் நான்முகனும் காணுத
 புண்டரிகம்
போற்றியா முய்யவாட் கொண்ட
 ருளும் பொன்மலர்கள்
 போற்றியா மார்கழிநீர் ஆடேலோ
 ரெம்பாவாய்!

இறைவனது சௌலப்யம் என்னும் அடியார்க்கெளியனுந் தன்மை திருமுறைகளில் பொலிவுறக் காண்கிருேம். நம் கோதாட்டிப் பேதித்து வளர்த்து எடுத்த அம்மை நம்மை இறைவனது அருளுலகத்துக்கு வழிப்படுத்துகிருள்.

'மாலும் அயனும் காணுத மலரடிகள்';
'மால் நான்முகனும் காணுத புண்டரிகம்'

அன்பில் திளேக்கும் அடியவர்க் கெளிமையாகி இங்கு அவரில்லங்கள் தோறும் தானே வந்து தலேயளித்தாட் கொள்கின்றன. என்னே அடியாரது பெருமை. ஆண்டவனது கருணே.

இவ்வாறு அருள் வீடாகிய முக்தி நிலைக்கு ஆன்மாக்களை ஆட்படுத்துகின்றவள் 'எம்பிராட்டியே'. அவள் தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு முன்னிச் சுரக்கும் இன்னருளே யென்ன மழையே நீபொழிவாயாக எனப் பாவைநோன்பினர் வழியாக ஆளுடைய அடிகள் கூறியிருப்பது பாடலைத் தெய்வமணம் கமழும் படிச் செய்கிறது. சாதாரண மழைப் பொழிவைப் பிராட்டியின் 'முன் சுரக்கும் இன்னருளு'க்கு ஒப்பிட்டுக் கூறியதை நோக்க 'உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை' என்ற தொல்காப்பியரின் நூற்பாவுக்குச் சிறந்ததோர் இலக்கியமாவதைக் காண்கிறோம்.

'எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த பொங்கு மடு'வேபோல் அகில உலகும் தழைத்தோங்குக.

# சிதம்பரம் சிவகாமியம்மை திருக்கோயில்

திருமுறை ஆராய்ச்சிக் கலைஞர்
**திரு. க. வெள்ளைவாரணன்**

மன்றின்மணி விளக்கெனலா
மருவுமுக நகை போற்றி
ஒன்றின் மங்கலநாணின்
ஒளிபோற்றி யுலகும்பர்
சென்று தொழ வருள் சுரக்குஞ்
சிவகாம சுந்தரிதன்
நின்றதிரு நிலைபோற்றி
நிலவுதிரு வடிபோற்றி.

சிவநெறிச் செல்வர்களால் பூலோக கயிலாயம் எனவும், கோயில் எனவும் போற்றப்பெறுவது பெரும்பற்றப் புலியூர் என்னும் சிதம்பரமாகும். இத் தலம் உலக புருடனுக்கு நெஞ்சத் தாமரையாக விளங்குவது. இதன் கண் ஞானமாகிய நுண்ணிய ஆகாய மாகிய திருச்சிற்றம்பலத்திலே சிவ பெருமான் ஆனந்தத் திருக்கூத்தினை எக்காலத்திலும் நிகழ்த்தியருளு கின்றார்.

இமயம் முதல் குமரி வரையுள்ள இந்தியப் பெருநிலத்திலும் கடல் கடந்து, இலங்கையிலும், உலகின் பல்வேறிடங்களிலும் வாழும் எல்லா மக்களையும், தன்பால் ஈர்க்கவல்ல தெய்வத்தன்மை வாய்ந்த திருத் தலங்களுள் தலைமை வாய்ந்தது சிதம்பரம். அழியுந்தன்மையன வாகிய உலகப் பற்றுகளை அறவே அகற்றி எவ்வகைப் பொருள்களுக் கும் சார்பாகிய இறைவன் திருவடி களைப்பற்றி வழிபட்டு மகிழ்வதனையே பெரும் பற்றுகக் கொண்டவர் புலிக்கால் முனிவர். வியாக்கிரபாத ராகிய அவர், உலக உயிர்கள் நலம் பெறுதல் வேண்டித் தில்லை வனமாக இருந்த இத்தலத்தில் திருமூலநாத ராகிய சிவலிங்கத் திருவுருவினைப் பூசித்துப் போற்றினார். அதனால் இத் தலம் 'பெரும்பற்றப்புலியூர்' என வழங்கப்பெறுவதாயிற்று. இத்தில்லை யில் சிவபெருமான் பதஞ்சலி முனிவர் செய்த வழிபாட்டிற்குத் திருவுள மகிழ்ந்து அம்முனிவர் வேண்டிய வண்ணம் நடராசப் பெருமானாக வெளிப்பட்டு அருளி உலகமீன்ற அன்னையாகிய சிவகாமியம்மை காண ஆனந்தத் தாண்டவமாகிய அருட் கூத்தினை இடைவிடாது இயற்றி அருள்கின்றான் என அருள் நூல்கள் கூறுகின்றன.

முற்காலத்தில் சிம்மவர்மன் என்னும் வேந்தன் தில்லையை அடைந்து வியாக்கிரபாதரை இறைஞ் சிச் சிவகங்கையில் நீராடித் தனது உடல் நோய் நீங்கிப் பொன்மேனி பெற்றமையால் இரணியவர்மன் என் னும் சிறப்புப் பெயர் பெற்று, நடராசப் பெருமானுக்கு நாள் வழி பாடும் திருவிழாக்களும் நிகழ

நிபந்தம் வழங்கினுன். இச்செய்தி கோயிற் புராணத்தில் விரிவாகக் கூறப்படடுள்ளது.

திருமந்திர மாலேயினே அருளிய சிவ யோகியாகிய திருமூலர் முதல் அருண்மொழித் தேவராகிய சேக்கிழார் நாயனுர் ஈருகவுள்ள சைவத் திருமுறையாசிரியர் அனைவரும் தில்லேச் சிதம்பரத்தில் (சிற்றம்பலத்தில்) திருக்கூத்தியற்றியருளும் இறைவனது திருநடனத்தை இறைஞ்சிப் போற்றியுள்ளார்கள். கோச்செங்கட் சோழன் முதலிய சோழமன்னர்கள் அனைவரும் 'தில்லேயம்பலவாணரைத் தமது குலதெய்வமாக வழிபட்டுத் தில்லேக் கோயிலுக்குப் பல திருப்பணிகள் செய்துள்ளார்கள். சோழ மன்னர்களும் அவர்தம் அரசியலதிகாரிகளும், தில்லேக் கோயிலுக்குச் செய்த திருப்பணிகள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கனவாகும். கி. பி. 5-ஆம் நூற்றுண்டில் ஆட்சி புரிந்த பல்லவவேந்தன் சிம்மவர்மன் என்பான் கூத்தப்பெருமானே வழிபட்டுத் தில்லேயில் பொன் வேய்ந்தனன் என்பர். திருநாவுக்கரசரும், திருஞான சம்பந்தரும் இங்குக் கூத்தப் பெருமானே இறைஞ்சிப் போற்றிய காலத்தில் இத்திருக்கோயில் தூய செம்பொன்னிஞல் எழுதி வேய்ந்த சிற்றம்பலமாக விளங்கியுள்ளது என்பது அவர்கள் பாடிய திருப்பதிகங்களால் நன்கு விளங்கும். வரகுணபாண்டியன் தில்லேயை வழிபட்ட செய்தியை மணிவாசகர் குறித்துள்ளார். கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் ஆட்சிபுரிந்த முதல் ஆதித்த சோழன் கொங்கு நாட்டினே வென்று அங்குப் பெற்ற பொன்னேக் கொண்டு தில்லேயம்பலத்தை மீளவும் பொன் வேய்ந்தனன் என நம்பியாண்டார் நம்பி குறித்துள்ளார்.

முதற் குலோத்துங்கனது 44-ஆம் ஆட்சியாண்டில் இராசராசன் குந்தவையார், தில்லே நாயகர்தம் கோயிலெல்லாம் செம்பொன் வேய்ந்துள்ளார். மூன்ருங் குலோத்துங்க சோழன் நடராசப் பெருமான் திருநடம்புரியும் திருச்சிற்றம்பலத்தின் முகப்பிலுள்ள முன்மண்டபமாகிய எதிரம்பலத்தைச் செம்பொன் வேய்ந்தான். சிவகாமியம்மையின் திருக்கோபுரத்திற்குச் செம்பொன் வேய்ந்தான். இச்செய்தி

> ''எத்தரையும் தொழும் இறைவற்கு
> எதிரம்பலஞ் செம்பொன் வேய்ந்து
> சித்திரை விழா அமைத்து, இறைவி
> திருக்கோபுரஞ் செம்பொன்
> வேய்ந்து''

எனவரும் அவனது மெய்க்கீர்த்தியிற் கூறப்பட்டுளது. இவ்வாறே பாண்டியர், பல்லவர் முதலிய பேரரசர்களும் பிற குறுநில மன்னர்களும், அன்பிற் சிறந்த அடியார்களும் தில்லேயில் நடராசப் பெருமான் திருக்கோயிலிற் காலந்தோறும் புதிய புதிய திருப்பணிகளேச் செய்து, நாள் வழிபாட்டிற்கும், திருவிழாக்களுக்கும், நந்தவனம் அமைத்தல் முதலிய திருப்பணிகளுக்கும் வேண்டிய நிபந்தங்களே நிலமாகவும், பொருளாகவும் வழங்கியுள்ளமை இத்திருக்கோயிலில் வரையப் பெற்றுள்ள 270க்கு மேற்பட்ட கல்வெட்டுக்களால் இனிது விளங்கும்.

கி. பி. 1239 முதல் 1251 வரை ஆட்சிபுரிந்த இரண்டாம் மாரவர்மன் சுந்தரபாண்டியன் தில்லேயிற் கூத்தப் பெருமானே வணங்கித் துலாபார



ஸ்ரீ நடராசப்பெருமான் திருக்கோயிலின் மேல்நிலைத் தோற்றம்

ஸ்ரீ சிவகாமி அம்மன் திருக்கோயிலும் சிவகங்கைத் தீர்த்தமும்



கிழக்குக் கோபுரம்
விக்கிரமசோழன் திருப்பணி
பச்சையப்ப முதலியாரால் புதுப்பிக்கப்பெற்றது



தெற்குக் கோபுரம்
கோப்பெருஞ்சிங்கன் திருப்பணி



மேலைக் கோபுரம்
சுந்தரபாண்டியன் திருப்பணி



வடக்குக் கோபுரம்
கிருஷ்ணதேவராயர் திருப்பணி

தானஞ் செய்ததுடன் தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன் வேய்ந்தும் மேலைக்கோபுரம் கட்டியும் திருப்பணி புரிந்துள்ளான். பல்லவ மரபினனாகிய கோப்பெருஞ்சிங்கன் என்பான் சொக்கசீயன் என்ற பெயரால் தில்லையில் தெற்குக் கோபுரத்தைக் கட்டியதுடன் ஆண்டுதோறும் அதனைச் சீர் திருத்தற்கு வேண்டும் செலவுக்காகச் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள ஆற்றூர் என்ற ஊரை நிபந்தமாக வழங்கியுள்ளான். விசயநகர வேந்தர் கிருஷ்ணதேவராயர் பொட்டனூரில் வெற்றித் தூண் நாட்டித் தில்லையிற் பொன்னம்பல நாதனைச் சேவித்துச் சிதம்பரம் வடக்குக் கோபுரத்தைக் கட்டியுள்ளார்;

இவ்வாறு தமிழ் வேந்தர்களாலும் குறுநில மன்னர்களாலும் படைத் தலைவர்களாலும் நாட்டு மக்களாலும் பல்வகைத் திருப்பணிகளைப் புரிந்து போற்றப் பெற்றுவரும் தில்லைப் பெருங்கோயிலில் நடு நாயகமாகத் திகழ்வது, நடராசப்பெருமான் ஆனந்தத் திருக்கூத்தியற்றும் பொன்னம்பலமாகிய திருச்சிற்றம்பலத் திருக் கோயிலாகும். இதனைச் சூழத் திருமூலட்டானம் முதலாகப் பல திருக் கோயில்கள் அமைந்துள்ளன. அவற்றுள் மூன்றும் திருச்சுற்றில் சிவகங்கைத் தீர்த்தத்தின் மேல் கரையில் அமைந்துள்ள சிவகாமியம்மை திருக்கோயில் மிகவும் சிறப்புடையதாகும். இத் திருக்கோயிலில் எழுந்தருளிய சிவகாமியம்மையைத் "திருக்காமக்கோட்டமுடைய பெரிய நாச்சியார்" எனக் கல்வெட்டுக்கள் போற்றுகின்றன.

நடராசப் பெருமான் நிகழ்த்தியருளும் திருக் கூத்தினை உள்ளவாறு கண்டு மகிழும் மெய்யுணர்வு வாய்க்கப்பெறாத நம்மனோர் பொருட்டு அம் முதல்வனை விட்டுப் பிரிவிலாத திருவருளின் வடிவாகிய சிவகாமியம்மையார் அப்பெருமானது ஆனந்தக் கூத்தினை உடனிருந்து கண்டு அதன் பயனை உலக உயிர்களுக்கு அளித் தருளுகின்றார் என அருள் நூல்கள் கூறுகின்றன. தாய்ப்பாலையே உணவாகக் கொண்டு வளரும் கைக்குழந்தைக்கு நோய் வந்தால் அந்நோயினைத் தீர்க்கும் மருந்தினைப் பிள்ளைக்குக் கொடுப்பதில்லை. மருந்தின் வேகத்தைக் குழந்தையின் மென்மையான குடர் தாங்காதென்று கருதிக் குழந்தையிள் நோய் தீர்க்கும் மருந்தினைத் தானேயுட்கொண்டு அதன் பயனைத் தாய்ப்பால் வழியாகக் குழந்தைகள் பெற்று நோய் நீங்க உதவுவது பால் நினைந்தூட்டும் தாயின் செயலாகும். அதுபோலவே உலக அன்னையாகிய சிவகாமியம்மையும் மன்னுயிர்த் தொகுதியாகிய நம்மனோரின் தீராத பிறவிநோய் நம்மை விட்டு நீங்குமாறு இறைவன் திருக் கூத்தினைத் தாம் இடைவிடாது கண்டு அதன் பயனை நமக்கு அளித் தருள்கின்றார் என்பது அருளாளர் கண்டுணர்ந்த அனுபவ உண்மையாகும். இறைவனது திருக்கூத்தின் பயனை உயிர்கள் பெற உதவும் அருளன்னையாகிய சிவகாமசுந்தரிக்கு, தில்லைப் பெருங்கோயிலில் சிவகங்கைத் தீர்த்தத்தின் மேல்கரையில் தனிக்கோயில் அமைத்து நாள் வழிபாடும், திருவிழாக்களும் நிகழ்த்தும் வழக்கம் பல நூற்றாண்டுகளுக்கு முன்

னரே தொடர்ந்து நிகழ்ந்து வரு கின்றது.

கி. பி. 1118-1136 வரை ஆட்சி புரிந்த விக்கிரம சோழன் காலத்தில் சிவகாமியம்மை திருக்கோயில் கருங் கற்றளியாக அமைக்கப் பெற்றது. அவ் வேந்தனது படைத் தலைவன் மணவிற் கூத்தன் காலிங்கராயன் என்பான் சிவகாமியம்மை திருக் கோயிலைச் சூழ்ந்த திருச்சுற்றும் திரு மாளிகைப் பத்தியும் அமைத்து அம் மைக்கு அபிடேகத்திற்குரிய பாற்பசு வும் அம்மைக்குச் சாத்தப் பீதாம்பர மும் அளித்துள்ளான்.

சிவகாமியம்மை திருவிழா நாட் களில் திருவோலக்கமாக எழுந்தருளி யிருத்தற்கும் தேவாரத் திருப்பதிகம் பாராயணம் செய்வதற்கும் ஏற்றவாறு சிவகாமியம்மை திருக்கோயிலுக்குத் தென்புறத்தில் விக்கிரமசோழன் திரு மண்டபம் என்ற பெயருடன் நூற்றுக் கால் மண்டபத்தை அமைத்துள்ளான் இவ்வாறு விக்கிரமசோழன் காலத் தில் தொடங்கப் பெற்று நிகழ்ந்த சிவகாமியம்மைத் திருக் கோயில் திருப்பணி இவன் மகன் இரண்டாங் குலோத்துங்கன் ஆட்சியில் மிகச் சிறப்பாக நிறைவேறியது. தில்லையில் பேரம்பலத்தையும், உட் கோபுரத் தையும் திருச்சுற்று மாளிகையையும் அமைத்துத் தில்லைச் சிற்றம்பலத்தை மிகவும் விரிவுடையதாகச் செய்த இரண்டாங் குலோத்துங்க சோழன் உமாதேவியார் தாம் பிறந்த இமய வெற்பையும் மறக்கும்படி சிவகாமி யம்மை திருக்கோயிலை மிகப் பெரிய தாக அமைத்தான். திருவிழா நாட் களில் சிவகாமியம்மை உலாவருதற் குப் பொன்னாலும் மணியாலும் புனை யப்பெற்ற அழகிய தேரினைச் செய் தளித்தான். பொன்னாலாகிய கற்பக தருக்களை அமைத்தான். திருக் குளத்தைச் செம்மைப் படுத்தினான். கோயிலுக்குப் பசுநிரைகளும் களிற் றினங்களும் மிகுதியாக வழங்கினான் என்று அவனது அவைக்களப்புலவர் ஒட்டக்கூத்தர் தம் நூல்களிற் குறித் துள்ளார். இவன் செய்த தில்லைத் திருப்பணிகளுள் சிவகாமியம்மை திருக்கோயிற் பணி மிகவும் சிறப் புடையதாதலின் அது பற்றி இவ் விரண்டாங் குலோத்துங்கனை "ஸ்ரீபீடங்கண்ட பெரிய பெருமாள்" என மக்கள் பாராட்டிப் போற்றுவா ராயினர். இச்செய்தி

'நீடிய வெண்டிசை நீடில் வாய்ப்ப
நீடிய தெக்கிணை மேருவென்னப்
பீடிகை தில்லை வனத்தமைத்த
பெரிய பெருமானை வாழ்த்தினவே'

என வரும் தக்கயாகப் பரணியாலும் அதன் பழைய உரையாலும் இனிது விளங்கும்.

"ஆர்த்த பிறவித் துயர்கெட நாம் ஆர்த்தாடும் தீர்த்தன்" என மணி வாசகப் பெருமான் அருளியவாறு கூத்தப்பெருமானது அருளினீர்மைய தாய்த் திகழும் சிவகங்கைத் தீர்த்தத் தின் மேல்கரையில் அருள்வடிவாகிய சிவகாமியம்மையின் திருக்கோயில், நம் முன்னோர்களது சிவபத்திக்கும் சோழமன்னர்கள் காலத்துக் கட்டடக் கலைக்கும் சிற்பக் கலைக்கும் ஓவியக் கலைக்கும் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. இக்கோயிலின் திருச் சுற்றிலே இரண்டடுக்கு அறைகளை யுடையதாயமைந்த திருமாளிகைப்

பத்தியும் அதன் கீழ்க் குறட்டிற் பரத நாட்டிய நுட்பங்களையும் அக்கால இசைக் கருவிகளையும் தெளிவாகப் புலப்படுத்தும் நிலையில் அமைக்கப் பெற்றுள்ள கருங்கற் சிற்பங்களும் பிற நாட்டு நுண்கலைஞர்களால் வியந்து பாராட்டும் முறையில் விளங்குகின்றன. சிவகாமியம்மை கோயிலின் உள்ளே முன்னர் அமைந்துள்ள முன் மண்டபமும் அதன் தென்பகுதியிலும் வடபகுதியிலுமாக மேலே எழுதப் பெற்றுள்ள பழங்கால ஓவியங்களும் ஓவியக்கலை வல்லுநர்களால் வியந்து போற்றத்தகுவனவாகும்.

சிதம்பரத் திருக்கோயிலிற் பொறிக்கப்பெற்றுள்ள கல்வெட்டுக்களில் இக் கோயிலுக்கு முன்னோர் செய்துள்ள அறக்கட்டளைகள் பல குறிக்கப்பெற்றுள்ளன. அவற்றுள் திருநந்தவனம் அமைத்தற்கும் அந்நந்தவனங்களிற் பணிபுரிவோர்க்கு நிலம் கொடுத்தற்கும் என அளிக்கப்பெற்ற நிபந்தங்கள் விரிவாக இடம்பெற்றுள்ளன. கோப்பெருஞ் சிங்கனது ஆட்சியின் ஆறுவது ஆண்டில் திருக்காமக் கோட்டமுடைய பெரிய நாச்சியார்க்குச் சிறப்பாகச் சாத்தியருளத் திருப்பூ மண்டபத்துக்கு முதலாகத் திருநிலை அழகியாள் திருநந்தவனமும் நந்தவனப் பணி செய்வார்க்கு உணவளிக்கத் திருப்பாவாடைப் புறமும் ஆக நிலமளித்த செய்தி குறிக்கப்பட்டுளது. இவனது ஆட்சியின் ஏழாம் ஆண்டுக்கல்வெட்டில் சிதம்பரத்தின் எல்லையிலுள்ள கடவாச்சேரியிலும் சண்டேசுவரநல்லூரிலும் இளநாங்கூரிலும் சிவகாமசுந்தரி யம்மைக்குத் திருநந்தவனங்கள் அமைக்க நிலமளித்த செய்தி குறிக்கப்பெற்றுளது. எட்டாமாண்டுக் கல்வெட்டில் திருக்காமக்கோட்டமுடைய பெரிய நாச்சியார்க்குச்சாத்தும்பரிசட்டம்(புடவை) நெய்துகொடுக்கும் சாலிகர் குடியிருக்கத் திருவம்பலப்பெருமாள்புரம் என்னும்பெயரால் கடவாச்சேரியான தில்லைநாயகநல்லூரில் நாலுவேலியும் ஆறு மாவும் நிலமளித்த செய்தி குறிக்கப்பெற்றுளது. ஒன்பதாம் ஆண்டுக் கல்வெட்டில் கொற்றங்குடியான பவித்திரமாணிக்க நல்லூரிலும் மடந்தையர் மாணிக்க நல்லூர் முதலிய ஊர்களிலும் சிவகாமியம்மை திருநந்தவனத்திற்கும் நந்தவனக் குடிகட்கும் நிலமளித்தமை கூறப்பெற்றுளது. இவ்வாறே இவ்வேந்தனது ஆட்சியின் 10-ஆம் ஆண்டிலும் 11-ஆம் ஆண்டிலும் வரையப்பெற்ற கல்வெட்டுக்களில் இக்கோயில் திருநந்தவனத்திற்கும் திருப்பள்ளித் தாமம் பறித்து மாலை தொடுப்பார்க்கும் என சிதம்பரத்தை யடுத்த விக்கிரமசோழநல்லூரிலும் அளக்குடியிலும் எருக்காட்டஞ்சேரியான ஐயங்கொண்டசோழநல்லூரிலும் திருநந்தவனப் புறமாகவும் திருப்பாவாடைப் புறமாகவும் நிலமளித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன.

இதுகாறும் எடுத்துக்காட்டிய வரலாற்றுக் குறிப்புக்களால் தில்லையில் திருக்காமக் கோட்டமுடைய பெரிய நாச்சியாரான சிவகாமியம்மையார்க்குச் சிறந்தமுறையில் திருப்பணிகளும் பூசனைகளும் திருவிழாக்களும் வேந்தர்களாலும் நாட்டுமக்களாலும் நிகழ்த்தப்பெற்று வந்தமையும் அம்மை திருக்கோயிலின் கலை நலமும் இனிது புலனாதல் காணலாம்.

---

# நாதனுர் ஆடும் நடம்

திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,

முன்னுரை :

எல்லாம் வல்ல இறைவன், தனக்கென ஓர் உருவும், ஒரு பெயரும் உடையவன் அல்லன், ஆயினும் நம் பொருட்டு, எம்பெருமான் பல உருவமும், பல பெயரும் கொண்டு விளங்கி அருள்கின்ருன். அங்ஙனம் சிவபெருமான் உயிர்களின் பொருட்டுக் கொண்டருளிய திருவுருவங்கள் பலவற்றுள், நடராச வடிவம் மிகவும் சிறந்து திகழ்வதொன்று,

நடராச வடிவம் நலங்கள் பலவும் நிறைந்தது; பழமையும் பெருமையும் வாய்ந்தது; தமிழ் நாட்டின் தனிப்பெரும் கலையியற் செல்வமாகக் கவினுற்றுப் புகழோங்கிப் பொலிவது; நடராசத் திருவுருவம் இடம்பெருத கோயில் எதுவும் இல்லை. எல்லாச் சைவக் கோயில்களிலும் நடராசத் திருவுருவம், சிறப்புற வைத்துப் போற்றி வழிபடப்பெற்று வருகின்றது.

நடராசப் பெருமானிடத்தும், அப்பெருமானின் திருவுருவச் சிறப்பிலும். சைவத் தமிழ்ச் சான்ருேர்கள் எல்லோருமே, மிகவும் ஈடுபட்டுத் திளைத்து இன்புறுகின்றனர். அப்பர் சம்பந்தர் சுந்தரர் மாணிக்கவாசகர் இராமலிங்க அடிகள் போன்ற சான்ருேர்கள் அனைவரும், நடராசப் பெருமானிடத்தில் பெரிதும் ஈடுபட்டுப் பரவித் திளைத்து மகிழ்ந்துள்ளனர். சிலப்பதிகாரம், கலித்தொகை போன்ற பழம்பெரும் சங்க காலப் பனுவல்களிலும், நடராசப் பெருமானைப் பற்றிய புகழுரைகள் காணப் பெறுகின்றன.

தத்துவ நுட்பங்கள் :

நடராச வடிவம் கலைநலம் சிறந்தது; கவர்ச்சி மிக்குத் திகழ்வது; அதன் ஒவ்வொரு பகுதியும் கவின் மிக்குப் பல தத்துவ நுட்பங்களை உள்ளடக்கிக் கொண்டு விளங்குகின்றது.

அத்திருவுருவம் பரந்த திருமுக மண்டலம், பனித்த சடை, தரித்த கங்கை, இளம்பிறை, குனித்த புருவம், நெற்றிக் கண், கொவ்வைச் செவ்வாய், குமிண் சிரிப்பு, நீலகண்டம், பால் வெண்ணீறு, ஒருகையில் உடுக்கை, ஒரு கையில் நெருப்பு, ஒன்று அமைத்த கரம், மற்ருென்று வீசிய கரம், புலித்தோல் ஆடை, பாம்பு அணிகள், எடுத்த திருவடி, ஊன்றிய திருவடி ஆகிய பலவற்றைக் கொண்டு, அழகுற மிளிர்கின்றது.

1. திருமுகமண்டலம்: இறைவனின் தலைமை நிலையுர், எல்லையில்லா

அழகும், இனிய தண்ணளித் திறனும் உணர்த்துகின்றது.

2. 'பனித்த சடை: நுண்சிகை ஞானமாம்' எனத் திருமூலர், திருமந்திரம் கூறுமாறு ஞானச் சிறப்பையும், சைவம் விட்டிட்ட சடைகளும், எனத் திருவிசைப் பாடல் கூறுதற்கேற்பச் சிவநெறிக்குரிய தவ வொழுக்கச் சிறப்பையும் குறிக்கின்றது.

3. கங்கையைத் தரித்தல்: 'நில்லாத நீர் சடைமேல் நிற்பித்தான்' என அப்பர் பாடுதல் போல, இறைவனது பேராற்றலையும், வேகங் கெடுத்தாளும் வித்தகத்தையும் விளக்குகின்றது,

4. பிறையணிதல்: தன்னைச் சரண் அடைந்தவர்களைத் தாங்கித் தாழ்வு நீக்கிப் பாதுகாக்கும் வள்ளல் என்று அறிவிக்கின்றது.

5. குனித்தபுருவம்: புருவத்தை வளைத்தல் நெறித்தல் முதலியன, பரதக் கலையில் வல்லவர்கள் தம் குறிப்புக்களை உணர்த்தும் மெய்ப்பாட்டு வகைகள் ஆகும். தன்பாற் போந்து குறையிரந்து முறையிடும் அடியார்களின் விண்ணப்பங்களைக் கூர்ந்து நோக்கி ஊன்றிக் கேட்டருளும் கருணைத்திறம் காட்டும்.

6. குமிண் சிரிப்பு: தன் பக்கல் போந்து, அடைக்கலம் புகுபவர்களை அருளுடன் வரவேற்று, அவர்கள் செய்த பிழைகளை மன்னித்து, அவர்களுக்கு வாழ்வளித்து மகிழ்ச்சி விளைவிக்கும் மாட்சியை யுணர்த்தும்.

சென்று தொழுமின்கள் தில்லையுள்
சிற்றம்பலத்து நட்டம்
என்று வந்தாய்? என்னும்
எம்பெருமான்றன் திருக்குறிப்பே,

(7) பவளமேனி: பவளம்போற் சிவந்தமேனி, தீவண்ணன் ஆகிய இறைவன் நெருப்புப் போல்பவன் என்று நினைப்பிக்கும் நெருப்பானது தன்பால் எய்தும் பொருள்களை எல்லாம் தூய்மைப்படுத்திப் புனிதம் உறுவிக்கும். அதுபோல இறைவனும் தன்பால் அன்பு செய்வார் மாசுகளையெல்லாம் போக்கித் தூய்மையாக்கி அருள் புரிதலைப் புலப்படுத்தும்.

(8) பால்வெண் நீறு: எல்லாப் பொருள்களும் அழிந்து, இறுதியில் நீறு ஆகும். நீறு மற்றொன்றாக மாறி அழியாது. ஆகலின், திருநீறு அழிவிலாத தன்மையையும், தூய இயல்பினையும் காட்டும். இறைவன் "தொழுதெழுவார் வினை வளம் நீறெழ நீறு அணிகின்றான்". அவன் "செந்திற மேனியில் வெண்ணீறு" அணியும் கோலம், எவர் நெஞ்சையும் கவர்ந்து பிணிக்கவல்ல பெற்றிமையினைத் தெற்றெனத் தெருட்டும்.

(9) நெற்றிக் கண்: "நுதல்விழி நாட்டத்து இறையோன்" "நெற்றித் தனிக்கண் ஒருத்தன்" "மத்தகஞ் சேர்தனி நோக்கினன்" "கண்ணுதலான்" என்று சான்றோர்கள் போற்றும் நிலையிற் சிவபிரானுக்குரிய சிறப்பு அடையாளம்.

(10) நீலகண்டம்: விண்ணோர் அமுது உண்டும் சாவ, ஒருவரும் உண்ணாத நஞ்சு உண்டும், இருந்து அருள் செய்யும் பெருந்தகை ஆகிய இறைவனின் நயத்தக்க நனிநாகரிக நலனைப் புலப்படுத்தும்.

(11) உடுக்கை: 'எண்டோள் வீசி நின்றாடும் பிரான்' என்றவாறு நடராச வடிவத்திற்கு எட்டும், அதற்கும் மேற்பட்டும் கைகள் அமைக்கப்படுதல் உண்டு. எனினும், பொதுவாக நான்கு கைகள் எங்கும் காணப்படும். அவற்றில் வலக்கை ஒன்றில், உடுக்கை (தமருகம்) ஏந்தியிருப்பது, ஒலியை எழுப்பி அணுத்துகள்களைத் திரட்டி உலகப் பொருள்களைப் படைக்கும் நோக்குடன், இறைவன் பரநாதத்தைத் தோற்றுவிக்கும் பான்மையினைத் தெளிவிப்பது.

(12) நெருப்பு: உலகுயிர்களைப் படைத்த இறைவன், அவைகள் பிறந்தும் இறந்தும் துயருற்று வருந்தும் இளைப்பினை நீக்கும்பொருட்டுச் செய்யும் அழித்தற் றொழிலுக்கு அடையாளம். "அழிப்பு இளைப்பு ஆற்றல்" என்பது சித்தியார். இடக்கை ஒன்றில் நெருப்பு இருக்கும்.

(13) அமைத்த கை: இதனை 'அபய கரம்' எனவும் வழங்குவர். 'நீவிர் அஞ்சற்க யாம் நும்மைக் காக்கின்றோம்' எனத் தன் அடியவர்களுக்கு ஆறுதல் கூறித் தேற்றும் நிலை ஆதலின், இவ்வலக்கை காத்தற் றொழிலைக் காட்டும்.

(14) வீசிய கரம்: இவ் இடக்கை யானையின் துதிக்கையினைப் போன்று நீண்டு வளைந்து திகழ்தலின் 'கஜ ஹஸ்தம்' எனவும் வழங்கும். இக்கையின் விரல் தூக்கிய திருவடியைக் காட்டிக்கொண்டிருக்கும். 'இந்தத் திருவடியை நம்பித் தொழுக' இஃது உம்மை ஈடேற்றும்' என்பது கருத்து. இக்கருத்தினைக் குமரகுருபரர் பின்வரும் பாடலிற் குறிப்பிட்டிருத்தல் காணலாம்.

"கூடும் கதி ஒருகாற்
கும்பிட்டாற் போது'மென
நாடும் ஆபிநயத்தை
நண்ணிற்றால்:-ஓடியகட்
காதனர் காண ஒரு
கால்காட்டிக் கையமைத்து
நாதனர் ஆடும் நடம்"

(15) எடுத்த திருவடி: இஃது இறைவனின் இடது திருவடியாகும். எனவே அஃது அம்மையின் பகுதிக்கு உரியது. அம்மை அருளே உருவமாகத் திகழ்பவள். "அருளது சத்தியாகும் அரன் தனக்கு" என்பது சாத்திரம். "துன்பக் கடலிடைத் தோணித் தொழில் பூண்டு தொண்டர் தம்மை இன்பக்கரை முகந்து ஏற்றும் திறத்தன" என அப்பர் தேவாரம் அறிவிக்குமாறுபோல, பிறவிக் கடலில் விழுந்து தத்தளிக்கும் உயிர்களை அக்கடலினின்று எடுத்து மீட்டுக் காப்பாற்றும் அருளற் றொழிலுக்கு உரியது.

"தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம்
ஆட எடுத்திட்ட பாதம் அன்றோ,
நம்மை ஆட்கொண்டதே"

—திருநாவுக்கரசர்.

(16) ஊன்றிய திருவடி: இஃது இறைவனின் வலக்கால்; ஆண் பகுதிக்கு உரியது. இது முயலகன் என்பவனை மிதித்து அடக்கும் வகையில், அவன்மீது ஊன்றிய நிலையில் அமைந்திருக்கும். நன்கு மிதித்து நசுக்கி விடாமலும், மிதியாமலே விட்டு விடாமலும், மெல்லென இறைவன் முயலகன்மீது நிற்கின்றான். இந்நிலைமை மலத்தை முழுதாக அழித்து விடாமலும், மலத்தால் உயிர்கள் பெரிதும் வருந்தாம

லும், வினைப் பயன்களை உயிர்கள் நுகரச் செய்ய இறைவன் இயற்றும் மறைத்தற்றொழிலைக் குறிக்கும்.

"தோற்றம் துடியதனில்;
தோயும் திதி அமைப்பில்;
சாற்றியிடும் அங்கியிலே
சங்காரம்; — ஊற்றமாய்
ஊன்றும் மலர்ப்பதத்தில்
உற்றதிலோ தம்; முத்தி
நான்ற மலப்பதத்தே நாடு"

(17) முயலகன்: இவனைப் பூதம் குறள் அசுரன் அபஸ்மாரன் முதலிய பெயர்களால் நூல்கள் வழங்கும். முயலகன் ஆணவ மலத்திற்கு அறி குறி. ஆணவ மலம் என்றும் அழிவ தில்லை. அதுபோலவே முயலகனும் இறைவன் திருவடிக்கீழ் என்றும் விளங்குகின்றான். இறைவனுக்குப் படிநிலையாய் அமைந்து உதவுதல் போல, முயலகன் காணப்படுகின்றான் அதுபோல ஆணவ மலமும் உயிர் களின் இறையின்ப நுகர்ச்சிக்கு ஓராற்றால் காரணமாகின்றது. "இத்தை விளைவித்தல் மலம்" என்பது காண்க. "மாயாதே தன் சத்தி மாய்ந்து" முத்தி நிலையில் உயிர்களின்பால் ஆணவ மலம் அடங்கிக் கிடப்பதுபோல, முயலக னும் இறைவனின் திருவடிக்கீழ் "மாயாதே தன் சத்தி மாய்ந்து" கிடக்கின்றான் என்க.

(18) தெற்கு நோக்குதல்: எல் லாத் திருக்கோயில்களிலும் நடராசப் பெருமானின் திருவுருவம் தெற்கு நோக்கியே அமைக்கப்பட்டிருத்தல் காணலாம். 'நம்பினவர்க்கு நட ராசன் நம்பாதவர்க்கு எமராசன்' என வழங்கும் பழமொழிக்கு ஏற்ப, இறைவன் தன்னை வழிபடும் அடியவர் கட்குத் தெற்கே யிருந்துவரும் எம ராசனால் யாதொரு துன்பமும் நேரா மற் காத்தற் பொருட்டே, தெற்கு நோக்கி ஆடுகின்றான் என்பர் பெரி யோர். திருவிளையாடற் புராணம் இயற்றியருளிய பரஞ்சோதி முனிவர், தென்றற் காற்றின் மீதும் தென்ற மிழின் மீதும் உள்ள விருப்பம் காரண மாகத் தெற்கு நோக்கி இறைவன் நடனம் புரிகின்றான் என்று, குறிப் பிட்டுள்ளார்.

"கடுக் கவின்பெறு கண்டனும்
தென்றிசை நோக்கி
அடுக்க வந்து உவந்து ஆடுவான்
ஆடலின் இளைப்பு
விடுக்க, ஆரமென் கால்திரு
முகத்திடை வீசி
மடுக்க வும், தமிழ் திருச்செவி
மாந்தவும் அன்றோ?"

— பரஞ்சோதியார்.

"அடிப் பதுமத்து ஒன்று எடுத்துத்
தென்பால் முகமாக நின்று
நடிப்பதும் அத்தன்மையாம்
நமனார்இது நாடுமினே"

— குமரகுருபரர்.

(19) மாதொரு பாகம் நோக் குதல்: நடராச வடிவம் அமைக்கும் சிற்பக் கலைஞர்கள், அதன் முகமா னது சற்றுச் சாய்ந்து, நிற்கும் சிவகாமி அம்மையை நோக்கி ஆடுவது போலத் திருவுருவம் அமைப்பார்கள். இறைவன் அங்ஙனம் அம்பிகையை நோக்கி ஆடுதலைச் சேக்கிழார் சுவாமிகளும்,

"மாதொரு பாகம் நோக்கி
மன்றுசிற் றம்பலத்தே

ஆதியும் முடிவும் இல்லா
அற்புதத் தனிக்கூத் தாடும்
நாதனுர் கழல்கள் ............"

— பெரிய புராணம்.

என அருளிச் செய்திருக்கக் காண்கின்ருேம். இங்ஙனம் அம்பிகையை நோக்கியே இறைவன் திருநடம் புரியும் இயல்பு குறித்துக் குமரகுருபரர் அழகுற விளக்கி அருள்கின்ருர். குழந்தையின் குடர், மருந்தைச் செறிக்கும் ஆற்றல் உடையதன்று என உணர்ந்து, ஒரு தாயானவள் அம் மருந்தினைத் தான் உண்டு, அம் மருந்தின் பயனைத் தன் பாலின் வழியாக அக் குழந்தை பெறும்படிச் செய்து, அதன் நோய் நீங்குமாறு செய்வித்தல் போல, அம்பிகை நடராசப் பெருமானின் திருநடனத்தைத் தான் தரிசித்து, அதன் பயனை உயிர்கள் அடையும்படிச் செய்விக்கின்ருள்.

"பாலுண் குழவி பசுங்குடர் பொருதென
நோயுண் மருந்து தாய் உண் டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக்கு இன்னருள் கிடைப்ப
வையம் ஈன் றளித்த தெய்வக் கற்பின்
அருள்சூற் கொண்ட ஐயரித் தடங்கண்
திருமாண் சாயல் திருந்திழை காணச்
சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
அற்புதக் கூத்தன் ............"

— குமர குருபரர்.

திருநடனச் சிறப்பு :

இறைவன் கலைகளின் முதல்வன்; கலையுருவினன் கலைகள் அவனிடமிருந்தே தோன்றுகின்றன. இறைவன் ஒரு சிறந்த பெருங்கலைஞர் என்பதையே நடராசவடிவம் நலமுற உணர்த்துகின்றது "மனிதன் பேசத் தொடங்கும் முன்னரே பாடத் தலைப்பட்டான்; பாடுவதற்கும் முன்னரே ஆடக் கற்றுக் கொண்டுவிட்டான்" என ஆராய்ச்சியாளர்கள் கூறுவர். அம்முறையில் நோக்கினுல், எல்லா வகைக்கலைகளுக்கும் முற்பட்டுப் பழமையும் பெருமையும் முதன்மையும் மிக்கதாக விளங்கும் கலை, நடனக் கலையே என்பது தெளிவாம்.

இத்தகைய நடனக்கலையின் தெய்வமாக அமைந்து, அண்ட வெளியினையே நடனமேடையாகக் கொண்டு தானே காண்பவனும் நடிப்பவனுமாக நின்று, பலவேறு வகையான, நடனத் திறங்களை இறைவன் செய்தருளுகின்ருன். "ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே" என்றபடி, வானவெளியில் சுழலும் கோள்களும் (Planets) மீன்களும் (Stars) முதலிய அண்டகோடிகள்யாவும், அசைவுற்று இயங்கும்பொருட்டு, இறைவன் தான் அசைந்து யாவற்றையும் ஒருங்கே இயக்குவிக்கின்ருன்.

மேலும், தில்லைச் சிதம்பரத்தில் இறைவன் இத்திருநடனம் இயற்றுதற்குக் காரணம், அஃது இவ்வுலகின் நடுவிடமாக இருத்தலேயாம்.

விண்ணுக்கும் மேல், வியன்
பாதலக்கீழ், விரிநீர் உடுத்த
மண்ணுக்கு நாப்பண் நயந்து,
தென் தில்லை நின்ருேன்

— திருக்கோவையார்

என மணிவாசகர் கூறுகின்ருர். இவ்வாறே திருமந்திரம், கோயிற் புராணம், திருவாதவூரடிகள் புராணம் முதலியனவும் கூறுதல் காணலாம்.

சைவ சித்தாந்தம் :

நடராச வடிவம்பற்றிய பல தத்துவ நுட்பங்களைக் குறித்துச் சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினுன்கனுள் ஒன்றும், திருவதிகை மனவாசகங் கடந்தார்என்பவர் இயற்றியதுமாகிய "உண்மைவிளக்கம்"என்னும் உயரிய நூல்,பின்வருமாறு'அழகுற உணர்த்துகின்றது.

(1) இறைவனின் உடுக்கையால் ஆக்கல்; அமைத்தகையாற் காத்தல் ஏந்திய நெருப்பினுல் அழித்தல்; ஊன்றிய திருவடியால் மறைத்தல் (திரோபவம்); எடுத்த திருவடியால் அருளல் (முக்தி, அனுக்கிரகம்), ஆகிய ஐந்து தொழில்கள் நடைபெறுகின்றன.

(2) இறைவன் தனது துடியைக் கொட்டுவதால் ஆன்மாக்களின் மாயையினை உதறுகின்ருன்; ஏந்திய நெருப்பினுற் கன்மமலத்தினைச் சுடுகின்ருன்; ஊன்றிய திருவடியால் ஆணவ மலத்தினை அழுத்தித் தேய்விக்கின்ருன்; தூக்கியதிருவடியால் உயிர்களைப் பிறவிக் கடலினின்று எடுக்கின்ருன்; அபய கரத்தால் உயிர்களை இன்பக் கடலில் திளைக்கச் செய்கின்ருன்; இத்தகைய திருநடனத்தைக் கண்டு விரும்பித் தொழுபவர்களுக்குப் பிறவித்துயர் இல்லாமல் நீங்கும்.

"மாயை தனை உதறி
வல்வினையைச் சுட்டு, மலம்
சாய அமுக்கி, அருள்
தான் எடுத்து, –நேயத்தால்
ஆனந்த வாரிதியில்
ஆன்மாவைத் தான் அழுத்தல்
தான் எந்தையார் பரதம் தான

(3) இறைவன் ஐந்தொழில் திருக்கூத்து இயற்றுங்கால், அவனது திருமேனி ஐந்தெழுத்தினுலேயே அமைகின்றது. இறைவன் 'மந்திரசொரூபி' யாதலின், அவன்றன் திருவுருவம் திருவைந் தெழுத்து மந்திரத்தினுலேயே அமைவதாகின்றது. திருவடியில் ந; வயிற்றில் ம; தோளில் சி; முகத்தில் வ; திருமுடியில் ய. இவ்வமைப்பு 'தூலபஞ்சாக்கரம்' எனவும், 'இலயாங்கம்' எனவும் கூறப்படும்.

ஆடும் படிகேள்!நல் அம்பலத்தான்
ஐயனே!
நாடும் திருவடியி லேநகரம்; – கூடும்
மகரம் உதரம்; வளர்தோள் சிகரம்;
பகருமுகம் வா; முடியப் பார்.

(4) இனி 'சிவயநம' என்பது சூக்கும பஞ்சாக்கரம் என வழங்கும். அது நடராச வடிவத்தில் பின்வருமாறு அமைந்து விளங்குகின்றது. துடியில் சி; வீசும்கரத்தில் வ; அபயகரத்தில் ய; ஏந்துகின்ற நெருப்பில் ந; அடிக்கீழ் முயலகனில் ம. இவ்வமைப்பு 'போகாங்கம்' எனப்படும்.

சேர்க்கும் துடிசிகரம்; சிக்கனவா
வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம்
– பார்க்கில் இறைக்கு
அங்கி நகரம்; அடிக்கீழ் முயலகனுர்
தங்கும் மகரம் அது தான்.

(5) பிற திருவுருவங்களிற்போலத் தனியே பிரித்தெடுக்கக்கூடிய நிலையில் இல்லாமல், நடராச வடிவத்திற் பிரிவற இயைந்து கூடியேஇருக்கின்ற திருவாசியானது, பிரணவம் ஆகிய ஓங்காரத்தையும், இத்திருவாசியின் சுடர்கள் 51 எழுத்துக்களையும் சுட்டுகின்றன.

அண்டமும் பிண்டமும் :

இனி வேறுபலவும் ஈண்டு எண்ணி யுணர்வதற்கு உரியனவாக உள்ளன. உலகமாகிய அண்டம் (Macrocosm) அமைந்திருக்குமாறு போலவே, நம் உடம்பாகிய பிண்டமும் (Microcosm) அமைந்துள்ளது. இறைவன் அண்ட வெளியில் திருநடனம் புரிதல் போலவே, நம் உடம்பினுள்ளே பிண் டத்தின்கண்ணும் நடனம்புரிந்தருள் கின்ருன். அண்டவெளி நடனம் தில்லைச் சிதம்பரத்தில் நிகழ்கின்றது. பிண்டத்தினுள் உடம்பின் கண்ணே நிகழும்நடனம் நம்முடைய இருதயத் தில் நடைபெறுகின்றது, அண்டத் திற்குச் சிதம்பரம் போலப் பிண்டத் துற்கு இருதயம் ஆகிய நெஞ்சப்பை (Heart) இலங்குகின்றது. இருதயத் தின் அசைவும் இயக்கமும் நின்று விட்டால் உடல் செயலற்றுப் பிணம் ஆகும். அவ்வாறே தில்லைச்சிதம்பரத் தில் இறைவனின் திருநடனம் நிகழா தொழியின், அண்டங்கள் எல்லாம் அசைவற்று இயங்காமல்நின்று அழிந் தொழிந்து போகும். அணுக்களும் அண்டகோடிகளும் தத்தம் நிலையி லும் நெறியிலும் ஆடி அசைந்து முறையே இயங்கிக்கொண்டு இருப்ப தற்குரிய, மூலமுதற் காரணம் நட ராசப் பெருமானின் ஆடலும் அருள் இயக்கமுமேயாகும்.

முடிவுரை :

இங்ஙனமெல்லாம் 'சிந்திப்பரியன, சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப்பொழிவன' என்னும்நிலையில், பற்பல உயர்ந்த தத்துவ நுட்பங்களை யுணர்த்தி நிற்கும் நடராச வடிவத் தின் மாட்சிமையை அளவிட்டு உரைப்பதரிது.

''உலகமே உருவம் ஆக
யோனிகள் உறுப்ப தாக
இலகுபேர் இச்சா ஞானக்
கிரியையுட் கரணம் ஆக
அலகிலா உயிர்ப் புலன்கட்கு
அறிவினை ஆக்கி, ஐந்து
நலமிகு தொழில்க ளோடும்
நாடகம் நடிப்பன் நாதன்!''

— சிவஞான சித்தியார்

என அருள்நந்தி சிவாசாரியர் கூறு மாறுபோல, உலகமே உருவமாகவும், பலவகைப் பிறப்பு வகைகளே உறுப் பாகவும், இச்சை ஞானம் கிரியை என் பனவே உட்கருவிகள் ஆகவும் கொண்டு, ஆருயிர்களுக் கெல்லாம் அறிவினை நெறிமுறையே வளருமாறு செய்து, ஐந்தொழில்களை இயற்றி வரும் அருட்பெருந் தெய்வம் ஆகிய நடராசப் பெருமானின் திருவடிகளை, இடைவிடாது அன்புடன் வழிபட்டு நாம் அனைவரும் நலம்பலவும் பெற்று உய்வோமாக !



# சிவசக்தி வழிபாடும் திருவள்ளுவ நாயனரும்

ஸ்ரீமௌன தேசிகராதீனம்
**ஸ்ரீமத் மௌனசபாபதி சுவாமிகள்**

சிவத்தோடு பிரிப்பின்றி நெருப்பிற் சூடுபோல, வேறற விளங்கும் சத்தியே சிவசத்தியாம். திருவள்ளுவ நாயனர் என்னும் பெயருடையார் வேறு சிலரையும் குறிப்பிட்டு வழங்கப்படினும் ஈண்டு எடுத்துக் கூறுவது திருக்குறளாசிரியராகிய திருவள்ளுவ நாயனரையே யாம்.

ஆயின். திருவள்ளுவ நாயனரியற்றிய திருக்குறள் பொதுமறையென யெல்லாச் சமயத்தாரானும் போற்றிக் கைக்கொள்ளப் பெற்று வருவது கண்கூடாயினமையின் அதற்கு மாருக ஒரே சமயத்தவரால் போற்றப்பெற்று வரும் சிவசக்தி வழிபாட்டினைத் தன் நூலகத்துக் கூறியுள்ளா ரென்பதெங்ஙனம் பொருந்துமெனிற் கூறுதும்.

வாழைத்தோட்டம், கமுகந் தோட்டம் என்புழி ஆங்கு வாழையுங் கமுகுமே யன்றிப் பிற மரங்களும் விரவியிருத்தலுங் காணப்படுமாதலின், பொதுமறையெனப் பெரும்பான்மை பற்றி வழங்கப்பெறினும் திருக்குறளில் ஆங்காங்கு மற்றைக் கருத்துக்களும் விரவியிருத்தலாற் பிழைபாடின்றென்க. இவ்வாறே அந்நூற்கண் வேறுபல விடங்களிலும் பிற கருத்துக்கள் விரவிக் காணக்கிடத்தலுமறிக.

இனி திருக்குறளில் சிவசக்தி வழிபாடு யாண்டுக் கூறப்படுகின்றதெனின், கடவுள் வாழ்த்துக் கூறுமிடத்து அவ்வதிகாரத்தில் தாள் என்னும் பெயர் நான்கிடத்தும், அடியென்னும் பெயர் மூன்றிடத்தும் அமைத்துக் கூறியிருத்தலே சிவசத்தியை வழிபட்டதாமென்க. தாள் என்னுஞ் சொல்லும் அடியென்னுஞ் சொல்லும் சிவசக்தியைக் குறிக்குஞ் சொல் என்பது சைவசித்தாந்திகளனைவருக்கும் ஒப்பமுடிந்த கருத்தாம் என்பதும் கண்டுகொள்க.

இதனனே ஏரலெழுத்துப் போல மைந்த தாளென்னுஞ் சொல்லும் அடியென்னுஞ் சொல்லும் அமைந்துள்ள அமைதி மாத்திரத்தானே உலக மக்களனைவருக்கும் ஒப்புக்கோடற்கியலாத தொன்றனைச் சாதிக்கப் புகுதலின் இஃதுஏற்றுக் கோடற்கில்லை, நும் கொள்கையை யேற்றுக் கோடற்காமாயின் திருவள்ளுவ நாயனருக்கும் சிவசக்தி வழிபாட்டிற்கும் தொடர்பு யாதாமென்பதனை விளக்கிக் கூறுகவெனிற் கூறுதும்.

திருவள்ளுவ நாயனர் வீரசைவ மரபினராதலானும் வீர சைவர்கட்குச் சத்தி - விசிட்டாத்வைதமே

உடன்பாடா மாதலானும் அவர் மர பிற்கேற்பச் சத்தியோடு கூடிய சிவத்தையே திருக்குறளினும் வழிபாடு செய்துள்ளார் எனக் கொண்டு திருவள்ளுவ நாயனருக்கும் சிவசத்தி வழிபாட்டிற்கும் தொடர்புண்மையைக் கண்டு கொள்க.

கட்குடித்தான் ஒருவனைக் கண்டு, நீ செய்த இச்செயல் அடாததாம் எனக் கடிந்துரைத்த விடத்து, அன்னுன் கட்குடித்தோன் இறைச்சி தின்னுதிருத்தல் எங்ஙன் இயலும், ஆதலின் அதுவும் உண்டேன் எனக் கூறி மேலுங் குற்றஞ் சுமத்திக்கொண்டாற்போலத் திருவள்ளுவ நாயனர் சிவசத்தி வழிபாடியற்றினரென்பதே பொருத்தமற்ற கூற்றுமென்புழி, அவர் வீரசைவ சமயத்தினர் என்றுரைத்துப் பின்னும் வழுப்படுதல் சாலுமோ எனிற் கூறுதும்.

நந்தமிழகத்துத் திருமயிலாப்பூரின் கண் அமைந்துள்ள, திருவள்ளுவநாயனர் ஆலயத்தே இருக்கும் திருவள்ளுவ நாயனர் திருஉருவின்கண் வீர சைவர் கொண்டொழுகும் முறைபோலச் சிவலிங்கத் திரு உருவம் அமைக்கப்பெற்று விளங்கக் காண்கின்றேம் ஆகலானும், அத் திருஉருவிற்கு வழிபாடியற்றிவரும் உரிமையாளர் வீரசைவரேயா மாகலானும், திருவள்ளுவ நாயனரை வீரசைவர் என்றல் ஏற்புடையதேயாமென்க.

இன்னும், திருவள்ளுவர் காலம் இற்றைக்கு ஈராயிரமாண்டுகட்கு முற்பட்டதென்ப, ஆகலான் மிக நெடிதாங்காலத்துக் கிடையே காலவேற்றுமையான் எவ்வளவோ மாறுபாடுகளும் அமைப்புக்களும் ஏற்பட்டிருத்தலுங் கூடும். எனவே இவ்வமைதி கொண்டே முடிவுசெய்தல் மாறுபாட்டினை விளைத்திடவுங் கூடும். ஆதலின் முன்னை ஆசிரியர் எவரேனும் எடுத்துக்கூறிக்கையாண்டுஇருந்தாலன்றித் திருவள்ளுவரைச் சைவரென்பதோ? அன்றி வீர சைவரென்பதோ? ஏன்று கோடற்கின்றெனின் கூறுதும்.

"... எண்குணத்தான், தாளை வணங்காத்தலை" என்னும் ஒன்பதாவது திருக்குறளுக்கு உரைகண்ட ஆசிரியர் பரிமேலழகர், எட்டுக்குணங்களாகத் தன் வயத்தனதல், தூயவுடம்பினனுதல் முதலாகவுள்ள எட்டினையுங் கூறி இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது என விரிவுரையின் கண் வகுத்திருத்தலின், சிவாகமங்களுக்கியையச் சைவவழிபாடே திருவள்ளுவ நாயனர் கூறியிருப்பது அவரைச் சைவரென முடிவு செய்வதற்குத் துணைபுரிவதாகும்.

சிவசத்தி என்பதற்குச் சிவத்தோடு பிரிப்பின்றி நெருப்பிற் சூடுபோல வேறற நிற்குஞ் சத்தியெனப் பொருள் கொண்டார். இஃது அருவநிலையிற் பொருந்தும். உருவநிலையில் வைத்து நோக்கினும் உமையொரு பாகனகி ஒளிருந்திருவடிவே பொருந்துவதாம். இதனையே குமரகுருபர சுவாமிகளும் "...தீராத வினைதீர்த்த தம்பிரான் திருமேனியில், செம்பாதியுங்கொண்டதையனுயகி குமர செங்கீரை யாடியருளே" எனக் கூறுகின்ருர். இதனுனே சிவத்தொடு கூடிய சத்திக்கு உருவநிலையில் வைத்து நோக்கப் பெண்பாதியனும் வடிவம் பெரிதும் ஏற்புடையதாகும்.

துறைமங்கலம் என்னும் ஊரில் வாழ்ந்து. நல்லாற்றூர் என்னும் பதியின் கண் சமாதி கொண்டிலங்கும் சிவப்பிரகாச சுவாமிகள் இற்றைக்கு ஏறக்குறைய நானூறியாண்டுகட்கு முற்பட்டவரென்பதும், வீர சைவ மரபில் வந்தவரென்பதும், திருக்குறளாசிரியர் திருவள்ளுவனூர்பால் பெரிதும் ஈடுபாடுடையவரென்பதும், அவ்வீடுபாட்டானே திருவள்ளுவ நாயனுரையும், அவரியற்றிய திருக்குறளை யுந்தம் நூலகத்துப் பலவிடங்களிலும் பல படியாகப் புகழ்ந்து பாராட்டியுள்ளாரென்பதும் யாவரும் அறிந்த தொன்ரும்.

இப் பெருமானுர்க்குத் திருவள்ளுவ நாயனுர் பால் ஏற்பட்டுள்ள ஈடுபாடு காரணமாகத் தமக்கும் ஆசிரியர் திருவள்ளுவ நாயனுருக்கும் வழிபடு தெய்வம் சத்தியொடு பிரிவில்லாத சிவமேயாதலின் அச்சிவமாகவே அவரியற்றிய திருக்குறளின்கணுள்ள ஒவ்வொரு திருக்குறளையும் நோக்கிப் பாராட்டுகின்ருர். திருக்குறளிலுள்ள இரண்டடிகளையும் சத்தியொடுகூடிய சிவத்தின் இரண்டடிகளாகவே நோக்குகின்ருர். அவர் தாமியற்றிய திருவெங்கைக் கலம்பக மென்னும் நூலின்கண் ''என்னடிகள் வெண்குறள் நேர் அடியிரண்டும் என் தலையில் இருத்தும் இறை...'' எனத் திருவெங்கை வாணரைப் போற்றுகின்ருர். உமையொரு பாகனுகிய பெருமான் ஒரே உருவினனுயினும் ஒரு பால் அம்மையைத் தன்பால் கொண்டு விளங்குகின்ருராதலின் பெண்ணுருவாகிய அம்மையின் பாகத்து வடிவமைப்பு சற்றே சிறுத்தும் ஆண் உருவாகிய இறைவன் பாகத்து வடிவமைப்பு சற்றே பருத்து மிருக்கு மென்பதனை உள்ளத்திற் கொண்டு, அவ்வாறே திருக்குறளிலும் நான்குசீர் கொண்ட முதலடியை இறைவன் பாகமாகவும் மூன்று சீர் கொண்ட இரண்டாம் அடியை இறைவி பாகமாகவுங் கொண்டு திருக்குறள் நூல் முழுவதிலும் உள்ள ஒவ்வொரு திருக்குறளையும் அம்மையப்பர் தோற்றமாகவே கண்டு உளங்கனிந்து ''என்னடிகள் வெண்குறள் நேர் அடி...'' என்று போற்றுதலைக் காண்க.

இப்பாடற்கு இவ்வாருய கருத்துக்களமைத்துப் பொருள்கோடல் இயையுமாயினும், நம்மனோர்க்கு எளிய பொருள் கோடலே அமையும். இக் கருத்துக்களனைத்தும் வலிந்து பொருள் கொள்ள வேண்டுதலின் அவை வேண்டா எனின், அப்பாடற் பகுதிக்கு அதுவே பொருள் என்பதனை வலியுறுத்து முகத்தான் அப்பாடற்கண் மீண்டும் இக்கருத்தை அமைத்து.

''.. முன்னடிகள் இரண்டும்
நெடிலடிகள் பின்னர்
முயங்கடிகள் இரண்டும்
நேரடிகளாகப்
பன்னடிகள் ஒரு நான்கு
கொடுநடக்கும்
பழுதகல்வெண் டுறைபோலப்
படர்த லாலே
பின்னடிக ளெங்கடிரு
வடிகண் முன்னர்ப்
பெயர்ந்தவடி யெழிலிளஞ்சே
யடிகளாமே.''

எனவுங் கூறி உடன்போக்கிற்சென்ற தலைவனடி பெரியதும், தலைவியடி சிறியதுமாக அமைந்து காணப்படுதற்கு

வெண்டுறைப்பாடலே உவமித்துக் கூறி விளக்குதலான் அறிக. இதனுனே சிவப்பிரகாச சுவாமிகள் திருவள்ளுவ நாயனுர்க்கு வழிபடு தெய்வம் தையலொரு பாலுடைய தெய்வமே என விளக்கிக் கூருவிடினும் திருக்குறள் ஒவ்வொன்றுமே மாதொரு பாகர் வடிவம் ,,என்று கூறுதலான் அவர்க்கு அ·்து உடன் பாடாதல் சொல்லாமலே அமையும் என்க.

இதனுனே திருக்குறளாசிரியராகிய திருவள்ளுவ நாயனுர் கூறிய கடவுள் வாழ்த்து சிவசத்தி வழிபாடேயாமென்பதும், அவரை வீரசைவமரபினர் எனக் கூறுதல் ஏற்புடையதே யென்பதும் கண்டுகொள்க.

# கங்கைகொண்ட சோழேச்சரம்

பேராசிரியர், லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்

கங்கைகொண்ட சோழனுன இராசேந்திரன் உண்டாக்கிய புதிய நகரம், கங்கைகொண்ட சோழபுரம் என்று பெயர் பெற்றுற்போல, அவன் கட்டி முடித்த புதிய கோயில், கங்கைகொண்ட சோழேச்சரம் எனப் பட்டது. இராசராசன் கட்டிய பெரிய கோயிலைவிட இக்கோயில் சிறியதே யாயினும், சிற்ப-ஓவிய வேலைப்பாடு களில் அதைவிடச் சிறந்துவிளங்கு கின்றது. இன்று இக்கோயிலில், ஒரு திருச்சுற்றே உள்ளது. கோயிலின் உள்ளறையும், அதைச் சுற்றியுள்ள மதிலுமே இன்று ஓரளவு காணத்தக்க நிலையில் உள்ளன சுற்று மதிலின் மேற்பகுதி, கொள்ளிடத்தில் அணை கட்டுவதற்காக இடித்துக்கொண்டு போகப்பட்டது. மதில்மீது கண் ணறைகள் கட்டப்பெற்றிருந்தன. கோயில் மதிற்சுவர், கோட்டை மதில் போன்ற அமைப்பிற் கட்டப்பெற்றது. கோட்டைக்கு வெளியே உள்ள பகை வரைக் குறிபார்த்து அம்புகள் எய்யத் தக்க முறையில்—அதே சமயம் வெளி யில் இருப்போன், அம்பு எய்வோ ரைத் தாக்காது இருக்கும் வகையில் அமைக்கப்பட்டிருப்பவைதாம் கண் ணறைகள் என்பவை. இக்கண்ண றைகளின் சிதைவுகளைக் கோயிற் சுவரில் இன்றும் காணலாம்.

விமானமும் லிங்கமும் !

கங்கைகொண்டசோழேச்சரத்தின் விமானம், தஞ்சைப் பெரிய கோயில் விமானத்தைப்போன்றது. இதன் உயரம் 52 மீட்டர். இது, 30.5 மீ. அடிச் சதுரமாக அமைந்துள்ளது. இவ் விமானம், ஒன்பது அடுக்குகளைக் கொண்டுள்ளது முதல் இரண்டு அடுக்குக்கள், ஒன்றன்மேல் ஒன்ருக வும், எஞ்சியவை, மேலே செல்லச் செல்லச் சிறுத்துச் சரிவாகவும் அமைந்துள்ளன. விமானம் முழுவதி லும் எழிலும் கவர்ச்சியும் மிக்க பதுமைகள் காணப்படுகின்றன; ஒரே கல்லாலான சிகரம் ஒன்றும் உள்ளது. அதன் கலசம் இப்பொழுது இல்லை. இக்கோயிலில் உள்ள லிங்கமும் தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள லிங்கத்தைப்போலப் பெரியது. இச் சிவலிங்கப் பெருமான்மீது, கருவூர்த் தேவர் என்பார், பதினெரு பாக்கள் பாடியுள்ளார் ; அவை, ஒன்பதாம் திருமுறையில் இடம் பெற்றுள்ளன. அவற்றுள், ஒரு பாடலைக் கீழே காண்க :

“சுருதிவா னவனும் திருநெடு
மாலாம்
சுந்தர விசும்பின்இந் திரனும்
பருதிவா னவனும் படர்சடை
முக்கட்

பகவனும் அகவுயிர்க் கமுதாம்
எருதுவா கனனும் எயில்கள்மூன் றெரித்த
ஏறுசே வகனுமாம் பின்னும்
கருதுவார் கருதும் உருவமாம் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே”

**இன்றுள்ள நிலை !**

கங்கைகொண்டசோழேச்சரத்தின் இன்றுள்ள நிலையைக் காண்போம் 183 மீட்டர் நீளமும், 137 5 மீட்டர் அகலமும், 1·2 மீட்டர் கனமும் கொண்ட மதில் முழுவதும் கற்களால் அமைக்கப்பட்டிருந்தது. அம் மதிலை அடுத்து இரண்டு அடுக்குத் திருச் சுற்று மாளிகை இருந்தது. ஆனல், அதன் ஒரு பகுதியை மட்டுமே இன்று நாம் காணமுடிகிறது.

**சிங்கமுகக் கிணறு !**

உட்கோயிலுக்கு எதிரே பெரிய நந்தி ஒன்று படுத்துள்ளது. அதன் தலைவரை உயரம் 6·1 மீட்டர். முதுகு வரை உயரம் 3.6 மீட்டர். இந் நந்திக்கு வலப்புறம் நேர் எதிரே சிங்கமுகக் கிணறு அமைந்துள்ளது; படிக்கட்டு வரிசைக்குமேல், செங்கற்களால் ஆன சிங்கம் காட்சி யளிக்கிறது. அதன் வயிற்றில் உள்ள வாயில் வழியே படிக்கட்டுக் கள் செல்கின்றன. அவற்றின் வழியே இறங்கிச் சென்ருல் தான் நீரைக் காணலாம். முழுவதும் கருங்கற்க ளால் ஆன இருபது படிகளைக் கடந் தால்தான் கிணற்றுநீரைக் காண முடியும். இதனை நேரில் காண்பவரே இதன் வேலைப்பாட்டை உளமாரப் பாராட்டுதல் கூடும்.

**உட்கோயில் :**

உட்கோயிலின் நீளம் 104 மீட்டர்; அகலம் 30.5 மீட்டர்; இதனுள் மகா மண்டபம், 53 4 மீட்டர் நீளமும், 29 மீட்டர் அகலமும் கொண்டது. இறை அறைக்கும் இம் மண்டபத்திற் கும் இடையே உள்ள மண்டபம்தான் அர்த்த மண்டபம் என்பது. மகாமண் டபத்தில், எட்டுப் பகுதிகளாக 140 கல் தூண்மள் வரிசையாக நிறுத்தப் பட்டுள்ளன.

**கண் கவரும் சிற்பங்கள் :**

நடு மண்டபத்தில், பெரிய சதுரக் கல் தூண்கள், இரண்டு வரிசை களாக நிற்கின்றன, அவற்றில், பல வகை நடனச் சிலைகள் செதுக்கப்பட் டுள்ளன. அங்கு செதுக்கப்பட்டுள் ளனவற்றுள், சண்டேசர் வரலாற்றைக் குறிக்கத்தக்க சிற்பங்களும், தடா தகைப் பிராட்டியாரின் திருமணத் தைக் குறிக்கத்தக்க சிற்பங்களும், பார்த்தனும் பரமனும் போரிட்டமை மையை விளக்க வல்ல சிற்பங்களும், மார்க்கண்டன் வரலாற்றைஉணர்த்த வல்ல சிற்பங்களும் குறிப்பிடத் தக் கன. இவை யாவும் கண் கவரும் சிற்பங்களாகக் காட்சியளிக்கின்றன.

**மகா மண்டபம் :**

பிற்கால ஆயிரக்கால் மண்டபங் களுக்கு உரிய அடிப்படையாக அமைந்தது, மகாமண்டபம் என்பது. இங்கே, சம்பந்தர் கற்சிலை மிகுந்த எழிலோடு செதுக்கப்பட்டுள்ளது. இங்குள்ள துர்க்கை அம்மன் சிலை, வியத்தகு வேலைப்பாட்டுடன் உள் ளது. இங்கு ஏறத்தாழ 3.7 மீட்டர்

உயரம் கொண்ட கம்பீரமான சிலைகள் உள்ளன. அவை, வாயிற் காவலருடையன.

சிற்பச் சிறப்பு :

விமானத்திலும், கோயிலின் தூண்களிலும் வியத்தகு முறையில் அமைந்த சிற்பங்கள் பல உள்ளன. "தென் இந்தியாவில் உள்ள சிற்பங்களிலும், சாவகத்தில் உள்ள சிற்பங்களினும் இச் சிற்பங்கள் சிறந்துள்ளன-எழில் மிக்குள்ளன" என்று அறிஞர்கள் கருதுகின்றனர். திருச்சுற்றிலிருந்து நடுமண்டபத்திற்குச் செல்லும் படிக்கட்டுகளை அடுத்து இலக்குமி, நாமகள் சிற்பங்களும், சண்டீசர் சண்டீசப் பதம்பெற்ற வரலாறு உணர்த்தும் சிற்பமும் கண்ணையும் கருத்தையும் ஈர்ப்பனவாகும். இவை, இன்றுதான் செய்தவை என்று சொல்லும்படி, பேரழகுடனும், சிறந்த சிற்ப வேலைப் பாட்டுடனும் விளங்குகின்றன.

சண்டீசப் பதம் :

சோழ நாட்டில், சேய்ஞலூர் என்பது, ஒரு சிற்றூர். அதில், மறையவர்கள் வாழ்ந்து வந்தனர். அவருள் எச்சதத்தன் என்பவர் ஒருவர். விசாரசருமர் என்னும் மகனார் இருந்தார். அவர், சிறுவயது முதலே சிவபெருமானை உள்ளன்போடு வழிபட்டு வந்தவர். அவர், இடையனது கொடுமையிலிருந்து பசுக்களைக் காக்க விரும்பி அவற்றைத்தாமே மேய்த்து வரலானார். பசுக்கள் மேய்ந்து கொண்டிருக்கும்போது, அவர், மணலைச் சிவலிங்கமாக அமைப்பார்; அப் பசுக்கள் அன்பினால் பொழியும் பாலினைக் குடங்களில் நிரப்பி வந்து சிவலிங்கத்தின் மீது சொரிந்து மெய்ம்மறந்து வழிபாடு செய்வார். அப் பசுக்கள், வீடுகளிலும் குறைவின்றிப் பால் கொடுத்து வந்தன. அவரது உண்மையான வழிபாட்டின் திறத்தினை அறியாத அயலான் ஒருவன் அவர், பசுக்களின் பாலைக் கறந்து மணலில் ஊற்றுகிறார் என்று கூறியதைக் கேட்ட மறையவர்கள், விசாரசருமரின் தந்தையாரிடம் குறை கூறினர்.

தந்தையார், ஒரு நாள் தம்மைத் தாருக்குத் தெரியாமல் மறைந்து நின்று, அவர் செயலைக் கவனித்தார். மகனார், வழக்கம் போல் தாம் அமைத்த சிவலிங்கத்தின் மீது பாலைச் சொரிந்து திருமஞ்சனம் ஆட்டிச் சிவபூசையில் ஆழ்ந்து விட்டார். இதனைக் கண்ட தந்தையார், கண் சிவந்து கடிது சென்று, மகனார் முதுகில் கோல் கொண்டு புடைத்தார். கடுஞ்சொற்களை மொழிந்தார். இவற்றைச் சிறிதும் உணராமல் மகனார், மீண்டும் பாற்குடத்தை எடுத்துச் சிவலிங்கத்திற்குத் திருமஞ்சனம் ஆட்டினர். அதுகண்டு பெருங் கோபம் கொண்ட தந்தையார், மகனார் வைத்திருந்த திருமஞ்சனக் குடத்தைக் காலால் உதைத்துத் தள்ளினார்.

அப்பொழுதுதான் கண் திறந்த மகனார், தந்தையாரது அறிவற்ற செயலைக்கண்டு வெகுண்டார்; அருகில் கிடந்த ஒரு சிறு கோலை எடுத்துத் தந்தையாரின் கால்மீது எறிந்தார் அக் கோல், மழுவாக மாறித் தந்தையாரின் கால்களை வெட்டியது. மகனார், மீண்டும் சிவபூஜையில் ஆழ்ந்தார்.

அவரது அழுத்தமான பக்தியில் பெரிதும் ஈடுபட்ட சிவபெருமான், உமாதேவியாரோடு காட்சி அளித்தார். விசாரசருமர், இறைவன் அடியில் வீழ்ந்து பணிந்தார். சிவபெருமான், அவரை அன்போடு நோக்கி, "நம் பொருட்டால் ஈன்றதாதையின் காலை வெட்டினுய்; இனி நாமே உனக்குத் தாதையாவோம்." என்று கூறி அணைத்துக் கருணையால் உச்சி மோந்தார்.

சிவபெருமானுல் தீண்டப் பெற்ற சிறுவர், சிவமயமாய் விளங்கினுர்; அப்பொழுது சிவபெருமான், அவரைத் தம் தொண்டர்களுக்குத் தலைவராக்கி, "நாம் உண்ட கலமும், உடுப்பனவும், சூடுவனவும் உனக்காகச் சண்டீசனுமாம் பதம் தந்தோம்," என்று கூறித் தமது கொன்றை மாலையை அவர் முடி மீது சூட்டினுர் அன்றுமுதல் விசாரசருமர் சண்டீசர் என்னும் பெயரைப் பெற்ருர். இது பெரிய புராணம் கூறும் வரலாறு.

இவ்வாறு சிவபெருமான் உமையம்மையோடு தோன்றி விசாரசருமருக்குச் சண்டீசப் பதம் வழங்கிய நிகழ்ச்சியை, மேலே கூறப்பெற்ற சண்டீசப் பதம் உணர்த்தும் சிற்பம், மிக நன்ருக விளக்குகின்றது. இச் சிற்பத்தை நன்கு பார்வையிட்டுக் கீழ் வரும் பெரிய புராணச் செய்யுட்கள் இரண்டையும் படித்தல், மிக்க இன்பத்தைத் தரும்.

"செங்கண் விடையார் திருமலர்க்கை
தீண்டப் பெற்ற சிறுவனுர்
அங்கண் மாயை யாக்கையின்மேல்
அளவின் றுயர்ந்த சிவமயமாய்ப்
பொங்கி எழுந்த திருவருளின்
மூழ்கிப் பூமேல் அயன்முதலாம்
துங்க அமரர் துதி செய்யச்
சூழ்ந்த ஒளியில் தோன்றினுர்"

"அண்டர் பிரானுந் தொண்டர்தமக்
கதிப னுக்கி அனைத்தும் நாம்
உண்ட கலமும் உடுப்பனவும்
சூடு வனவும் உனக்காகச்
சண்டீ சனுமாம் பதந்தந்தோம்
என்றங் கவர் பொற்றடமுடிக்குத்
துண்ட மதிசேர் சடைக்கொன்றை
மாலை வாங்கிச் சூட்டினுர்"



# அபிராமி அந்தாதி

திரு. பூ. ஆலாலசுந்தரம், எம்.ஏ.,

திருக்கடவூர் என்பது காவிரித் தென்கரைத் தலங்களுள் 47-வது தலமாகும். இது அட்டவீரட்டத்தலத்துள் ஒன்றாகும். மார்க்கண்டரைக் காப்பாற்றுவதற்கு இறைவன் கூற்றுவனை உதைத்தருளிய வீரம் நிகழ்ந்த தலமாதலின் இது வீரட்டானம் எனப் பெயர்பெற்றுள்ளது. இது அறுபான் மூவருள் ஒருவரான குங்கிலிய கலய நாயனார் இறைவனை வழிபட்டுப்பேறு பெற்ற தலமாகும். இத்தலத்திற்குச் சம்பந்தர் பாடல் ஒன்றும் அப்பர் பாடல் மூன்றும் சுந்தரர் பாடல் ஒன்றுமாக ஐந்து பாடல்கள் உள்ளன. இத்தலத்திலுள்ள திருக்கோயிலில் பல கல்வெட்டுக்கள் உள்ளன. திருக்கோயிலிலுள்ள இறைவர் பெயர் அமிர்தகடேசர்; இறைவியின் பெயர் அபிராமி.

அபிராமி அந்தாதியை அருளிச் செய்தவர் அபிராமிபட்டர். இவர் அந்தணர் குலத்தில் திருக்கடவூரில் பிறந்தவர். அபிராமி அம்மையிடம் இடையறாப் பேரன்பு பூண்டவர். இவரிடம் அழுக்காறு கொண்ட அந்தணர் சிலர் தஞ்சையை அப்போது ஆண்டுவந்த சரபோஜி மன்னனிடம் இவரைப்பற்றிக்குறைகூறினர். மன்னர் திருக்கடவூர் வந்தபோது அபிராமிப் பட்டரை நோக்கி ''நாளைக்கு என்ன திதி" என்று கேட்டார். மறுநாள் அமாவாசை; ஆனால் பட்டரின் நினைவு அபிராமி தேவி நினைவாகவே இருந்ததால் உலக நிலை மறந்து பௌர்ணமி என்று கூறினார். அதைக் கேட்ட அரசன் நாளைக்கு நீர் முழு சந்திரனைக் காட்ட முடியுமோ" என்றான். அதற்குப் பட்டர் "அபிராமி திருவருளால் கூடும்" என்றார். அவர் சந்திரனைக் காட்டும் வரையில் சிறையில் இருக்கவேண்டும் என்று கட்டளையிட்டு அரசன் போய்விட்டான். தாம் தவறாக மன்னனிடம் கூறியதற்கு வருந்தித் தம்மைக் காப்பாற்ற வேண்டி அபிராமிபட்டர் ஸ்ரீ அபிராமி அம்பாள்மேல் அபிராமி அந்தாதியைப் பாடினார். அவ்வாறு பாடிக் கொண்டு வரும்போது ''விழிக்கே அருளுண்டு" என்னும் 79-வது பாடல் பாடி முடிந்ததும் அபிராமி அம்மையார் பட்டருக்குக் காட்சியளித்து தம் குண்டலத்தை ஆகாயத்தில் எறிந்து அது பூர்ணசந்திரன் போல் ஒளிவிடும்படிச் செய்தார். இதைக்கண்ட மன்னனும் மற்றவரும் பட்டரின் பக்தியையும் அம்மையின் திருவருளையும் பாராட்டினர். எனவே இந்த அபிராமி அந்தாதியை நாள் தோறும் பாடும் அன்பர் இம்மை மறுமைப் பயன்களை அடைவர் என்பது நிச்சயம்.

இந்த அந்தாதியிலுள்ள ஒரு சில பாடல்களின் கருத்துக்களை இனி ஆராய்வோம். நாம் நல்லவர்களின் நட்பினைப் பெற்றால் நல்லவராக வாழலாம்; தீயவரோடு சேர்ந்தால் நமக்கும் தீய பழக்கங்கள் உண்டாகும். எனவே ஒருவன் நல்லவன் கெட்டவன் எனக் கூறப்படுவது அவனது நண்பனைப் பொருத்ததாகும். இதனைத் திருவள்ளுவர்,

மனத்தானும் மாந்தர்க்கு
உணர்ச்சி இனத்தானும்
இன்னான் எனப்படும் சொல்[1]

எனக் கூறியுள்ளார். எனவே ஒருவனுக்கு நல்லோர் இணக்கம் இருக்குமானால் அவன் இறைவனை வணங்குவான். இதனால்தான் பட்டினத்தடிகள்

''நல்லார் இணக்கமும் நின்பூசை
நேசமும்''[2]

எனப் பாடியுள்ளார். நமக்கு இறைவன் அடியவரது கூட்டுறவு இன்றியமையாதது என்பதனை அபிராமி பட்டர் தம் பாடலில் விளக்கியுள்ளார்.

"கொள்ளேன் மனத்தினின் கோலமல்
லாதன்பர் கூட்டந்தன்னை
விள்ளேன் பரசம யம்விரும் பேன்
வியன் மூவுலகுக்(கு)
உள்ளே அனைத்தினுக் கும்புறம்
பேஉள்ளத் தேவிளைந்த
கள்ளே!களிக்கும் களியே! அளியஎன்
கண்மணியே"[3]

இப்பாட்டின் பொருளை நோக்குவோம். பெரிய மூன்று உலகத்திற்கு உள்ளும், வெளியும், என் மனத்திலும் தோன்றும் ஆனந்தத்தேனே! மெய்யன்பர்களிகூரும் பத்திரசக் களிப்பே! என் கண்ணின் மணி போன்ற அபிராமி அம்மையே! எனது மனத்தில் தங்களுடைய திருமேனியை அல்லாது பிறிதொருமேனியை ஏற்றுக்கொள்ளேன். தங்களது மெய்யன்பர் கூட்டத்தை விட்டுப்பிரியேன்; பிற சமயங்களை விரும்பேன்" என்பது மேலேகாட்டப்பட்ட திருப்பாடலின் கருத்தாகும். "அன்பர் கூட்டந்தன்னை விள்ளேன்" என்றதனால் அடியார் கூட்டுறவின் சிறப்புப் புலனாகின்றது. "பரசமயம் விரும்பேன் என்றதால் ஒருதெய்வ வழிபாடு வலியுறுத்தப் படுகின்றது. இந்த இரண்டு கருத்துக்களையும் கீழ் வரும்திருவாசகப்பாடலில்காணலாம்.

கொள்ளேன் புரந்தரன் மாலயன்
வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடியா ரொடல்லால்
நரகம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே இருக்கப்
பெறின் இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னை
யல்லா தெங்கள் உத்தமனே[4]

இத்திருப்பாடலில் ''குடி கெடினும் நள்ளேன் நினது அடியாரொ டல்லால்" என்ற அடியில் ''இறைவனே என் வாழ்க்கைக்கு முடிவு வந்தாலும் உன்னுடைய அடியவரோ டன்றிப் பிறரோடு நட்புக்கொள்ளமாட்டேன்"

1. திருக்குறள்: சிற்றினம் சேராமை-3
2. பட்டினத்தார் பாடல்
3. அபிராமி அந்தாதி–பாடல் 23.
4. திருவாசகம்–திருச்சதகம்-2.

என்றதனுல் அடியார் கூட்டுறவின் சிறப்புப் புலனுகின்றது. "இறைவா உள்ளேன் பிற தெய்வம் உன்னையல் லால்" என்ற அடியில் இறைவனே உன்னை ஒழிந்த வேறு கடவுளரை மனத்தாலும் நினைக்க மாட்டேன் என்றமையால் ஒருதெய்வ வழிபாடு வலியுறுத்தப்படுகின்றது.

நாம் நல்லவர்களோடு சேர்ந்து இறைவனை வணங்கி வாழ்த்த வேண் டும் என்றும், இத்துறையில் நம்மோடு சேராதவர்களை நாம் விட்டு நீங்க வேண்டும் என்றும் அப்பர் சுவாமிகள் நமக்கு அறிவுறுத்தியுள்ளார். இதனைக் கீழ்வரும் திருப்பாடல் விளக்குதல் காண்க.

''உரைத ளர்ந்துட லார்நடுங்
காமுனம்
நரைவி டையுடை யானிடம்
நல்லமே
பரவு மின்பணி மின்பணி
வாரொடே
விரவு மின்விர வாரை விடுமினே'[5]

இத்திருப் பாடலில் ''பணிவாரொடே விரவுமின்" என்ற அடியில் அடியார் கூட்டுறவு வலியுறுத்தப்படுகின்றது சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் திருவா ரூர் மக்கள் எதிர்கொண்டு அழைத் தனர். அப்போது சுந்தரர் அடியார் களைப்பார்த்து ''அன்பர்களே! யான் உலகப்பற்றினின்றும் இன்னும் நீங்க வில்லை. மேலும் இறைவனை வழுத்து கின்ற அடியவரோடு சேர்ந்து இறை வனைப் போற்றவில்லை இத்தகைய கீழோனுகிய என்னைத் திருவாரூரில் வீற்றிருக்கும் இறைவன் அடியவ ராக ஏற்றுக்கொள்வரோ என்ற கருத் தில் ஒரு திருப்பாட்டினை பாடினுர். இனி அத் திருப்பாட்டினைப் நோக்கு வோம்

"சந்தம் பலவறுக் கில்லேன்
சார்ந்தவர் தம்மடிச் சாரேன்
முந்திப் பொருவிடை யேறி
மூவுல குந்திரி வானே
கந்தங் கமழ் கொன்றை மாலைக்
கண்ணியன் விண்ணவ ரேத்தும்
எந்தை யிருப்பது மாரூ ரவ
ரெம்மையு மாள்வரோ கேளீர்"[6]

இத்திருப்பாடலில் '' சார்ந்தவர் தம் மடிச் சாரேன் " என்ற அடியில் அடி யார்க் கூட்டுறவின் சிறப்பு வலியுறுத் தப்பட்டது காண்க.

நாம் திருமணத்தில் மணமக்களை வாழ்த்தும்போது " பதினறும் பெற் றுப் பெறுவாழ்வு வாழ்க" என வாழ்த்துகின்ருேம். பதினறு பேறு என்பதைச் சிலர் பதினறு குழந்தை கள் எனத் தவருகக் கருதுகின்ருர்கள் பதினறு பேறு என்பது பதினறு வகைச் செல்வங்களைக் குறிக்கும். அவை நோயின்மை, கல்வி, பொன், நெல், அழகு, புகழ், பெருமை, இளமை, அறிவு, நன்மக்கட்பேறு, வலிமை, துணிவு, வாழ்நாள், வெற்றி, நல்லூழ், நுகர்ச்சி என்பனவாம். திருக்கடவூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள உமா தேவியாகிய அபிராமியம்மையை நாள்தோறும் மனத்தில் நினைத்து, வாக்கால் துதித்து, காயத்தால் வணங்கும் அடியவருக்குப் பதினறு

5. திருக்குறுந்தொகை—திருநல்லம் - 5
6. சுந்தரர் : திருவாரூர். பண் காந்தாரம் – 7.

பேறுகளும் அபிராமியம்மையார் வழங்குவார் என்பதை அபிராமி பட்டர் தாம் பாடியுள்ள அபிராமி யம்மை பதிகத்தில் இறுதியாகவுள்ள திருப்பாடலில் கூறியிருப்பது ஈண்டுப் படித்து இன்புறத் தக்கதாகும்.

" சகலசெல் வங்களும் தரும்
இமய கிரிராச
தனயைமா தேவி நின்னைச்
சத்யமாய் நித்யமுள் ளத்தில்து
திக்குமுத்
தமருக் கிரங்கி மிகவும்
அகில மதில் நோயின்மை கல்வி
தன தானியம்
அழகுபுகழ் பெருமை இளமை
அறிவுசந் தானம்வலி துணிவுவாழ்
நாள் வெற்றி
ஆகுநல் லூழ்நு கர்ச்சி
தோகைதரும் பதினறு பேரும்தந்
தருளி நீ
சுகானந்த வாழ்வளிப் பாய்
சுகிர்தகுண சாலிபரி பாலிஅனு
கூவிதிரி
சூலிமங் களவி சாலி
மகவுநான் நீதாய் அளிக்கொ
ணுதோ மகிமை
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமிசுப நேமிபுகழ் நாமிசிவ
காமிமகிழ்
வாமிஅபி ராமி உமையே " 7

இதுகாறும் கூறியவற்ருல் நாம் இறைவனை வணங்குவதற்கு அடியார் கூட்டுறவு இன்றியமையாது வேண் டப்படுவது என்பதும், நாம் ஒரு தெய்வ வழிபாட்டினையே மேற் கொள்ளவேண்டும் என்பதும், திருக் கடவூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள அபிராமி யம்மையை நாம் மனத்தால் நினைத்து, வாக்கால் துதித்து, காயத் தால் வணங்கி வருவோமாயின் எல்லா உயிர்களுக்கும் அன்னையாக விளங்கும் அம்மையார் அவரது சேயாகிய நமக்கு இம்மையில் பதி ஞறு பேறுகளும் அளித்து, மறுமை யில் வீடு பேரின்பம் அருளுவாள் என் பதும் சுருக்கமாக விளக்கப்பட்டன.

" ஆத்தாளை எங்கள் அபிராம
வல்லியை அண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத்
தாளைப் புவி அடங்கக்
காத்தாளை அங்குச பாசாங்
குசமும் கருப்பும் அங்கை
சேர்த்தாளை முக்கண்ணி
யைத்தொழு வார்க்கொரு
தீங்கிலையே " 8

எனவே அன்பர்கள் அபிராமியந் தாதியை மனப்பாடம் செய்து இம்மை மறுமைப் பயன்களை அடை வார்களாக.

7. அபிராமியம்மை பதிகம் – 11.
8. அபிராமியந்தாதி - நூற்பயன்.

# தாளம் கொட்டும் அம்மை

## திரு. கி. வா. ஜகந்நாதன்

உலகத்தை எல்லாம் ஆட்டிவைப்பவன் இறைவன். அவனும் ஆடி உலகை ஆட்டி வைக்கிருன். அவனுடைய நடனமே அவன் செய்யும் தொழில்களை விளக்கும். உலகத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலும் மறைத்தலும் அருளுகலும் ஆகிய ஐந்து தொழில்களையும் இறைவன் இயற்றுகிருன். அந்தத் தொழில்கள் மனம் போனபடி நிகழ்வன அல்ல இறைவனுடைய அருளாணையால் நிகழ்கின்றன. ஆதலின் அவற்றிற்கு ஓர் ஒழுங்கு உண்டு. அந்த ஒழுங்குக்குள் நின்றே சூரியன் தோன்றுகிருன்; சந்திரன் தேய்கிருன், வளர்கிருன்; காற்று வெம்மையாகவும் தண்மையாகவும் வீசுகிறது. வேப்பமரத்தில் வேப்பிலையே தளிர்க்கிறது; யானை யானையையே பெறுகிறது. கடல் கரை கடவாமையும், உயிர் உடம்பில் வரையறுத்த காலம் வரையில் தங்குவதும் ஆகிய செயல்கள் நிகழ்கின்றன.

நடனம் என்பது உடம்பில் நிகழும் செயல்கள் அனைத்தும் ஓர் ஒழுங்குக்கு (Rhysems) உட்பட்டு அமையும் நிலை, அந்த ஒழுங்குக்குத் தாளம் அல்லது லயம் என்று பெயர். கையின் அசைவு காலால் மிதிக்கும் ஜதி, கண்ணின் வீச்சு, உடம்பின் நெளிவு, வாயில் வரும் பாட்டு இத்தனையும் ஒரு தாளக் கட்டுப்பாட்டைச் சார்ந்தே அமையும் இறைவன் இயற்றிய பிரபஞ்சம் முழுவதும் அவனுடைய அருளாணையாகிய லயத்தைச் சார்ந்தே இயங்குகிறது. ஆகவே, அவன் செயல் எல்லாவற்றிலும் ஒழுங்கு உண்டு; லயம் உண்டு. அதனுல் அந்தச் செயல்களையே கூத்தாக வைத்து, அதனை நினைந்து பாராட்டி வழிபடக் கூத்தப்பிரானுக ஆண்டவன் திருக்கோலம் கொண்டிருக்கிருன்.

இந்தக் கூத்தின் இயல்பை நினைக்க நினைக்க இன்பம் பொங்குகிறது. இறைவனுடைய தத்துவத்தை உட்கருத்தாக வைத்து விளங்கும் கூத்துக் கோலத்தின் கலையழகே இன்று உலகம் முழுவதும் போற்றும் வகையில் இருக்கிறது. வேறு எந்த நாட்டிலும் நடராச விக்கிரகத்தைக் காண முடியாது. தமிழ் நாட்டின் தனிச் சொத்து அது. சைவர்களுக்கு எத்தனையோ கோயில்கள் இருந்தாலும் அவற்றிற்குள் தலைமை உள்ளதாகவும் கோயில் என்று அடையின்றிச் சொன்னுலே தெரிந்து கொள்ளும் தலமாகவும் இருப்பது சிதம்பரம். அதற்குக் காரணம் அங்கே திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தத்தாண்டவம் புரியும் நடராசப் பெருமானுடைய சிறப்பே ஆகும்.

கலைவகையில் கண்டு களிப்பது நடராசப் பெருமான் திருவுருவம். இடம், காலம், சாதி, சமயம் என்ற வரையறை யாதும் இல்லாமல் அப் பெருமானுடைய ஆடல் திருக் கோலத்தைக் கலைப் பொருளாக மக்கள் கண்டு களிக்கலாம். சிற்பக் கலையும், நடனக்கலையும் அந்தத் திருவுருவத்தில் உன்னத நிலையை அடைந்திருக்கின்றன. மந்திர சாத்திரக் கருத்துக்களின் அடையாளமாக அந்தத் திருக்கோலத்துக்குப் பொருள் விரிப்பதுண்டு. ஞான நூல்களின்படி அந்தமூர்த்தியின் உண்மையை விளக்குவதும் உண்டு. புராணக் கதைகளைச் சொல்லி அதன் சிறப்பை எடுத்துக் கூறவும் வகை உண்டு.

இறைவன் உலகத்தைப் படைத்துக் காத்து அழித்து மறைத்து அருள் செய்கிறான். இதனை உட்கருத்தாகக் கொண்ட நடனத்தை ஐந்தொழிற் கூத்து அல்லது பஞ்ச கிருத்திய நடனம் என்பார்கள். உலகமும் உயிரும் இயங்குகின்றன. அவன் தான் இயங்கி அவற்றை இயக்குகிறான். அவ்வாறு இயக்குவதற்குக் காரணம் உயிர்களிடம் அவனுக்கு உள்ளகருணையே. அவன் உள்ளத்தில் கருணை சுரக்கிறது; அதனால் அவன் ஆடுகிறான். உலகம் ஆடுவதற்கு அவன் ஆட்டம் காரணம். அவன் ஆட்டத்துக்கு அவன் அருள் காரணம். அந்த அருளே எல்லா ஆட்டத்திலும் ஓர் ஒழுங்கை, வரையறையை, லயத்தை, தாளத்தை அமைத்திருக்கிறது.

இந்தத் தத்துவம் நடராச வடிவமாகவும் அம்மையின் வடிவாகவும் கோலம்கொள்கிறது இறைவன் ஆடுகிறான். அதற்கு உமாதேவி தாளம் கொட்டுகிறாள். உமாதேவி இறைவனுடைய அருட்சக்தி. அருளையே சக்தியாக வைத்து வழிபடுகிறோம். இறைவன்பால் உள்ள ஆற்றல் அருள். அந்த அருளின் தூண்டுதலால்தான் அவன் எத்தொழிலையும் செய்கிறான். இதையே அம்பிகை தாளம் கொட்ட இறைவன் ஆடும் கோலம் குறிப்பிக்கிறது.

'சாந்தோக்கிய உபநிஷத்தில் தேவி ஆடலாசிரியனாக இருந்து தாளம் தட்டப் பரமசிவன் நிருத்தம் செய்தாரென்று கூறியிருத்தல் காண்க' என்று பரத சேனாபதீயம் குறிப்பிடுகிறது. சுத்தானந்தப் பிரகாசம் என்ற நூல் இதனைச் சொல்கிறது.

"ஓங்குபுகழ் ஈசன் உயர்விதமாய்க்
கொண்டாடப்
பாங்கின்இசை நாரதனார் பாடுதலும்
—பூங்குழலாள்
பாணி இயற்றினாள் என்றான்
பனிவரையில்
வீணை இயற்றிய வேந்து"
[பாணி — தாளம்]

மகாப்பிரளய கால தாண்டவத்தின் போதும் அம்மை தாளம் கொட்ட ஐயன் நடிக்கிறானாம்.

'கடையுகந் தன்னில் எல்லா
உலகமும் கடவுள் தீயான்
சுடலைசெய் தமலை தாளம்
அறைதர நடிக்கும் ஈசன்"

என்பது ஒரு நூல்.

இவ்வாறு அப்பன் ஆடும்போது அம்மை தாளம் போடுவதைச் சங்க காலத்துப் பழைய நூலாகிய கலித்தொகை அழகாகச் சொல்கிறது

எல்லாப் பூதங்களும் உயிர்களும் தேவர்களும் ஒடுங்கும் காலத்தை மகாப்பிரளயம் என்று சொல்வார்கள், அந்தக் காலத்தில் இறைவன் ஒருவன்தான் இருப்பான். பகலெல்லாம் நோயின் கடுமைதாங்காமல்வருந்திய குழந்தைகளை வைத்துக் காப்பாற்றிய தாய் இரவில் அவை தூங்கும்பொழுது எவ்வளவு இன்பத்தை அடைகிருள்! 'பாவம்! பகல் முழுதும் ஒருகணமும் அமைதிபெருமல் தவித்தன; இப்போதுதான் தூங்குகின்றன' என்ற ஆறுதலுடன் பின்னும் நன்ருகத் தூங்கட்டும் என்று தாலாட்டுப்பாடுகிருள். இறைவனும் மகாப்பிரளய காலத்தில் உயிர்களையெல்லாம் தன்னிடத்தே ஒடுக்கிக் கொண்டு அவற்றிற்கு ஓய்வு கிடைத்ததே என்ற ஆனந்தத்தால் கூத்தாடுகிருனும். முன்னலே எல்லா உயிர்களையும் ஒருமுறையாகத் தன்னிடத்திலிருந்து புறப்படவிட்டான் இறைவன். இப்போது முறைப்படியே மீட்டும் அடக்கிக்கொண்டான். ஆளுக்கு ஓர் ஊரில் அலுவல் பார்க்கிற பல பிள்ளைகள் பலகாலத்துக்குப் பின் ஏதோ ஒரு காரணமாகத் தாய் தகப்பனர் இருக்கும் இடத்தில் வந்து ஒன்று கூடினல் அவர்களுக்கு இன்பம் உண்டாவது இயல்புதானே!

இங்கே கூடப் பல உயிர்களுக்கும் தந்தையாகிய இறைவனும் தாயாகிய தேவியும் இருக்கிருர்கள். இரண்டு பேருமே ஆனந்தம் அடைகிருர்கள். இறைவன் ஆடிக்களிக்கிருன்; இறைவி அவனேடு ஒன்றியிருந்து தாளம் கொட்டிக் களிப்பை அடைகிருள்.

இறைவன் உயிர்களையெல்லாம் மகாப்பிரளய காலத்தில் தன்னிடம் ஒடுக்கிக்கொண்டு ஆடும் கூத்துக்குக் கொடுகொட்டி என்று பெயர். அவன் ஆனந்தத்தால் கைகொட்டி ஆடுகிருன்; அதனல் கொட்டி என்ற பெயர் வந்தது. உயிர்கள் அழிந்த காலம் அது என்ற நினைவை வைத்துப் பார்த்தால் அது கொடுமையாகத் தோன்றுகிறது. அதனல் அதற்குக் கொடுகொட்டி என்ற பெயர் அமைந்தது. 'கொடுங் கொட்டி, கொடுகொட்டி என விகாரம் ஆயிற்று. கொடுங் கொட்டி என்ருர், எல்லாவற்றையும் அழித்து நின்று ஆடுதலின்' என்று விளக்குவார் நச்சினர்க்கினியர்.

கொடுகொட்டி ஆடும்போது இறைவன் தன் கையிலுள்ள துடியை முழக்குகிருன். அந்த உடுக்கை பல வேறு ஒலிகளை எழுப்புகிறது. இறைவன் குதித்தும் சுழன்றும் பாய்ந்தும் ஆடும் ஆட்டங்களுக்கு ஏற்ப வெவ்வேறு ஒலிகளை அது எழுப்புகிறது, அவனுடன் ஒரு கூற்றிலேயிருந்து கொடிபோலத் துவண்ட இடையையுடைய அம்மை தாளம் கொட்டுகிருள். ஆடும் பெருமானைப் பற்றிச் சொல்ல வந்த நல்லந்துவனர் என்ற புலவர் கலித்தொகையில் கடவுள் வாழ்த்தில் இந்தக் கருத்தைச் சொல்கிருர்.

> படுபறை பல இயம்பப் பல் உருவம்
> பெயர்த்து நீ
> கொடுகொட்டி ஆடுங்கால் கோடுஉயர்
> அகல் அல்குல்
> கொடிபுரை நுசுப்பினள் கொண்ட சீர்
> தருவாளோ ?

ஒலிக்கின்ற துடியாகிய பறை பல வகை ஒலிகளை ஒலிக்க. வெவ்வேறு உருவமாக இருந்த உயிர்க் கூட்டங்

களை அவற்றின் வெவ்வேறு போக்கி லிருந்து மீட்டு நின்பால் அடக்கிக் கொண்டு, கொடுகொட்டி என்னும் கூத்தை ஆடும்போது, பக்கங்கள் உயர்ந்தும் அகன்றும் இருக்கும் இரக சிய உறுப்பையும் கொடிபோன்ற இடையையும் உடைய இறைவி, அந்த ஆட்டத்துக்கு ஏற்றதாய் மேற் கொண்ட சீர் என்ற தாளத்தைத் தருவாளோ? அங்கே வேறு யார் இருக்கமுடியும்?.

[சீர் - தாளத்தின் இறுதிப்பகுதி.]

கொடுகொட்டியைப்பற்றி சொன்ன புலவர் அடுத்தபடி பாண்டரங்கம் என்ற கூத்தைச் சொல்கிறுர். இறை வன் திரிபுரதகனம் செய்தபோது, உயிர்க்கூட்டத்துக்கு இன்னல் விளை வித்த புரங்கள் ஒழிந்தன என்ற மகிழ்ச்சியால் ஆடியது பாண்டரங்கக் கூத்து, அப்பொழுதும் இறைவி உட னிருந்து தாளம் கொட்டினுள்.

மண்டிய அமரில் வெற்றி பெற்ற பெருமானுதலின் அந்த வெற்றியினுல் ஆடுகிறுன், இறைவன் திரிபுரத்தை அழித்தாலும் அவனுடைய கருணை அங்கும் சிறந்து நின்றது, திரிபுரங் களை அழித்தானே யன்றி அவற்றின் தலைவர்களாகிய மூன்று அசுரர்களை யும் அழிக்கவில்லை, அவர்கள் மனம் திருந்தி வழிபட்டமையால் இருவரை வாயில் காவலராகவும் ஒருவனை முழா முழக்குபவனுகவும் கொண்டான்.

அந்த மூன்று அசுரர்கள் பலவகை யில் போர் செய்தார்கள். அந்த அமர் பலவற்றையும் கடந்தான் இறைவன், திரிபுரங்கள் நீருயின, அப்போது அந்தக் களம் எங்கும் நீருக, வெள்ளை வெளேரென்று இருந் தது, மூன்று புரங்கள் தீய பொருளின் அடையாளங்கள், முப்புரங்கள் அழிந் தன, மும்மலங்கள் ஒழிந்தன, முக் குணங்கள் வெந்தன, மலமழிந்த குணமழிந்த நிலை ஞான நிலை. அது தூய வெண்ணிறமானது. மும்மலம் ஒழிந்த இடத்திலே, முக்குணம் கழிந்த வெளியிலே இறைவன் தாண் டவம் புரிவான். இங்கே வெற்றி யோடு நின்ற இறைவன் அந்த வெள் ளிய அரங்கத்திலே அங்குள்ள வெண்ணீற்றை உடம்பெல்லாம் பூசிக்கொண்டு பாண்ரடங்கக் கூத்து ஆடினுன். பாண்டு என்பது வெண் மையைக் குறிப்பது, அரங்கம் கூத் தாடும் இடம். திரிபுரம் வெந்து அவிய எங்கும் நீற்று மயமாகி வெண்ணிறம் பெற்ற இடத்தையே அரங்கமாகக் கொண்டு ஆடினுன்; அதனுல் அதற் குப் பாண்டரங்கம் என்ற பெயர் வந்தது. அப்போதும் அம்மை தாளம் கொட்டினுள்.

மண்டு அமர் பலகடந்து மதுகையால் நீறு அணிந்து
பண்டரங்கம் ஆடுங்கால் பணைஎழில் அணைமென்றேள்
வண்டு அரற்றும் கூந்தலாள் வளர்தூக் குத் தருவாளோ?

[மேற் சென்று நெருங்கும் பல வகைப் போரை வென்று, அந்த வலிமை யினுல் நீற்றை அணிந்து, பாண்ட ரங்கம் என்னும் கூத்தை நீ ஆடும் போது, மூங்கிலைப் போன்ற வழுவழுப் பும் தலையணையைப் போன்ற மென் மையும் உடைய தோளையும், வண்டு கள் முரலும் கூந்தலையும் உடைய அம்பிகை வளருகின்ற தூக்கு என்னும் தாள வகையைத் தருவாளோ?

தூக்கு-தாளத்தின் இடைப்பகுதி.]

அடுத்தபடி மற்றொரு கூத்தைச் சொல்

கிறார் நவ்வந்துவனார். அதன் பெயர் காபாலம்.

இறைவன் செருக்கு உடையவர்களுக்கு அருள் செய்யாதவன். செருக்குடையவர்களுக்கு அவன் தன்மை விளங்காது. செருக்கு, பணத்தால் வரலாம்; பதவியால் வரலாம்; படிப்பால் வரலாம்; தவத்தால் கூட வரலாம். செருக்குக்குக் காரணம் எதுவாக இருந்தாலும் அது தீயபண்பு தான்.

தாருகா வனத்தில் பல முனிவர்கள் இருந்தார்கள். அவர்கள் வேள்வித் துறையில் தலை சிறந்தவர்கள், விரதம் இருந்து தவம்புரிந்தவர்கள், ஆயினும் அவர்களுக்கு, 'நாம்' என்ற செருக்கு இருந்தது. தவம் வளர வளர, வேள்வி மல்க மல்க, அந்தச் செருக்கு வளர்ந்தது, இறைவனைப்பற்றி எண்ணாமல் தங்கள் வேள்வியே பெரிதென்று எண்ணினார்கள். அவர்கள் செருக்கைப் போக்க இறைவன் வந்தான். அவன் பெருமையை அறியாமல், தங்கள் பகைவன் என்று கருதித்தீய வேள்விகளைச் செய்து பல பொருள்களை உண்டாக்கி அவன் மேல் விடுத்தார்கள். அவனை அவை அழித்து விடும் என்ற எண்ணம் அவர்களுக்கு! இறைவன் அவற்றையெல்லாம் பிடித்து வைத்துக் கொண்டான். செருக்கு அடைபவர்களுக்கு என்ன கதிநேரும் என்பதை மற்றவர்கள் தெரிந்து கொள்ளட்டுமென்று அவற்றை அடையாளமாக வைத்துக் கொண்டான். அவர்கள் பாம்புகளை அனுப்பினார்கள்; அவற்றைப் பிடித்து அணியாக அணிந்துகொண்டான். கொலை செய்யும் புலியை விடுத்தார்கள்; அதை உரித்து அதன் தோலை இடையில் கட்டிக்கொண்டான்.

இடையிலே, பிறர் செருக்கை அடக்கியதைக் காட்டும் புலித்தோல் இருக்கிறது. அவன் கழுத்தில் அழகான கொன்றை மாலை புரள்கிறது. சிவபெருமானுக்குரிய அடையாள மாலை அது; மங்கலநிறமான மஞ்சள் வண்ணமுடையது; மென்மையான மணம் உடையது.

பதவியினாலே உண்டாகும் செருக்கையும் அடக்குபவன் இறைவன் என்பதை அப்பெருமான் கையிலுள்ள கபாலம் காட்டுகிறது. படைப்புத் தொழிலைச் செய்த பிரமனுக்கு முன்பு ஐந்து தலைகள் இருந்தன, 'நமக்கும் ஐந்துதலை: சிவனுக்கும் ஐந்துதலை நாம் செய்வது முதல் தொழில். ஆகவே நாம் மிகப் பெரியோம்' என்று அவன் தருக்கடைந்தான். இறைவன் அந்தத்தருக்குக்குக் காரணமாகிய தலையை மாத்திரம் கிள்ளிக் கையில் வைத்துக்கொண்டான். அது காய்ந்து போக, கபாலத்தை மாத்திரம் ஏந்திக் கொண்டான்.

இறைவன் கபாலத்தை ஏந்தியிருப்பது, செருக்கை அடக்குபவன் அவன் என்பதைக் காட்டுவதோடு வேறுசில உண்மைகளையும் புலப்படுத்தும். பிறப்பை வகுக்கிறவன் பிரமன். அவன் செருக்கை அடக்கின அருட்செயல், சிவபிரான் பிறப்புக்கு மூலமான ஆணவத்தை அழித்து முத்தி தருபவன் என்பதை விளக்குகிறது.

புலித்தோலை இடையிலே கட்டி, கொன்றை மாலை புரள, பிரமகபாலத்தைக் கையில் ஏந்திக் கொண்டு

இறைவன் காபாலக்கூத்தை ஆடினன். அங்கும் அவனுக்குத் தாளம் போட அம்மையையன்றி வேறு யார் இருக்க முடியும்? இறைவனுடைய விநோதமான நிலையைக் கண்டு எம் பெருமாட்டி புன்னகை பூக்கிருள், பட்டாடையையும் பீதாம்பரத்தையும் பிறர் அணிய, சிவபெருமான் புலித் தோலை அணிந்திருக்கிருன், வேறுபல மலர்கள் வண்ணமும் மணமும் உடையனவாக இருக்க, கொன்றை மலரைப் புனைந்திருக்கிருன், யாவருக்கும் எல்லாவற்றையும் வழங்கும் பெருஞ் செல்வப்பிரான் பிரமனுடைய தலையோட்டைக் கையில் ஏந்திப் பிச்சைக் காரனுகக் கோலம் காட்டுகிருன். இவற்றையெல்லாம் கண்டு யாருக்குத் தான் நகை தோன்ருது?

இறைவன் தன் முல்லை போன்ற பற்கள் சிறிதேதெரிய முறுவல் பூக்கிருன். அந்தமுறுவல் பரிகாசச்சிரிப்பா? அன்று, அன்று, இறைவனுடைய அருளேயாகியதேவி, இவற்றின் கருத்தை நினைக்கிருள். அதனுல் உவகை பிறக்கிறது; புன்னகை பூக்கிருள் முறுவல் செய்தபடியே அந்தக் காபாலக் கூத்துக்குத் தாளம் கொட்டுகிருள்.

கொலைஉழுவைத் தோல் அசைஇக்
  கொன்றைத்தார் சுவற்புரளத்
தலைஅங்கை கொண்டு நீ
  காபாலம் ஆடுங்கால்
முலை அணிந்த முறுவலாள்
  முதற்பாணி தருவாளோ?

[கொலை செய்ய வந்த புலியின் தோலை இடையிலே கட்டி, கொன்றை மாலை கழுத்திலே அசைய, பிரமனுடைய தலையோட்டை உள்ளங்கையிலே ஏந்திக் கொண்டு, நீ காபாலம் என்னும் கூத்தை ஆடுகையில், முல்லை அரும்பு போன்ற புன்னகையைப் பூக்கும் உமாதேவி, தாளத்தின் முதற்பகுதியாகிய பாணியைத் தருவாளோ?

உழுவை-புலி, சுவல்-பின்கழுத்து முலை - முல்லை, பாணி-தாளத்தின் முதற்பகுதி.]

இவ்வாறு அவன் ஆடியது எதற்காக? நமக்கு அன்பு இல்லாவிட்டாலும், 'இவர்கள் நம்மை இந்த உருவத்தில் கண்டு வழிபடட்டும்' என்ற கருணையினுல் அவன் ஆடுகிருன், வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத இறைவன் தன் நிலையினின்றும் இறங்கி வந்து, நமக்குப் பொருந்தும் உருவம் உடையவனுகிச் செயல் உடையவனுகிநின்று அவன் அருளே தேவி உருவத்தில் நின்று தாளம் போட, ஆடல்களை ஆடினுன். அவனுடைய கருணையை என்னவென்று சொல்வது'.

என ஆங்குப்
பாணியும் தூக்கும் சீரும் என்றிவை
மாண் இழை அரிவை காப்ப
ஆணம்இல் பொருள் எமக்கு அமர்ந்
  தனை ஆடி.

(என்று நாங்களும் பிறரும் சொல்ல, அவ்வக்காலத்தில் பாணி, தூக்கு, சீர் என்ற இந்தத் தாளக்கூறுபாடுகளை, மாட்சிமையையுடைய அணிகலன்களைப் பூண்ட அம்மை கொட்டிப் பாதுகாக்க, சிறிதும் அன்பு இல்லாத பொருள்களாகிய ஏழையேங்களுக்காக ஆடல் புரிந்து பொருந்தினுய்.

காப்ப - காலத்தை வரையறுத்துப் பாதுகாக்க, ஆணம் - அன்பு, அமர்ந்

தனை – பொருந்தினை, ஆடி அமர்ந்தனை.)

'நாங்கள் உன்னை அடைவதற்கு ஏற்ற வகையில் உயர்ச்சிபெறவில்லை; அன்பு செய்யவில்லை. ஆனாலும் நீ எங்களுக்கு ஏற்ற வகையில் உருவம் முதலியனபெற்று இறங்கிவந்து அருள் செய்கிறாய்' என்று இறைவன் கருணையைப் பாராட்டுகிறார் புலவர்.

இந்தப் பாடல் கலித்தொகையில் கடவுள் வாழ்த்தாக உள்ள பாடலின் பிற்பகுதி.

படுபறை பல இயம்பப்
பலஉருவம் பெயர்த்துநீ
கொடுகொட்டி ஆடுங்கால்
கோடுயர் அகல் அல்குற்
கொடிபுரை நுசுப்பினாள்
கொண்டசீர் தருவாளோ!
மண்டமர் பலகடந்து
மதுகையால் நீறுஅணிந்து
பண்டரங்கம் ஆடுங்கால்
பணைஎழில் அணைமென்றோள்
வண்டுஅரற்றும் கூந்தலாள்
வளர்தூக்குத் தருவாளோ!
கொலைஉழுவைத் தோல்அசை இக
கொன்றையந்தார் சுவற்புரளத்
தலைஅங்கை கொண்டுநீ
காபாலம் ஆடுங்கால்
முலைஅணிந்த முறுவலாள்
முற்பாணி தருவாளோ!

என ஆங்குப்

பாணியும் தூக்கும் என்று இவை
மாண்இழை அரிவை காப்ப
ஆணமில் பொருள்எமக்கு
அமர்ந்த ஆடி.

# அம்மையப்பர்

சிவநெறி வித்தகர்
வித்துவான் திரு. மு. சுந்தரேசம் பிள்ளை

பண்புடன் பிரிப்பின்றி யிருப்பது பண்பி; அதுபோலச்சத்தியுடன் பிரிப்பின்றியிருப்பது சிவமாகும். சத்தியுடன் கூடிய சிவத்தைச் சதாசிவமென்பர். இது எண்ணும் முதன்மையும் எண்ணுதற்கு உரிய ஆற்றலுடைமையுமாகிய இணைப் பெருமையுடையது. ஏவுவதும் நடப்பதும் இரண்டும் ஒன்றிய நிலையுமாகும். இந்நிலையினை ஆளக்கருதும் அரசன் தக்காரை நியமித்து ஆளும் நிலை போன்றது எனலாம்.

இச் சதாசிவ வடிவினை அருவவுருவத்திருமேனி எனவும் சகள நிட்களத்திருமேனி எனவும் கூறுவர். திருக்கோயில் மூலத்தானத்திலுள்ள மூலலிங்கம் சிவமும் சத்தியுமான வடிவமாகும். பீடம்-சத்தி, இலிங்கம் சிவம். 'உடையாளொடு ஒன்றும் புலியூரான்' இத் திருமுறைத் தொடர் இதனை விளக்குதல் காண்க: அம்மையும் அப்பனும் வேருகஇருக்கும் நிலை போகவடிவம் சகளத் திருமேனி. உருவொடு தொழில் பெயர் ஒன்றுமில்லாதவன் இறைவன். உலகுய்யத் தம் மிச்சையால் திருவுருவங் கொள்வன். "நிருத்தனர் தமதிச்சையால் திருவுருக் கொள்வர்" என்பார் பரஞ்சோதி முனிவர். இச்சையால் கொள்ளும் வடிவங்கள்போக வடிவம், யோக வடிவம், கோரவடிவம் என மூன்றும். போக வடிவம், இறைவன் இடப்பாகம் மாதராளோடு இயைந்து நிற்பது.

இங்ஙனம் இயைந்து நிற்கும் இறைவனே ஆணுகவும் பெண்ணுகவும் பிறக்கும் உயிர்கட்கு இன்பந்தருகின்ருன். அனைத்துலகுக்கும் காரணமான அம்மையப்பர் தம்முள்கூடி நின்ருல், உயிர்கள் ஆண் பெண் வடிவங்களோடு கூடிநின்று இன்பம் பொருந்தும். உயிர்க்குயிராக விளங்கும் அம்மையப்பர் பிரிந்து நின்ருல் இயங்கியற் பொருள்களும் நிலையியற் பொருள்களும் ஆண் பெண் வடிவங்களின் கூட்டுறவு இன்றிப் பிரிந்து நிற்கும். "ஈருடல் முயங்குமார்வமின்றியே இருந்த யார்க்கும் காரணன் சிவனே" – என்பர் கச்சியப்பர்.

இறைவன் கயிலையில் தென்முகக் கடவுளாய் இருந்தபோது இன்பத்தை ஊட்டுவிக்கும் காமன் உயிருடன் இருந்தும் உயிர்கள் இன்பானுபவமின்றி இருந்தன. பரமன் பார்வதியை மணந்து அம்மை அப்பராய் விளங்கியபோது அனைத்துயிர்களும் இன்புற்றிருந்தன.

உயிர்கள் தூய இன்பம் துய்த்து மும்மலம் நீங்கி முழு இன்பம் பெறச் சிவபரம் பொருள் ஒருவரே அம்மை எனவும் அப்பன் எனவும் பிரிந்து மணங்கொள்வர் "வியனுலகம் வாழச் செவ்வண்ணப் பெருமானுர் மணவினை யில் திருவுள்ளம் பற்றினுரால்"—என்பர் சிவஞான முனிவர். "ஒருமுகம் குறவர் மடமகள் கொடி போனுசுப்பின் மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே" என்பது நக்கீரர் வாக்கு. இதற்கு நச்சர் கூறுமுரை 'காம நுகர்ச்சியில்லாத இறைவன் இங்ஙனம் நகை அமர்ந்தான். உலகில் இல்வாழ்க்கைநடத்தற்கென்றுணர்க அது "தென்பாலுகந்தாகுந்தில்லைச்சிற் றம்பலவன்—என்பதனுட் "பெண்பா லுகந்திலனேற்பேதாயிரு நிலத்தோர் விண்பாலியோகு எய்திவீடுவர் காண் சாழலோ" என்பதனு லுணர்க" என்பது. மக்கள் மணம் மணமக்களதுநலம் பற்றியது. காமமும் அது தரும் மயக் கமுமங்கேயுண்டு. மாதேவன் மணம் மன்னுயிர்கள் நலன பற்றியது. காமமும் அது தரும் மயக்கமும் கடவுளுக் கில்லை. அறிவு வடிவாகிய அப்பன் அருள் வடிவாகிய அம்மையை மணந்து கொள்வது எல்லா உயிர் களும் இன்பம் பெறும் பொருட்டு நடித்துக்காட்டும் இயல்பினது.

"அம்மையப்பரே உலகுக்கு அம்மை அப்பர்" திருக்களிற்றுப்படியார்.

# தில்லையில் திருநாவுக்கரசர்

திரு. பு. ர. சுவாமிநாதன், எம்.ஏ., எல்.டி.,

திருப்பாதிரிப்புலியூர்த் திங்கள் வெண் கொழுந்தணி சடையனைக் கும்பிட்டன்புற விழுந்தெழுந் தருள் நெறி விளங்கப் பாடிய "ஈன்றாளு மாய்" என்ற பதிகத்தின் இறுதிப் பாடலில் "பாதிரிப்புலியூர் இருந்தாய் அடியேன் இனிப் பிறவாமல் வந் தேன்று கொள்ளே" என வேண்டிய நாவுக்கரசர், பல தலங்களைத் தரி சித்த பின் "செஞ்சொல் திருமறை பொழி அந்தணர் பயில் தில்லைத் திரு நகர் எல்லைப் பால் மஞ்சிற் பொலி நெடுமதில் சூழ் குடதிசை மணி வாயிற்புறம் வந்து, சிவமே நிலவிய திருவீதியுட்புகுந்து முனிவர்கள் துதி யுடன் கோபுரம் தொழுது ஆலயத் துட்சென்றவர், "மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிந்த மாநிலத்தே" என்று பாடினர். கரை ஏறியவுடன் பிறவியே வேண்டாமென்றவர் அம் பலவாணரைக் கண்டார். அவர் ஆடல் அழகினில் தம்மையே மறந் தார். குஞ்சிதபாதத்தைத் தெரிசித் தார். நெஞ்சுருகித் துதித்தார். தாம் பெற்றுள்ள மனிதப் பிறவியினாலல் லவா இவ்வரிய காட்சி அவருக்குக் கிடைத்தது. இம்மட்டுமா! தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம் நாவுக்கரசரை என்று வந்தாய் எனும் எம்பெருமான் தன் திருக்குறிப்புடன் வரவேற்றது குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும், பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறும் இனித்தமுடைய எடுத்தபொற் பாதத்தையுங் கண்ட வுடன் பிறவி வேண்டாமென்றவர் "மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மானிலத்தே" எனத் தம் கருத்தை மாற்றிக்கொண்டார். அம் பலவாணனைப் போற்றுவதற்கு எத் தனை பிறவி எடுத்தாலும் போதாது என்ற நிலையையடைந்தார்.

எவ்வாறு நாவுக்கரசர் சிற்றம்பல வனைத் தரிசித்தார் என்பதைத் தெய் வச் சேக்கிழார் திருவார்த்தைகளா லேயே காண்போம்.

கையுந்தலைமிசை புனை யஞ்சலியன
  கண்ணும் பொழிமழை யொழியாதே
பெய்யுந்தகையன கரணங்களுமுடன்
  உருகும் பரிவின பேறெய்தும்
மெய்யுந் தரைமிசை விழுமுன்பெழுதரு ...
  மின்தாழ் சடையொடு நின்றாடும்
ஐயன் திருநடம் எதிர்கும் பிடுமவர்
  ஆர்வம் பெருகுதல் அளவின்றால்

அப்பரடிகள் வழிபட்ட அந்த நிலை யில் மக்கள் வழிபடவேண்டுமென்ற எண்ணத்துடனேயே சேக்கிழார் சுவாமிகள் அப்படியே பின் வரும் சந்ததியினராகிய நமக்குத் தெளி வாகக் காட்டியுள்ளார். தம்மை

மறத்து அகம் உருகித் தொழும் நிலை ஏற்பட்டால் "என்று வந்தாய்" என்ற சொற்களை நாமும் கேட்கமுடியும் இவ்வாறு பலமுறை தொழுது பல பதிகங்களைப்பாடிப் பரவசமுற்ருர்

'அத்தா உன் ஆடல் காண்பான் அடியனேன் வந்தவாறே' எனவும் சிற்றம்பலத்தே நிருத்த நான் காண வேண்டி நேர்பட வந்தவாறே' எனவும், ஏத்துவார் இடர்கள் தீர்ப்பாய் தில்லைச் சிற்றம்பலத்துக் கூத்தா உன் கூத்துக் காண்பான் கூட நான் வந்தவாறே' எனவும் தாம் அவ்வப்போது அனுபவித்த காட்சிகளைப் போற்றிப் பாடுகிருர்.

'மன்றுள் உமைகாண நடம்புரி சென்னி தாள் சேர்ப்பாம்' என்ற உண்மையை தாமும் ஒப்புக்கொண்டு "மஞ்சடை சோலைத் தில்லை மல்குசிற்றம்பலத்தே அஞ்சொலாள் காண நின்று அழகநீ ஆடுமாறே" என தாம் கண்ட நடனக் காட்சியை வியந்து பாடுகிருர்.

நடராசப் பெருமானையும் அவர் ஆடலையும் கண்ட கண்கள் மற்றெதையும் பார்ப்பதில் பொருளில்லை அது வீண் காட்சியே என்பதை,

அயனெடு மாலுக்குங் காண்பரிய வணுகிய தில்லைச் சிற்றம்பலவன் உடுத்த துகில் கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே "எனவும் 'தில்லைச் சிற்றம்பலவன் சிரித்தமுகங் கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே' எனவும் பலவாருகத் தாம் பெற்ற உணர்ச்சியை நமக்கெல்லாம் உணர்த்துகிருர்.

இத்தகைய காட்சிகளை ஓரளவு இன்றும் நடராசப் பெருமான் திருத்தேருக்குப் புறப்பட்டுச் செல்கின்ற சமயம் உணர முடிகிறது. தரிசனக் காட்சிகளும் அப்பர் பெருமான் உணர்ந்த பல நிலைகளை நமக்குப் புலப்படுத்துகின்றன. அப்பரடிகள் எவ்வளவு நுணுகி நுணுகி ஆண்டவன் திருவடிவினில் ஈடுபட்டிருப்பின் ஒவ்வொரு பகுதியின் சிறப்பியல்புகளை வாயாரப் புகழ்ந்து பாடி நமக்கெல்லாம் ஒரு வழிகாட்டியாக இருக்கிருர் என்பது புலனுகும். இத் திருவிருத்தப் பதிகத்தின் ஒவ்வொரு பாடலும் படித்து மகிழ்தற்குரியது.

சிற்றம்பலவன் தம்மை ஆட்கொண்ட சிறப்பினை அப்பரடிகள்

"ஊனத்தை நீக்கி உலகறிய என்னை
ஆட்கொண்டவன்
தேனைத்தெனக்கினியான் தில்லைச்
சிற்றம்பலவன் எங்கோன்"

எனவும்

வாய்த்தது நத்தமக்கீதோர் பிறவி மதித்
திடுமின்
பார்த்தற்குப் பாசுபத மருள் செய்தவன்
பத்தருள்ளீர்
கோத்தன்று முப்புரந் தீவளைத்தான்
தில்லையம்பலத்துக்
கூத்தனுக்காட்பட்டிருப்பதன்ருே
தத்தங்கூழைமையே

என விளக்கியுள்ளார்.

தில்லைச் சிற்றம்பலவனை எப்பொழுதும் நாம் சிந்தித்துக் கொண்டிருக்க வேண்டும் என்ற நல்லெண்ணத்துடன் எழுந்தருளிய பாடல்

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப்பூமிசை
என்னம் பாலிக்கு மாறு கண்டின்புற
இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே

என்பதாகும் மனிதனுகப் பிறந்த ஒவ்வொருவரும் தாம் உணவருந்து முன் ஆண்டவனுக்கு நன்றி செலுத்த கடமைப் பட்டிருக் கின்றனுர். ஆனல் ஒரு சிலரே இதைக் கடைப்பிடிக்கின்றனர். பிற சமயத்தினர் இதைக் கட்டாயமாகச் செயல் படுத்துகின்றனர். சைவ சமயத்தைச் சார்ந்த அனைவரும் மேற்கூறிய பாடலைக்கூறிய பின்னரே உணவருந்தவேண்டும். மகேசுவர பூசை காலங்களில் இப்பாடல் பாடப் பெற்ற பின்னரே அடியவர்கள் உணவு கொள்வதைக் காண்கிருேம். ஊழ்வினை காரணமாக தற்காலத்தில் பெரும் பான்மைச் சைவகுடும்பத்தார் தம் கடமைகளிலிருந்து வழுவி விட்ட னர். மீண்டும் இவை பழக்கத்தில் கொண்டுவரப்பட வேண்டும். சமய வளர்ச்சிக்கு இவை பெரிதும் உதவும். ஒவ்வொரு சைவனும் இப்பாடலைப் பாடி தன் நன்றியைச் செலுத்துங்கால் தில்லைச் சிற்றம்பலவனை நினைத்து வழி பட்டேயாக வேண்டும் என்ற பெருங் கருணை உள்ளத்தோடல்லவா நம் நாவுக்கரசர் இவ்வரிய பாடலை அருளிச் செய்துள்ளார்.

பொதுவாகமக்கள் தமக்கு இன்னல் ஏற்படும் போதுதான் ஆண்டவனை நினைக்க முற்படுகின்றனர். தம்மால் இயலாத நிலைவரின் அவனிடம் சரணடைகின்றனர். எப்போதுமே சிற்றம்பலவனின் அடியவராகி விட்டால் நமக்கு ஒரு தொல்லையும் ஏற்படாது என்பதை தில்லைமாநகர்ச் சிற்றம்பலவனுர்க்கு எல்லையில்ல தோரடிமை பூண்டவர்க்கு அல்லல் என் செயும் அருவினை யென்செயும் தொல்லைவல்வினைத் தொந்தந்தா னென்செயும் என அழகாக விளக்கி யுள்ளார். அப்பரடிகள் "உன் ஆடல் காண்பான். அடியேன் வந்தேன்: பத்தனுய்ப் பாடமாட்டேனுயினும் நீ என்னை இகழ வேண்டாம்" என்று வேண்டுகின்றுர். நடராசப் பெரு மானின்" முடிகொண்ட மத்தமும், முக்கண்ணினேக்கும் முறுவலிப்பும், துடிகொண்டகையும் துதைந்த வெண்ணீறும் சுரிகுழலாள் படி கொண்ட பாகமும் பாய் புலித் தோலும் தம்நெஞ்சில் குடிகொண்டு நிலைபெறுகின்ற தன்மையை உணர் கின்றுர். தமக்கு இவற்றை உணர்ந்து கொள்ளும் தகுதியில்லையெனினும் இறைவன் தாமே உட்புகுந்து அருளும் அரைது பெருங்கருணையினை எண்ணி எண்ணி உருகுகின்றுர். தில்லை வாழந்தணர்களது சிறப்பினைப் பலவாறு போற்றுகின்றுர். அவர்களைச் சீலத்தார்-சிட்டர்—உலகுக்கெல்லாம் திருவுடையந்தணர் என்றெல்லாம் துதிக்கின்றுர். நினைப்பவர் மனங் கோயிலாகக்கொண்டவன் ஆகையால் அம்பலக் கூத்தனைத் தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனே என்று தம் நெஞ்சில் குடிகொண்ட நிலையைப் போற்றி வாழ்த்துகின்றுர்.

தில்லையில் நாவுக்கரசர் பாடிய திருத்தாண்டகப்பாடல் "அரியானை அந்தணர் தம் சிந்தையானை" என்ற பாடல் சிற்றம்பலவனின் பலபெருமை களைக் கூறுகின்றது எவராலும் இறை வனின் முழு இயல்பையும் அறிய இயலாது. ஒருசிறிதே தான் உணர்ந்து கொள்ள முடியும் ஆக இறைவன் அரியவன். அப்பாடலின் இறுதியில் "பெரியானை" என்று போற்றுகின்றுர். அவன் எல்லாப்

பொருள்களிலும் நீக்கமற நிறைகின்ற தன்மையன் என்பதையும் உணர்த்து கின்ருர். அத்தகைய இறைவனைப் பேசாத நாளெல்லாம் பயனற்றவை என்பதையும் கூறுகின்ருர். தில்லைப் பெருமான் திருநாமத்தையும் புகழை யும் மறவாமல் நினைந்து வழிபடும் நாளே நாம் பிறந்ததா லடையும் பயனுள்ள நாள் மற்றவை தீவினை புரிந்து துன்பமுறும் நாட்களே.

ஆக அப்பரடிகள் தில்லையிலிருந்த காலம் முழுமையும் சிற்றம்பலவனைப் பாடிபயனுள்ள நாட்களாக அவற்றை ஆக்கிக்கொண்டார். அருகேயுள்ள திருக்கழிப்பாலையைத் தரிசனம் செய்யச்சென்றவர் மீண்டும் அம்பல வாணனைப் பார்த்து தரிசிக்க வேண்டு மென்ற விருப்பம் அதிகமாக மீண்டும் தில்லைக்கு வந்து தங்கிச் சென்ருர். சிற்றம்பலவனையே அடைக்கலமாகக் கொண்டார்.

படைக்கலமாக உன்நாமத்தெழுத்
தஞ்சென் நாவிற் கொண்டேன்
இடைக்கலமல்லேன் எழுபிறப்பும்
முனக்காட்செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் தொழுது
வணங்கித் தூநீறணிந்துன்
அடைக்கலங் கண்டாயணிதில்லைச்
சிற்றம்பலத்தானே

# சிவகாமியம்மை தோத்திரங்கள்

திரு. மு. அருணசலம்.

பராசக்தியைத் துதிக்கும்போது, உமாபதிசிவாசாரியர் சிவப்பிரகாசம் என்னும் சித்தாந்த சாத்திரத்தில் பின்வருமாறு பாடுகிருர் :

பரந்தபரா பரையாதி பரனதிச்சை
பரஞானம் கிரியைபர போகரூபம்
தருங் கருணை உருவாகி, விசுத்தா சுத்தத்
தனுகரண புவனபோ கங்கள் தாங்க
விரிந்த உபா தானங்கள் மேவி, ஒன்ருய்,
விமலமாய், ஐந்தொழிற்கும் வித்தாய், ஞாலத்து
அரந்தைகெட மணிமன்றுள் ஆடல் காணும்
அன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.

இவ்வாறு பரம்பொருளை ஐந்தொழில் செய்யுர்படியும் உலகத்தின் இருளெல்லாம் கெடும்படியும் சிற்றம்பலத்தில் ஆடல் காண்கின்ற அன்னையைச் சிவகாமசுந்தரி என்று போற்றுகிருேம். நடராசப் பெருமானைத் துதிக்கும் போது. திருவிளையாடல் பாடிய பரஞ்சோதி முனிவர், ‘பெண்மையுருவாகிய தன் ஆனந்தக் கொடி மகிழ்ச்சி பெருக யார்க்தம் அண்மைராய் அம்பலத்துள் ஆடியருள் பேரொளியை அகத்துள் வைப்பாம்’ என்று பாடுகிருர். தன் ஆனந்தக் கொடி என்று அவர் கூறுவது சிவ காம வல்லீ என்ற வடமொழித் தொடரின் மொழிபெயர்ப்பாம்.

சிதம்பரத்திற்கென்று ஏற்பட்ட இரண்டு பழைய புராணங்கள் உமாபதி சிவாசாரியார் செய்த கோயிற் புராணமும், புராணத் திருமலைநாதர் செய்த சிதம்பர புராணமுமாகும். இரண்டிலும் அம்பிகையைச் சிவகாம சுந்தரி என்றே சொல்லி, போற்றியிருப்பது; சைவ அன்பர் தெரிந்து சொல்லித் துதிப்பதற்கு இடமாக உள்ளது. இப்பாடல்களைக் கீழே காண்க :

மன்றின்மணி விளக்கெனலாம் மருவு முக நகைபோற்றி,
ஒன்றியமங் கலநாணின் ஒளிபோற்றி, உலகும்பர்
சென்று தொழவருள் சுரக்குஞ் சிவகாம சுந்தரிதன்
நின்றதிரு நிலைபோற்றி, நிலவுசிரு வடிபோற்றி.

இருபதமும் துடியிடையும் திகழுடையும் தனதடமும் இயற்பொற்பூணும்
கருவிழியும் செவ்வாயும் வெண்ணகையும் பசுந்தோளும் கழுநீர்க் கையும்
பொருவருமங் கலநாணும் கந்தரமும் புரிகுழலும் புனிதன் கண்ணும்
திருவருளும் உலாவு மொழிற் சிவகாம சுந்தரிதாள் சென்னி சேர்ப்பாம்.

உமாபதி சிவம் தில்லை மூவாயிரவரில்

ஒருவர் ஆகையால், தாம்பாடிய சேக்கிழார் புராணத்திலும் பெயர் சொல்லிச் சிவகாம சுந்தரியைத் துதிக்கின்ருர்:

பரந்தெழுந்த சமண் முதலாம் பரசமய
இருள்நீங்கச்
சிரந்தழுவு சைவ நெறித் திருநீற்றின்
ஒளி விளங்க
அரந்தை கெடப்புகலியர்கோன் அமுது
செயத் திருமுலேப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரி பூங்கழல்
போற்றி.

பிற்காலத்தில் அநேகர் தாங்கள் பாடிய புராணங்களில் சிறப்பாக சிவகாம சுந்தரிக்கு வணக்கம் பாடியிருக்கின்றனர்.

இந்த நிலேயில் பார்க்கும்போது, சிவகாமி அம்மை துதியாகத் தனியே ஏற்பட்ட நூல்கள் மூன்று என்பதை இங்குக் குறிப்பிடலாம். முதலாவது தில்லேச் சிவகாமியம்மை இரட்டை மணிமாலே. இதுவழக்கமாகக் குமரகுருபர சுவாமிகளுடைய பாடல் தொகுதியில் சேர்த்தே அச்சிடப்பட்டு வருகிறது. இது மரபை ஒட்டி வெண்பாகவும் கட்டளேக் கலித்துறையுமாக இருபது பாடல் கொண்டது. இதன் நான்காவது பாடல் பின்வருவது.

ஒருவல்லி, அல்லிக் கமலத்து ளூறுபைந்
தேறலொத்த
திருவல்லி, தில்லேச் சிவகாமவல்லி என்
சித்தத்துள்ளே
வருவல்லி, செம்பொன் வடமேரு வில்
லியை வாட்கணம்பாற்
பொருவல்லி, பூத்தவி னன்றேயிப்
பூமியைப் பூவென்பதே.

இரண்டாவது பிரபந்தம், தில்லேச் சிவகாமியம்மை பிள்ளேத் தமிழ் என்பது. இது சில நூற்றுண்டுகளுக்கு முன் பாடப்பட்டது. பாடிய ஆசிரியர் நடராசப் பெருமானிடத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். அது காரணமாகவே அவர் சிவகாமசுந்தரி அம்மைக்கு ஒரு பிள்ளேத் தமிழ் பாட வேண்டும் என்று மனத்தில் எண்ணியவுடன், அவரை அறியாமலே அந்நூலுள் பலபுதுமைகள் அமைந்திருக்கின்றன. தெய்வத்துக்குப் பிள்ளேத் தமிழ் பாடும் பொழுது, அது பத்துப் பருவங்களாய்ப் பருவத்துக்குப் பத்துப் பாடலாய் நூறு பாடல்களில் அமையத்தக்கதென்று இலக்கணம் கூறும். அதுவும் ஆண்பால் பிள்ளேத் தமிழ், பெண்பால் பிள்ளேத் தமிழ் என இரு வகை. முருகன், கணபதி, திருமால் முதலிய தெய்வங்களேப் பாடுவது ஆண்பால் பிள்ளேத் தமிழ் ஆகும். சிவபெருமான், அனேத்தையும் கடந்த சர்வவியாபகமான முழுமுதற் பொருள் ஆதலின், அப்பொருளேக் குழந்தையாகப் பாவித்துப் பிள்ளேத் தமிழ் பாடுவது மரபு அன்று. அப்படி எந்த நூலும் இன்று வரை ஏற்பட்டதில்லே. இப்பிள்ளேத் தமிழுக்குரிய பருவங்கள் காப்பு, செங்கீரை, தால், (தாலாட்டுதல்) சப்பாணி, (இரண்டு கையும் சேர்த்துக் கொட்டுதல்) முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், (சிதையேல் என்று பாடுவது) சிறு பறை, சிறுதேர் என்பனவாகும். அம்பிகை போன்ற பெண் தெய்வங்களேப் பாடுவது பெண்பால் பிள்ளேத் தமிழாகும். இவ்வாறு பாடும்போது ஆண் பிள்ளேக்குரிய செயல்களாகிய சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்ற மூன்றையும் நீக்கி, அம்மானே நீராடல் பொன்னூசல் என்ற பெண்பாற் செயல்களாகிய மூன்றையும் சேர்த்துப் பாடுவது இலக்கணம். தமிழ் இலக்கிய வரலாற்றில் இதுவரை மீனுட்சியம்மை பிள்

ளைத் தமிழ் முதலாக அம்மைக்குப் பிள்ளைத்தமிழ் பாடிய ஆசிரியர் அனைவரும் இந்த மரபை ஒட்டியே நூறு பாடல்கள் பாடியிருக்கிறார்கள், ஆனால் நம்மாசிரியர் தமது பிள்ளைத் தமிழில் பல மாறுதல்கள் செய்திருக்கிறார். இவர்பாடியுள்ளபடி பாடல்கள் 120. பருவங்கள் 15. சில மாறுதல்களைக் கீழே காண்போம், காப்புப் பருவத்தில் அம்மையைக் காக்கும்படி திருநீற்றையும் பிரணவ மந்திரத்தையும் அழைக்கிறார். பிறகு செங்கீரை முதல் அம்புலி வரையிலுள்ள பருவங்கள் சம்பிரதாயமாகவே உள்ளன. எட்டாவதாக இவர் சிற்றில் பருவம் என ஒரு பருவம் அமைக்கிறார். ஆண்பாற் பிள்ளைத் தமிழில் தலைவனை விளித்து, 'சிற்றில் சிதைபேல' என்று சிறுமியர் வேண்டுவதாகப் பாடுவது மரபு. பெண்பாலுக்குச் சிற்றில் பாடுவதில்லை, ஆனால் இவர், அம்மையே உலகமெல்லாம் படைத்துக் காத்து அழித்து மறைத்து அருள்பவள் ஆதலால், 'சிற்சபையில் சிவகாம சவுந்தரி நீ சிற்றிலிழைத்தருளே' என்று பாடுகிறார். இப்பருவத்துள் உள்ள பாடல்கள் யாவுமே மிகச் சிறப்புடையவை. முதற்பாடலை மட்டும் கீழே தருகிறோம்.

அடிமுடியுமாயிரத் தெட்டு மாற்றுச் செம்பொன்
அழகுறச் சுவரியற்றி
அட்டதிக் குங்கால்கள் நெட்டு நடு
அசையாத தூணிறுத்து [மேருநடு
இடையிலறைவீடு பதினைெலன வகுத்து முகடு
இனிய செம்பொற் கற்றையிட்டு
எழுதிரை கட்டியிரவும் பகலும்
எரியவே யிரு விளக்கேற்றி வைத்துப்
படியிலகு பதவிப் பழங்கல மடுக்கி விளை
பச்சை நெல்லிரு நாழியிற்
பல்லுயிரு முண்டு தேக் கிட்டிடு மடுக் களைப்
பலவடுப்புஞ் சமைப்பத்
திடமாநவு பெருவீடுகட்டி விளையாடுமுமை
சிறுவீடு கட்டியருளே
சிவகாம சுந்தரி யெனும் பெரிய விமலையே
சிறுவீடு கட்டியருளே.

இனி, வழக்கமாய் அமைய வேண்டிய பொன்னூசல் புதிய நீராடல் என்ற இரண்டு பருவங்களையும் விரிவாக இரண்டு தனிப்பருவங்களாக அமைத்திருக்கிறார். நீராடலைப், புதிய நீராடல் என்றே பாடுகிறார். இவையன்றி, பந்தாடற் பருவம் என்ற ஒரு பருவம் பத்துப் பாடல்கள் கொண்டதாகப் புதிதாய் அமைத்திருக்கிறார். மற்றும் ஒரு முழுப் பருவத்தில் குதலைமொழியாடல், பாவை விளையாடல், கழங்காடல், அம்மானை என்ற நான்கு பருவங்களை அடக்கிப் பாடுகிறார். இவை 'குழகன் மகள் சிவகாமசுந்தரி நின் மழலைவாய் குதலைமொழியாடியருளே' என்றும், 'பரமசிவகாம சுந்தரியம்மை பொற்பாவை விளையாடியருளே' என்றும், 'கனக சிற்சபையில் வாழ் சிவகாமசுந்தரி அரச அரகர சிவகாமி அம்மே அம்மனை ஆடுக' என்றும் அமைந்த மகுடங்களை உடையவை. இவர் பாட்டினுடைய சுவைக்கு எடுத்துக் காட்டாக இரண்டு பாடல்களைக் கீழே தருகிறோம்.

சுருதி மணக்கும், சிவாகமத்தின்
ஜேற்ற மணக்கும், வடகலைநூற்
றுலங்கி மணக்குந், திராவிடத்தின்
சுவையே மணக்கும், பிராகிருத
மருவி மணக்கும் உலகளிக்கும்
மகிமை தருமந்திர மணக்கும்
மலையமிருக்கு மியலிசையும்
வளர் மந்திரத்தி றுதாரம்

பெருகி மணக்கும் சமயம் நெறி
பிறழாச் சகல சாத்திரமும்
பேதா பேத வகை மணக்கும்,
பேரம்பல நாட்டகத்தார்கள்
தரும மணக்குங் கனிவாயிற்
றகைசேர் முத்தந்தருவாயே
தழைக்கும் புலியூர்ச் சிவகாமித்
தாயே முத்தந் தருவாயே.
வாழ்வே வருக, எமது கண்ணின்
மணியே வருக மதியூடு
வந்தே விளங்குமொளி வருக,
வளருமொளிக் குள்ளொளி வருக,
தாழ்வே யகலுஞ் சிவம் வருக,
தழைக்குஞ் சிவத்தின் செயல் வருக,
சகல உயிர்க்கும் உயிர் வருக,
சகமுமுயிருந் தான் பூத்த
பூவே வருக, பூவுலகம்
பூத்தே காய்த்துப் பழுத்த வித்தின்
பொருளே வருக, பொருளாகிப்
போகம் விளைக்கும் ஆனந்தத்
தெருளே வருக, புலியூர் வாழ்
திருவே வருக வருகவே,
தேயா மதியே சிவகாமித்
தாயே வருக வருகவே.

இனி மூன்றாவதாகக் காரைக்குடி சொக்லிங்க அய்யா அவர்கள் பாடிய தில்லைச்சிவகாமியம்மைபிள்ளைத்தமிழ் குறிப்பிடத் தக்கதாகும். இது சம்பிர தாய முறையில் அமைந்தது. காப்புப் பருவத்தில் திருமால், சத்தமாதாக் கள் முதலிய தெய்வங்களைக் காக்க வென்று இவர் அழைக்காமல், சதா சிவத்தின் ஐந்து முகங்களான ஈசா னம், தத்புருடம், அகோரம், வாம தேயம், சத்யோசாதம் என்ற பஞ்ச பிரம்மங்களையும் மந்திர ரூபமான சதாசிவத்தினுடைய அங்கங்களான இருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அஸ்திரம் ஆகிய ஆறு அங்கங்களையும் ஆகப் பதினொரு மந்திரங்களால் காக்கவென்று கூறு கிறார். இவர் பாடலுக்கு எடுத்துக் காட்டாக ஒன்றைத் தருகிறோம்.

தனையொப் பரிதாய்ச் சிவரூபந்
தானாய் விளங்குஞ் சிவகங்கைத்
தடமேற்றிசை வாழ் திருத்தளியிற்
சத்து ரூபத் தனி வருக
நினைவிற் கரிதாய்ப் பாதலங் கீழ்
நிகழ் பல் புவன மூடுருவி
நேர் நின்றொளிருஞ் சுடர்க் கொழுந்தாய்
நிலவுந் திரு மூலட்டான
முனைவற் கிடப்பாற் சித்துருவாய்
முன்னின் றெமையாளுமை வருக
முதலைந் தொழிற்றுண்ட வமைசயா
முறைசெய் சொரூப முதல்வன் பால்
வனையற் புதவானந்த வடி
வத்தி னிலங்க மலை வருக,
வளங்கூர் தில்லை மணிமன்றின்
மயிலே வருக வருகவே.

இவையன்றி' சிவகாமியம்மையைப் பெயர் சொல்லித் துதிக்கும் வேறு பிரபந்தம் இல்லை என்று சொல்ல வேண்டும். சிறப்பான வேறு மூன்று பாடல்களையும் சொல்லி இக்கட் டுரையை முடிப்போம். சிவதரு மோத்தரம் கூறுகின்ற தோத்திரப் பாடல்.

அப்பாலைக் கப்பாலைக் கப்பாலாய்
அறிவரிய அமலை தன்னை
யெப்பாலுந் தானாகித் தொழிலைந்தும்
இயற்றாதே இயற்று வாளை
முப்போது மலர்தூவி முடிசாய்த்து
மனத்தகத்து முன்னுவாரைத்
தப்பாதே பிறப்பறுக்குஞ் சிவகாம
சவுந்தரியைப் பணிவாந்தான் முன்.

அபிராமி அந்தாதியில் 68-ஆம் பாடல் அம்பிகையைச் சிவகாம சுந்தரி என்றே பெயர் சொல்லித் துதிக்கின்றது.

பாரும், புனலும், கனலும், வெங்காலும்,
படர் விசும்பும்
ஊரும் முருகு சுவை ஒளி ஊறு ஒலி
ஒன்று படச்
சேரும் தலைவி, சிவகாம சுந்தரி
சீரடிக்கே
சாரும் தவம் உடையார் படையாத
தனம் இல்லையே.

கடைசியாக, திருத்தணிகைப் புராணச் சுருக்கத்தில் அதன் ஆசிரியர் அம்பிகை இறைவனோடு அனன்னியமாகக் கலந்து நின்று அருள் செய்கின்ற நிலையைப் பல எடுத்துக் காட்டுகளால் குறிப்பிட்டுச் சொல்வது முழுமையும் சாத்திரப் பொருளை உள்ளடக்கியது. இது கற்போருக்கும், சொல்லித் துதிக்க விரும்புவோருக்கும் பெருவிருந்தாய் உள்ள பாடல் :

சொற்பொருளும் உடலுயிரும் சுடரொளி
யும் விரைமலரும் சுவையும் பாலும்
நிற்கு நிறை வெனக் கலந்து சிவத்தில
னன்னி
நிலவும் அண்டம்
பற்பலவும் படைத்தளிக்குந் தாயாகி
வினை சமமாம்
பருவந் தோன்றும்
சிற்பரையைத் தில்லை நகர்ச் சிவகாம
சவுந்தரியைச்
சிந்தை சேர்ப்பாம்.

மேலே குறித்த பாடல்களை அன்பர்கள் பாராயணம் செய்து அம்மையின் திருமுன்பு பாடி அருள் பெறுவதற்குத் துணை செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு இங்குத் தொகுத்துத் தந்திருக்கிறோம்.

# கல்வெட்டுகளில் – சிற்றம்பலம்

பேராசிரியர்
திரு. சி. கோவிந்தராசனுர்

சோழநாட்டிலிருந்து புலவரொருவர் ஈழநாடென்னும் இலங்கைக்குச் சென்ருர். அந்நாட்டு மன்னனைப் புலவர் கண்டபோது, சோழநாட்டின் சிறப்பினை உரைக்குமாறு அம்மன்னன் கேட்டுக்கொண்டான். அவ்வளவில், புலவர் தமது சோழநாட்டுப் பெருமையினைப் பாடலொன்றினுல் புலப்படுத்தினுர். அப்பாடலின் சிறப்புப் பகுதியாக,

"கருது செம்பொனின் அம்பலத்திலோர்
கடவுள் நின்று நடிக்குமே
காவிரித் திருநதியிலே யொரு
கருணைமாமுகில் துயிலுமே"

என்ற இரண்டடிகள் இடம் பெற்றிருந்தன. இதனுல், சிற்றம்பலத்திலாடும் கடவுளோடு, திருவரங்கத்தில் உறங்கும் திருமாலையும் பெற்றதால் சோழநாடு பெருமைபெற்று விளங்கிற்றென்பது புலப்படுத்தப் பெற்றுள்ளது. ஆடவல்லானும் அரங்கத்தானும் இணைந்திருந்து அருள்பெருக்கும் தில்லைத் தலத்தால் ஊரும், நாடும் பெருமை பெற்று விளங்குவது குறிப்பிடத் தக்கதாகும்.

இத்தலத்தின் பழைய பெயர் சிற்றம்பலம் என்பதேயாகும். தில்லைவனம் என்பது புராண வழக்கு. கல்வெட்டுகளில், புலியூர், பெரும்பற்றபுலியூர், பொற்புலியூர், தில்லையூர், தில்லைத்தனியூர், கோயில், தில்லைச் சுடலை என்று வழங்கப்படுகின்றது. சிற்றம்பலம் என்பதே சிதம்பரம்என்று வடமொழியில்குறிக்கப்பட்டது. சிற்றம்பலம், பொன்னம்பலம் என்பதெல்லாம் இதன் சிறப்புப் பெயராக அமைந்த தலப்பெயர்களேயாகும்.

இவ்வூர் கி. பி. எட்டாம் நூற்ருண்டிற்குப் பின்னர் ஒரு நகராகத் திகழ்ந்ததோடு, சோழமன்னரின் பொன் மாளிகையுடன் பொலிந்து அவர்களின் பொறுப்பான கண்காணிப்புக்குரிய தனியூராகவும் இருந்தது.

தில்லை, பேரூராகத் திகழ்ந்திருந்த தென்பதனைக் கோயில் கல்வெட்டுச் செய்திகள் நன்கு உணர்த்துகின்றன. நடுநாயகமாக அமைந்திருந்த தில்லை நகரைச் சூழ்ந்து, முறையே, கீழ்பிடாகை திருவேட்களமான ஜநநாத நல்லூர், மேல்பிடாகை கங்கை கொண்ட சோழப் பேரிளமை நாட்டு அச்சேரி சாத்தங்குடி. மேல்பிடாகை மஹிபால குலஹாலநல்லூர், மேல்பிடாகை கங்கைகொண்ட சோழப் பேரிளமை நாட்டு இருந்த சேரியான சண்டேஸ்வரநல்லூர், வடபிடாகை

மதுராந்தகப் பேரிளமை நாட்டு மணலூரான அபிமான மேரு நல்லூர். தென்பிடாகை புவலோக மாணிக்க வளநாட்டு கோப்பாடியான கணபதி நல்லூர். வடபிடாகை சுந்தரசோழ நல்லூர். மிதினிக்குடியான தான விநோதநல்லூர். நல்லாலியான விக்கிரமசோழநல்லூர். எருக்காட்டஞ் சேரியான செயங்கொண்ட சோழ நல்லூர். பிடாகை பள்ளிப்படையான விக்கிரமசோழநல்லூர். பிடாகை பண்ணங்குடிச் சேரியான பரகேசரி நல்லூர். மணலூரான கங்கை கொண்ட சோழநல்லூர் திருவம்பலப் பெரும்பள்ளிநல்லூர். மதுராந்தக நல்லூர். புவனேக வீரன் பட்டினம் (புவனகிரி). வேளர்பாடி. இளநாங்கூர், காரிகுடி, கோயில்பூண்டி, சிவபுரி. அக்கன்பள்ளிப்பட்டி என்கிற விக்கிரமசோழநல்லூர். கடுவாய்ச் சேரி. கொற்றங்குடி ஆகிய இருபத்து நான்கு ஊர்கள், பிடாகை சிறையூர், சிற்றூர் என்ற முறைமையில் அமைய பெரும்பற்றப்புலியூர் என்று பேரூர் தனியூராகத் திகழ்ந்தது.

இப்பேரூர், முதல் இராசராசன் காலத்தில், "வடகரை ராஜராஜ வளநாட்டு வெண்ணையூர் நாட்டு தனியூர் பெரும்பற்ற புலியூர்" என்ற கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளது, பின்னர் ஆட்சிக்கு வந்த சோழ மன்னர்களின் காலங்களில், வளநாடுமட்டில் இராசேந்திர சோழ வளநாடு, விருதராஜ பயங்கர வளநாடு என்றெலாம் மாற்றமடைந்து, நாயக்க மன்னர்களின் ஆட்சியில், "வடகரை ராசாதிராசன் வளநாட்டு வெண்ணையூர் நாட்டு வெளுதலம்பட்டுச் சாவடி தனியூற் பெரும்பற்ற புலியூர்" என்று குறிக்கப்பட்டுள்ளது.

**கோயிலின் முதன்மை:-**

'கோயில்' என்றால் அது தில்லைச் சிற்றம்பலத்தையே குறிக்கும். அது போல 'அந்தணர்' என்றால் தில்லை வாழ் அந்தணர்களையே குறிக்கும் சிறப்புக்கு, "தில்லை மூவாயிர வனேன்", "மூவாயிர பட்டனேன்" என்னும் எண்ணளவோடு கல்வெட்டுகளில் சான்றவராகக் கையொப்பமிட்டுள்ள அந்தணப் பெருமக்களின் பெயர்கள் குறிக்கப்படுகின்றன. இது குறித்தன்றோ சுந்தரரும் திருத்தொண்டத் தொகையுள் முதற்கண் "தில்லை வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்று குறிப்பாராயினர்.

இமயச் சாரலிலிருந்து அகத்தியர் தென்னகத்திற்கு வந்த காலத்தினைத் தொடர்ந்து, தமிழகத்திற்கு வந்துற்ற நாற்பத் தெண்ணாயிரவர் அந்தணருள் ஒரு பிரிவினர் புலியூரில் தங்கி, சிவாகம விதிப்படி தெய்வ வழிபாட்டினைச் செயல்படுத்தினர். அப்பெருமக்களே "தில்லை மூவாயிரவர்" என்னும் சிறப்புப் பெயருடன் இருந்து வரும் பட்டர்களாவர். இவர்களுள் நாட்டு ஸ்ரீ மகேஸ்வரக் கண்காணியாக கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில், காத்யாயன கோத்திரத்து ஆஸ்வாயன சூத்திரத்து திருச்சிற்றம்பலமுடைய பட்டர் என்பவர் சிறப்பாகக் குறிக்கப் பட்டுள்ளார். இவர்களுள் மற்றொரு பிரிவினர், காவிரியின் வடகரை திருவையாற்றுக்கு மேற்கில் பெரும்புலியூரில் இடம் பெற்றுள்ளனர். அவர்களுள் கி. பி. எட்டாம் நூற்றாண்டில் முத்தரையர் ஆட்சியில், ஆத்ரேய கோத்திரத்து வைகானஸ சூத்திரத்து

சிங்கி நந்தீசுவர பட்டர் வேதாகம விதிகளில் வல்லவராகவும் இதிகாசங்களில் பேரறிவராகவும் குறிக்கப் பெறுகின்றார். (செந்தலைக் கல்வெட்டு.) சோழநாட்டில் விளங்கிய கோயில்கட்கெல்லாம் முதன்மையானதாக, புலியூர்ச் சிற்றம்பலம் விளங்கியதால் கோயில் தேவகாரியங்களைக் கண்காணிப்பவர்களே நாட்டிலுள்ள ஏனைய சிவத்தலங்களின் வழிபாட்டு முறைமைகளையும் கண்காணித்து வந்துள்ளனர்.

தில்லைவாழந்தணர்களுள் சிலரைக் கொண்டு, ஆண்டுதோறும் திருவாதிரைத் திருநாளில் ஆடவல்லானுக்கு திருமஞ்சனமாட்டுவிக்கும் வழக்குநாட்டில் எங்ஙனும் சிறப்பாகக் கருதப்பட்டது. இச்செய்தியினை கொங்கு நாட்டில், காவிரியின் வடகரையிலுள்ள மோகனூர் சிவன் கோயில் கல்வெட்டொன்று புலப்படுத்துகின்றது.

திருச்சிற்றம்பலக் கோயில் கண்காணிகளே பிறகோயில்களின் வழிபாட்டு நியதிகளில் உண்டான குறைகளைக் கேட்டு, அதற்கு ஆவன செய்துள்ளனர். "மூன்றும் இராசராசன் ஆட்சியாண்டு பதினாறில் (கி. பி. 1232) இராமனதீச்சரத்துக் கோயில் வழிபாட்டுக்கு முட்டுப்பாடு ஏற்பட, அக்கோயில் நிர்வாகிகளும் மகேசுரரும், தில்லைப் பெரும்பற்றப் புலியூர் கோயில் தானத்துக்கு விண்ணப்பம் செய்துகொண்டனர். தில்லை மகேசுவர்கள், சோழ மண்டலம், இராஜராஜபாண்டி மண்டலம், வீர சோழ மண்டலம், நடுவில் நாடு, தொண்டை நாடு, சயங்கொண்ட சோழமண்டலம் ஆகிய இடங்களிலிருந்த கோயிலார்களை நெல்லாகவேர, பொன்னாகவோ கொடுக்குமாறு செய்து, இராமனதீச்சுரக் கோயில் பூசனை குறைவற நிகழுமாறு ஏற்பாடு செய்துள்ளனர்.'' இச்செய்தியினை இராமனதீச்சுரக் கல்வெட்டொன்று குறிக்கின்றது. இதனால் நாட்டிலிருந்த பிற சிவன் கோயில் கோயில்களுக் கெல்லாம் முதன்மையாகப் பெரும்பற்றப் புலியூர் இருந்தமையும், பெரும்பற்றப் புலியூர் மகேஸ்வரக் கண்காணிகள் பிற கோயிலார்களால் பெரிதும் மதிக்கப் பெற்றிருந்தமையும் புலனாகும்.

விசயாலய சோழன் வழிவந்த சோழ மன்னர்கள் சிற்றம்பலத்தில் ஆடவல்லானுக்கு அணுக்கத் தொண்டு புரியும் அந்தணர்களைக் கொண்டே கோயிலின் வடபுறம் அமைக்கப்பட்டிருந்த, அபிஷேக மண்டபத்தில் முடி சூட்டிக்கொண்டு உள்ளனர். முதல் இராசராசன் அவ்வாறு முடிசூட்டிக்கொண்டபொழுதே தில்லைவாழ் அந்தணர்கள் அம்மன்னனுக்கு "சிவபாதசேகரன்" என்னும் சிறப்புப் பெயரினை அளித்துள்ளனர் என்பதை வரலாறுகள் குறிக்கின்றன. கோயிலுக்குரிய திருப்பணிகளையும், அறக்கட்டளைகளையும், நிபந்தங்களையும், பிற தெய்வப்பணிகளையும், அன்றுள்கின்ற அரசியல் தலைமை அதிகாரிகளும், கோயில் மகேஸ்வரக் கண்காணி செய்வார்களும் ஸ்ரீ காரியஞ் செய்வார்களும், சாமுதாயம் செய்வார்களும், கோயில் நாயகஞ் செய்வார்களும், திருமாளிகைக் கூறு செய்வார்களும், பண்டாரப் பொத்தகமுடையாரும், கணக்கரும் கூடி ஒருமித்தே அனுமதித்து நிகழ்த்துவார்கள்

என்பதைக் கோயில் கல்வெட்டுகள் தெளிவாக அறிவிக்கின்றன.

தில்லையில் வெற்றிக்கு அறிகுறியாக அபிஷேகம் செய்து கொள்ளும் பெருமையை விரும்பிய, வரலாறு கொண்ட பாண்டியமன்னர்களும் சோழநாட்டினைக் கைப்பற்றிய காலத்தில், வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் தில்லைவாழ் அந்தணர்களைக் கொண்டு நிகழ்த்திக் கொண்டுள்ளனர். அவர்களுள், கி.பி. 1253-ல் பட்ட மெய்திய சடையவர்மன் வீரபாண்டியன், தொண்டை நாட்டளவில் வெற்றி பெற்ற பின்னர், "பொங்குபுனற் செஞ்சடையோன் பொற்புலியூர் வீற்றிருந்து, காடவன் திறையிடக் கண்டினிதிருந்து, வீராபிஷேகமும், விஜயாபி ஷேகமும் பண்ணியருளினன்" என்னும் செய்தியினை அவனுடைய கல்வெட்டுகளிலுள்ள மெய்க்கீர்த்திப் பகுதி விளக்குகின்றது.

அபிஷேகம் செய்து கொண்ட இடம், திருக்கோயிலின் சிவகாமக் கோட்டத்திற்குத் தென் புறமும், சிவகங்கைத் திருக்குளத்திற்கு மேற்புறமு முள்ள நூற்றுக்கால் மண்டபமேயாகும். இம் மண்டபம், முதற் குலோத்துங்க சோழன் படைத் தலைவனாகிய மணவிற் கூத்தன் காலிங்கராயப் பல்லவராயனால் கி. பி. 1076-ல் கட்டப்பட்டதாகும். போர்க்களங்களில் கலந்து கொண்டு வெற்றியெய்திய இளவரசனாகிய விக்கிரம சோழனது வெற்றிச்சின்னமாக, அவனுடைய தந்தை முதற்குலோத்துங்கன் விருப்பப்படி சேனாதிபதி காளிங்கராயன் கட்டுவித்து, "விக்கிரம சோழகன் திருமண்டபம்" என்ற பெயரையும் கல்லெழுத்துக்களால் மண்டபத்தின் தூண்களில் பொறித்து வைத்தான் என்று கருதியறிய முடிகின்றது. பின்னர் வீரபாண்டியன் விருப்பப்படி மண்டபத்தின் தென் முகப்பில் "வீரபாண்டியன் திருமண்டபம்" என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

**கோயில் கோபுரங்கள்**

தில்லைச் சிற்றம்பலத்துக்குத் தெற்குத் திருவாயிலும் கோபுரமுமே சிறந்ததாகும். இக்கோபுரத் திருப்பணி கி. பி. 1243-ல், காடவர் கோன் சகலபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ அவனி ஆளப்பிறந்தான் கோப் பெருஞ்சிங்கதேவனால் தொண்டை நாட்டு ஆத்தூரில் 301¾ வேலி நிலம் இறையிலிதேவதானமாக ஏற்படுத்தி அதன் வருவாயினைக் கொண்டு செய்யப் பெற்றதாகும். இதனைக் கோயிலின் இரண்டாவது திருச்சுற்று வடக்கு மதிற்சுவரிலுள்ள கல்வெட்டு விளக்குகின்றது. கல்வெட்டின் ஒருபகுதி.

"தனியூர் பெரும் பற்றப் புலியூர் உடையார் திருச்சிற்றம்பல முடையார்க்கு ஐஞ்சாவது ஆடி மாத முதல் தேவதான இறையிலியாக இக் கோயில் தெற்கில் திருவாசல் சொக்கச்சியன் திருநிலை எழு கோபுரத் திருவாசல் திருப்பணிக் குடலாக விட்டோமென்று, இப்படிச் சந்திராதித்தவரை தேவதான இறையிலியாகச் செய்வதாக ஆத்தூர் திருமுத்தீஸ்வர முடையார் கோயிற் கல்லும் வெட்டி நாற்பாலெல்லையிலும் திருச்சூலஸ்தாபனமும் பண்ணி உடையார் திருவேகம்பமுடையார்

கோயிலிலும் கல்லும் வெட்டுவித்த தென்றும், இப்படிக் கோயிற் கணக் கிலுமிட்டு கோயிலிலுங் கல்லு வெட்டு விப்பதென்றும் தேவர் திருமுகம் வருகையில் இத்திருமுகம் இரண்டா நிலத்தில் கொக்கவும் பண்ணுவதே. இவை சோழகோன் எழுத்து, என்று வந்த ஏவற்திட்டின்படி கல் வெட்டியது உ."

என்பதாகும். இக்கல் வெட்டின் பிரதிகள் ஆத்தூர் முத்தீஸ்வரத்திலும் கச்சி ஏகம்ப முடையார் கோயிலிலும் இருப்பதைக்கல்வெட்டுச் செய்தி உணர்த்துகின்றது.

மேலைக் கோபுரம், சடையவர்மன் சுந்தர பாண்டியனால் கி.பி. 1258-க்கு மேல் கட்டப்பட்டு, சுந்தர பாண்டியன் கோபுரம் என்ற பெயருடன் விளங்கியது என்பதைக் கல்வெட்டுகளால் (Ibid, No. 624) அறிய முடிகின்றது. இக்கோபுரத்தைக் கட்டிய சிற்பிகள் விருத்தகிரி கேசவப் பெருமாளும் அவன்மகன் விச்வமித்துருவும், திருப்பிரைக்குடையாசாரி திருமருங்கனும், அவன் சகோதரன் காரணாசாரியும்ஆவார்கள். இக்கோபுரம், "சுந்தப் பாண்டியன் திருநிலை எழு கோபுரம்" என்று பெயர் பெற்றிருந்ததை (A. R. No. 176 of 1892) கல் வெட்டுப் பகுதி குறிக்கின்றது.

வடக்குக் கோபுரத்தை, கி. பி. 1509-க்கு மேல் விஜயநகர வேந்தனாகயிருந்து பெரும் புகழ் பெற்ற கிருஷ்ணதேவராயரால் அவரது ஒரிசா வெற்றிக்கு நினைவாக கட்டப்பட்டது என்பதைக் கோபுரத்தில் இரண்டிடங்களில் பொறிக்கப் பட்டுள்ள கல்வெட்டுகள் குறிக்கின்றன. அக்கல்வெட்டுகள் கிரந்த எழுத்துக்களில் உள்ளன. அவற்றுள் ஒன்று:

"ஸ்வஸ்திஸ்ரீ இந்த கோபுரம் ராஜாதிராஜன் ராஜபரமேஸ்வரன் ஸ்ரீ வீரபிரதாப ஸ்ரீ கிருஷ்ண தேவ மஹாராயந் தர்மம் ஆக ஸிம் ஹாத் திரை பொட்டுனூற்கு எழுந்தருளி ஜயஸ்தம்பம் நாட்டி திரும்பி பொன்னம்பலத்துக்கு எழுந்தருளி பொன்னம்பலனுதனையும் சேவித்து வடக்கு கோபுரம் கட்டுவித்த ஸேவை உ".

என்பதாகும். கிருஷ்ணதேவராயர் தமது ஆட்சி காலத்தில் தென்னாட்டிலுள்ள பல கோயில்கட்கு எழுந்தருளி ஆங்காங்கு தமது திருப்பணிக்காக கோபுரங்களைத் தொடங்கியும், அவைகள் விஜய நகரத்தின் மீது பாமினி சுல்தான்களின் படையெடுப்பு நேர்ந்த காரணத்தால் அரைகுறையாக மொட்டைக் கோபுரம் என்ற அளவில் நின்று விட்டதென்பதை, திருவரங்கம், குடந்தை, மாமல்லபுரம் போன்ற இடங்களிலுள்ள 'ராயர் கோபுரம்' என்ற பெயருடன் விளங்கும் மொட்டைக் கோபுரங்களைக் கொண்டு அறியலாம். அவற்றுள் ஒன்ருக இருந்த இவ்வடக்குக் கோபுரம் அச்சுததேவராயரால் நிறைவு செய்யப்பட்டிருப்பதைக் கல்வெட்டுகள் குறிக்கின்றன. கீழ்க் கோபுரமும் அதனை அடுத்த திருவாயிலாகவுள்ள கோபுரமும் விக்கிரம சோழனால் கட்டப்பட்டுள்ளதென்பதைக் கல்வெட்டுக் குறிப்பாலும், கட்டிட அமைப்பு, சிற்பநுட்பம் ஆகியவற்றாலும் அறிய முடிகின்றது. இக் கோபுரத்தைப் பிற்காலத்தில் பச்சையப்பமுதலியார் செப்பனிட்டுள்

ளார் என்பதை முதலியார் மனைவியுடன் இருக்கும் படிமங்கள் கோபுரச் சுற்று மாட வரிசையில் இடம் பெற்றிருப்பதைக் கொண்டு சிந்தித்தறிய முடிகின்றது.

கோயில் திருப்பணிகள்

கோயிலிலுள்ள கல்வெட்டுகளைக் கொண்டு சோழ மன்னர்களும், பாண்டிய மன்னர்களும், பல்லவ மண்டலாதிபதிகளும், அரசியல் தலைவர்களும், அரசியரும் செய்துள்ள திருப்பணிகளை வரலாறுகள் தெளிவாக விளக்கியுள்ளன.

கி. பி. 907-ல் ஆட்சி தொடங்கிய முதல் பராந்தக சோழன் முதலாக சோழ மன்னர்கள் சிற்றம்பலத்தைப் பொன்னாலும் மணியாலும் அழகு செய்து பொன்னம்பலமாக்கியுள்ளனர். திருச்சுற்றுத் திருமாளிகைகளை எழுப்பியுள்ளனர். அவைகள் முறையே பொன்னம்பலத்தைச் சுற்றியுள்ள திருமாளிகை விக்கிரம சோழன் திருமாளிகை என்றும், சித்திரகூடத்தையும் சூழ எடுக்கப்பட்டுள்ள திருமாளிகை குலோத்துங்க சோழன் திருமாளிகை என்றும், மூன்றும் பிரகாரம் இராசாக்கள் தம்பிரான் திருமாளிகை என்றும் வழங்கப்பட்டன. இரண்டாம் குலோத்துங்கன் தில்லைக்குச் செய்துள்ள திருப்பணிகளைக் கல்வெட்டுகளைக் கொண்டு, சுருக்கமாகக் கூறுவோமானால், தில்லை நகரில் நாற் பெருவீதிகள் அமைத்து, சிற்றம்பலத்தைப் பொன்னாலும் மணியாலும் அலங்கரித்து, பேரம்பலத்தை அமைத்து, எழுநிலைக் கோபுரங்கள் எடுப்பித்து, சிவகாம கோட்டத்தினைக் கட்டியதோடு, சிவகாமசுந்தரியார் திருவீதியுலாவர பொன்னாலான தேரொன்று செய்தமைத்து, நாற்புறமும் கூடங்களோடு விளங்கும் திருக்குளமும் கட்டினான் என்பன போன்ற திருப்பணிச் செய்திகள் புலனாகின்றன. தில்லைக்குத் திருப்பணி செய்வித்த பெருமக்களில் கோப்பெருஞ் சிங்கனும் மல்லற்கடற்றான் மணவிற் கூத்தனும் குறிப்பிடத்தக்கவராவர்.

மணவிற் கூத்தன் காளிங்கராயன் செய்துள்ள அறச் செயல்கள் சிறப்புடையனவாகும். அவைகளை முப்பத்தாறு வெண்பாக்களாகக் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது. கல்வெட்டுச் செய்திகளுள், சிற்றம்பலத்தின் திருக்கொடுங்கைகளைப் பொற்றகடுகளால் அணிபெறச் செய்தது, பேரம்பலம் செம்பு வேய்ந்தது, பொற்பரிகலம் பொற்படிக்கம் அமைத்தது. பொன்னம்பலத்தைச் சுற்றிலும் பொன் விளக்குகள் அமைத்தது. ஆயிரம்படி நெய்யபிஷேகம் செய்தது திருப்பதிகமண்டபம் நூற்றுக்கால் மண்டபம் கட்டியது, வீதியில் விளக்கு மண்டபம் அமைத்தது, அம்மைக்குப் பீதாம்பரம் அணிவிக்க நிபந்தம் செய்தது. தில்லைவாழ் குழந்தைகளுக்கு எண்ணெயும் பாலும் வழங்க வருவாய் ஏற்படுத்தியது, ஆடவல்லான் திருவீதியுலாவரும் போது திருக்கோலம் விளங்குமாறு ஒளி அமைத்தது. தில்லைவாழ் அந்தணர் மூவாயிரவர்க்கு வளாகம் வழங்கியது, தேவாரத்தைச் செப்பேடுகளில் எழுதுவித்தது, மாசிக்கடலாடுமிடத்தில் திருநாள்தோப்பும் மண்டபமும் அமைத்தது, பெருமானுக்கு ஆயிரம் பசு வழங்கியது என்பவைச் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கனவாகும். அவ்வெண்பாக்களுள்

"முத்திறத்தார் ஈசன் முதற்றிறத்தைப் பாடியவர்
ஒக்கமைத்த செப்பேட்டி னுள்ளெழுதி— தலக்கி
மெல்லைக் கிரிவாய் இசையெழுதினன் கூத்தன்
தில்லைச்சிற் றம்பலத்தே சென்று."

என்பதும் ஒன்ருகும்.

கோப் பெருஞ்சிங்கன் செய்துள்ள அறச்செயல்களுள் திருக்காமக் கோட்டமுடைய பெரிய நாச்சியார் கோயிலுக்குப் பால் அமுது செய்தருளவும், பால் போனகப் பாலுக்கும் குலோத்துங்க சோழன் திருக்கோசாலை அணுக்கச் சுரவிகளுக்கு (இடையர்களுக்கு) முதலாக ரிஷபமும் திருச் சூலமும் அடையாளமிட்ட பசுக்கள் 416 அளித்து, நாள் ஒன்றுக்கு பசு ஒன்றுக்கு செல்வி ராசகேசரி என்ற உழக்களவாக பால் கலனே அறுநாழி உரியளக்க ஏற்பாடு செய்துள்ளதும்.

திருக்காமக்கோட்ட நாச்சியார்க்கு வேசாலிப் பாடிப் பற்றில் சொக்கச்சியன் என்ற பெயரால் திருநந்தவனம் அமைத்து, அதற்கு நாயகம் ஐவர், ஆள் தொண்ணூற்றைவர் ஆக நூறு பேருக்கும் 247-மா அரைக் காணியினல் ஆண்டு வருவாய் நெல்லு—6919 கலனே தூணிப்பதக்கு நந்தவனக்குடி ஜீவிதமாக நிபந்தம் செய்துள்ளதும் குறிப்பிடத் தக்கதாகும்.

கோயிலில் இடம்பெற்றுள்ள 300-க்கும் மேற்பட்ட கல் வெட்டுகளினல் அறியப் பெறும் அறச்செயல்களில், பெரும்பாலானவை, நந்தவனம் அமைத்ததைப் பற்றியும், செங்கழுநீர் ஓடை அமைத்து செங்கழுநீர் மலர்மாலையளிக்கத் திட்டஞ் செய்ததைப்பற்றியும் கூறுகின்றன. சில கல்வெட்டுகள் நாள் வழிபாட்டுக்குரிய நிவந்தங்களைக் குறிக்கின்றன. அறச்சாலை, தொண்டத் தொகைபாடும் மண்டபம், அகரங்கள் அமைத்து அந்தணர்க்கு நிபந்தம் செய்தமை, திருப்பாவாடை போடுவது ஆகியவற்றைப் பற்றிக் கூறும் கல்வெட்டுகளும் உள்ளன.

நிபந்தத்துடன் அமைக்கப்பட்ட திரு நந்தவனங்களும், செங்கழுநீர் ஓடைகளும், திரு நிலை அழகியாள் நந்தவனம், திருத்தொண்டர் சீருரைத்தான் நந்தவனம், பொன் வேய்ந்த பெருமாள் திருநந்தவனம் செங்கனி வாயன் திரு நந்தவனம், சொக்கச்சியன் நந்தவனம், கூத்தாடு நாயகன் திருவோடை, கண்ணுடைய சீயன் திருவோடை, தாய்க் கோரம் போகாதான் திருவோடை ஆளுடைய தனி நாயகன் ஓடை இருமரபுந் தூய பெருமாள் ஏரி, ஸ்ரீதேவி வாய்க்கால், ரிஷப தேவ வளாகம், என்பன போன்ற சிறப்புப் பெயர்களால் குறிக்கப்பட்டுள்ளன.

கல்வெட்டுகளில் சிற்றம்பலத்தைப் பற்றிய செய்திகள் பலப்பலவாகும். அவற்றுள் ஒரு சில செய்திகளையே இக்கட்டுரையில் இடம்பெறச் செய்ய வியன்றது. தில்லைச் சிற்றம்பலம் தெய்வச் சிறப்புடன், முடிமன்னர்களாலும், நாட்டு மக்களாலும் பெரிதும் போற்றப்பட்டு உயர்ந்து விளங்கிய மேன்மையினை இக்கட்டுரை ஒருசிறிதே விளக்குவதாகும்.

# The Esoteric Meaning of Sivakamasundari

*Thiru N. MURUGESA MUDALIAR*

The glorious name *Sivakāmasundari* s unique for the consort of Nataraja at Tillai.

Siva's dance at Tillai is the ananda thandava. The other six dances are Sandhya, Gowri, Tripura, Kāli, Muni, Sangharā. Ānanda-tāndava represents all the five acts of the Lord (panca-kritya). While the others symbolise one or the other of the pentad acts. This is also called the nadanta dance. All the five acts are acts of Graee for the sake of souls to realise bliss. The witness to the ānanda tāndava is the Lord's own Arul-Sakti who is represented as Sivakamasundari There is no temple with ānanda tāndava Nataraja without Sivakamasundari by the side as in Tillai.

After pralava it is Sivasakti that induces the Lord to recreate the cosmos. The Lord who at pralaya stands alone playing on the veena deigns by His ichcha to do the dance of creation again. His sakti is thus externalised and to keep the rhythm, the sakti keeps the beat. Siva is Kamēswara combining in Himself the three powers of ichcha, kriya and jnana.

The Brihadāranyaka upanisad says that at the beginning that there was Atman only and He desired - (Atunaiva idaiu agraasit ekevso aogamayata......edhavanmai Kāma). *Kāma* means the Lord who desires to create the universe. The desire was in suspended animation in Sivasādhakya and becomes operative when sakti preponderates. Hence this sakti is *sundari* or vimarsana sakti. Without Her Grace the souls would remain in Sakala state as monads in an unreleived pralaya. The srutis call it prajnana. Sūtasamhita (Bv-Gita IV 3-19 to 24) calls it *vasya*. At Tripura-samhara, sakti sits on the lap of Siva-kameswara and is called Tripurasundari. She is the *vasya* to control the act of Siva, At creation she becomes instrumental,

The manifestations of this Sakti are described in *Devi Mahātmya*, *Lalitōpakyana* and other literature but its metaphysic is explained in Saiva Siddhanta Philosophy only when dealing with the emanation of the

power of the Lord as a downward grace from Para Sivam and Para sakti to Adi-Sakti and then as nāda and vindu in the Suddha maya stage then to misra maya and finally to the, grossest bhūttādies in the prakriti maya.

The grand symbolism of Sivakama sundari cannot be understood without a knowledge of the Siddhanta sastras. But the truths in them are poetically expressed in the Divine out-pourings of Saiva Samayacharyas. St. Thirugnana sambandar sings —

கொம்பலைத் தழகெய்திய நுண்ணிடைக்
கோல வெண்மதிபோல முகத்திரண்
டம்பலைத்த கண்ணான் முலைமேவிய
வார்சடையான்
கம்பலைத் தெழுகாமுறு காளையர் காதலாற்
கழற் சேவடி கைதொழ
அம்பலத்துறை வானடியார்க் கடையா
வினையே !

Here the two arrow - like eyes of Sivakamasundari represent *Para* and *apara* sakti or icheha which is responded to by Siva who begins to dance which makes His braids of hair float in the air. There is no *kriya* without *Kama* (This applies even to an ordinary poet or artist). Without Sivakamasundari providing the desire, Siva would be actionless. So, sakti is described as the mother or Grace. St. Appar sings—

ஒருடம் பிருவராகி யொளிநிலா வெ
றிக்குஞ்சென்னி
பாரிடம் பாணி செய்யப்பயின்ற வெம்
பரமூர்த்தி
காரிடந்தில்லை தன்னுட் கருது சிற்றம்
பலத்தே
பேரிடம் பெருக நின்று பிறங்கெரியாடு
மாறே!

When the abhinna-sakti flows forth by its own consciousness, then the Saktiman begins to dance and all the ganas do so and creation springs into life and souls begin to evolve their salvation. It is their representation of the dance of Siva with Sivakami at His side and His glance falling on Her that we witness in the golden hall of Chidambaram To see this atleast, saysSt. Appar, we needs must be born in this world. Sri Kumaragruepara Swami in *Chidambaram Mummanikkovai* also laments the days when the Lord's dance in Perambalam is not seen.

Bleased is the day when the shrine of Sivakamasundari is reconsecrated with agama mantras and Tamil vedas which will sing Her glory!



# சிவகாமி அன்னை

திரு. மு. வை. அரவிந்தன், எம்.ஓ.எல்.

1. வானில் உலவிடும் திங்கள்—அன்னை
வண்ணத் திருமுக மாகும்!
வான்முகிற் கூட்டம் நற்கூந்தல்! — எழில்
வானவில் சூடும்பூ மாலை!
வானத்தில் மின்னிடும் மீன்கள்—அவள்
வண்ணப் பட்டாடையின் பூக்கள்!
வானைக் கிழித்திடும் மின்னல்—அதில்
வண்ணம் சேர் செம்பொன் சரிகை!

2. காரிருள் அன்னையின் போர்வை! — இடி
காலின் சிலம்பொலி யாகும்!
கார்க்கடல் சூழ்ந்த இவ் வையம்—அவள்
காலில் இழைத்தமண் வீடு!
பேரிடி மின்னலும் காற்றும்—அவள்
பேதைச் சிறுசெய லாகும்!
சீறி எழும்புயல் யாவும்—அவள்
செய்திடும் வேடிக்கைச் செய்கை!

3. குன்றம் அவள் கையில் பந்து! — இந்தக்
கோலக் கடல்சிறு தண்ணீர்!
சின்னஞ் சிறுவீடிவ் வையம்—அதில்
செங்கதிர் சின்ன விளக்கு!
அண்டங்கள் விளையாட்டுப் பண்டம்! — இவை
அத்தனையும் அவள் செய்கை!
அன்னை திருவிளை யாட்டைப்—பாட
ஆயிரம் நாக்குகள் வேண்டும்!

---

# தில்லை சிவகாமி வாழ்க

புலவர். ந. சிவஞானம்

1. தேனோடு மலர்கொன்றை திங்களணி வேணியன்
   தில்லையின் எல்லை தன்னில்
ஞானகா யத்திலே நாளுமே ஆட்டிட
   நற்சத்தி யளிக்க வந்தாள்,
வானோரும் ஏனோரும் வந்து வணங்கிட
   வாழ்வெலா மளிக்குந் தாயாம்
தானாக இவ்வுலகைத் தாங்கியே காத்திடும்
   தில்லை சிவகாமி வாழ்க !

2. சிவகாமி முன்னிலையில் சிவகங்கை தன்னிலே
   திருமுழுக் காடிவந்தால்
பவரோக மணுகாது பரமுத்தி கிட்டிடும்
   பாரினில் சிறக்கும் வாழ்வு,
அவமாய ஆணவ அழுக்கெலா மகன்றிட
   அத்தனின் ஆடல் காண்பர்
தவஞான யோகமும் சந்ததம் தந்திடும்
   சக்திசிவ காமி வாழ்க !!

3. அம்மை சிவகாமி அழகுசூட முழுக்கு
   அணிவிழாச் சிறக்க மாதோ !
அம்மையொ(டு) அப்பனாய் ஆணிப்பொன் மன்றினுள்
   ஆடுவோன் கழல்கள் வாழ்க !
செம்மை சேர் பூலோகக் கைலாயச் சிதம்பரம்
   சீர்பெற்று வாழ்க ! வாழ்க !!
மும்மையுல கீடின்றி மூவாயிரவர் வழி
   வளர்ந்துமே வாழ்க ! வாழ்க !!

# திருநாவுக்கரசர் தில்லைக்காட்சி

தவத்திரு. சுந்தரசுவாமிகள்

சைவ சமய ஆசிரியர்களாகிய நால்வர் பெருமக்கள், திருத்தில்லையாகிய சிதம்பரத்துக்குச்சென்று வழிபடும்போதும், பாடியருளும்போதும் தம்மை மறந்த ஒரு பேரின்பநிலை எய்தியமை, வரலாற்றாலும், அவர்கள் பாடியருளிய பாடல்களாலும் உணர்கிறோம். 7–ம் நூற்றாண்டில் திருவாமூரில் அவதரித்துச் சைவநெறி பாலித்தருளிய திருநாவுக்கரசு நாயனார், திருத்தில்லையில், அம்பலவாணன் அடியிணை போற்றிய திறத்தினைச் சிறிது பார்ப்போம்.

மருள்நீக்கியார், சமணசமயம் சார்ந்து தருமசேனராகிப் பின், சிவபெருமான் அருளும் பெருஞ் சூலையினால் ஆட்கொள்ளப்பெற்றுத் திருவதிகையில் திகழும் காலத்தில் மன்னன் மகேந்திரவர்ம பல்லவன், ஆணைவழி. அமைச்சர்கள் அழைத்தமைக்காகச் சென்றபொழுது, சமணர்கள் சொற்படி, மன்னன் நீற்றறையிலிடச் சொன்னான். அவ்வாறே திருநாவுக்கரசரைப்பெருந்தழல் வெம்மை நீற்றறையினுள்ளிருத்தி எளிதில் திறக்க இயலாதபடி இரும்புத்தாளினை இட்டுக் காவல் அமைத்தனர்,

ஆண்ட அரசுகளாகிய நாயனார் நீற்றறையினுள் அணைந்தபொழுது, அம்பலத்துத் தாண்டவம் முன்புரிந்தருளும் தாள் நிழலைக்கொண்டு, ஈண்டு வருந்துயர் உளவோ ஈசனடியார்க்கு'' என்று முதல் வனையே தொழுதிருந்தார். என்று, சேக்கிழார்பெருமான் கூறுகிறார்.

நீற்றறையானது ஐம் பொறிகட்கும் கேடு பயப்பது வெய்ய ஓசை காதினையும், வெய்ய ஒளி கண்ணினையும், நச்சுக் காற்று மூக்கினையும், சுண்ணாம்புச்சுவை நாவினையும், வெப்பம் மெய்யினையும், ஊறுசெய்து உடலுக்குக் கேடு விளைத்து உயிர் போக்கும்.

நீற்றறை, திருநாவுக்கக்சர் பெருமானுக்குத் துன்பம் தராததோடு, இன்பமாகவும் மாறியது எதனால் என்றால், அம்பலத்துத் தாண்டவம் முன்புரிந்தருளும் எந்தை இணையடி நீழலைத் தவிர, வேறொன்றும், அறியாத அவருக்கு, நீற்றறை திருவடி நீழலாகவே இன்பந்தந்தது. காதுக்கு. மாசில் வீணையாக, கண்ணுக்கு மாலைமதியமாக மூக்குக்கு வீசு தென்றலாக, உடம்புக்கு மிக்க இளவேனிலாக, நாக்குக்கு மூசுவண்டறை பொய்கையாக, அமைந்தது. ''வெய்ய நீற்றறை ......திருவடி நீழல் அருளாகிக் குளிர்ந்தது'' என்கிறார், சேக்கிழார்பெருமான், நீற்றறையில், ஆனந்த வெள்ளத்தினிடை மூழ்கி அம்பலவர், தேனுந்து மலர்ப்பாதத்தமுதுண்டு தெளிவெய்தி.'' எனறும், குறிப்பிடுகின்றார் சேக்கிழார் பெருமான். நீற்றறையிலேயே, திருநாவுக்கரசர், அம்பலவர் திருவடியை மனத்தகத்தில்,கண்டு அனுபவித்துக்கொண்டிருந்தார்.

பின்பு சமணர்கள் செய்த, பலவகையான சூழ்ச்சியை, அம்பலவாணன் அருளால் வெற்றிகண்டு, திருப்பாதிரிப்புலி

யூரை வழிபட்டுத் திருவதிகை சென்ருர். திருவதிகைப் பதி மருங்குள்ள தலங்களைப் பரவி வழிபாடு செய்யும்பொழுது, நீற்ற றையில் மனத்தகத்தில் கண்டு அனுப வித்த, அம்பலவனுடைய திருவடியைத் தூலக்கண்களாலும் கண்டு வணங்க வேண்டும் என்று எண்ணுகிருர். ஊன டைந்த உடம்பின் பிறவி, தானடைந்த உறுதியைச்சார, தேனடைந்த மலர்ப் பொழில் தில்லையுள், மாநடஞ் செய்தா னைக் காண எண்ணினுர்.

ஆனாத சீர்த்தில்லை
அம்பலத்தே ஆடுகின்ற
வானாறு புடைபரக்கு
மலர்ச்சடையார் அடிவணங்கி
ஊனாலும் உயிராலும்
உள்ளபயன் கொளநினைந்து
தேனாறு மலர்ச்சோலைத்
திருப்புலியூர் மருங்கணைந்தார்

என்று சேக்கிழார்சுவாமி குறிப்பிடுகிருர், மருதத் தண்பணை வழி வரும்போது மூங் கில்போல் செறிந்து. உயர்ந்து வளர்ந்த, கரும்புகளின் கணுக்கள் வெடித்து முத் துச் சொரிந்த காட்சி, நாவரசர் வடிவைக் கண்டு இன்பக் கண்ணீர் பொழிதல் போன்றிருந்தது. என்பார்—சேக்கிழார் பெருமான். தந்தவனம் கண்டு பணிகின் ருர். நாயனர் வடிவைக்கண்டு, கிளியும், பூவையும், சிவமொழி கூறுகின்றன.நெஞ் சில் பெருகிய மகிழ்வும், காதலும் நிறைய அன்பினுல் உரைதடுமாறத் திருத்தில்லை எல்லையில் மேற்குத் திருவாயில் அணைந்து வணங்கிச் சிவமே நிலவிய, திருவீதியைப் பணிந்து, ஏழ்நிலைக் கோபு ரத்தை அடைந்து மெய்யுற வணங்கித் திருமாளிகை வலம்வந்து, கனகமன்றில் பொதுநடனங் கண்ணுற்ருர் திருநாவுக் கரசர். ஆடுங்கழல் புரியும் அமுதத் திரு நடம் தொழுது, ஆர்வமிகுதியினுல் வேறென்றின் பிரேரசியும், முயற்சியும், இன்றிக், கை, கண், கரணம். மெய், ஆகிய கருவிகள், இன்பப்பெருக்கால் தாமே செயல்பெற்றன.

கையுந் தலைமிசை பொழியஞ் சலியன
கண்ணும் பொழிமழை ஒழியாதே
பெய்யுந் தகையன கரணங் களுமுடன்
உருகும் பரிவின பேறெய்தும்
மெய்யுந் தலமிசை விழுமுன் பெழுதரும்
மின்ருள் சடையொடு நின்ருடும்
ஐயன் திருநடம் எதிர்கும் பிடும்அவர்
ஆர்வம் பெருகுதல் அளவின்ருல்

— பெரியபுராணம்.

இவ்வாறு பலமுறையும் தொழலும், எழ லும் செய்யும், திருநாவுக்கரசர் பெரு மானை, மன்ருடும் அத்தன் திருவருள் பொழிகின்ற கருணையினுல், ''என்று வந் தாய்'' என்று இன்முகத்துடன் ஏற்றுக் கொண்ட குறிப்பைக் காட்டியருளினுர். இத்தகைய காட்சியை,

''ஒன்றியிருந்து நினைமின்கள் உந்த
மக் கூனமில்லை,
கன்றிய காலனைக் காலாற் கடிந்தான்
அடியவர்க்காச்,
சென்று தொழுமின்கள் தில்லையுட்சிற்
றம் பலத்துநட்டம்
''என்றுவந்தாய்'' என்னும் எம்பெரு
மான் தன் திருக்குறிப்பே.

கோயில் திருவிருத்தம் இரண்டாம் பாட லாகிய இந்தப் பாடலால், காண்கின்ருேம்.

உட்கரணம், புறக்கரணங்களை ஒரு முகப் படுத்தி அதில் பிறழாமல், அமுந்தி அறிந்தால் (தியானித்தால்) நீங்களும் அந்தக்காட்சியை ''என்று வந்தாய்'' என்னும் எம்பெருமான் தன் திருக்குறிப் பைக் கொவ்வைச் செவ்வாயின் குமிண் சிரிப்பால் உணரலாம். என்று தாம் கண்ட அனுபவத்தை இந்தத் திருவிருத்தத்தால் உபதேசித்தருளுகின்ருர் அம்பலவாணன் அருட் கூத்தியற்றும் அழகில் தோய்ந்து

அனுபவித்த காட்சியை, நான்காவது திருதிருத்தமாகிய "குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில்" என்னும் பாடலால் தெரிவிக்கின்றார்.

பின்னும் "பத்தனாய்ப் பாடமாட்டேன் பரமனே பரமயோகி" என்றும், திருநேரிசை பாடித்திரும்பும் போது, திருமுன்றிலும், தேர்வீதியுள்ளும், கூடிய பணிகள் செய்து, கும்பிடுந் தொழிலராகிப் பாடிய புனித வாக்குப் பணிகளும், செய்கின்றார். தாம் பெற்ற அம்பல வாணரின் அருட் காட்சியால், மகிழ்ச்சி பொங்கி "அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்" என்றுபாடிப் பரவுகின்றார். தில்லைச்சிற்றம்பலம் அன்னமும், பொன்னும், இன்னும் எதுவும் பாலிக்கும், இப்பிறவியில், வேறு எதுவேண்டும்? இதனைச் சென்றடைமின், உய்மின் இதனை அடைந்து அடிமை பூண்டவரை "அல்லல் என்செயும் அருவினை என்செயும்," தொல்லை வல்வினை தான் என்செய்யும்? சிறுகாலன். தில்லையை அணுகிய சிட்டர்பால் அணுகான். சிற்றம்பலவனர் அடியாரை அறிவர் என்று அனுபவமாகப் பாடி அருளுகிறார். திருவேட்களம், திருக்கழிப்பாலை, சென்று வழிபாடு செய்து திரும்பும் வழியில் அம்பலக் கூத்தனைத் தினைத்தனையாம் பொழுதும் மறக்க மாட்டேன். என்பதை,

"பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்
டவன்
அனைத்து வேடமாம் அம்பலக் கூத்
தனைத்
தினைத்தனைப் பொழுதும் மறந்துய்
வனே"

என்று பாடி அருளுகிறார். நாளும் அம்பலவனைப் பேசவேண்டும். அப்படி அவனைப் பேசாத நாளெல்லாம், பிறவாத நாளே ஆம், என்று அருளுகின்றார். "அரியானை அந்தணர்தம் சிந்தையானை" என்னும் திருத்தாண்டகத்தில்.

இதுவரை குறிப்பிட்டுள்ளாதிலிருந்து திருநாவுக்கரசு நாயனர், தில்லைப் பெருமானை அகத்தும் புறத்தும், எவ்வாறு கண்டார் என்பதை உணருகிறோம். அவன் ஆடலை நினைப்பதே நியமம் என்பது நமது சமயத்தலைவர்கள் நமக்கு உணர்த்தும் உபதேசமாகும்.

குருபாதமே கதி

வாழ்த்து வெண்பா

தில்லைநகர் மேய சிவகாமி அம்மையார்
சொல்லும் திருக்கோயில் தூயபணி—
நல்லவண்ணம்
செய்ய உதவியநற் செல்வர்கள்எல்
லாநலமும்
எய்தமிக வாழ்த்துரைப்போ மே.

—சுந்தரசுவாமிகள்



# அம்மை - திருப்பதிகம்

திரு. C. இராமலிங்கம், எம்.ஏ.,

திருவருட் பிரகாசனார் என்னும் இராமலிங்க அடிகள் திருத்தில்லைச் சிற்றம்பலத்துள் எழுந்தருளியிருக்கும் சிவகாம சுந்தரி அம்மனை வழிபட்டு பாடியருளிய பாக்கள் ''அம்மை திருப்பதிகம்'' என்னும் தலைப்பில் திருவருட்பா இரண்டாவது திருமுறையில் காண்கிறோம். இத் தலைப்பில் பத்துபாடல்கள் உள. இவற்றின் திரண்ட கருத்தை ஈண்டுக் காண்டோம்.

சிவானந்தவல்லி உமை, சிவை, பரை, சிவசக்தி, இமாசலகுமாரி, விமலை, இறைவி, அமலை என்று பல வாறாக வியந்து அம்மையை அடிகள் போற்றி யருள்கிறார். ஈற்று வரிகள், ''தில்லையம்பதி மருவும் அண்ணலார் மகிழும் மணியே, அகிலாண்டமுஞ் சராசரமும் ஈன்றருள் பரசிவானந்த வல்லி உமையே'' என்று பாடல் தொறும் அமையக் காண்கிறோம்,

இவ்வுடல் வெவ்வினைக்கீடாக, வினைபுசிப்புக்காக அமைகிறது. இது மாயமானது வேதாகமங்களெல்லாம் இவ்வுண்மையைப் பரக்கப் பேசுகின்றன. வித்தகர், இவ்வுலக வாழ்க்கையை வெயில் மஞ்சள் நிறமென ஓதுகின்றனர். வைரமலை யொத்தவர் கணத்திடை இறத்தலைக் காண்கிறோம். கண்டும் 'இப்புலையுடலில் மானமோர் கடுவளவும் விடுவது, அறியேன' என்று அடிகள் தாம் கவல்வதாகக் கூறுகிறார். நாம் இதைக் கருத்தில் கொண்டு நம் துன்பமெல்லாம் துடைத்தருள சிவானந்த வல்லியை இறைஞ்சுதல் வேண்டும்,

அம்மையைத் திருவருளின் வடிவென்று போற்றுவது சைவ சித்தாந்த மரபாகும். திருவருள் அணுத்துணையேனும் உற்றிடுமேல் சிறு துரும்பும் உலகம் படைத்தல் முதல் முத்தொழில் இயற்றும் என்று உயர் மறைகள் ஓர் அனந்தம் தெளிவுற முழக்கக் காண்கிறோம். இது கேட்டும் திருவடியில் தியானமில்லாமல் அவமே பொழுதைக் கழிக்கின்றதை நினைந்து நம் பொருட்டு அடிகள் இறையருளை வேண்டுகிறார். இறைவி கருணை வடிவமென்பதை அவர் வற்புறுத்துகிறார்.

மாயையை இரவாக, இருளாகப் பேசுவது சித்தாந்த மரபு. மாயையெனும் இரவில் மனையகத்துவிடய வாதனையெனும் கள்வர் புகுகின்றனர் மனம் என்னும் அடிமையை எழுப்பி அவர்கள் தம் வசமாக்குகின்றனர். உளவு அறிந்து, மதியெனும் விளக்கை அணைத்து, மெய்ந்நிலைச்சாரிகையெல்லாம் உடைத்துக்கொள்ளை கொள்கின்றனர். இந்நிலையில் திருவருளை

இறைஞ்சுவதல்லாது வேறென் செயக் கடவேம் !

இராமலிங்க அடிகள் தமது விருப் பத்தைப் பிறிதொரு பாடலில் கூறு கின்றார். இது யாவரும் கொளத்தக்க, வேண்டிப்பெறத்தக்க சிறந்ததொரு சாதனம் ஆகும். திருநீறு அணிந்து, அக்கமணி தரித்து, உயர்சைவ நெறி நின்று அம்பிகைக்குரிய ஐந்தெழுத் தின உண்ணிலையை நெஞ்சில் நிறுத்தி—திருவடிக்கு இடையறாத அன்பு பூண்டு சிவஞான வித்தகர் பரவுமோர் செல்வ வாழ்க்கையைத் தாம் வாழ விருப்பமுடையதாக அடிகள் கூறுகின்றார். நாம் விரும்பி முயன்று பெறத்தக்கது சிவநேய செல்வர், அடியார்கள் கூட்டுறவு. இது இங்கே வற்புறுத்தப் பெறுகிறது.

பவமான எழுகடல் கடந்தாலன்றி, மேற்கதியாகிய பதிநிலை அடைய வொண்ணாது. சகல கேவல நிலைகளை வெல்ல இயலாது. இக்கடலைக் கடக்க தவமான கலன் வேண்டும். இறைவியின் அருள் என்னும் மீகாமன் வேண்டும். இவற்றின் துணையின்றி நம் முயற்சியால் இயலாது. ஆதலால் அம்பிகையிடம் சரண் புகுதல் அன்றி வேறு வழியிலது. இதுவே கடன் ஆகும்,

புறவழிபாடு படிப்படியே அகநிலையில் அனுபவப் பேறாக அமைதல் வேண்டும். "பரசிவமான சுத்த வெளி உறவான முத்தர் உறவே! உருவான வருவான வொருவான ஞானமே! உயிரான வொளியின் உணர்வே! என்று தாம் அனுபவத்தில் அறிகின்ற உண்மைகளை அடிகள் உணர்த்துகின்றார். மகாதேவ மாலையில் 'தம்மை மறந்தருள முதமுண்டு தேக்குந் தகையுடையார் திருக்கூட்டஞ்சார்தல் வேண்டும்'' என்று கூறுகின்றார்.

மேற்கண்ட அனுபவ நலங்கள் வாய்க்க 'பொய்யாத மொழியும், அயல் செய்யாத செயலும் வீண்புரியாத மனமும் உட்பிரியாத சாந்தமும் புந்தி தளராத நிலையும் எய்யாத வாழ்வும், வேறெண்ணாத நிறைவும் (இறைவனை) என்றும் மறவாத நெறியும் இறவாத தகவும், மேற் பிறவாத கதியும்" தனக்கு அருளுதல் வேண்டும் என்று அடிகள் இறைஞ்சுகின்றார்.

"உலகினுயிர் வகையுவகை யுறவினிய அருளமுதம் உதவுமானந்த சிவையே" என்று முதற்பாடலில் முதலில் கூறுகின்றார். அடிகள் தமது 'அருட் பெருஞ்ஜோதி அகவலில் அமுதவகைகளை,

"அருளமுதே முதலைவகையமுதமும்
தெருளுற வெனக்கருள் செல்வ நற்றாயே.
இயலமுதே முதலெழுவகை யமுதமும்
உயலுற வெனக்கருள் உரிய நற்றாயே·
நண்புறு மெண்வகை நவவகை யமுதமும்
பண்புற வெனக் கருள் பண்புடைத் தாயே
மற்றுள வமுத வகையெலா மெனக்கே
உற்றுண வளித்தருளோங்கு நற்றாயே
.... .... ... .... .... .... .... ...
இன்னரு ளமுதளித்திற வாத்திறல் புரிந்
தென்னை வளர்த்திடு மின்புடைத் தாயே"

என்று விரித்தருள்கிறார். 'ஐவகை' 'எழுவகை' 'எண்வகை' 'நவவகை' என்று குறித்துப்பின் அமுத

வகையெல்லாம் தனக்கு அருள வேண்டும் என்று அடிகள் வேண்டுகிறார்.

"உவமித்துக் கூறவொண்ணாத பெரிய சிவநெறியொன்றை உணர்த்தும் பேரின்ப நிதியாக" அம்மையைக் கூறுகின்றார். மேலே ஒரு பாடலில் "இறவாததகவும் மேற்பிறவாத கதியும்" தமக்கு அருள வேண்டும் என்று அடிகள் வேண்டுவதைக் கண்டோம் அடிகள் தமதுவசனப் பகுதியில் "அமுத வகை ஐந்து" என்ற தலைப்பில் கீழ் வருமாறு குறிக்கின்றார்.

சுத்த அமுத ஸ்தானங்கள் ஐந்து :-

1. நாக்கினடியில் ஊற்று ஜலம் போலிருக்கும்
2. உள் நாக்குக்கு மேல் இளகின இனிப்புள்ள சர்க்கரைப் பாகு போலிருக்கும்
3. மூக்கு முனையில் காய்ச்சின சர்க்கரை பாகுபோலிருக்கும்
4. நெற்றி நடுவில் முதிர்ந்த சர்க்கரைப் பாகுபோலிருக்கும்
5. மகா இனிப்புள்ள மணிக்கட்டியாக இருக்கும் அதிகக் குளிர்ச்சியாகவும் இருக்கும்.

இந்த ஐந்தாவது அமுதத்தை உண்டவர்கள் என்றும் "அழியாத தேக சித்தியைப் பெற்றவர்கள்".

மற்றோரிடத்தில் (உரை நடைப் பகுதி) "சாகாதவனே சன்மார்க்க சன்மார்க்கத்தின் முடிவு சாகாகி, கல்வியைத் தெரிவிப்பதே யன்றி வேறில்லை என்று கூறுகிறார். சாகிறவன் சன்மார்க்க நிலையைப் பெற்றவனல்லன் சாகாதவனே சன்மார்க்கி" இறவாத தகவு வேண்டும் என்று இறைஞ்சி அடிகளார் "மரணமிலாப் பெருவாழ்வு" பெற்றார்.

இப்பதிகத்தில் சாதாரண நிலையிலுள்ளவர் முதலாக, அனுபவ நிலையில் மென்மேலும் முன்னேறிச் செல்பவர் ஈறாக அறிந்து போற்றுதற்குரிய குறிப்புக்கள் பல உள. இப்பதிகத்தைப் பயின்று உண்மைகளை உணரத் தூண்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.



# சோழர் காலத்துத் தேவாரப்பணி

[கல்வெட்டில் கண்டவை]

வித்துவான். திரு. மு. கோவிந்தராசன்

"சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
நட்டப் பெருமானை நாளும் தொழு
வோமே."

தேவாரம் என்ற சொல்லை முற் காலக் கல்வெட்டுக்கள் 'திருப்பதிகம்' என்றும், பிற்காலக் கல்வெட்டுக்கள் 'திருமுறை' என்றும் குறிப்பிடுகின் றன. 10-ம் நூற்றாண்டு முதல் 13-ம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் செங் கோல் செலுத்திய சோழ மன்னர்கள் தங்கள் ஆட்சியை எவ்வளவு ஊக்க மும் எழுச்சியும் கொண்டு பரப்பினர் களோ அதனினும் மேலாகச் சைவ சமயத்தையும் வளர்த்துப் பரப்பினர் கள் என்பது எள்ளளவும் மிகை யாகாது. அவர்கள் மேற்கொண்ட சைவசமய வளர்ச்சிக்கான பணிகள் பலவகைப்படும். அவற்றுள் மிக மிகச் சிறந்தது மூவர் திருப்பதிகங்களை விண்ணப்பித்து வழிபடும் பணியைத் தமிழகமெங்கும் எல்லாச் சோழர் களும் ஊக்கத்துடனும் உணர்வுடனும் பரப்பியது ஆகும். திருப்பதிகங்களைத் திருக் கோயில்களில் விண்ணப்பிக்க விளைநிலம், நெல் முதலியவற்றைத் தானமாக சோழமன்னர்களும் செல் வர்களும் வழங்கியுள்ளமையைப் பின் வரும் கல்வெட்டுச் செய்திகள் பல வற்றால் அறியலாம்.

(1) கி.பி. 1073-ல் அதிராசேந்திர சோழர் காலத்தில் கும்பகோணம், குகூர் ஆம்ரவணேசுவர கோயிலில் அதிராசேந்திர சோழ தேவனது உடல் நோய் நீங்கி நலம் பெறுவதற் காகத் திருப்பதிகம் விண்ணப்பம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டது. விண்ணப்பம் செய்பவர்களுக்கு ஊதி யத்திற்காக விளைநிலம் தானமாக வழங்கப்பட்ட செய்தியைக் கல் வெட்டு கூறுகிறது.

(2) கி. பி. 1075-ல் முதலாம் குலோத்துங்க சோழர் காலத்தில் தஞ்சை மாவட்டம் வேதாரண்யம் கோயிலில் மூவர் திருப்பதிகங்களை விண்ணப்பிக்க முதற் குலோத்துங்க சோழர் உரிமையை வழங்கினர் என்று கல்வெட்டு தெரிவிக்கிறது.

(3) கி. பி. 1243-ல் மூன்றாம் இராசராசசோழர் காலத்தில் தஞ்சை மாவட்டம் திருக்காறவாயிலின் திருக் கைக் கொட்டிலில் திருமுறை விண்ணப்பிக்கும் ஓதுவார்களுக்கு உணவு அளிக்கும் செலவிற்காக விளை நிலம் தானமாக விடப்பட்ட செய்தி யைக் கல்வெட்டில் காணலாம்.

(4) கி. பி. 1207-ல் மூன்றாம் குலோத்துங்க சோழர் காலத்தில்

மாயூரம் வட்டம் குறுக்கை வீரட்டானேசுவரர் திருக் கோயிலில் திருநாவுக்கரைய தேவரது திருத்தாண்டகம் விண்ணப்பிக்க, தனி முறை ஏற்பாடு செய்யப்பட்டிருந்த தாகக் கல்வெட்டுக் கூறுகிறது. இதனல் திருத்தாண்டகத்தின் சிறப்பும், தாண்டக வேந்தர் சிறப்பும் நன்கு உணரப்பட்டிருந்தமை நினைந்து போற்றுதற்குரிய தாகும்.

(5) திருவெண்ணெ நல்லூரில் திருக்கோயில் திருவிழா நாட்களில் திருவீதிவுலாவின் போது தேவாரம் விண்ணப்பம் செய்யும் பழக்கம் இருந்தது என்று கல்வெட்டால் தெரிகிறது.

மேற்கண்டவாறு சோழநாட்டில் நிகழ்ந்தன போல பாண்டிய மன்னர்களும் பாண்டிய நாட்டிலும் திருப்பதிகங்களை விண்ப்பிக்கும்படி ஊக்கம் அளித்துள்ளனர். பின்வரும் செய்திகளால் அவை அறியவரும்.

(6) கி. பி. 1225-ல் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் திருநெல்வேலி கல்லிடைக்குறிச்சி நாகேசுவரமுடையார் கோவிலில் தேவாரத்திருமுறை விண்ணப்பம் செய்ய தானம் வழங்கிய செய்தியைக் கல்வெட்டில் காணலாம்

(7) கி.பி. 1285-ல் சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் தஞ்சை மாவட்டம் திருவீழிமிழலை வீழிநாத சுவாமி கோவிலில் நரசிங்க தேவன் கட்டின திருக்கைக் கொட்டி யில் திருமுறை விண்ணப்பம் செய்ய விளை நிலம் தானமாகவழங்கிய செய்தியைக் கல்வெட்டில் காணலாம்.

(8) குலசேகர பாண்டியன் காலத்தில் இராமநாதபுரம் மாவட்ம் திருத்தளி சுரமுடையார் திருக்கோயிலில் திருத்தளி நாயனர் ஆலயத்தில் திருப்பதிகம்பாட ஒருவரை நியமித்த செய்தியைக் கல்வெட்டு கூறுகிறது.

மேற்காட்டியவைச் சுருக்கமாகக் கூறப்பட்டவையே யாகும். விளக்க மான இரண்டு கல்வெட்டுச் செய்திகளை மேலே தருகின்றேம்.

(9) திருக்கோவில்களில் திருப்பதிகம் விண்ணப்பம் செய்யும் இயக்கத்தைச் சிறப்பாக நிகழ்த்திய மன்னன் முதல் இராசராச மன்னனுவான். அதற்கு அவன் தஞ்சை கோவிலில் ஏற்படுத்தியிருந்த ''திருப்பதியம்'' என்ற கல்வெட்டு செய்திகள் ஒன்றே தெற்றென விளக்கும் சான்ருக விளங்குவது. அக்கல்வெட்டுப் பகுதியைக் கீழே தருகிறேம்.

கி. பி. 1014-ல் கோஇராசகேசரி வன்மரான ஸ்ரீ ராஜராஜ தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவதுவரை உடையார் ஸ்ரீ ராஜராஜச்சுரமுடையார்க்குத் திருப்பதிகம் விண்ணப்பம் செய்ய உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் கொடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மரும் இவர்களிலே நிலையாய் கொட்டிமத்தளம் வாசிப்பான் ஒருவனும், உடுக்கை வாசிப்பான் ஒருவனுமாக ஐம்பதின்மருக்குப் பேரால் நிசதம் நெல்லு முக்குறுணி நிவந்தமாய் இராசகேசரியோடொக்கும் ஆடவல்லான் என்னும் மரக்காலால் உடையார் உள்ளூர்ப் பண்டாரத்தே பெறவும். இவர்களிலே செத்தார்க்கும் அநுதேசம் போனர்க்கும் தலைமாறு அவ்வவர்க்கு அடுத்த முறை

கடவார் தாம்தாம் யோக்கியராய் இருப்பாரை ஆளிட்டுத் திருப்பதிகம் விண்ணப்பம் செய்வித்து அந்நெல் லுப் பெறவும். அல்லவர்க்கு அடுத்த முறை கடவாரின்றி ஒழியில் அந்நியா யத்தாரே யோக்கியராய் இருப்பா ரைத் திருப்பதிகம் விண்ணப்பம் செய்ய இட்டு இட்ட அவனே அவ்வ வர் பெறும்படி நெல்லுப் பெறவும். ஆக இப்படி உடையார் ஸ்ரீராஜராஜ தேவர் மொழிந்தருளினபடி கல்லில் வெட்டியது.”

ஐம்பதின்மர் பெயர்கள் முழுமை யும் குறிக்காமல் இருவர் பெயரைமட் டும் ஈண்டுத் தருகின்றேன்.

(1) பாலன் திருவாஞ்சியத்தடிக ளான இராசராசப்பிச்சனுன சதாசிவ னுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி.

(2) திருவெண்ணுவல் செம்பொற் சோதியான தட்சின மேருவிடங்கப் பிச்சனுன ஞானசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி.

இங்கு எடுத்துக்காட்டிய பெயர் களைப் போலவே ஏனைய நாற்பத் தெட்டு பேர்களுர் கல்வெட்டுப் பகுதி யில் காணப்படுகின்றன. திருப்பதி கம் விண்ணப்பிப்பவர்களின் இப் பெயர்களிலிருந்து மூன்று சிறப்புக் களை அவர்கள் பெற்றிருந்தனர் என் பது விளங்குகின்றது.

ஒன்று சிவபெருமான் பெயரையோ நாயன்மார்கள் பெயரையோ இயற் பெயராகக் கொண்டிருந்தமை

இரண்டு: சோழ மன்னனுல் அளிக்கப் பெற்ற சிறப்புப்பெயர்களைக் கொண்டிருந்தமை.

மூன்று: சதாசிவன் ஞானசிவன் என்பன போன்ற விசேட தீட்சை பெற்றமையைக் குறிக்கும் பெயர் களைக் கொண்டிருந்தமை மேலும் இக் கல்வெட்டிலுள்ள நயங்களைப் பயின்று உணர்க.

இதனினும் இரண்டாம் குலோத் துங்கன் காலத்துக் கல்வெட்டுச் செய் திகள் வியக்கவும் போற்றவும் உரிய தாக உள்ளன. அதனைக் கீழே தரு கின்றோம்.

(10) கி. பி. 1125-ல் ஸ்ரீ குலோத் துங்க சோழ தேவர்க்கு யாண்டு இரண்டாவது இராசராச வளநாட்டு பனையூர் நாட்டு வாவலூர் நாட்டுத் தேவதானம் திருவாமாத்தூர் ஆளுடைய அழகிய கோவிலில் திருப் பதிகம் பாடி வரும் குருடர்களைத் தவிர நம்தேவாரத்துத் திருப்பதிகம் பாடும் பொய்யாத தேவர் கணநாத னுன இராசராசப் பிச்சனுக்கும், இவன் வர்க்கத்தார்க்கும் இக் கோவில் திருப்பதிகக் காணியான இவ்வூர் முதல் காணியாகக் கொடுத் தோம் இவன் வர்க்கத்தாரையும் மெய் இட்டுத் திருப்பதிகம் பாடுவித் துக் கொண்டு குருடர்களுக்கு விட்டு வரும் நிவந்தப்படி இவர்களுக்கும் விட்டுக் கல்வெட்டுக என்று திருவாய் மொழிந்து திருமுகம் பிரசாதம் செய்து வந்தமையின் இக்குருடர் முன்பி லாண்டு அநுபவத்தின்படிப் பாடி வரும் குருடர் பேர் பதினறுவரும், இவர்களுக்குக் கண்காட்டுவார் இரு வருமாகப் பதினெண்மருக்குப் பேரால் நெல்லுப் பதக்காக நாளொன்று முக்கலமாக நாள் முந் நூற்றறுபதுக்கு நெல் ஆயிரத்தெண் கலமும் புடவை (வேட்டி) முதலுக்குப்

பேரால் காசு ஒன்றுகக் காசு பதி னெட்டுக்குக் காசு ஒன்றுக்கு நெல்லு இருபதின் கலமாக வந்த நெல்லு ஆயிரத்து நானூற்று நாற்பதின் கலத்துக்கு வேலி ஒன்றுக்கு நெல்லு நூற்றிருபதின் கலமாக இத்தேவர் தேவதானம் கடுவனூரில் விட்ட நிலம் பன்னிரு வேலியும் காணியாக இவ் வூர் நிலம் நீங்கலாதபடியே கைக் கொண்டு இத் திருப்பதிகம் பாடுவார் பேர் பதினெண்மரும் மூன்று சந்தி யும் வந்து திருப்பதியம் விண்ணப்பம் செய்து முன்பிலாண்டுகள் இக் குரு டர்கள் நிலம் கைக்கொண்டு செய்து வரும்படியே இத் திருப்பதிகம் விண்ணப்பம் செய்வாரும் செய்து வரக் கடவார்களாக. இப் பொய்யாத சேவடியர் கண நாதனை இராச ராசப் பிச்சனுக்கும் இவன் வர்க்கத் தார்க்கும் காணியாகக் கொடுத்தோம் என்று கல்வெட்டுக் கூறுகின்றது.

இதனால் திருவாமாத்தூர் கோவி லில் திருப்பதிகம் ஓதிய சிறப்புடன் நிகழ்ந்த சமூகத் தொண்டும் போற் றுதற்குரியது. நாட்டில் வாழ்விழந்த குருடர்களை அழைத்துத் திருப்பதிகம் பாடும் அளவுக்குச் செவி வழியாக அவர்களுக்கு ஓதுவித்துப் பிறகு அவர் களையே திருக்கோயிலில் திருப்பதிகம் விண்ணப்பம் செய்ய நியமித்து, நெல் உடை முதலியன அளிக்க நிலம் காணியாகக் கொடுத்தது என்றென் றும் எண்ணி மகிழ்தற் குரியதாகும். பதினாறு குருடர்களுக்குக் கண்காட்டு வார் இருவரை நியமித்து அவர்களுக் கும் நெல்லும் உடையும் அளித்ததும் போற்றற்குரிய சமுதாயப்பணி யாகும். இச் செய்தியால் சோழமன் னர்கள் சைவப்பணி வேறு சமுதாயப் பணி வேறு என்று எண்ணாமல் ஒன் றாகவே கருதி தம் ஆட்சியைச் சிறப் புறச் செய்தனர் என நன்கு தெளியலாம்.

6—2—72 அம்பாள் குடமுழுக்குத் திருநாளில் சிவகாம சுந்தரி அம்மை யாரின் திருவருட் டுணைகொண்டு அம்பலத்தாடுவானது உலகெலாம் மலர் சிலம்படியை வாழ்த்தி வணங்குவோம்.



# வரம் வேண்டுதல்

*டாக்டர் இரா. சாரங்கபாணி*, எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,

சங்க இலக்கியங்களில் பத்திப் பாடல்களாகக் கருதப் பெறுபவை திருமுருகாற்றுப்படையும் பரிபாடலில் திருமால் செவ்வேள் ஆகியோர் பற்றிய பாடல்களுமேயாம். அவற்றைப் பாடிய புலவர்கள் மக்கள் விழைந்து வேண்டிய வரங்களையும் தாம் விரும்பிக் கேட்ட வரங்களையும் தம் பாடல்களிடையே புலப்படுத்தியுள்ளனர், சங்க காலத்துக்குப் பின்னர் வாழ்ந்த மெய்யன்பர்களும் இறைவன்பால் நிறைந்த அன்புடன் பாடிய பாசுரங்களில் தாம் வேண்டிய வரங்களைச் சுட்டியுள்ளனர். வேண்டுபவரின் மனவளர்ச்சிக்கும் கால வளர்ச்சிக்கும் ஏற்ப வரங்கள் அமைந்திருத்தலை இனிக் காண்பாம்.

திருமாலைப் பற்றிப் பாடிய பரிபாடற் புலவர்களெல்லாம் அவர் பக்கத்திலேயே உறைந்து இன்புறும் பேறு வாய்க்க வேண்டும் என்றே பெரும்பாலும் வரங்கேட்கின்றனர் தனித்துத் தமக்கு மட்டுமன்றித் தமர்க்கும் அவ்வின்பப் பேறு வாய்க்க வேண்டும் என்பது அப்புலவர்களது வேணவாவாகத் தெரிகின்றது.

காமரு சுற்றமோடு ஒருங்குநின்
அடியுறை
யாமியைந் தொன்றுபு வைகலும்
பொலிகென
ஏமுறு நெஞ்சத்தேம் பரவுதும்
வாய்மொழிப் புலவநின் தாள்நிழல்
தொழுதே
பரிபாடல் (1:62-65)

சொல்லும் பொருளும் போல ஒன்றாக இயைந்து உலகத்தைப் புரக்கும் திருமாலும் பலதேவனும் உறையும் திருமாலிருஞ் சோலைமலையிலேயே, தாமும் பிரியாது வாழ வேண்டும் என வேண்டுகின்றார் இளம் பெருவழுதியார்

இருங்குன்றத் தடியுறை இயை
கெனப்
பெரும்பெயர் இருவரைப் பரவுதும்
தொழுதே
(15:65,66)

கீரந்தையார் என்னும் புலவர் திருமாலைச் சுற்றத்தொடும் தொழுது தங்கட்கு மாசற்ற மெய்யுணர்வை வேண்டுகின்றார்.

கடும்பொடும் கடும்பொடும்
பரவுதும்
கொடும்பா டறியற்க எம்மறி
வெனவே
(2:74,75)

செவ்வேளைப் பாடிய புலவர்களும் திருமாலைப் பாடிய புலவர்களைப் போலவே இறைவனது காட்சி இன்பத்தில் திளைக்கவேண்டும் என்றே

பாடியுள்ளனர். நல்லச்சுதனுர் திருப்பரங்குன்றத்து அடியுறைதல் என்றும் இயைக என்றும் செவ்வேளின் புகழ் பாடுதல் இன்றுபோல் என்றும் வாய்க்க என்றும் வேண்டுகிருர். குன்றம் பூதனுரும் முருகன் திருவடிக்கண் எப்பொழுதும் தங்கவேண்டும் என இரந்து கேட்கின்ருர். பரங்குன்றத்தில் பெரும் பெயர் முருகனை வழிபடும் மக்கள் தத்தம் நிலைக்கேற்ப இம்மைப்பயன் வேண்டுவதாகப் பரிவ பாடல் கூறும், கனவிற் கண்ட காதலரை நனவிற் பெறுவதற்காக வையையில் புதுப் புனல் பெருகுவ்தாக எனச் செவ்வேளை இறைஞ்சுகின்றனர். கருவயிறு உறுக எனப் பாடுகிடப்பார் சிலர். பொருள் வயிற் பிரிந்த தலைவனுக்கு அது மிகுதியும் கிடைப்பதாகுக என வேண்டுவார் சிலர். தலைவன் போரில் வாகை சூடுவானுக என வரங்கேட்பார் சிலர்

கனவின் தொட்டது கைபிழை
யாகாது
நனவிற் சேஎப்பநின் நளிபுனல்
வவையை
வருபுனல் அணிகென வரங்கொள்
வோரும்
கருவயிறு உறுகெனக் கடம்படு
வோரும்
செய்பொருள் வாய்க்கெனச் செவி
சார்த்து வோரும்
ஐயமர் அடுகென அருச்சிப்
போரும்
(8 : 103-108)

இவ்வாருக இம்மைப் பயன் கருதி மக்கள் வரம் வேண்டல் செவ்வேள் பாடல்களில் காணப்படுகின்றதேயன்றித் திருமால் பாடல்களில் காணப்படவில்லை.

கடுவனிள வெயினனுர் திருமாலையும் செவ்வேளையும் ஒருசேரப் புகழ்ந்து ஏத்தி இறைஞ்சிய சமயப் பொதுமை உடைய சங்கப் புலவராவர். அவர் செவ்வேளை நோக்கி வரம் வேண்டும்போது பிறர்போல் இம்மையின்பம் வேண்டாமல் வீடுபேற்றுக்கு இன்றியமையாத வற்றையே வேண்டுகிருர், ‘உலகமக்கள் பெரும்பாலும் போற்றி மதிக்கும் பொருள், பொன், நுகர்ச்சி ஆகிய மூன்றனையும் யாம் வேண்டவில்லை. எமக்கு வேண்டுவன வீடு பயக்கும் நினது அருளும் அதனை உண்டாக்க நின்னிடத்து யாம் செய்யும் அன்பும் அவ்விரண்டானும் வரும் அறனும் ஆகிய இம் மூன்றுமே’ என்று பாடுகிருர்.

“யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும்
அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும்
மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா
ரோயே”
(5 : 78-81)

சங்ககால அடியார்கள் எனக் கூறத்தகும் இப்புலவர்கள் கேட்ட வரங்களைப் போலவே, ஆழ்வார்களும் நாயன்மார்களும் வரங் கேட்டிருப்ப்தை அவர் தம் பாசுரங்களில் காண்கின்ருேம். குலசேகர ஆழ்வார் பொருளையும் பொன்னையும் போகத்தையும் விரும்பவில்லை, இறைவன் அருளையே நாடினுர் என்பதனை அவர் தம் பாசுரங்கள் அறிவுறுத்தும்.

கம்ப மதயானைக்
கழுத்தகத்தின் மேலிருந்து
இன்ப மருஞ்செல்வமும்
இவ்வரசும் யான்வேண்டேன்

எம்பெரு மான்ஈசன்
  எழில்வேங் கடமலைமேல்
தம்பக மாய்நிற்கும்
  தவமுடையேன் ஆவேனே
உம்ப ருலகாண்டு
  ஒரு குடைக்கீழ் உருப்பசிதன்,
அம்பொற் கலையல்குல்
  பெற்றாலும் ஆதரியேன்
செம்பவள வாயான்
  திருவேங்கட மென்னும்
எம்பெருமான் திருமலைமேல்
  ஏதேனும் ஆவேனே

தொண்டரடிப்பொடி யாழ்வாரும் இறைவன் பெயர் கூறி ஏத்தும் சிறப்பினையே வேண்டுகின்றார். மறுமையின்பத்தையும் விரும்பவில்லை.

பச்சைமா மலைபோல் மேனி,
  பவளவாய்க் கமலச் செங்கண்
அச்சுதா, அமரர் ஏறே,
  ஆயர்தங் கொழுந்தே, என்னும்
இச்சுவை தவிர யான்போய்
  இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
  அரங்கமா நகரு ளானே.

சேக்கிழாரும் மெய்யடியார்களது நிலையைக் குறிப்பிடும்போது 'ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கு வார்' என்றும் 'கூடும் அன்பினிற் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினார்' என்றும் கூறியிருத்தல் ஒப்பு நோக்குதற் குரியதாகும்.

இறைவன் புகழ்பாடி அவருக்குப் பணி செய்வதுபோலவேஇறைவனடியார்க்கும் பணி செய்யும் பேறு வாய்க்கவேண்டும் என்றும் வரம் வேண்டுவதைப் பிற்காலப் பாக்களில் காண்கிறோம். திருவெம்பாவைப் பாடலில் மணிவாசகப் பெருந் தகையார்,

என் கொங்கை நின் அன்பர்
  அல்லார் தோள் சேரற்க
எங்கை உனக் கல்லாது
  எப்பணியும் செய்யற்க
இங்கிப் பரிசே
  எமக்கெங்கோன் நல்குதியேல்
எங்கெழில் என் ஞாயிறு
  எமக்கேல் ஓர் எம்பாவாய்.
    (திருவெம்பாவை - 19.)

என்று கூறுதல் காணலாம்.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியும் தம் திருப்பாவையில்,

எற்றைக்கும் ஏழேழ்
  பிறவிக்கும் உன் தன்னோடு
உற்றோமே யாவோம்
  உனக்கே நாம் ஆட்செய்வோம்
மற்றை நம் காமங்கள்
  மாற்றேலோர் எம்பாவாய்
    (திருப்பாவை, 29)

என்று பாடியிருத்தல் நோக்கத்தகும்

மணிவாசகர் தாம் அருளிய பிரார்த்தனைப் பத்தில்,

"கடியேனுடைய கடுவினையைக்
  களைந்துன் கருணைக்
    கடல் பொங்க
  உடையாய் அடியேன்
  உள்ளத்தே ஓவாது உருக
    அருளாயே"

என்று கண்ணுதற் பெருங் கடவுள் மாட்டு அருள் வேண்டி உருகுதலைக் காண்கின்றோம். திருநாவுக்கரசர், மறு பிறப்பில் மானிட உருவன்றி வேற்றுரு வாய்த்தால் இறைவனடியை மறந்துவிட நேருமே என்றஞ்சி அப்பிறவியிலும் மறவாதிருக்க வரம் வேண்டுகின்றார்.

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா
உன்னடி என் மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டு
மிவ்வயகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள்
செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை
மேல்வைத்த தீவண்ணனே.

தாயுமானவர், இராமலிங்க அடிகள் போன்றவர்கள் தமக்கு மட்டும் இன்பம் வேண்டாது எல்லா உயிரும் இன்பமுற வேண்டும் என்றும் அவ்வுயிர்கட்குப் பணி செய்யத்தம்மை ஆளாக்க வேண்டும் என்றும்வேண்டி நிற்றலை இவர்தம் பாடல்கள் அறிவிக்கும். இது வரம் வேண்டுதலின் வளர்ச்சியைக் காட்டுவதாகும்.

எவ்வுயிரும் என்னுயிர்போல்
எண்ணி இரங்கவுநின்
தெய்வ அருட்கருணை செய்யாய்
பராபரமே
தம்முயிர்போல் எவ்வுயிருந்
தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று
செய்வேன் பராபரமே
அன்பர்பணி செய்யவெனை
ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும்
பராபரமே

என்று தாயுமானவர் பாடி தம் உட்கோளை வெளியிடுவர்.

முன்னைய அடியார்களைப் போலவே இராமலிங்க அடிகளும் 'ஆடிநிற்கும் சேவடியைப் பாடிநிற்க வேண்டும்' எனவும் 'மருளாய உலகமெலாம் மருள்நீங்கி ஞான மன்றிடத்தே வள்ளலுனை வாழ்த்தியிடல் வேண்டும் எனவும் பாடியுள்ளார். இறைவன் பால் வரம் வேண்டுதலைப் பெரிதும் விரித்துப் பாடியவர் இவ்வடிகளாரே யாவர். சான்றாக ஒருபாடலைக் காண்போம்.

அப்பாநான் வேண்டுதல்கேட்
டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம்நான்
அன்புசெயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும் எங்கணும்
நான் சென்றே
எந்தைநின தருட்புகழை
இயம்பியிடல் வேண்டும்
செப்பாத மேனிலைமேல் சுத்தசிவ
மார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்சோதி
செலுத்தியிடல் வேண்டும்
தப்பேது நான்செயினும் நீ
பொறுத்தல் வேண்டும்
தலைவ! நினைப் பிரியாத நிலைமை
யும்வேண் டுவனே

மெய்யன்பினராய அடியார்கள் தம் பாடலில் வேண்டிய வரங்கள் எல்லாம் விழுப்பம் சான்ற உயரிய அறநெறிகளாகும். அச் செந்நெறிவழி ஒழுகிச் சீர்மை எய்துதல் நன்மக்கள் கடனும்.



# பழமொழிகள் உணர்த்தும் கடவுட் கொள்கை

திரு. க. த. திருநாவுக்கரசு

பழமொழிகள் நாட்டு மக்களின் நாவிலே நடமாடும் நயமொழிகள். கற்றோரும் மற்றோரும் தங்கள் பேச்சுக்கு இடையே பழமொழிகளைப் பயன்படுத்துகின்றனர். பழமொழி என்பதற்குப் 'பழகிய மொழி' என்றும், 'பழுத்த மொழி' என்றும் பொருள் கூறுவர். நாட்டு மக்களிடத்துப் பன்னெடுங் காலமாகப் பழக்கத்தில் இருந்தவருவன பழமொழிகள். இக்காரணத்தால், சமுதாயத்தின் பல்வேறு நிலைகளில் உள்ள மக்களும் எளிதில் அறிந்துகொள்ளத் தக்க வகையில் எல்லாருக்கும் நன்கு பழக்கமானவையாக அவை உள்ளன, அறிவுரைகள், அனுபவமொழிகள், ஏளனப் பேச்சுகள், நகைச்சுவையூட்டும் நயமிகு சொற்கள் ஆகிய அனைத்தையும், நாம் 'பழமொழி' என்ற ஒரு சொல்லாலேயே குறிப்பிட்டு வருகிறோம் அவை, இன்றுவரை 'எழுதா இலக்கியங்'களாகவே இருந்துவருகின்றன.

## பழமொழிக்குப் பல பெயர்கள்

பண்டைக் காலத்தில் பழமொழியை முதுமொழி, மூதுரை, முதுசொல், முன்சொல், பழஞ்சொல், தொன்மொழி, வாய்மொழி, தொன்றுபடு கிளவி, மொழிமை என்னும் பல்வேறு பெயர்களால் நம்முடைய பெரியோர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

'மொழிமை முதுசொல்' – தி.வா.பக் 227

'மொழிமை மூதுரை முன்சொல் பழஞ்சொல்
முதுசொல் என்பர் பழமொழியு மாமே'
— பிங்கல. 2025

'மொழிமைமூ துரைமுன் சொல்லுமுது சொல்லும்
பழஞ்சொல்லும் பழமொழி முதுமையாகும்' — சூடா. பக். 209.

என்று நிகண்டுகள் கூறுவதனால், இதனை நாம் அறிகிறோம்.

மேலும், சங்க இலக்கியத்துள் 'பழமையான அனுபவ மொழிகள்' என்னும் பொருளில், 'பழமொழி' என்னும் சொல் சில இடங்களில் வழங்கப்பெற்றுள்ளதை நாம் காணுகின்றோம். அவற்றுள்,

'இம்மை யுலகத்து இசையொடும் விளங்கி
மறுமை யுலகமு மறுவின்(று) எய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர் பயந்த செம்ம லோரெனப்
பல்லோர் கூறிய பழமொழி யெல்லாம்'
– அகம். 66

'நன்றுசெய் மருங்கிற் தீதி லென்னுந்
தொன்றுபடு பழமொழி யின்று பொய்த்
தன்று – அகம். 101.

என்னும் பாடற் பகுதிகள் இங்குக் குறிப்பிடத்தக்கன.

பன்னெடுங் காலமாக மக்களிடையே பழக்கத்தில் இருந்துவருவன பழமொழிகள் என்னும் கருத்தில் அவற்றைத் 'தொன்றுபடு கிளவி' என்று சங்ககாலச் சான்றோர்கள் போற்றியுள்ளனர்.

'...... ............ அறத்தா(று)
அன்றென மொழிந்த தொன்றுபடு
கிளவி' - அகம். 5

என்பது பாலைபாடிய பெருங்கடுங்கோவின் கருத்தாகும்.

பழமொழிக்கு வழங்கிவரும் மற்றொரு பெயர் முதுமொழி' என்பதாகும் (வேதத்தைக் கூட 'முதுமொழி' என்று குறிப்பிடுகின்ற வழக்கு உண்டு.) இதனை,

'செதுமொழி சீத்த செவி செறுவாக
முதுமொழி நீராப் புலனா வுழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ்
புனலூர' – கலி. 68.

என்னும் பாடற்பகுதி தெளிவுறுத்துகிறது.

கூலவாணிகன் சாத்தனாரும்,
'முதுமொழி கூற முதல்வன் கேட்டு'
– மணி 25:119.

என்னும் அடியில், இச்சொல்லைக் கையாண்டுள்ளார்.

மனித வாழ்க்கையின் பல்வேறு துறைகளைப்பற்றி அறிவிலும், அனுபவத்திலும் முதிர்ந்த பெரியோர்கள் கண்ட உண்மைகளைத் திட்பநுட்பமாகக் கேட்போர் உள்ளத்தில் பதியுமாறு சுருங்கச் சொல்லி விளங்க வைப்பன பழமொழிகள். அவை அறிவுறுத்துவதோடு இன்புறுத்தவும் செய்கின்றன. தொல்காப்பியர் முதுமொழிக்கு வகுத்துள்ள இலக்கணம், 'பழமொழி'க்கும் பொருந்துவதாகும்.

கடந்த காலத்தில் புகழுடன் வாழ்ந்த பெருமக்களிடத்து அமைந்த நுண்ணறிவு, சொல்வன்மை, உயர்ந்த நோக்கம், நல்வாழ்க்கை முறையில் அன்னோர் பெற்றிருந்த சிறந்த அனுபவங்கள் ஆகிய அனைத்தையும் திரட்டித் தருதல் இம்முதுமொழியின் இயல்பு என்பர் தொல்காப்பியர்.

'நுண்மையும் சுருக்கமு மொளி யுடை
மையும்
எண்மையு மென்றிவை விளங்கத்
தோன்றிக்
குறித்த பொருள் முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி யென்ப'
(தொல். செய். 177)

இதனால் எளிமை, தெளிவு, நுட்பம், சுருங்கச் சொல்லி விளங்கவைத்தல் ஆகிய பண்புகளோடு கருதிய பொருளைத் தெளிவுறுத்துவதற்குக் காட்டப்படும் காரணமாக அமையும் கருத்தினைப் 'பழமொழி' என்று கூறுவது மரபெனத் தெரிகிறது.

'மூதுரை' என்னும் பெயரும் பழமொழிக்கு உண்டு. 'முதிர்ந்த உரை என்பது இதற்குப் பொருள். அறிவு நலங் கனிந்த கருத்துக்களை அறிவுறுத்துவன 'மூதுரை' என்பது பெறப்படுகிறது. இதனை,

மூழையுப் பறியாத தென்னு மூதுரையு
மிலளே'
— திவ்வி. பிர. பெரிய 3 : 7 : 4.

என்பதனால் அறியலாம். 'மூதுரை' என்னும் நீதிநூல் ஒன்று இருக்கிறது' தமிழ் மூதாட்டியான ஔவையார்

இதை இயற்றியுள்ளார். தமிழகத்தில் தொன்றுதொட்டுச் சான்ருேர்கள் அனுபவத்தில் கண்ட உண்மைகளைத் திரட்டி, அவற்றிற்கு இலக்கிய வடிவத்தை இந்நூலின் மூலம், அவர் கொடுத்துள்ளார்.

சிற்றம்பல பண்டாரம் என்பவர் இயற்றிய மகாபுராணத்தில், 'பழமொழி' யெனும் பொருளில், 'மூதுரை யெனும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

'புத்தியின் மானமேற் பொலிவா மூதுரைப்
பத்தியின் தானமே பலிக்கவேண்டுமால்
— மகாபுராணம், 27.

அனுபவதில் அறிஞர்கண்ட உண்மைகளை உரைப்பனவாகப் பழமொழிகள் உள்ளமையால், அவற்றை 'வாய்மொழி' என்று குறிப்பிடுகின்ற பழக்கமும் இருந்த வருகிறது 'வாய்மை யுடைய மொழி' என்பது இதற்குப் பொருளாகும். இப்பொருளில் 'வாய்மொழி' என்னும் சொல் சங்கநூல்களில் இடம் பெற்றிருக்கிறது.

'நுண்ணூல் தடக்கையின் நாமருப்பாக
வெல்லும் வாய்மொழி' — புறம். 388
'எவ்வம் சூழாது விளங்கிய கொள்கை
காலையன்ன சீர்சால் வாய்மொழி'
— பதிற். 21.
'நசைசால் வாய்மொழி இசைசால்
தோன்றல்'
— பதிற், 55.

ஏட்டிலே எழுதப்பெருத காரணத்தினுல் வேதத்தை, 'எழுதாக்கிளவி', 'சுருதி' 'கேள்வி' என்று சுட்டுவது மரபு அதைப்போன்று, ஏட்டிலே எழுதிப் போற்றப் பெருமல், மக்களுடைய வாய்களில் உலாவிவரும் பழமொழிகளை, இக்காலத்தில் நாம் 'வாய்மொழி' என்று குறிப்பிடலாம்.

### ஏட்டிலே இடம்பெற்ற பழமொழிகள்

பதினைந்தாம் நூற்ருண்டில் வாழ்ந்த அருணகிரிநாதர்,

'திருவள்ளுவ தேவர் வாய்மையென்
கின்ற
பழமொழியை ஓதி யேயுணர்ந்து,
— திருப்புகழ்: திருச். 48.

என்று திருக்குறளைப் 'பழமொழி' என்றே பாராட்டியுள்ளார்.

கி, பி. ஆரும் நூற்ருண்டு அளவில், நாட்டில் பெருவழக்காக இருந்துவந்த பழமொழிகள் பலவற்றைத் திரட்டி, அவற்றுள் நானூற்றைத் தேர்ந்தெடுத்து, அவற்றை விளக்கும் வகையில் முன்றுறையரையனர் என்னும் புலவர் ஒரு நூலை இயற்றியுள்ளார். அந்நூலுக்குப் 'பழமொழி நானூறு' என்பது பெயராகும். ஒவ்வொரு பழமொழிக்கும் ஒவ்வொரு வெண்பா இயற்றி, அதன் இறுதியில் ஒரு பழமொழியை ஆசிரியர் பொருத்திக் காட்டுந்திறன் போற்றத் தக்கதாகும். மற்றும் 'முதுமொழிக் காஞ்சி' என்ருெரு நூலும் உண்டு. இவை இரண்டும் பதினெண்கீழ்க்கணக்கு என்ற நீதி இலக்கியத் தொகுதியைச் சேர்ந்தனவாகும்.

### பழமொழியின் பண்பு

பழமொழி என்பது என்ன? சொற்செறிவும் பொருட்செறிவும் வாய்ந்த ஒரு தொடர்மொழியே பழமொழி எனலாம். பெரும்பாலும் அது ஒரு சொற்ருெடராக விளங்கும். ஆழ்ந்ததும், அகன்றதும், சிறந்ததுமான கருத்துக்களைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் இயல்புடையது பழமொழி, அது வாய்ப்பேச்சுக்கு இடையே படைக்கப்படுவது அன்று. ஆனல்,

அது மைக்கிலுள்ள தொடரமைப்பாக விளங்கி வருகிறது. அத்துடன் பலரால், பல சமயங்களில் திரும்பத் திரும்ப எடுத்துரைக்கப்படும் சிறப்புடையது அது. பலமுறை பயன் படுத்தப்படுவதற்கேற்ப மாற்றமும், திரிபும் கொண்ட அமைப்பை உடையதாக இருப்பினும், அதற்கென்று ஒரு வகையான மாருத தன்மையும் இருந்து வருகிறது. எல்லாரும் நன்கு அறிந்த உண்மைகளையோ, அறவுரைகளையோ, அறிவுரைகளையோ பழமொழி எடுத்துரைக்கிறது. எப்பொழுதும் பொதுப்படையாகவுள்ள ஒரு பொருளினை உணர்த்தும் வகையில் பழமொழி அமைகிறது.

பழமொழி சொற்செட்டும், உணர்ச்சித் துடிப்பும், உயிர்க்களையும் வாய்ந்த சொல் லோவியமாகும். அடிக்கடி அவற்றுள் ஒத்த கருத்துக்களின் இணையமைதியையோ, முரண்பட்ட கருத்து இணைகளையோ நாம் காணலாம். அந்நிலையில் எதுகை, மோனை, இழுமெனும் இனிய ஒலிநயம் போன்ற பல இலக்கிய இயல்புகள் அதில் இணைந்தும் இழைந்தும் இலங்கும்.

**பழமொழியின் வகை :-** பழமொழிகளை நாம் இரண்டு வகையாகப் பாகுபடுத்தலாம். சொற்கள் பலவற்றைக் கொண்ட நீண்ட தொடர் மொழிகள் முதல் வகையாகும். அவை அறிவுறுத்தும் சொற் ருெடர்களாகவே தோன்றும். இரண்டாம் வகையைச் சேர்ந்தவை கட்டளைச் சொற்ருெடர்களாகும். அவற்றின் சொற்ருெடர் செறிவான கட்டமைப்பு உடையது. அவை சில சொற்களாலான சிறு சிறு தொடர் மொழிகளாகவும், சிறு தொடர் மொழிகள் சிலவற்றின் சேர்க்கைகளாகவும் வழங்கி வருகின்றன.

ஒரு பழமொழியில் பல்வேறு உறுப்புக்கள் உள்ளன. அவையாவும் மிக முக்கியமானவை. அவை ஒவ்வொன்றும் மற்ருென்றைச் சார்ந்தே இயங்கும் இயல்புடையவை. குறிப்பிட்ட சொல் வடிவங்களும், மரபுத் தொடர்களும் பழமொழியில் இடம்பெறுகின்றன. இதன் மூலம் பொதுப்படையான பொருளினைப் பழமொழிகள் வரையறுக்கின்றன, அவை அறிவுறுத்தும் தொடர்மொழிகள். எல்லையற்ற நிகழ் காலத்தை யுணர்த்தும் வினைச் சொற்கள், தெரிநிலை வினைச் சொற்கள், இனப் பொருள் உணர்த்தும் பெயர்ச்சொற்கள் என்னும் வகைகளைச் சேர்ந்தனவாகும். என்றும், ‘எப்பொழுதும்’ எங்கும் இல்லாத, என்பன போன்ற பொருள்களை யுணர்த்தும் பெயரெச்ச, வினையெச்சங்களைக் கொண்ட தொடர்மொழி வடிவங்களையுடையன பழமொழிகள்.

முரணுரைகளே பெரும்பாலான பழமொழிகளின் சிறப்பு இயல்பாக உள்ளன. பல வகையான எதிர் சொற்களால் நயமித முரணுரைகள் அமைவதைக் காணுகின்ருேம். பெரிதும் அவை உண்மையான முரணுரைகளாக இருப்பதில்லை ஆனல் குறிப்பிட்ட சூழ்நிலையைச் சார்ந்த எதிர்சொற்களாக அவை வருகின்றன. ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய் சொல்லுதல் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

**பழமொழியின் பயன்:-** பழமொழிகள் பரந்துபட்டசெல்வாக்குடையன. ஏழை, எளிய மக்கள் முதல் செல்

வச்சீமான்கள் வரையிலுள்ள எல்லா வகையான மக்களிடத்திலும் அவை பெருவாழ்வு பெற்று விளங்குகின்றன; கல்லார்க்கும் கற்றார்க்கும் உறுதுணையாக இருந்து உவகையூட்டுகின்றன; சாதி, இன, சமய வேறுபாடற்ற வகையில் ஒரு நாட்டிலுள்ள எல்லா மக்களிடத்தும் அவை உறவாடி வருகின்றன. இக்காரணங்களால் பொதுமக்களுடைய கருத்துக்களை நுட்பமாகவும், திட்பமாகவும் பிரதிபலிக்கும் மிதவை இலக்கியங்களாகப் ( Floating literature ) பழமொழிகள் விளங்குகின்றன.

சமூகம், அரசியல், ஒழுகலாறு, சமய நெறிமுறைகள், ஆகியவற்றைப் பற்றி ஒரு நாட்டு மக்கள் கொண்டுள்ள இலட்சியங்களுக்கு வலிவும், பொலிவும் அளிப்பன அந்நாட்டில் வழங்கி வரும் பழமொழிகளாகும். ஒரு நாட்டினுடைய பண்பாட்டு வளர்ச்சியையும், நாகரிக முன்னேற்றத்தையும் அறிவதற்கு உறுதுணையாக உள்ளவை பழமொழிகள். எனவே, பழமொழிகள் வெறுங் கற்பனைக் கனவுகளின் அடிப்படையில் தோன்றியவை அல்ல எனலாம். அவை புலவர்களால் புனைந்துரைக்கப்பட்ட பொன்மொழிகளும் அல்ல. ஒரு சமுதாயத்தின் அல்லது நாட்டின் பண்பாட்டிலே மதிப்பிடுவதற்குப் பயன்படும் கருவிகளே பழமொழிகள். அவற்றைக் கருத்துக் களஞ்சியங்கள் என்றோ, கற்பனை கலந்த கதைக் குறிப்புக்கள் என்றோ நாம் கருதுவதைவிட, வாழ்வியல் உண்மைகளை உணர்த்தும் ' வாய்மொழி இலக்கியங்கள்' என்று கூறுவதே மிகவும் பொருத்தமாகும்.

பழமொழிகள் உணர்த்தும் கடவுட் கொள்கை :- 'தெய்வந் தெளிமின் ! தெளிந்தோர்ப் பேணுமின் !' என்பது மனித குலத்திற்கு இளங்கோவடிகள் வழங்கிய அறிவுரையாகும். தமிழகம் தொன்று தொட்டே தெய்வ வழிபாட்டில் தலைசிறந்து விளங்குகிறது. அத்தெய்வ வழிபாட்டைப் போற்றாத நூல்கள் இல்லை ! பாராட்டாத பாவலரும் இல்லை. இந்நூல்கள், கல்வியறிவைப் பெற்றோருக்கே பயன்படும் சிறப்புடையன. ஆனால், கல்வி அறிவில்லாத மக்களும் கடவுள் இருப்பில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டு, நாளும் அவனுடைய திருவடிகளைப் போற்றி வணங்குகின்றனர். அவர்கள் இடையே வழங்கும் பழமொழிகள் ஆயிரக் கணக்கானவை. அவற்றுள் நூற்றுக்கு மேற்பட்ட பழமொழிகள் ஆன்மிக அறிவொளி ஊட்டுவன. அவற்றுள் தெய்வ வழிபாட்டைப் பற்றியுரைக்கும் பழமொழிகள் பல. அவை தெய்வத்தின் இருப்பையும், இயல்பையும் திருக்கோயில் வழிபாட்டு முறைகளையும் தெரிவிக்கின்றன. அவை யனைத்தையும் இச்சிறு கட்டுரையில் திரட்டித்தர இயலவில்லை. எனினும், அப்பழமொழிகளுள் சிறப்புமிக்க சிலவற்றை இங்கு நாம் காணலாம்.

### (1) தெய்வத்தின் இருப்பும் இயல்பும்

'தெய்வம்' என்னும் சொல்லால் முழுமுதற் கடவுளாகிய பரம்பொருளையே பழமொழிகள் சுட்டுகின்றன. அவர் எங்கும் இருப்பார்; எல்லாமாய் இருப்பார்; உள்ளம், உரை, உடல் ஆகியவற்றைக் கடந்து நிற்பார்; எல்லையற்ற பேரறிவாளர் அவர்.

அவர் அன்பின் ஊற்று; அருளின் பிறப்பிடம்; அறத்தின் திருவுருவம் என்னும் கருத்துக்களைப் பழமொழிகள் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கின்றன.

மனிதன் கடவுளிடத்து அசைக்க முடியாத நம்பிக்கை கொள்ள வேண்டும். அப்பொழுது இறைவன் உறுதியாக அவனைப் போற்றிக் காப்பான் என்னும் உண்மையை,

'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்'

என்னும் பழமொழி அறிவிக்கிறது. சமய வாழ்வின் அடிப்படைக் கோட்பாடு 'நம்பிக்கை', எண்ணற்ற இன்னல்களும் இடையூறுகளும் வந்த பொழுதும், கடவுளிடத்துத் தான் கொண்ட நம்பிக்கையில் சிறிதும் தளராது, 'எல்லாம் ஈசன் செயல்' என்றும் 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்றும் மனவுறுதியோடும், முறுகிய பக்தியுணர்வோடும் வாழ வல்லார்க்கு 'எந்நாளும் இன்பமே', துன்பம் இல்லை!' என்னும் செய்தியைத் தெரிவிக்கிறது இப்பழமொழி.

உலக வாழ்க்கையில் ஆதரவற்று அல்லற்படுவோரின் உள்ளங்களுக்கு அமைதி தரும் அருமருந்து தெய்வ வழிபாடு. உலக இயல்பைக் கூர்ந்து நோக்கின் யாரும் பிறருக்கு உண்மையான துணையாக முடியாது. பெற்றோரும் மற்றோரும் ஒருவனுக்குப் பெருந்துணையாக நிற்பதைப்போல் தோன்றுகிறது. ஆனால் அவனவனுடைய வினைப்பயனே உற்ற துணையாக நின்று உறுதி பயக்கிறது. எனவே, 'தனக்கு ஆதரவாக யாரும் இல்லையே' என்று வருந்துவது அறிவுடைமையாகாது. எல்லாம்வல்ல இறைவன் தான், என்றும் நிலைபெற்று விளங்கக் கூடிய ஆன்மாவிற்கு உற்ற துணையாவான். இதை,

'திக்கற்றவனுக்குத் தெய்வமே துணை'

என்னும் பழமொழி உணர்த்துகிறது.

'எல்லாம் இறைவன் செயல்; நமக்கென்று எத்தகைய பொறுப்பும் இல்லை' என்று முயற்சியின்றிச் சோம்பித் திரிவாரைக் கண்டிக்கும் வகையில் ஒரு பழமொழி வழங்கி வருகிறது. மனிதன் மனச்சோர்வு இல்லாமல் உள்ளக் கிளர்ச்சியோடு எந்தப் பணியையும் செய்ய முன்வர வேண்டும். 'இந்தச் செயலைச்' செய்து முடித்தல் மிகவும் அருமையானது' என்று எண்ணி மனத்தளர்ச்சி அடையாமல் விடா முயற்சியுடன் தெய்வ நம்பிக்கையோடு முயலவேண்டும். அப்பொழுதான், தான் மேற்கொண்ட பணியில் அவன் வெற்றி பெற இயலும். முயற்சி திருவினையாக்கும் அல்லவா?

இதைத் 'தெய்வம் காட்டும்! ஊட்டுமா?' என்னும் பழமொழி அறிவிக்கிறது. 'எல்லாம் இறைவன் செயல்' என்ற மெய்யுணர்வைப் பெற்றிருந்தாலும், மனித முயற்சியும் தேவை என்பதை இப்பழமொழி தெளிவுறுத்துகிறது.

ஆனால், 'என்னைவிட அறிவும். ஆற்றலும் உள்ளவர்கள் உலகில் வேறு யாரும் இல்லை; நினைத்ததை, நினைத்தவாறு செய்து முடிக்குஞ் செயல்திறன் என்னிடம் பேரளவில் இருக்கிறது என்று செருக்குற்றுச் செயலாற்றும் செயல்வீரர்களுக்கு ஒரு பழமொழி அறிவுரை கூறுவதையும் நாம் காணுகிறோம். 'ஐயனே!

உலகில் நாம் நினைப்பன எல்லாம், நினைத்தவாறு நடப்பதில்லை! ஏதோ ஒருசிலவற்றுள் நீ நினைத்தவாறு நினைத்ததைச் செய்து முடித்து இருக்கலாம். ஆனால், பல முயற்சிகளுள் நீ தோல்வியுற்று இருப்பாய்! நன்றாக நினைவுபடுத்திப் பார்! நீதான் பேராற்றல் வாய்ந்தவனாயிற்றே! ஏன் குறிப்பிட்ட ஒரு செயல் நீ எதிர் பார்த்தவாறு நடைபெறாமல் போயிற்று? உண்மையான காரணம் உனக்குத் தெரியுமா? நீ நினைத்தவாறு தெய்வம் நினைக்கவில்லை. அதனால் தான் எல்லாம் நேர்மாறாக நடந்து விட்டது' என்னும் கருத்தை,

'நாம் ஒன்று நினைக்க தெய்வம் ஒன்று நினைக்கும்'

என்ற பழமொழி அறிவுறுத்துகிறது.

தெய்வத்திடத்துப் பற்றுறுதி கொண்ட மனிதன், இருக்கும் இடத்திலேயே அதை நினைந்து, போற்றி வழிபடுவதும் உண்டு பலசமயங்களில் இறைவன் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோயில்களுக்குச் சென்று இறைவனைக் கண்ணால் கண்டு, மனத்தினால் சிந்தித்து, வாயார வாழ்த்தி வழிபாடு செய்வதே பெருவழக்கு அவ்வாறு தெய்வத்தை வணங்குவதற்குக் கோயிலுக்குச் செல்லுகின்ற ஒருவன் 'இறைவா! எனக்கு இதைக் கொடுத்தருள வேண்டும்' என்று விழைவார்வத்துடன், வேண்டியவண்ணம் செல்லுவது இயற்கை.

இதைப்போல ஒருவன் ஏதோ ஒரு காரணத்திற்காக, ஒருவரைக் காணச்செல்லுகிறான். 'இன்று அவர் வீட்டில் இருக்கவேண்டும்! நான் சொல்லுவதைப் பொறுமையாகக் கேட்டு, அவர் நன்மை செய்ய வேண்டுமே. என்னும் எண்ணத்தோடு அவர் போகிறார். போகிற வழியில், அந்தப் பெரிய மனிதரே அவர் எதிரில் வந்து 'நீ சொன்னதைச் செய்துவிட்டேன்' என்று சொன்னால், அவன் பெருவியப்பு அடைவான். அவராலேயே 'அந்நிகழ்ச்சி உண்மைதானா?'' என்று நம்பமுடியாத அளவிற்குத் திகைப்புக்கூட உண்டாகும் அந்நிலையைக் 'கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்ததைப் போன்றது' என்று ஒரு பழமொழி தெரிவிக்கிறது. இப்பழமொழி, தெய்வத்தைக் கும்பிடுவதற்கு, அத்தெய்வம் எழுந்தருளியுள்ள இடத்தை நாடிச் செல்லுவது மக்களுடைய வழக்கம் என்பதை அறிவிக்கிறது.

தெய்வத்தை வழிபடுகின்ற இடத்திற்கும், குழந்தைகள் உள்ள இடத்திற்கும் வெறுங்கையோடு போகக் கூடாது என்பதை மற்றொரு பழமொழி எடுத்துரைக்கிறது.

'குழந்தையும் தெய்வமும் கொண்டாடுகிற இடத்தில்'

என்பது பழமொழி இதனால் தெய்வம் உறைகின்ற கோயிலுக்கோ, விழாவெடுக்கப் படுகின்ற இடத்திற்கோ செல்லுகின்ற பொழுது வழிபாடு செய்வதற்குரிய பூ, பழம் முதலியவற்றைக் கொண்டு செல்லவேண்டும் என்னும் உண்மை புலனாகின்றது. இதைப் போன்றே குழந்தைகள் உள்ள இடத்திற்குப் போகின்றபொழுதும் வெறுங்கையோடு போகக் கூடாது என்பதையும் இப்பழமொழி உணர்த்துகிறது.

வாழ்க்கையில் வசதிபடைத்த 'வலியார்' எளியாரைத் துன்புறுத்துவதை

நாம் கண்கூடாகக் காணுகின்றோம். செருக்கும் ஆணவமும் கொண்டவர்கள் எளியவரைக் கொடுமைப்படுத்து வதையே பொழுது போக்காகவும் கொண்டுள்ளனர். கொடுமைக்கு ஆளாகி, அல்லற்பட்டு, ஆற்றுது அழுது கண்ணீர் வடிக்கும் மெலியாருக்கு ஆறுதல் கூறுகின்ற வகையில் ‘நீ கவலைப்படாதே! தெய்வம் அவர்களைத் துன்புறுத்தும்! என்று ஒரு பழமொழி கூறுகிறது.

‘எளியாரை வலியார் அடித்தால்
வலியாரைத் தெய்வம் அடிக்கும்’

என்பது அப்பழமொழியாகும்.

ஒருவன் செய்யக்கூடாத தீமையைச் செய்துவிட்டால், சட்டத்திற்கு விரோதமான செயலாக அது இருக்குமானல் அரசு உடனடியாகக் குற்ற விசாரணை செய்து தண்டனை விதித்து விடும். ஆனல் ஒருவன் செய்கின்ற பாவங்களையும், நேர்மையற்ற செயல்களையும் கண்டு, உடனடியாகத் தெய்வம் அவனுக்குத் தண்டனை விதிப்பதில்லை. அவன் இறக்கும் வரையில் பொறுத்திருந்து, திருந்துகிருனு என்பதையும் பார்த்துப் பின்னர், அவன் செய்த தீவினைக்கேற்பக் ‘கொடிய பிறவியை’ அல்லது ‘துன்பம் நிறைந்த வாழ்க்கையைத்’ தெய்வம் கொடுத்து விடும். இதை,

‘அரசு அன்று கொல்லும்
தெய்வம் நின்று கொல்லும்’

என்னும் பழமொழி உணர்த்துகிறது,

சிவ பழிபாடு

நம்நாட்டிலே பல வகையான தெய்வங்களுடைய வழிபாடுகள் வழக்கில் உள்ளன. அவற்றுள் சிவ வழிபாட்டு முறையைப் பழமொழிகள் சில சிறப்பித்துப் பேசுகின்றன. ‘பூவினைக் கொண்டு அரன் பொன்னடியைப் போற்றி’ வணங்குகின்ற பொழுது உள்ளமும், உணர்வும் பூசையில் ஒன்றிவிடவேண்டும்; பூசையில் அமர்ந்த பிறகு வேறு எதைப்பற்றியும் சிந்திக்காது இறைவனுடைய திருவடிகளையே தியானிப்பது வழிபாட்டு முறையாகும். சிவ பூசை புரிகின்றபொழுது கரடிவந்தாலும் கவலைப்படாமல் இறைவனைப் போற்றி வணங்குவதே உண்மை பக்திநெறியாகும்.

ஆனல், மனப்பக்குவம் அடையாதவர்கள் சிவபூசையில் ஈடுபட்டுள்ள பொழுது, கரடி வந்தால் ‘ஐயகோ! என்று அலறி புடைத்துக்கொண்டு ஓடிவிடுவர் தாம் செய்து கொண்டிருந்த வழிபாட்டையும் மறந்துவிடுவர். இவ்வாறு வழிபாட்டிற்கு இடையூறுகக் கரடி புகுந்தால் அவர்களுடைய வழிபாடே தடைப்பட்டு விடும். இதைப் போன்று, குறிப்பிட்ட ஒரு செயலைச் செய்கின்ற பொழுது, யாராகிலும் இடையிலே வந்து தொல்லைத் தருவார்களானல், செய்ய வேண்டிய பணியும் தடைப் பட்டுவிடும் என்பதை,

‘சிவபூசை வேளையில் கரடி புகுந்ததைப்போல’

என்னும் பழமொழி தெரிவிக்கிறது.

ஒருவன் இறக்கும் காலம் வருகிற பொழுது ‘சங்கரா! சங்கரா!’ என்று இறைவனுடைய திருப்பெயரை ஓதுவதால் பயனில்லை. வாழ்நாள் தொடக்க முதல் ‘பிறந்து மொழி பயின்ற காலமுதல்’ - இறைவனை ஒல்லும் வகையெல்லாம் போற்றி வணங்கவேண்டும் என்னும் அரிய கருத்தை,

'சாகிற காலத்தில் சங்கரா! சங்கரா' என்பதனுல் பயனில்லை என்று கூறு கிறது ஒரு பழமொழி.

இப்பழமொழிகள் யாவும் தமிழகத் தில் சிறப்புற்று விளங்கும் ஆன்மிகப் பண்பாட்டின் அடிப்படையில் தோன்றியனவாகும், அவை தெய்வ வழிபாட்டின் மாண்பையும். வழிபடு வதற்குரிய நெறிமுறைகளையும் யாவ ரும் எளிதில் புரிந்துகொள்ளத் தக்க வகையில் வாழ்க்கையின் பல்வேறு நிலைகளோடு பொருத்திக் காட்டு கின்றன.



# ஆகமங்கள் நவிலும் எழுவகைத் தாண்டவங்கள்

திரு. வை. தட்சிணமூர்த்தி, எம்.ஏ.,

1. ஆனந்த தாண்டவம்

பெரும்பான்மையான திருக்கோவில்களில் கொலுவீற்றிருக்கும் கூத்தப் பெருமானின் திருவுருவங்கள் ஆனந்த தாண்டவக் காட்சியைக் காட்டுவனவே. திருநீறொளிரும் திருமேனியொடு நான்கு கைகளோடு திகழ்வது ஆனந்த தாண்டவம். வலது பின்கை உடுக்கை ஏந்த, இடது பின்னங்கை மழுவெனும் தீயினை ஏந்த, வலது முன்னங்கையில் பாம்பினாலான வளையல் திகழ,அபய முத்திரையோடு ஒளிரும் இடது முன்னங்கை கஜ ஹஸ்த முத்திரையோடு, தூக்கிய இடது திருவடியைச் சுட்டியவாறு வலப்பக்கமாக வளைந்து தணிந்திருக்கும். ஆடும்படி வந்த இன்பவெள்ளம் புரண்டோட, ஊன்றிய காலில் சுழன்றுடும் தெய்வத்தின் சடை முடிகள் ஐந்து ஆறு ஏழு அல்லது பதினொரு பிரிவுகளாகப் பிரிந்து திருமுடியைச் சுற்றிப் பரந்துலவும். திருமுடிக்கண் இடது சடைப் பகுதியில் ஊமத்த மலர், பாம்பு, இளம்பிறை, கபாலம் முதலியன இடம் பெறும். கங்கை வலப்பக்கச் சடைமுடியில் ஒளிரும். பகுதி அரையில் அணிந்தும், பகுதி இடது தோளில் அணிந்தவாறு முள்ள ஆடை காற்றில் பறந்தாடும். இறைவனின் திருமுடியை மயிர்ப்பீலி அழகு செய்யும். வலக்கால் சற்று வளைந்து கரிய நிறமுடைய முயலகனின் முதுகின்மேல் ஊன்றியிருக்கும். இடக்கால் வலது திருவடியைச் சுட்டியவாறு தூக்கப்பட்டிருக்கும். முயலகன் வலமிடமாகப் படுத்துக் கொண்டு ஒரு பாம்போடு விளையாடிக் கொண்டு தன் கைகளையும் பாம்புப் படம் போன்று வைத்துக் கொண்டுள்ளான். சிற்பத்தின் தாங்குநிலை கவிழ்ந்ததன் மேல் நிமிர்ந்திருக்கும் இரு தாமரைகளையொத்து நிற்கும். பிரபை என்னும் சோதி தீயொத்துப் பின்னணியில் தோன்றும். சிற்பரத்தினம் என்ற நூல் இப்பிரபையைச் சூரியமண்டலமெனச் சுட்டும். மேற் குறிப்பிட்ட செய்திகள் அச்சுமபேதாகமத்தில் நவிலப்பட்டன.

உத்தரகாமிகாகமம் சடைகள் ஒன்றேடொன்று பிரிந்து ஐந்து முதல் முப்பது பிரிவுகளாக இருக்குமென்றும் சடைகட்கிடையேயான வெற்றிடங்களில் ஊமத்தை, எருக்கு முதலிய மலர்கள் இடம்பெறுமென்றும் கூறுகின்றது. இவ்வாகமத்திற்கேற்பச் சடையில் வலபகுதியில் கங்கை அஞ்சலித்த கைகளோடு இடுப்புக்கு மேற்பட்ட உடல், கரந்த அளவில் மகுடம் முதலியன அணிந்து பெண்ணுருவோடும், கீழ்ப்பகுதி ஓடும்

நீரின் தோற்றத்தோடும் நிற்கிருள். பிறை இடப்பகுதியில் தானுள்ளது. முத்து, பாம்பு, மகிழமலர், கடற்சங்குகள், யானைத்தந்தங்கள், புலிப்பல் மணிகள் முதலியவற்ருலாகிய ஆமையோட்டைத் தொங்க விட்ட கழுத்தணி இறைவனின் கழுத்தை அழகு செய்கிறது. இடது திருக்காது பாத்திர குண்டலத்தையும், வலது திருக்காது மகர குண்டலத்தையும் அணிந்துள்ளன. திருவடிகளில் மணிகளாலாய ஒரு தண்டையும் மற்றும் இரு வேறு கோலமுடைய தண்டைகளும் இடம்பெறுகின்றன. இந்நடனம் புஜங்கதிரசம் எனப்படும் தூக்கிய திருவடி. நின்ற திருவடியின் முழங்காலுக்கு மேல் தூக்கப்பட்டிருந்தால் இது புஜங்கலலிதம் எனப்படும். தூக்கிய திருவடி முக்கோண வடிவில் வளைந்திருக்க, இடுப்புக்கு மேற்பட்ட உடலும் முழங்காலும் ஒரு பக்கமாகச் சற்று வளைந்திருக்கும்.

அபிநவ குப்தாசாரியார்: கூத்தப்பிரான் ஒருபாம்பைக் கண்டது போல் விரைந்து காலைத்தூக்கி, நிலையற்ற ஒரு நிலையில் நிற்பதுபோல் நிற்கிருர். ஒருகை தோலகஸ்த நிலையில் எளிதாகத் தொங்கிக் கொண்டிருக்க இன்னெரு கை கடக முத்திரையில் இருக்கும். இவ்வகை நடனம் புஜங்க திரசம் எனப்படும் என்பார்.

தில்லைப் பொன்னம்பலதில் வியாக்ரபாதர், பதஞ்சலி முனிவர்களின் முன் ஆடிய நடனம் ஆனந்த நடனம் எனக் கோயிற்புராணம் கூறும். இவ்வானந்த தாண்டவத்தில் துடியேந்திய கை, அபயக்கை, ஊன்றிய திருவடி, தூக்கிய திருவடி, மழுவேந்திய கை, முதலியன ஆக்கல், காத்தல், மறைத்தல், அருளல், அழித்தல் ஆய ஐந்தொழில்களையும் குறிக்கும் என்பர்.

2, சாந்திய தாண்டவம் :

சாந்திய தாண்டவத்தில் முயலகன் இல்லை. இடது கைகள் மயிர்ப்பீலிகளை ஏந்தியவாறு வியப்புக்குறி காட்டும் விஸ்மாய முத்திரையில் அமைந்திருக்கும்.

டாக்டர் ஆனந்தகுமாரசாமி அவர்கள் சாந்திய தாண்டவத்தை மாலை நடனம் நாதாந்த நடனம் ஆய வற்றுள் ஒன்றெனக் குறிப்பிடுகிருர். அவர் குறிப்பிட்டபடி மாலை நடனம் என்பது சிவப்பிரதோட தோத்திரத்தில் குறிப்பிடப் படுவதொத்து மூவுலகுக்கும் தலைவியாகிய அன்னையை மணிகள் பதித்த பொற்சிம்மாசனத்தில் இருத்தி, சூலபாணியான இறைவன் கைலாயத்தின் உச்சியில் ஆடுகின்ருர். பிற கடவுளனைவரும் இறைவனைச் சூழுகின்றனர். கலைமகள் வீணை மீட்ட, இந்திரன் குழலூத, பிரமன் தாளமிட, திருமகள் இசைபாட, திருமால் முழவதிர, தேவர்களனைவரும் சுற்றி நிற்கின்றனர். கந்தர்வர், இயக்கர், பதகர், உரகர், சித்தர், சாத்தியர், வித்தியாதரர், அமரர், அப்ரஸரஸர்முதலியமூவுலகத்தோரும் அந்திப் பொழுதுப் பேரண்ட நடனத்தைத் தெய்வீக இன்னிசையுடன் நுகரத் திரண்டனர்.

கதாசாகரத்தின் முற்பகுதியில் இம்மாலை நடனம் குறிக்கப்படுகிறது. இறைவன் இரு கைகளோடு பிற தெய்வங்கள் துணைபுரிய நடனமாடும்

போது முயலகன் இல்லை. திரு. கோபி நாதராவ் அவர்கள் இதிலுள்ள கைகள் பற்றி ஐயுறுகின்றார்கள்.

பிரதோட தோத்திரம் தந்த செய்திகளைக் கருணாகமச் செய்திகளோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம். கைலாயத்தின் உச்சியில் மணி பதித்த பொன்னிருக்கையில் அன்னை கௌரியின் முன் பிறை சூடிய பெம்மான் அந்திப் பொழுதில் ஆடுகின்றார். எல்லாத் தேவர்களும் காண்கின்றனர் பிரமன் தாளமிட திருமால் பாடகம் இசைக்க கலைமகள் குழலூத, சூரிய சந்திரர் களும் குழலூத, தும்புருவும் நாரதனும் இசை பாட குமரப்பிரான் முழவதிர நடனம் இயல்கிறது.

மயமதம் இத்திருக் கூட்டத்தில் விக்னேசுரரும் காளியும் ஏழு அன்னையரும் உடனிருந்ததாகக்கூறுகின்றது

ஆகமத் திரட்டென்னும் தமிழ் நூலில் "இறைவன் நஞ்சினை விழுங்குகிறார். ஏதும் இயம்பாது ஒரு கணம் அவரிருந்தார். தேவர்கள் ஓய்வின்றித் தொழுது நின்றனர். அது ஏகாதசி நாள். துவாதசியாகிய மறுநாள் தேவர்கள் விரதம் முடித்துத் தூய்மை பெறுகின்றனர். அந்நாள் இமவானின் பொற்கொடியாய அன்னையைத் தலையில் ஏந்தித் திரிசூலத்தைச் சுழற்றியவாறு இறைவன் நடமாடுகின்றார். நான் மறைகளும் இதனைப் பிரதோடம் என்கின்றன.' என வருகின்றது.

சிற்ப சங்கிரகமும் மயமதமும் இந் நடனம் ஆலமரத்துக்கு அடியில் நிகழ்ந்ததெனக்கூறும் இம்முறை லலிதமுறையிற் காணப்படுகின்றது. ஆனால் மயமாதம் புஜங்க திரசத்தினைக் குறிப்பிடும்.

3: உமா தாண்டவம் :

இறைவற்கு இக்கூத்தில் ஆறு கைகள் உள. கூடுதலாயமைந்தவலக்கை முத்தலை வேலாய திரிசூலத்தையும், கூடுதலாயமைந்த இடக்கை மண்டையோட்டையும் ஏந்தியுள்ளன. இடது திருவடி முயலகன் மேல் ஊன்றியுள்ளது. வலது திருவடி வலப் பகுதியில் வீசியவாறுள்ளது உமையம்மையார் இப்புறத்தில் நிற்கிறார்.

பூர்வ கருணாகமம் எழுவகைத் தாண்டவங்களைக் குறிப்பிடுகையில் உமா தாண்டவத்துக்குப் பதிலாக முனி தாண்டவத்தைக் குறிப்பிடுகின்றது. இறைவன் இறைவி திருமணத்தைப் பற்றி வேறொரு நடனம் குறிப்பிடப்படுகின்றதெனினும் உமா தாண்டவத்தைத் தாண்டவங்கட்கெல்லாம் தாண்டவம் என்பர்.

ஆகமத்திரட்டு என்ற தமிழ் நூல் சாந்திய தாண்டவத்தை விளக்குகையில் திரிசூலம் குறிப்பிடுகிறது. ஒருவேளை இக்காரணம் கொண்டே கௌரி தாண்டவமே சாந்திய தாண்டவமெனக் கருதப்பட்டுள்ளதோ எனக்கருத இடமுண்டு.

நெல்லை தாமிர சபையில் இறைவன் கங்காளமாய மண்டையோட்டைக் கையிலேந்தி, தாண்டவமாடியதாகக் குறிப்பிடப்படுகிறது. இது முனி தாண்டவம் எனக் குறிக்கப்படுகின்றதெனினும் இது ஒருவேளை உமா தாண்டவமாக விருக்குமோ என ஐயுற வாய்ப்புண்டு.

திருவிளையாடற்புராணத்தில் கால் மாறியாடிய படலத்தில் குறிப்பிட்ட வாறு இதில் தூக்கிய திருவடியும் ஊன்றிய திருவடியும் மாறியுள்ளது. குறிப்பிடத்தக்கது.

4 கௌரி தாண்டவம் :—

கௌரி தாண்டவம் ஆனந்த தாண்டவம் போன்றதே இத் தாண்டவத்தில் ஒரு இன்றியமையாக் குறிப்பு இடது கைகளில் ஏதேனும் ஒன்று பாம்பினைப் பிடித்திருக்கும் இந்நடனத்தில் நந்தி வலப்பக்கமும், கௌரி இடப்பக்கமும் நிற்பர். கௌரி தாண்டவத்தில் கௌரி பக்கத்திருந் தால் நந்தி இன்னொரு பக்கத்தில் இருப்பதும் இன்றியமையாததாகும். மயமதம் என்ற நூல் இத்தாண்டவத் தில் ஒரு கையில் பாம்பிருப்பதைக் கருதி புஜங்க லலிதம் என்பதுண்டு. மயமதம் கையிலிருக்கும் தீ சுவாலை விட்டெரிவதையும், சுடைமுடிகள் ஐந்து ஏழு அல்லது ஒன்பது பிரிவு களாகப் பிரிந்திருக்கும் என்றும் கூறு கின்றது. மேலும் நந்தி வலப்பக்கமும், கௌரிக்குப் பதிலாக திருமால் இடப் பக்கமும் நிற்பதாகக் குறிப்பிடும்.

கௌரி தாண்டவம் என்பது காத் தற்றெழிற் கூத்து என்றும் அது புஜங்க திராசம் என்றும் புஜங்க லலிதம் என்றும் இருவகையாகும் என்பாருமுண்டு. புஜங்க திராசம் என்பது காத்தல் நடனத்தில் துன்ப வகையையும் புஜங்கலலிதம் இன்ப வகையையும் குறிக்கும் என்றும் மொழிவர், இவ்விரு வகையிலும் இடக்கையில் பாம்பிருக்கும். துன்ப வகையான திராசத்தில் பாம்பை இறைவன் அச்சுறுத்துவது போன்ற தோற்றமும், லலிதத்தில் பாம்பு அச்சுறுத்தப்படாத நிலையிலும் இருக் கும். முயலகனைக்கொன்று அவனது உடல்மீது ஆடிய நடனம் இது என்பர். புஜங்க திராசம் மக்கட்பேறு, கல்வி முதலியன தந்து உயிர்களைக் காப்பதென்றும், புஜங்கலலிதம் செல்வம், கொற்றம், புகழ் முதலியன நல்குவதென்றும் கருணாகமம் கழறும். இறைவனது இடக்கையில், இருக்கும் பாம்பு குண்டலினி ஆற்றலை யும் நாகசக்தியாவற்றையும் நியமிப் பது என்பதையும் குறிப்பதெனக் காமிகாகமம் கழறும். புஜங்க லலி தத்தில் வலக்கையொன்றில் கோடரி இருக்கும் என்பர். சந்தியா தாண்ட வம், பிரேதோஷ நடனம் என்ப வற்றையும் கூடக் காத்தலில் இன்ப வகை என்பர்.

திருப்புத்தூர்ப் புராணப்படி திருப் புத்தூர் ஞான சபையில் இக்கௌரி தாண்டவம் ஆடப்பெற்றுள்ளது. திருப்பத்தூர்ப் புராணக்குறிப்புப்படி கோடித் திங்கள் ஒளியோடு பத்துக்கைகளோடு, வேதச் சிலம்பொலிக்க, கார்கோடகப் பாம்பை வளையலாக அணிந்து தூக் கிய திருவடியில் வாசுகி இடம்பெற, பிற பாம்புகளும் வெவ்வேறு இடங் களில் இடம்பெற இறைவன் இத் தாண்டவத்தைச் செய்துள்ளார்.

புஜங்க திராசம் நாட்டிய சாத்திரத் தில் இருபத்தெட்டாவது முத்திரை என்றும் புஜங்கலலிதம் இருபத்தைந் தாவது முத்திரை என்றும் புகல்வர்.

5. காளிகா தாண்டவம்:

காளிகா தாண்டவமாடும் இறை வற்கு இரண்டு கண்கள் உள. ஆனால்

எட்டுக் கைககள் உள. வலப்புறத்து மூன்று கைகளும் திரிசூலம், பாசக் கயிறு, உடுக்கை ஆகியவற்றை ஏந்தியுள்ளன இடக்கைகள் மூன்றும் கபாலம், தீ, எருது ஆகியவற்றை ஏந்தியுள்ளன. எஞ்சிய வலக்கை அபய முத்திரையிலும், இடக்கை கஜஹஸ்த முத்திரையிலும் உள. திரு. கிருஷ்ண சாஸ்திரி அவர்கள் தமது தென்னிந்தியச் சிற்ப உருவங்கள் என்ற நூலில் நல்லூர் காட்டுச் சடை நடராசர் காளிகா தாண்டவர் என மொழிவார். ஆனால் அவர் கூற்றுப்படியே இந்நடராசரின் உருவத்தில் கால்கள், அபயஹஸ்த, கஜஹஸ்த கைகளின் பக்கங்கள் மாறியுள்ளன இந்நல்லூர் நடராசர் வலக்காலை ஊன்றி, இடக்காலைத் தூக்கி ஆடுகின்றார். வலக்கை அபய ஹஸ்தத்திலும் இடக்கை கஜஹஸ்தத்திலும் உள. இவ்வுருவில் முயலகன் தன் முகத்தை முன்புறமாகப் பார்த்தபடி இரு கால்களும் அவனுக்கு முன்பாக நீட்டியவாறு அமைந்துள்ளான். உடுக்கை காதுக்கண்மையின் இருக்க இறைவன் தன் தலையினை உடுக்கையை நோக்கிச் சற்று சாய்ந்துள்ளார்.

திருப்புத்தூர்ப் புராணப்படி காளிகா தாண்டவம் திருவாலங்காட்டில் இயன்றிருக்கிறது. ஆனால் திருவாலங்காட்டு உருவம் ஊர்த்துவ தாண்டவராகவுள்ளது. திருவாலங்காட்டுப் புராணம் இறைவன் வலக்காலில் நிற்பதாகவும், இடக்காலை வானை நோக்கித் தூக்கியதாகவும் கூறுகின்றது. திருவாலங்காட்டு உருவமே இக்கூற்றுக்கு இயைந்ததாக இல்லை. அகத்திஸ்வரம் கோயில் உருவம் திருவாலங்காட்டுப் புராணம் கூறியது போன்றுள்ளது. திரு விக்கிரமருக்கும், ஊர்த்துவ தாண்டவருக்கும், உள்ள வேறுபாட்டைக் குறிப்பிடும்போது திருவிக்ர மருக்கு இடக்கால் மேல் தூக்கியிருக்கும் என்றும் ஊர்த்துவருக்கு வலக்கால்மேல் தூக்கியிருக்கும் என்றும் கூறுவாருண்டு.

காளிகா தாண்டவத்தைப் படைத்தல் தாண்டவம் என்பார் உண்டு. மும்மலத்தினுல் மறைப்புண்டு முக்குண வயப்பட்டுள்ள ஆன்மாவுக்கு இத்தாண்டவப் பெம்மான் தனுகரண புவனபோகங்களைப் படைத்துத் தருவான்.

## 6. திரிபுர தாண்டவம் :

திரிபுர தாண்டவத்தின்போது இறைவற்குப் பதினறு கைகள் உள. இடப்பக்கத்தில் அன்னையும் வலப்பக்கத்தில் முருகனும் உளர். சிற்பரத்தின நூலின்படி அன்னையும் குழந்தையும் ஒரேபக்கத்தில் நிற்கின்றனர். அன்னையின் முகத்தில் அச்சம், அன்பு, வியப்பு ஆய உணர்வுகள் தோன்றுகின்றன அம்சுமத் பேதாகமம் திரிபுர தாண்டவத்தை எண் வகையாக மொழிகின்றது.

முதல்வகை: சிவனின் இடக்கால் பின்புறமாகச் சற்று வளைந்தும், முன்கால் முன்புறமாகச் சற்று வளைந்துமிருக்கும். ஒரு வலக்கை கொப்பூழ் உயரத்தில் சிம்மகாரண முத்திரையில் அம்பு அமைந்த வில் நாணைத் தொட்டவாறிருக்கும். இளம்பிறை வளைவாக அல்லது மூன்று வளைவுகளாக கூடியவில்லை. இடது திருக்கைத் தாங்கி நிற்கும். இன்னொரு

வலக்கை பிடித்திருக்கும். வலக்கை மானை ஏந்தி நிற்கும். பிற திருக் கைகள் கர்த்தாரி ஹஸ்த முத்திரை யில் இருக்கும். இறைவர்க்குச் சடாமகுடம் அமைந்திருக்கும். இடப் புறத்தில் அன்னை நிற்பார். அம்பு பெம்மானின் சுண்டுவிரல் கனமிருக் கும். உத்தரகாமிகாகமம் இறைவனின் வலக்காதில் மகர குண்டலமிருக்குமென்றும், கைகள் நான்கு அல்லது இரண்டுதானிருக் கும் இறைவன் சாமபங்க முத்திரை யிலிருப்பார் என்றும் புகலும்.

இரண்டாவது வகை: இடது திருக்கால் முயலகன் மேல் நிற்கும்.

மூன்ருவது வகை: வலக்கால் சிறிது வளைந்தும், இடது திருக்கால் நிமிர்ந்தும் நிற்கும்.

நான்காவது வகை: வலது திருக் கால் முயலகன் மேல் நிற்கும்.

ஐந்தாம் வகை: முன்னிற்கும் இடது திருக்கை, மேல் நோக்கித் திரும்பியும், அதற்கேற்ப வலது திருக் கை கீழ்நோக்கித் திரும்பியும் அமைந்து முறையே அம்பின் முனை யையும் வில்லையும் பிடித்துக்கொண்டி ருக்கும். பின்புற வல இடத்திருக்கை கள் டங்கா, மான் அல்லது அம்பு முதலியவற்றைத் தாங்கி நிற்பன. கால்கள் சிறிது வளைந்து முயலகன் இன்றி நிற்கும்.

ஆருவது வகை: ஐவகையாய் நின்ற நான்கு திருக்கைகட்குப் பதி லாக, எட்டுத்திருக்கைகள் அம்பு, பரசு, கடகம், வஜ்ரம் முதலியவற்றை வலக்கைகளில் பிடித்தும், விஸ்வமாய முத்திரை, கடகமுத்திரை, வில், கே டயம் முதலியவற்றை இடது திருக் கைகளில் ஏந்தியும் நிற்கும், அதிபங்க முத்திரையில் பெம்மான் இடப்பக்கம் அன்னை நிற்க அழகுடன் திகழ்வார்.

ஏழாவது வகை: பத்துத் திருக் கைகளோடு, வலத்திருக்கைகள் பாணம், சக்கரம், சூலம், வஜ்ரம் முதலியவற்றையும் இடது திருக்கைகள் வில், சங்கு, கேடயம், விஸ்மாய முத்திரை, ஆசிமுத்திரை, ஆயவற்றையும் ஏந்தியவாறு அமை யும்.

எட்டாவது வகை: பெம்மான் வலது திருக்கால் சற்று மேல்தூக்கி நிற்க, இடது திருக்கால் தேரின் நடுப் பகுதியில் ஊன்றி நிற்கத் தேரேறி வருகின்ருர். தேரில் முகுளமும் கொடுஞ்சியும் தாமரை வடிவில் மொட்டு ஒரு கயிற்ருல் கட்டப்பட்டு உள்ளன. தாமரையின் நடுவில் தே ரோட்டியான பிரமன் ஒரு வலது திருக்கையில் மூங்கிலைப் பிடித்துக் கொண்டு இடது திருக்கைகள் பத்ம பாச முத்திரை, குண்டிக முத்திரை களிலிருக்க அமர்ந்திருக்கிருர். முகுளத்தின் கீழ் வெள்ளை ஆனேறு நிற்கின்றது. தேர் வானத்தில் மிதந் தூர்கிறது.

**சங்கார தாண்டவம்:-**

சங்கார தாண்டவருக்கு மூன்று கண்கள் எட்டு கைகள் உள. இடது திருவடி முயலகனை அழுத்த வலது திருவடி தூக்கியுள்ளது. வலக்கை உடுக்கை, பாசக்கயிறு திரிசூலம், அபயமுத்திரை முதலியன தாங்கி யுள்ளன. இடக்கைகள் தீ, மண்டை

யோடு, விஸ்வமாய முத்திரை கள ஹஸ்த முத்திரை முதலியன தாங்கி யுள்ளன. நந்தி வலப்பக்கமும் கௌரி இடப்பக்கமும் நிற்கின்றனர். கௌரி தாண்டவத்துக்குள்ள எண் கைகள் அமைப்புக்கும் இதற்கும் வேற்றுமை யுண்டு. திரு மந்திரக்கூற்றுக்கேற்ப "அரன் அறை தண்ணில் அங்கி சங் காரம்" என்பதால் இவ்வாட்டத்தில் அங்கிக்கே முதன்மை. சிதம்பர மும் மணிக்கோவை "மாற்றுவது ஆரழல் வைத்த கரமே" என்று கூறுகின்றது. இச்சங்கார தாண்டவத்தில் இடக்கை யில் உடுக்கையும் வலக்கையில் அக் னியும் இருப்பதாக மொழிவதும் உண்டு.



# அன்னை வழிபாடு

மகாவித்துவான். திரு. ச. தண்டபாணி தேசிகர்

i அன்னை :

அறிவிப்பார் யாருமில்லாமலே குழந்தையால் முதன்முதல் அறியப்பெற்றவள் தாய். குழந்தைக்கு இவள் தான் தாய் எனக்காட்டியது யார்? தாயின் கனிந்தவுள்ளம் அழுகின்ற குழந்தையை எடுக்கச் செய்தது; அணைக்கச் செய்தது; அமுதம் பெருகச் செய்தது; ஊட்டச் செய்தது; குழந்தை வளர்கிறான். இவள்தான் என்னைக் காக்கும் தெய்வம்; இவள் இல்லையானால் என் பிறப்பேயில்லை; உணவும் இல்லை; உணர்வும் இல்லை; என்பதை யுணர்கிறான்; ஒருகணமும் அவளைவிட்டுப் பிரிய மனமில்லாமல் அவள் அரவணைப்பிலேயே ஓரின்பங் காணுகின்றான். அப்படி உருவாக்கி உணரிஷூட்டி வளர்ப்பவள் தாய், தெய்வம் என்றெல்லாம் உணருகிறான்.

முதற்பாடம் :

ஒன்றையும் பற்றாத உள்ளத்தோடு வளர்ந்து வரும் குழந்தைக்கு மன வளர்ச்சி சிறிது உண்டாகி, முகம் பார்க்கக் கற்று, வாயைக் கூட்டிப் பேச முயலும் பருவத்திலே அன்னையே 'அம்மா' என்ற சொல்லைத்தான் முதலில் கற்றுக் கொடுக்கிறாள். பிறகு தான் 'அப்பா' என்று கற்றுத் தருகிறாள். தன்கணவன் பக்கத்தில் வந்தபோது சுட்டிக்காட்டி 'அப்பா' என்று அழை என்கிறாள். குழந்தை முகவேறுபாடு கண்டு அப்பா என்கிறது. அகனால் இருவர் உள்ளமும் பூரிக்கிறது. அப்பாவைவிட அம்மாவுக்குத்தான் மனங்கொள்ளாத மகிழ்ச்சி.

தாய் கண்ணுங் கருத்துமாகக் குழந்தையை வளர்க்கிறாள். குழந்தை கிடக்கும் தொட்டிலின் விளிம்பிலே ஒரு சிற்றெறும்பு ஊருமானால் ஓடோடி வருகிறாள்; கடித்துச் சிவந்துவிட்டதோ என்று மேனியை ஒரு முறை உற்று நோக்குகிறாள். அத்தனை கனிவும் கருணையும் குழந்தையிடம். அம்மட்டோ! குழந்தையின் நிலையறிந்து, காலம் அறிந்து ஊட்டியும் - காட்டியும், சுட்டியும் - சொல்லியும் உடலையும் உணர்வையும் ஒருங்கே வளர்க்கிறாள். வளர்கின்ற பையன் தன் சூழலில் உள்ளனவும் தன் மனத்தைக் கவருவனவுமான பொருள்களைப்பற்றி, அம்மா இது என்ன? அது என்ன? அதை யார் செய்தது? ஏன் செய்தார்கள்? எப்படிச் செய்தார்கள் என்றெல்லாம் கேள்வியம்புகளைத் தொடுத்து அம்மாவின் மனத்தைத் துளைக்கிறான். அம்மா அலுப்பு

சலிப்பின்றிப் பதில் சொல்லி அவனுடைய அறிவுப்பசியையும் தணிக்கிருள்.

அப்பா! அதைக் கடவுள் படைத்தார். நமக்காகப் படைந்தார். அவர் அப்படிப் படைத்திருக்காவிட்டால் நாம் உண்ண முடியுமா வாழமுடியுமா? நம்மை வாழ வைப்பவர் கடவுள் தெய்வம் என உபதேசிக்கிருள். குழந்தை தாயையும் தந்தையையும் மட்டுமே அறிந்தவன் தெய்வம் என்ற ஒரு பொருள் உண்டு என்பதையும் உணருகிருன். தாய் தந்தையர்களிடத்தில் அன்பு முதிர்கிறது. அதனுல் அவர்களையே தெய்வமாகக கருதுகிருன். ஆகவே உண்மையில் உணர்ந்து கொண்ட மூன்ருவது பொருளாகிய தெய்வமாக அவன் கண்ணெதிரே தாயுந் தந்தையுமே காட்சியளிக்கின்றனர் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" ஆகின்றனர் அவனுக்கு. தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை தந்தை சொல்மிக்க மந்திரமில்லை என்ற உறுதிக்கு அவன் உள்ளம் உயருகிறது. இங்ஙனம் விளைந்த பாவனையின் முதிர்ச்சியே அவன் வாழ்வில் தெய்வ அன்பாகத் திகழ்கின்றது.

ஆகவே இத்தகைய ஞான உணவையும், பாண உணவையும் ஊட்டி வளர்த்தவள் அன்னை. அவளே நம் அறிவு; ஆற்றல், செயல் எல்லாம். அவளை உள்ளவாறு உணர்தலும், வழிபடுதலுமே மனிதனுடைய முதற் கடமை.

ii அன்னையார்?

பிள்ளைக்குத் தெரியாதா பெற்றவளை; யார் என்ருல் எப்படி? என எண்ணலாம். ஆம்! நாம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் அன்னை. ஒருவருக்கே முறையன்னைகள் பலர் இவருள் யாரைத் தாயென்பது. நாம் எடுத்த பிறவிகளோ பல. அவற்றில் எல்லாம் தாயர் பலர். 'எத்தனை எத்தனை தாயர்கள்' என்கின்ருர் பட்டினத்தடிகள். ஆகவே உண்மையான தாயைக் கேட்டறிய வேண்டியது தான்.

எவள் நம் தாயர்க்கும் தாயாக விளங்குகிருளோ, எவள் உலகத் தோற்றமுதல் இன்றுவரை-என் நாளையும் உலகம் உள்ளளவும் அனைத்துயிர்களையும் பெருமல்பெற்று, வளர்க்காமல் வளர்த்து வருகிருளோ அவளே உண்மையான தாய் அவளே பராசத்தி. அவள் உலகு உயிர் எல்லாம் ஈன்றும் கன்னியாவாள். உலகிலுள்ள அறிவுடைய பொருள் அறிவிலாத பொருள் அனைத்திலும், அறிவாகவும் ஆற்றலாகவும் வன்மையாகவும் திண்மையாகவும் கலந்து நிற்கிருள். பொருள்களுக்கு அழகையும் மணத்தையும் குணத்தையும் உறுதியையும்பெருமையையும் நிறத்தையும் அளித்து ஒன்றையொன்று கவர்ந்து இணைந்தும் பிணைந்தும் வாழவைக்கிருள். சுருங்கச் சொன்னுல், ஒவ்வொரு பொருளினுடைய அசைவும் தன்மையும் அவளாகவே விளங்குகிருள்; அவள் இல்லையானுல் எதுவும் அசைய இயலாது. சிவமும் கூடச்செயலற்றுப் போகும். சிவமெனும் பொருளும் ஆதி சத்தியொடு புணரின் எத்தொழிலும் செய்ய வல்லதாம். அவள் பிரிந்திடின் 'செயலற்றுச்' சிவாஎனக் கிடக்கும்.

(1) தத்துவஞான சாத்திரங்கள் அன்னையைப்பற்றிக் கூறுவன யாவை,

பொருளின் உண்மைகளையும், இயல்புகளையும் உள்ளவாறு உணர உதவுபவை தத்துவ சாத்திரங்கள். அவைகள் அன்னை பராசத்தி சிவமாகிய பரம்பொருளோடு அறிவே வடிவாய்க் கலந்துநிற்கின்றாள் என்கின்றன.

பூக்கள் போலச்சிவம்; அற்றின் நிறமும் மணமும்போலச் சத்தி; மரம் போலச் சிவம் அதன் வயிரம்போலச் சிவசத்தி; தீப்போலச் சிவம் தீயின் வெம்மைபோலச் சிவசத்தி. ஆகவே சத்தி சிவமாகிய பரம்பொருளின் பிரிக்கப்படாத குணமே.

குணத்தை அதாவது ஒரு பொருளின் தன்மையைப் பொருளையின்றி யறியமுடியாது. சுண்ணும்பினிடமுள்ள வெண்மையைச் சுண்ணும்பாகிய பொருளை விட்டுத் தனியே அறியமுடியுமா? அதுபோலச் சத்தி குணருபமாய்ச் சிவமாகிய பொருளை விட்டு அறியமுடியாதது. ஆகவே தாயாகிய சத்தியும் தந்தையாகிய சிவமும் என்றும் இணைந்தே நிற்பர்.

சத்திக்கு உண்மையான வடிவம் என்ன? இன்று பெண்மை வடிவில் காணுகின்றோமே இதுதானு சத்தியின் உண்மையுரு எனலாம். உலகம் ஆணும் பெண்ணுமாக விளங்குகிறது. குணமும் குணத்தைத் தாங்கும் பொருளுமாக இருக்கிறது என்ருல் அதற்குரிய அடிப்படைக் காரணம் பரம்பொருளாகிய சிவம் சத்தியோடு விளங்குதலாலேயாம். சத்தியும் சிவமுமாய தன்மை இவ்வுலகம் எல்லாம் ஒத்து ஒவ்வா ஆணும்பெண்ணும், உயர்குண குணியுமாகி வைத்த தன்மையாலேயாம். ஆகவே அச்சத்தி குணவடியாய் ஞானவடிவாய்ச் சிவத்தோடு என்றும் ஒன்றியுள்ளது எனலாம் "சத்தி தன் வடிவே தென்னிற் றடையிலா ஞானமாகும்" என்பது சிவஞான சித்தியார்.

ஞான வடிவாகிய சத்தியே விரும்பின் இச்சையாகவும், இச்சை முற்றிச் செயலாற்றின் கிரியையாகவும் விரிகிறது. அதாவது அறிவுருவான சத்தி விரும்புகிறபோது இச்சா சக்தி எனவும், செயலாற்றும்போது கிரியா சத்தி எனவும் பெயரையடைகிறது. ஆகவே சத்திஒன்றுதான். அதுகொள்ளும் நிலை வேறுபாட்டான் ஞானம் இச்சை செயல் என மூவகைப்படுகிறது.

பரசிவத்தின் திருவுளத்திலே ஞானமேயானபோது ஞானசத்தி. அவர் ஆன்மாக்களுக்கு அருள் வழங்கத் திருவுளம் பாலிக்கிறபோது இச்சா சக்தி, அவர் செயலாற்ற அதாவது படைத்தலாதி ஐந்தொழில்களையும் அந்தந்தப்பதவியினிற்பார் ஆற்றுவார்களாக என்றெண்ணும் போது கிரியாசத்தி. எத்திறம் நின்ருன் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள். கொண்டவன் குறிப்பிற் குடித்தனப்பெண்.

இங்ஙனம் சக்தனைப் பிரியாது உடனுகி நிற்கும் சத்தி அவன் நவந்தருபேதமாகி நடிக்கும் போது அவளும் நவசத்தியாகிருள். இத்தகைய உண்மைகள் பலவற்றை உணர்ந்து தெளிந்தபோது உயிர் மலநீக்கமும்—அருட்சத்தியின் பதிவும் பெறுகிறது. அதனுல் இன்பமயமாகிறது. அதனுல் அம்மையப்பரே யுலகுக்கு அம்மையப்பர் என்று உணர்ந்து வழிபடுகிறபோது – வழிப்படுகிறபோது அருட்பதிவு விளைகிறது

'அருளது சத்தியாகும் அரன் தனக்கு' என்ற உண்மை பதிந்து அருள் வடிவாகிய சத்தியைத் தனியே வழிபடும் முறையும் செந் தமிழ் நாட்டில் தொன்மையாக நிலவி யிருக்கிறது.

அத்தகைய வழிபாடுகளில் சிவன் காமேஸ்வரனுக விளங்க அவனுல் விரும்பப்பெறும் காமேஸ்வரியாயும், சிவன் வாகீசராக விளங்க அவள் வாகீஸ்வரியாகவும், சிவன் ஞானி யாக விளங்க - சத்திதன் வடிவே தென்னில் தடையிலா ஞானமாகும் என்றபடி அவள் ஞானமாகவும் விளங்கி எல்லா வுலகங்களையும் படைத்து உயிர்களையும் செயற் படுத்திப் பரிபாகமுறச் செய்வள்.

வழிபடுமுறை :

அன்னையை வழிபடும் முறையில் மக்களுடைய மனநிலைக்கும் ஒழுக லாறுகட்கும் ஒப்பச் சுத்த பூசையும் —வாம பூசையும் என இருவகை நெறிகள் உளவாயின. அவற்றுள் சுத்த பூசைமுறையே தமிழகத்து நிலவுவதாயிற்று.

அதற்கு, மந்திரம், யந்திரம், செபம், தியானம் முதலிய அமைப்புக்கள் உளவாயின. அவற்றைத் திருமூலர் நான்காந் தந்திரத்து புவனபதி, நவாக்கரி, முதலான பல பேதங்க ளாற் குறிப்பிடுவர். அம்மைக்குரிய மந்திரங்களிலே 15 எழுத்துக் கொண்ட மந்திரம் சிறந்ததாகும். இதில் காதி வித்தை என்றும் ஹாதி வித்யை என்றும் இருவகையுண்டு காதி வித்யையைக் கண்டு நின்று பயன்பெற்றவர் துருவாசர். ஹாதி வித்தியையைக்கண்டு பயன்பெற்ற வர் விசுவாமித்திரர். மந்திரங்கட்கு வன்மை மந்திரங்களைக் கண்டவர் களுடைய தவவலிமையால் விளைவன வாம். திருமூலர் காதி வித்யையே கொண்டவர் என்பதை அவர் கூறும் ''புவனபதியில்ககராதியோரைந்தும்'' என்ற பாவால் அறியலாம்.

நவாக்கரி என்பது 9 எழுத்துக்கள் கொண்ட சத்திமத்திரம். இதில் வாம மார்க்கத்தினர் 'சாமுண்டா' என்பத னடியாக வரும் ஒன்பதெழுத்துக் களே என்பர். திருமூலர் சிவமுதலாக வரும், நான்கு வித்தெழுத்துக் களோடு கூடிய மந்திரமே என்பர்.

இவையன்றிப் பதினைறெழுத்து மந் திரமும், மூன்றெழுத்து மந்திரமும், ஓரெழுத்து மந்திரமும் உள.

யந்திரங்கள் பராசத்தியின் திரு வுருவக் கோட்டு வடிவங்களே. அவற் றுள்ளும் 43 கோணம், நவகோணம் முக்கோணம், அறுகோணம் முதலிய பலவகையுள்ளன. 43 கோணங்கள் மட்டும் மந்திர எழுதிதுக்கள் அடைக் கப்படாமலே ஆற்றல் இயல்பாகவே மிக்கது புரச்சரணம் தியானம் செப முதலான செயல்முறைகளாலேயே யந்திர மந்திரங்கள் நினைத்த எண் ணங்களை நினைத்தவண்ணம் நிறை வேறத் துணைபுரிகின்றன. இவைகள், தீக்கை, உபதேச வாயிலாகக் குரு முகமாகப் பெறவேண்டியவையாத லின் விளங்கக் கூறிற்றிலம். குரு-குறி வழி நின்று கண்டவன் காட்டினுற் ருன் எளிதில் அடைய இயலும்.

அன்னை சிவகாமி சிவத்தைக் காமிப்பவள். மணிவாசகப் பெருந் தகை உடையாள் நடுவுள் நீயிருத்தி என்பர். அவ்வன்னையை வழிபடுதல்

இருவரையும் ஒருசேர வழிபட்ட பயனை அளிப்பது. ஆதலால், மூல மந்திரத்தைக் கேட்டு அம்மையின் திருமுன் நின்று அவனையின்றி வேறென்றையும் சிந்தையாலும் நோக்காது தியானித்து வரின் இருமையின்பங்களையும் எளிதில் எய்தலாம்.

இப்போது நடைபெறும் பெருஞ் சாந்தி விழாத்தொடங்கி ஒருமண்டல காலமாவது காலைப்பூசை நேரத்தில் பெண்மக்கள் பலர்கூடி லலிதா சகஸ்ர நாமம், லலிதா திரிசதி முதலான தோத்திர மந்திரங்களை நான்கு பீசங்களுடன் இணைத்துத் தவறுமல் பாராயணம் செய்துவரின் நாடும் உய்யும். நாமும் உய்யலாம். மகளிரோடு மக்களும் பாராயணஞ் செய்யலாம். மதுரையில் அங்கயற்கண்ணம்மைசந்நிதியில் கண்ணீருங் கம்பலையுமாகப் பாவையர் பலரும்பரவசத்துடன்பாராயணஞ்செய்து வருவதையும், ஆடவர்களும் உடன் பாராயணம் செய்து வருவதையும் இன்றும் காணலாம். தமிழ் எழுத்திலேயே அவ்விரண்டு புத்தகங்களும். கிடைக்கும் பெற்றுப் படித்து வருவோமாஞல் மூர்த்திக்கும் மந்திர வடிவம் ஒளிவிடும் நம்மனமும் ஒளி பெறும் குளிரும் என்றும் இன்பம் பெருக இருக்கலாம்.

# திருக்கோவிலும் இசைமாட்சியும்

திரு. செ. வைத்தியலிங்கன், எம்.ஏ., எம்.லிட்.,

**கோயில் மாட்சி :**

"இன்னிசை வீணையர் யாழினர்
ஒரு பால்" மணிவாசகர்.

இறைவன்முன் 'ஆ' (பசு—உயிர்) லயப்படுதற்கு இடந்தருதலின் 'ஆலயம்' என்றும் எங்கும் நிறைந்த பரம்பொருளாகிய 'கோ' உயிர்களுக்குப் பேரருள் சுரக்க விளங்கித் தோன்றும் 'இல்' ஆதலின் 'கோவில்' என்றும் இறைவன் உறைவிடம் அழைக்கப்படுகின்றது. இறைவனை மனத்தாற் சிந்தித்து வாயால் பாடிக் கையால் கோயிலில் திருத்தொண்டு புரிந்து சமயவுணர்வைத் தக்காங்கு வளர்த்துக்கொண்ட தமிழர்கள் 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று', 'கோயில்லா ஊரில் குடியிருக்கவேண்டா', 'ஊரானோர் தேவகுலம்' என்றெல்லாம் கூறினர்; அவ்வாற்றான் வாழ்வை நெறிப்படுத்திக் கொண்டனர்; எனவே, தமிழகச் சமய வரலாற்றில் திருக்கோயில்களுக்குப் பண்டு தொட்டே சிறப்பிடம் இருந்துகொண்டிருக்கின்றது.

தூய்மையின் வடிவமான இறைவனுக்குரிய கோயில்கள் தூய்மை நிறை நிலையங்களாக அமைக்கப்பட்டன; ஆறறிவுடன் படைக்கப்பட்ட மக்கள் தம் உயிர்ப்பொறுப்பான நன்றியுணர்வைப் பணிவன்புடன் புலப்படுத்திக்கொள்ளக் கோயில்கள் வாய்ப்பளித்தன.

பிறவிப் பெருங்கடலினின்றும் தம்மைக் கரையேற்றும் 'துறை' யாகக் கோயில் விளங்கியமையால் அதனைத் 'துறை'யென்றும் மக்கள் அழைத்து மகிழ்ந்தனர்; திருப்பெருந்துறை, திருவாவடுதுறை போன்றவற்றைச் சான்றாகக் காண்க.

தனக்கு உவமையில்லாத இறைவனின் தாளை வழிபட நினைத்த அன்பர்கள் கோயிலை எழுப்புகையில் அது பலரின் மனக்கவலையை மாற்றுந் திறத்தில்அருளழகுக் கவர்ச்சியுடைய தாய் அமையவேண்டுமென அவாவினர்; ஆன்மீக நலத்திற் கியைந்த வகையில் மக்கள் நலத்தையும் மையமிட்டுச் செல்லுமாறுத் திட்டமிட்டுச் செயல்படுத்தினர். இதனால், ஆகம நெறியும் விரிவாக அமைக்கப்பட்டது; கோயிலமைப்பும் நிர்வாகமுவும் நல்ல நிலையில் உறுதிபெற அமைந்தன.

மக்களேயன்றி நாடாளும் மன்னர்களும் கோயிலைக் கட்டுவதிலும், பாதுகாத்தலிலும் நிரம்ப நாட்டம் செலுத்தத் தொடங்கினர்; சமயக் காழ்ப்பின்றிப் பிற சமயக் கோயில்களையும் கட்டி

ஆக்கமளித்தனர். இறையருளால் தான் தமக்கு எல்லாப் பொன்னும் பொருளும் போகமும் கிடைத்தன என்று நம்பினர்; நன்றிப் பெருக்கால் கட்டிய கோயிலில் இறைவனிடம் அன்பைப் புலப்படுத்தி அருளும் அறமும் தழைக்க வேண்டினர். மன்னர்கள் தாம் பட்டத்திற்கு வருகையில் முடிசூட்டிக் கொள்வதும், தாம் பெற்ற வெற்றியைக் கொண்டாட 'விசயாபிடேகம்' நடத்துவதும் தம் வீரமாட்சியைக்கொண்ட வீராபிடேகம் நடத்துவதும் நல் வினையீட்டம் குறித்துக் 'துலாபாரம்' 'இரணிய கருப்பம்' ஆகியவை நடத்தித் தானம் செய்வதும் முதலிய செயல்கள் எல்லாம் பெரும்பான்மையும் கோயிலில் நிகழ்ந்தன; வரலாற்றுப் பேரறிஞர்களின் கூற்றை ஆராய்கையில், மன்னர்கள் கோயில்களுக்காகச் செலவிட்ட பெரும் பொருள் பற்றியும் மானியம் பற்றியும் அறியலாம். தாம் வழிபடுங் கடவுள் காரணமாகக் கோயில் திருவிழாவைக் கோலாகலமாகக் கொண்டாடியுள்ளனர். விலை மதிப்பற்ற அணிகளைக் கடவுளுக் கணிவித்துக் கண்களிக்க நின்றனர்; நிலையாத செல்வத்தை ஆளவந்த அம்மன்னர்கள் நிலைத்த செல்வமாகத் தேடிக்கொண்டது புகழுடன் அமைத்த கோயிற் பெருஞ்செல்வமேயாகும்.

பெரும் பொருட்செலவில் எடுகக்கப்பட்ட கோயிலானது அழகு கொலுவீற்றிருக்கும் நிலையாகக் — கருவறை கோபுரம், சிகரம், மண்டபம், மதில் போன்ற பகுதிகளைக் கொண்ட அமைப்பாக - அமைந்தது. இதிகாசம் புராணம் முதலியவற்றின் கூறுகளை விளக்கும் ஓவியம், சிற்பம், இசை, கூத்து, முதலிய நுண்கலைகளுக்கு இடமளிக்கும் நல்வாய்ப்பு ஏற்பட்டது. எனவே கலைஞர்களை ஊக்குவிக்கும் 'கலைப் பண்ணையாகக்' கோயில் ஆக்கப்பட்டது.

இசையின் மாட்சி :

இசையென்பது கடவுளின் திருமுன்னர் மக்களை இட்டுச் சென்று ஒன்றவைக்கும் ஆற்றலுடைய அருங் கலையாகும். எனவே, அதனை நாத யோகம் என்றுஞ் சொல்வர். இறைவனே கலைஞனுதலின் அவனே இசை மயமாகவும் விளங்கியுள்ளான் என்பது பொருத்தமுடையதே.

ஓசையாயும், ஒலியாயும், ஏழிசையாயும் இசைப்பயனும், பண்ணின் இசையாகி நின்றவனும், பண்காட்டும் இசையனும், பண்ணிடைத் தமிழொப்பவனும் அருளாளர்களால் பாராட்டப்பெற்ற இறைவன் இசையில் தன்னை ஒன்றவைத்து இன்புற்று உயிர்களையும் இன்புறுத்துகின்ருன்.

கம்பள அசுவதரராகிய இசை வல்லுநர்களைக் காதிற் குழையாகக் கொண்ட சிவன் 'நல்வீணை வாசிப்ப' வனுகவும் கண்ணன் குழலூதுபவனுகவும், கலைமகள் வீணைவாசிப்பவளாகவும் நந்திதேவர் மத்தளம் இயக்குபவராகவும் இலக்கியத்தில் கூறப்படுதலையும் சிற்பச்சிததிரங்களில் அமைத்துக் காட்டுதலையும் யாவரும் அறிவர். எனவே அத் தெய்வங்கள் உறையும் கோயில்களில் இசை வெள்ளம் பரவியதில் வியப்பில்லை.

தமிழ்நாட்டிசையே கருநாடக சங்கீதமாக இன்றுவழக்கத்திலுள்ளது என்பதை ஆராய்ச்சியாளர்கள் கூறுவர். கருநாடக இராகங்களான நாராயணி, பவாநி, சகன்மோகினி, சரசுவதி, ஏமவதி, பைரவி போன்றவை தெய்வப் பெயர்களாகவும், சங்கராபரணம். சண்முகப் பிரியா, கரகரப்பிரியா ஸ்ரீபிரியா போன்றவை தெய்வ விருப்பப் பெயர்களாகவும் இருப்பது கொண்டு இசையின் தெய்வீகத் தன்மை புரியலாகும். திருத்தல யாத்திரை புரிந்து கோயில் வழிபாடு நிகழ்த்திய நாயன்மார்களும், ஆழ்வார்களும் அருளிய பாசுரங்களெல்லாம் தெய்வம் உகக்கும் தீந்தமிழிசைச் செல்வங்களே யாகும்!

பிள்ளைப் பருவத்தினராகிய திருஞான சம்பந்தர் ஒவ்வொரு தலத்திற்கும் ஆர்வமுடன் சென்று தாளமிட்டு இசைமரபுடன் பாடி இறைவழிபாடு புரிதலில் ஈடுபாடு கொண்டவர். அவரது வாழ்வின் நோக்கத்தைப் புரிந்துகொண்ட இறைவன், சம்பந்தரின் பிஞ்சுக்கை, நைந்து விடா திருக்கத் திருவைந்தெழுத்தமைத்த பொற்றாளம் தந்து அவரது பாசுரத்தைச் செவிமடுக்க ஆர்வமுடன் கெஞ்சி நிற்கிறான்; இதனைச் சுந்தரர்,

‘நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும்
ஞான சம்பந்த னுக்கு உலகவர்முன்
தாளம் ஈந்தவன்; பாடலுக் கிரங்கும்
தன்மை யாளனை என்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடும்
அங்கணன் றனை.........’ எனத்
திருக்கோலக்காவில்

பாடிக் களிக்கிறார்.

திருஞானசம்பந்தர் பாடியருளும் பதிகங்களுக்கு இசைகூட்டி யாழிலே வாசிக்கின்ற பெரும்பேறு திருநீலகண்ட யாழ்ப்பாணருக்குக் கிட்டுகிறது: மறையவர் குலத்துச் சம்பந்தரும், தாழ்குலத்துப் பாணரும் ஒருவரை யொருவர் நேசிக்கையில் குலங்கடந்த தெய்வநல மாட்சியானது குலவிக்களிக்கிறது. பாணரை உளமுவந்து ‘ஐயரே’ யெனச் சம்பந்தர் வாக்கினால் அழைக்க வைக்கின்ற சேக்கிழாரின் திறமறிந்து பாராட்டி மகிழ்கிறோம். தெய்வத்தின் திருவடி நீழலில் உலவுகின்ற அடியவருள்ளத்தில் சாதி குல ஏற்றத்தாழ்வு தலைகாட்டாத நிலையறிந்து களிக்கின்றோம்!

திருநீலகண்ட யாழ்ப்பாணர் மதுரைக்கு வழிபாடு நிமித்தம் வருகிறார்; கோயில் வாயிலின் முன் சென்று நிற்கிறார்; உமையொரு பாகன் சீர்த்தியை உளமுருகிப் பரவும் இசைப்பாட்டினை யாழிலே இட்டுக் களிக்கிறார். அவருடைய இதய இன்னிசையைக் கோயிலினுள்ளே— தன் திருமுன்னரே- அமர்த்திக் கேட்கவும் சுவைக்கவும் ஆவல் கொள்கிறான் ஆலவாய்ச் சொக்கன் அடியவர்கள் கனவில் தோன்றிப் பாணனாரைக் கோயிலினுள் கொணரவைத்து யாழ்வாசிக்கச் செய்கிறான். பாணனாரும் இறைவன் திருவருளையெண்ணி அவன் சந்நிதியிலே, முப்புர மெரித்த தன்மையினையும், யானைத்தோல் போர்த்திய வரலாற்றையும், மன்மதனைக் காய்ந்த திறத்தையும், திருமாலுக்கும் பிரமனுக்கும் அரிதற் கரியானான தன்மையையும், அடியவர்களுக் கெளியனான தன்மையையும் உள்ளடக்கிச் சிவன்

சீர்த்தியை யாழிலிட்டு வாசிக்கிறார். சொல்லிசை மாலைக்கு இறைவன் அக மகிழ்ந்தவனாய் அசரீரி மூலம் 'அன்பி னாலே பாணனார் பாடுகின்ற சந்த யாழானது தரையிலுள்ள சீதம் தாக்கினால் நரம்பின் இருக்கம் சிதையு மாதலின் அழகிய பலகையினை அவர் முன் இடுங்கள்' என அடியவர்களிடம் பணிக்கிறான். அவர்களும் பொற் பலகையை யிட அதன் மேலமர்ந்து பாணனார் இறைவன் புகழ்பாடிப் பரவுகிறார் என்பது பெரிபுராணத் தினால் அறியும் செய்தியாகும்.

பாணபத்திரர் என்ற வேறொரு இசைவல்லுநராகிய அடியவர் காரண மாக மதுரைச் சொக்கனே மணிகளி ழைத்த சுந்தரப் பொற்பலகையிட்டு அவரது இசைத்திறம் கேட்டதைத் திருவிளையாடற் புராணத்தாலறிய லாம், மேலும் பாணபத்திரர் நிமித்தம் இறைவனே அவரது சீடனாக வந்து இசையால் அகந்தை கொண்ட ஏம நாதனை நாட்டினின்றே ஓடவைத்த திருவிளையாடலும், இறைவனுடைய இசையீடுபாட்டினை யுணர்த்தும்.

**கோயில் திருவிழாவில் இசை:-**

தமிழ்நாட்டிலுள்ள கோயில்களில் ஆண்டின் பல்வேறு காலங்களில், பலநிலைகளிலே திருவிழா கொண் டாடப்படுகின்றன. திருவிழாக்கள் கொண்டாடப் படுவதால் வாழ்க்கை யின் பல்வேறு தரத்து மக்களும் குழுமி ஆன்மநலங்காணவும், பொரு ளாதாரப் பங்கீடு கொள்ளவும் வாய்ப் பேற்படுகிறது. இம்மை நலத்திற்கும் மறுமை நலத்திற்கும் திருவிழாக்கள் தொண்டுபுரிகின்றன.

சுவாமி புறப்பாடு காரணமாக ஓதுவா மூர்த்திகளும், நாதசுரம், புல்லாங்குழல் முதலிய இசைக்கருவி கள் வாசிக்கின்றவர்களும் தம் இசைத்திறனை ஆன்மீக நலத்தில் இயைத்துக் கொள்ள வாய்ப்பினைப் பெறுகின்றனர். வைணவர்கள்புரியும் பஜனையையும் நினைவு கூரலாம்.

சிவன் கோயில்களில் தொடர் திரு விழாவெனின் கயிலாய வாகனத்தின் மீது சிவபார்வதி மூர்த்தங்களை அலங் கரித்து யெழுந்தருளப்பண்ணி உலா வரச் செய்தலைச் சிறப்பாகக் காண லாம். அகந்தையால் அறிவிழந்த இராவணன் சிவனுறையும் கயிலை யைத் தூக்கி உடல் நெரிந்து அவதிப் படுதலையும் இசைவாயிலாக இறை வனை மகிழ்வித்துத் தன் பிழையி னின்று உய்தி தேடுவதையும் உணர்த்துகின்ற அரிய தத்துவமே கயிலாய வாகனமாகும். (இராவ ணன் வீணைமீட்டிய வண்ணம் சாம கானத்தால் பாடி இறைவன் திருவுள் ளத்தை மகிழ்வித்தான்; அதன் கார ணமாக இறைவனே 'சாமகானப் பிரியன்' என அழைக்கப்படுதலுங் காண்க!)

கோயில்களில் திருவிழா நடை பெறுகையில் அடியவர்களும் எளிய மக்களும் பல்வேறிடங்களிலிருந்து திரளுவார்கள். அவர்கள் நாட்டத் தையெல்லாம் ஒருமுகப்படுத்திடக் கோயிலில் நடனமும் நாடகமும் புரா ணக் கருத்தினடிப்படையில் இசைத் தொடர்புடன் அமைக்கப்பட்டன. அது காரணமாகத் திருவிழாவிற்கு வந்து திரும்புபவர்கள் ஆன்மநலத் தின் தேவையையும் சிறப்பையும்

உணர்ந்து திரும்பினுர்கள்; வாழ்விலும் நன்னெறி கண்டார்கள்.

ஆடல் வல்லானின் ஆட்டத்திற்கே நந்தி தேவரின் மத்தளமும், பிற இசைக்கருவிகளும் தேவைப்பட்டன என்பதால், மக்கள் ஆடும் ஆட்டத்திற்கு எத்துணையளவிற்கு இசைக்கருவிகள் தேவைப்படும் என உணரலாம்!

இசை கூத்து முதலிய கலைகள் தெய்வ நலம் வாய்ந்தவை என மக்கள் உணர்ந்தமையின் அவற்றின் அரங்கேற்றத்தைக் கோயில்களில் நடத்தி மகிழ்கின்றனர்; கோயிலில் இசை நிகழ்ச்சிகளுடன் கதைச் சொற்பொழிவும் (கதாகாலட்சேபம்)புரிந்து களிகொள்கின்றனர்.

சில கோயில்களுக்கெனச் சில இசைமரபுகளும் இசைக்கருவிகளும் உண்டு; சான்ருகத், திருவாரூர்க் கோயிலுக்கெனப் 'பஞ்சமுக வாத்தியயம் வாசிக்கப்படுதலைக் காணலாம். இதுபற்றி விரிக்கிற் பெருகும்.

தேர்த் திருவிழாவினை நடத்துவதால் இறைவன் திருமேனியைத் தேரில் அமர்த்திப் பல்லாயிரக் கணக்கான மக்கள் கண்டு களிக்க வாய்ப் பேற்படுகிறது. அப்பொழுதும் இசைக் கருவிகளை இயக்கும் காரணமாக இறைவனுக்கு இசைச் சுழல் அமைக்கப்படுகிறது.

தெப்பத் திருவிழாவினை நடத்துகைகையில், தெப்ப குளத்திலே அழகு நிறை தெப்பத்தை யலங்கரித்து, பெரும் விளக்கொளிச்சூழலிலே மூர்த்தங்களை அணி நலத்துடன் எழுந்தருளுவித்துத் தேர்ந்த நாதசுரம் போன்ற இசைச்சூழலுடன் வலம் வரச் செய்து, பிறகு நீராழி மண்டபத்திலே அமர்த்திக் கண்கொள்ளாக் காட்சியாக அநுபவித்துக் களிகொள்கின்றனர். விளக்கொளி வெள்ளம் குளத்து நீர்ப்பரப்பின் பிரதி பலிப்பிலே எல்லோர்க்கும் இன்பந்தருவது இயல்புதானே ! ஆகத் தெப்பத் திருவிழாவிலே ஒளி வெள்ளமும், இசை வெள்ளமும் ஆன்மீக வெள்ளமும் மேலோங்கி நிற்கும். மேலும் பிறவிப் பெருங்கடலிலிருந்து ஆன்மாக்களைக் கரை சேர்த்து உய்விக்கும் இறைவனுக்கே தெப்ப நகந்து களித்த அருளாளர்களின் உளப் போக்கினையும் உணர்கிருேம். நாயக்க மன்னர்களும் சிறப்பாகத் திருமலை நாயக்கரும் தெப்ப விழாவிற்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து மகிழ்ந்ததை வரலாற்ருல் அறிகின்ருேம் !

எங்கும் இசை :

இசை வடிவினனுகிய இறைவனைக் கோயிலுக்குச் சென்று வழிபடும் முனிவர்கள் வைகறையில் சங்கொலியிட்டுக்கொண்டே செல்வதை ஆண்டாள் திருப்பாவையுள்,

'செங்கல் பொடிக்கிறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்'

எனக் கூறுதலால் அறியலாம். மக்களை விழித்தெழப் பண்ணுதற்குக் கோயிலில் சங்கு ஊதுதலையும், ஆலய மணியடித்தலையும், முரசறைதலையும் செய்துள்ளனர். திருவிழாவினை உணர்த்துப் பொருட்டுக் கோயில் முரசம் அறையப்பட்டுள்ளக் குறிப்பானது சங்க விலக்கியங்களிலும் காணலாம்.

எங்கும் நிறை இவைனுக்கு அமைத்த கோயில் தூண்களிலும் இசையொலி உண்டாகுமாறு கலைஞர்களின் கற்பனை வேலை செய்திருக்கிறது இதனை மதுரைக் கோயிலிலுள்ள இசைத் தூண்களால் அறியலாம். கோயில் மண்டபத்திலும் இசையின் எதிரொலி யுண்டாகுமாறு செய்த கலைமாட்சியினைத் திருவையாற்றுக் கோயிலுள் காணலாம்.

தமிழகக் கோயிற் சிற்பங்களை ஆராய்ந்து பார்த்தால் எத்தனையோ இசைக் கருவிகளைப் பற்றியறிய வாய்ப்புண்டாகும்.

" மெய்யன்பர் மனத்தன்பின்
விளைந்த விசைக் குழலோசை
வையந்தன் னையுநிறைத்து
வானுந்தன் வயமாக்கிப்
பொய்யன்புக் கெட்டாத
பொற்பொதுவின் நடம்புரியும்
ஐயன்றன் திருச்செவியின்
அருகணையப் பெருகியதால் "

— சேக்கிழார்.

# ஞான சக்தி

**திரு. கணேச தீட்சதர்**

விராட்புருடனுடைய இதய ஸ்தான மாகிய சிதம்பரத்தில் எழுந்தருளி யிருக்கும் இதய வாசியாகிய ஸ்ரீமந் நடராஜமூர்த்திக்கு இச்சா சத்தி கிரியா சக்தி. ஞானசக்தி, என்கிற மூன்று சக்திகளும் இருப்பது அவசி யமே இச்சா சக்தியின் தொழில் ஜீவன்களுக்கு ஆசையை உண்டாக் குவது. கிரியா சக்தியின் தொழில் உண்டான ஆசைக்கு வேண்டிய காரியங்களைச் செய்வது, ஞானசக்தி யின் தொழில் ஜீவன்களின் அறியா மையை நீக்கி அறிவு மயமான ஆன் மாவை அறியச் செய்வது. இந்த க்ஷேத்திரம், இதயஸ்தானமான தாலும், முக்கியமான க்ஷேத்திரமான படியாலும், மூன்று சக்திகளும் இந் தக் கோயிலில் இருக்கிறார்கள். ஸ்ரீநடராஜர் பள்ளியறையிலிருக்கும் அம்மன் இச்சா சக்தி, ஸ்ரீ சித்ஸபை யில் ஆனந்த நடனம் செய் துகொண்டிருக்கும், ஸ்ரீ ஆனந்த நடராஜ மூர்த்தியின் பக்கத்திலிருக் கும் அம்மன் கிரியா சக்தி ஸ்ரீசிவகாமி கோஷ்டத்தில் (இப்பொழுது கும்பா பிஷேகம் நடக்கும்) ஸ்ரீ சிவகாம சுந்தரி அம்மன் ஞான சக்தி. அறிவு மயக்கத்தினால் ஜீவன்கள் பலவித மான ஆசைப்பட்டு, அதற்குள்ள கர் மாக்களைச் செய்து அதனால் உண் டான புண்ணிய பாவங்களை அனுப விக்க முடியில்லாத பிறவிகளை எடுத் துக்கொண்டிருப்பதை, அறிவு மயக் கத்தை நீக்கி, ஐம்புலன்களையும் அடக்கி வெளிச் செல்லவிடாமல் புத்தியில் அடக்கி, எப்பொழுதும் எங்கும் நிறைந்திருக்கும் அறிவு மய மான இதயத்திலிருக்கும் ஆன்மாவை அறிவதே வீடு பேறு, அப்படி அறிவு மயக்கத்தை நீக்குவது ஞானசக்தி யின் அருளால்தான் முடியும், என்பது உபநிஷத்துக்களிலும், சூதசம்ஹிதை யிலும், இன்னும் பல உண்மை அறிவு நூல்களிலும் சொல்லப் பட் டிருக்கிறது. ஆகையால் அந்த முக்தி யின்பம் அடைய, ஞான சக்தியின் அருளைப் பெருவதற்கு நாளது விரோதிகிருது வருஷம் தை மாதம் 23-ந் திகதி (6—2—72) ஞாயிற்றுக் கிழமை சுபதினத்தில் சகல வைப வங்களுடனும் நடக்கும் அஷ்ட பந்தன மகா கும்பாபிஷேகத்தில் சகல கைங்கர்யங்களிலும் ஈடுபட்டு ஞான சக்தியாகிய ஸ்ரீ சிவகாமசுந்தரி யின் அருளைப் பெற்று, முத்தியின்பம் அடைவோமாக.



# திருமுறைகண்ட காலம்

**டாக்டர் மு. கோவிந்தசாமி**, எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,

திருமுறைகண்ட சோழனை ஆதித்தன் 9ஆம் நூற்றுண்டின் ஆதித்த சோழன் என்றும், பதினோராம் நூற்றுண்டின் முதல் ராஜ ராஜன் என்றும் பன்னிரண்டாம் நூற்றுண்டின் முதல் குலோத்துங்கன் என்றும் ஆசிரியர்கள் பலவாறு கருதிவந்தனர். ஆனல் இன்றைய ஆராய்ச்சி முடிவில் முதற் குலோத்துங்கனே திருமுறைகண்ட சோழன் எனத் தெரியவருகின்றது.

திருமுறை கண்ட புராணத்தை எழுதிய உமாபதி சிவாச்சாரியார் அவர்கள் அச்சோழனை இராஜ ராஜ மன்னன்அபயகுலசேகரன் என்கிருர். 7ஆம் நூற்றுண்டின் திவாகரம் சோழர்க்கு அபயன் என்ற சிறப்புப் பெயரைக் குறித்திருந்தாலும், அபயன் என்ற பெயர் முதற்குலோத்துங்கன் காலத்திலிருந்துதான் வழக்கில் வந்திருக்கின்றது. தனிப்பாடல்களில் அபயன் குலோத்துங்கன் என்றே தொடர்ப்பெயர்கள் குறிக்கப் பெறுகின்றன இராஜ ராஜ மன்னன். என்பது வேந்தர் வேந்தன் அரசர்க்கெல்லாம் பேரரசன் எனக் குறிக்கலாமன்றி 'இராஜ ராஜன்' என்ற ஒரு குறிப்பிட்ட சோழனைக் குறிக்க வேண்டு மென்பதில்லை. குலசேகரன் என்ற பெயர் முதற் குலோத்துங்கனுக்கு வழங்கிய தெனப்பேராசிரியர் நீலகண்ட சாஸ்த்திரியார் கூறுகிருர்.

நம்பியாண்டார் சோழ அரசரைக் குறிக்கையில் "சிற்றம்பல முகடு கொங்கிற் கனகமணிந்த ஆதித்தன் குல முதல்வன்" என்பது கொண்டு அறிஞர்கள் இச்சோழனை ஆதித்த சோழன் என ஒரு காலத்தில் முடிவு கட்டினர். இங்கு ஆதித்தன், சோழர் குலத்தின் முன்னேன் என்பதைத் தவிர வேறு குறிப்பு இருப்பதாகப் புலப்படவில்லை. நம்பியாண்டார் மற்றும் "சிங்கத்துருவனைச் செற்றவன்;" மைவைத்த கண்டன் நெறியன்றி மற்ருேர் நெறி கருதாத் தெய்வக்குடிச் சோழன்" என்ற இரு சோழர்களைக் குறிப்பிடுகிருர். இவர்கள் சிங்களத்தை வென்ற பத்தாம் நூற்றுண்டுச் சோழரும் பன்னிரண்டாம் நூற்றுண்டில் ஆண்ட விக்கிரமன் அல்லது இரண்டாம் குலோத்துங்கன் என்போரும் ஆவர். வைணவம் முதலியவற்றை அடக்கிச் சைவம் ஒன்றையே வளர்க்கக் கருதியவர்கள் விக்கரமனுக்குப் பின்னோர் தாம். எனவே திருமுறை கண்டவன் பன்னிரண்டாம் நூற்றுண்டின் முற்பகுதிக்குரியவனுகவே வேண்டும்.

திருமுறைகண்ட புராணத்தில் நம்பியாண்டார் நம்பி பத்து திருமுறைகளை வகுத்ததாகவும், பின்பு சோழன் வேண்டுதலுக்கு ஏற்பப் பதினோராம் திருமுறையையும் வகுத்

தளித்தாகவும் கூறப்படுகிறது. இதில் இடைச் செருகலுக்கோ அவநம்பிக் கைக்கோ இடமில்லை. உமாபதிசிவம் போன்றவர்கள் எழுதியதனை நம்பி யே தீரவேண்டும். பத்து பதினோராம் திருமுறையாசிரியர்கள் (பட்டினத் தார், கருவூர்த்தேவர், சேந்தன், திருமாளிகைத்தேவர்) முதலியோர் பதினோராம் நூற்றாண்டின் முதல் கால்பகுதிக்குப் பின்பும்இருந்திருக்கக் கூடுமென்றும் தெரிகிறது. மற்றும் கல்வெட்டுக்களிலும் ஒட்டக்கூத்தர் உலாக்களிலும் 'அம்பலம் பொன் வேய்தல், தில்லைத்திருப்பணி செய் தல் ஆகியவை விரிவாக விக்கிரமன், இரண்டாம் குலோத்துங்கன் ஆகி யோர் காலத்திலேயே செப்பப் பெறு கின்றன.

சிதம்பரத்தில் முதல் இராஜ ராஜன் கல்வெட்டுக்கள் (மிகச்சொற்பமாக) ஒன்றிரண்டே காணப் பெறுகின்றன மற்றும் தஞ்சை இராஜ ராஜேச்வரத் தைக் கட்டி முடிப்பதற்கே அவனுக் குப் பொழுதிருந்தது, முதற்குலோத் துங்கன் முதலியோர்களே கங்கை கொண்ட சோழபுரத்திலிருந்து கொண்டு அருகில் உள்ள தில்லைக்கு அடிக்கடி வந்துகொண்டிருந்தனர். பெரியபுராணம் இரண்டாம் குலோத் துங்கன் (அனபாயன்) காலத்தில் தில்லையிலேயே அரங்கேறியது என்ப தனையும் இங்கு நினைவுகூர வேண்டும். குலோத்துங்கன், விக்கிரமன் முதலி யோர் கல்வெட்டுக்களே சிதம்பரத் தில் ஏராளமாகக் காணப்படுகின்றன அவர்கள் கோயில் திருப்பணி செய் கையிலேயே உட்பிரகாரச் சுவரி லிருந்து தேவாரச்சுவடிகள் கிடைத் திருக்கவேண்டும் அதற்கு முன்பு வழக்கிலிருந்தன வெல்லாம் சிலபல பதிகங்களே. மற்றும் ஒருவலிமையான ஆதாரம் 'திருமுறை' என்ற சொல் வழக்காகும். திருமுறைச் செல்வர் திருமுறைச்செல்வர் மடம் என்ற வழக்குகளெல்லாம் பன்னிரெண்டாம் நூற்றாண்டிலேயே கல்வெட்டில் காணப்பெறுகின்றன. திருமுறைகளைச் செப்பேட்டில் எழுதிவைத்தவனே முதற் குலோத்துங்கன்சேனாபதி ஒரு வன். என்பது வரலாறு அறிந்ததாகும். இவற்றால் திருமுறை கண்ட சோழன் பன்னிரண்டாம் நூற்றாண்டினன் என் பது உறுதியாகும்.

சேக்கிழார் புராணத்தில், சேக் கிழார் நம்பியாண்டார் நம்பி வரலாற் றைச் சொல்லும்போது அவர் கூறுவ தனை உமாபதிசிவம் வருணிக்கும் போக்கு திருத்தொண்டர் அந்தாதி யை நம்பியாண்டார் விளக்கம் செய்த போது சேக்கிழார் அருகிலிருந்ததாக நம்பச் செய்கின்றது. எனவே நம்பி யாண்டார் காலக் கடைசிப்பகுதியில் சேக்கிழார் வாழ்ந்திருக்கக்கூடும் என யூகிக்க இடம் இருக்கின்றது. திருத் தொண்டர் புராண வரலாற்றில் இதற்கு இடமளிக்கும் வரிகள் "நம்பி அருளிச்செய்த கலித்துறை அந்தாதி தன்னை உலகமெல்லாம் எடுத்து இனிது பாராட்டிற்று என்ன வந்தத் தூய கதை அடைவுபடச் சொல்வீர் என்று சோழன் உரை செய்யக் கேட்டுக் குன்றை வேந்தர்" என்ப தாகும்.

'பாராட்டிற்று என்ன' என்ற இடம் சேக்கிழார் அருகிருந்து கேட்டுச் சொல்லியபோல் இருக்கின்றது.

# சமயமும் இளைஞரும்

திரு. ச. மெய்யப்பன், எம்.ஏ.,

சமயங்கள் மனித சமுதாயத்தில் செழித்து வளர்தற்குக் காரணம் என்ன? நிதியின் குவைகளைக் கொட்டிக் குவித்தாலும், நிலவிலே சென்று குடியேறினாலும் மனித மனம் ஏதோ ஒரு குறைபாட்டைக் கொண்டதாகவே அமைந்துள்ளது. தனக்கு எட்டாத ஒன்றைத் தாவித் தொடத் துடிக்கின்றது. தெளிவாகச் சொன்னால் மனநிறைவை நாடி மனித நெஞ்சம் முயற்சிக் கரங்களை நீட்டிக்கொண்டிருக்கின்றது. "எல்லையொன்றின்மை எனும் பொருளதனை" எட்டிப் பிடிக்கும் அந்த இயற்கை நாட்டமே சமயம்; மன நிறைவையும் அமைதியையும் நாடிப்பாயும் இன்ப நினைவே சமயம். எனவேதான் "ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை" என்று அடியாரும் பாடினர்.

சமயம் எவ்வாறு மனித வாழ்வுக்குப் பயன் தருகின்றது? இன்பமே உயிர்களின் நாட்டம், அந்த இன்பத்தை அடையும் ஆர்வத்தினால் தீமைகளையும் மனிதன் செய்ய நேர்ந்துவிடுகின்றது. அத்தகைய சூழ்நிலையில் சமய உணர்வு மனிதனின் சிந்தனைக் கதவுகளைத் திறந்து கீழ்மைக் குப்பைகளை அகற்றி எறிகின்றது, மனிதனுக்கும்மேல் உயர் பொருள் ஒன்று உண்டு என்பதையும் அறமும் அன்புமே இன்பத்தை அடையும் நெறிகள் என்பதையும் சமயம் எடுத்துக்காட்டுகின்றது. அது மட்டுமின்றி இழைக்கும் தீய செயல்களினால் பழியும் பாவமும் சூழ்கின்றன என்றும் அந்தப் பாவத்தின் விடுதலை, வருந்தி இறைவழிபாடு செய்வதிலும் திருந்தி வாழ்வதிலுமே அமைந்துள்ளது என்றும் சமயம் இடித்துக் கூறுகின்றது. இந்நாள் உளவியல் அறிஞர்களும் குற்ற உணர்ச்சிகள் குறைவதற்குச் சமயம் பெருந்துணையாகும் என்றே கருதுகின்றனர்.

"பூமியிலே கண்டமைந்து மதங்கள் கோடி" என்று கவியரசர் பாரதியார் பாடினர். கொள்கையினால், குறிகளினால், கோயில் அமைப்புக்களினால் சமயங்கள் பல்கிப் பெருகிக் கிடக்கின்றன. வழிகள் பலவாயினும் இலக்கு ஒன்றே; விளக்குகள் பலவாயினும் ஒளி ஒன்றே; நதித்திரள் பலவாயினும் கூடும் வாரிதி ஒன்றே; அதுபோலவே பல்பெருஞ் சமயம் சொல்லும் பொருளும் ஒன்றே. ஆயினும் சமயம் திசைமாறிச் சென்ற நிலையை வரலாறு காட்டுகின்றது. "என் தெய்வம் உன் தெய்வம் என்று எதிர்வழக்கிட்டு" நின்ற சமயங்களின் காட்சியையும் "ஒன்றே பொருளெனின் வேறென்றும் அன்றெனின் ஆமென்றும்" போராடிய வல்லாளர்களின் வாதங்களையும், வெறும் சமயக் குறிகளையே சமய நெறிகள் என்று பூசலிட்டு நின்றவர்களின் வரலாறு தெள்ளத் தெளிவாகச் சுட்டிக் காட்டுகின்றது. அன்பை அடிப்படையாகக் கொண்ட சமயம் வன்முறையில் ஈடுபடும் பொழுதெல்லாம் மெய்ஞ்ஞானியர்கள் தோன்றிச் சமயத்தின் உள்ளார்ந்த உண்மையினை வலியுறுத்தி வந்துள்ளனர்.

உயிர்க்குயிராய்த் தழைத்த உண்மை இறைவனை அறிந்ததாயுமானுரும், இன்பத் திருவாசகத்தில் ஊன் கலந்து உயிர் கலந்த இராமலிங்கரும் காட்டிய காழ்ப் பற்ற அன்பு மேவிய பொதுமை நெறியே உலகை உய்விக்கும் நன்னெறி ஆகும். இந்தப் பொதுமை நெறியே சமுதாய நல்வாழ்வுக்குக் காலந்தோறும் ஒளி யூட்டும் மணி விளக்கம் எனலாம்.

சமய ஞானிகளின் பெருவாழ்வு நமக்குக் கற்றுத்தரும் பாடம் என்ன? தன்னை மறந்து காதல், தன்னை மறந்து தொண்டு, தன்னை மறந்த தியாகம் ஆகிய பண்புகளை நாம் தனித் தனியாக மனிதர்களிடம் காணுகின்றோம். இத்தனையும் ஒன்று கூடித் தன்னை மறந்த பக்தியாக மலர்ந் திருப்பதைத்தான் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிய அடியார்களின் வாழ்வு நமக்குச் சொல்கின்றது. முதிர் ஞானச் செல்வர்களாகிய திருநாவுக் கரசரும் மாணிக்கவாசகரும் வாழ்ந்த வாழ்க்கை இக்கருத்தினை நமக்குத் திறம் படவிளக்குகின்றது.

இவ்விரு மெய்யடியார்கள் வாழ்வினை யும் வாக்கினையும் உற்று நோக்குவார்க்கு ஓர் உண்மை புலனுகிறது. புனிதத்தைத் தேடிப் புறப்பட்ட பயணத்தில் ஒவ்வோர் அணுவையும் போராடிப் போராடியே அவர்கள் கடந்தனர். அமைச்சுத் தொழி லும் அரண்மனைச் சுவர்க்க போகங்களும் தரமுடியாத குறைவிலா நிறைவினை எய்த மாணிக்கவாசகர் உள்ளம்பட்ட பாட்டினை அவர் பாட்டெல்லாம் நமக்குக் காட்டு கின்றது. அழுது அடியடைந்து அனுபூதி பெற்ற பக்திக் கடலான மாணிக்க வாசகரே இறைவனைப் பார்த்து, "என்னை அடையாளம் கண்டுகொள்" என்று விம்மி யழும் துயர்க் குரலைக் கேட்கும்போது நம் நெஞ்சம் சிலிர்க்கின்றது. மனிதரில் புனித ரான மணிவாசகர் பலநிலைகளில் உழன்று உழன்று தம் குற்றங்களையெல்லாம் ஓல மிட்டுரைத்துக் கண்ணீரில் கழுவி உய்தி பெறுகின்றார்,

தத்துவங்களிலும் தருக்க நெறிகளிலும் புறச் சமயத்திலும் புகுந்து இறைவனைத் தேடியடைய முயன்றார் நாவுக்கரசுப் பெருந்தையார். அதற்காக அவர் மேற் கொண்ட தொண்டுநெறித் தூய்மையைக் காணுகின்றோம். அருட்பேரொளியைக் காணத்துடித்த துடிப்பினை அவர் பாக் களில் கேட்கின்றோம். நிலையற்ற நினைவின் அலைகளினால் உந்தப்பட்டு, இறைவன் தன்னை யாட்கொள்ளும் பக்குவம் தனக்கு வரவில்லையோ என்று ஒவ்வொரு நிகழ்ச்சி யிலும் தன்னைப் பரிசோதனைக் கருவி யாக்கிக்கொண்டு வருந்தும் குரல் நம்மை நெகிழ்விக்கின்றது. தன்னைப் புனிதப் படுத்திக் கொள்ளும் சோதனை நெறியினா லும் தொண்டு வாழ்க்கையினாலும் இறை வனை நெருங்க முடியும் என்று கோடிட்டுக் காட்டுகின்றது இவ்வடியார்களின் வாழ்க்கை.

மண்ணில் நல்ல வண்ணம் வாழக் கடவுள் நம்பிக்கை வேண்டும். தெய்வம் என்னும் சிந்தை உண்டாகுமேயானால் மனிதகுலம் உய்வது உறுதி. சமயங்களின் உட்கிடைதான் (*Essence of Religion*) மிகவும் இன்றியமையாதது.

தெய்வம் பல சொல்லிப் பகைமையை வளர்ப்பது அறிவுடைமையாகாது. இந்தத் தலைமுறையின் தலைசிறந்த சிந்தனையாள ரான யோகி அரவிந்தர் கூறிய வண்ணம் விலங்கு நிலையிலிருந்து மனித நிலை பெற்ற நாம் இறைபுணர்வினால் மனித நிலையிலிருந்து தெய்வநிலை பெற்று உயர லாம். மண்ணை நோக்கிக் குனியாமல் விண்ணை நோக்கி மேலே மேலே உயரச் சொல்வது அரவிந்தர் தத்துவம்.

சமய வாழ்வு ஊரறிய உலகறியப் பிறர் பாராட்ட வாழும் வாழ்வன்று. ஒவ்வொரு உள்ளத்தின் புனிதப் பயணத்தின் முன் னேற்றமே சமயம் (*Jpurbial progress of the soul*) இச்சமயம் தமிழினத்தைப் பொறுத்தமட்டில் தூயவுள்ளமும் தூய

தொண்டும் அமைய வருவது என்பதனை அப்பர் பெருமானின் வாழ்வாலும் வாக்காலும் இளைஞர் உள்ளம் அறிதல் வேண்டும்.

இன்றைய இளைஞர் உலகம் குறிக்கோளில்லாமல் பம்பரம்போல் சுழன்றுகொண்டிருக்கின்றது. இவர்களுக்குப் பற்றுக்கோடுமில்லை; பழமையில் நம்பிக்கையுமில்லை நல்வழிகாட்டும் நல்லறிஞர்களை நாம் அறிமுகப்படுத்தவுமில்லை. இருபதாம் நூற்றாண்டின் இந்து சமயத்தின் ஈடில்லாப் பெருமையினை உலகறிய உணர்த்தியவர் வீரவிவேகானந்தர் இவரையே யார் என நாக்கூசாமல் கேட்கின்றனர். இது நம் தவக்குறைவே. உலக அரங்கில் உலகப் பெருஞ் சமயங்களுள் இந்து சமயம் உலகளாவிய மனிதப் பண்பினை உயிர்ப்பாகக் கொண்டதென வீர முழக்கம் செய்த விவேகானந்தரின் கருத்துக்கள் இளைஞர் உள்ளங்களில் அருவியெனப் பாயும் நாளே சமயம் புத்துயிர் பெறும் நாள்.

மடியில் விழுந்த கனி மரியாதைக் குரியதன்று என்பார்கள். இது தமிழினத்தைப் பொறுத்தவரை நூற்றுக்கு நூறு உண்மை. தமிழ் மண்ணில் பிறந்து வளர்ந்து நடந்து ஞானப்பயிர் விளைத்த பேரருளாளர்களின் தேவார திருவாசகங்கள் பக்தி நெறி பரவத் தமிழ் ஞாலம் உலகுக்கு அளித்த நன்கொடை என்பதனை நாம் மறந்துவிட்டோம். இவைகள் தமிழ் இனத்தையும் இனம் பயின்ற மொழியையும் உலகுக்கு அடையாளம் காட்டிக் கொண்டிருக்கின்றன. செழித்து வளர்ந்த செந்தமிழ்க் கலைஞானத்தின் அருட்கனிகள் இவை. மொழிச் சிறப்புக்களில் ஆங்கிலத்தை வணிக மொழி என்றால் செருமனியை விஞ்ஞான மொழி என்றால் இலத்தீனைச் சட்டத்தின் மொழி என்றால் தமிழை ஊனை உருக்கி உள்ளத்தை நெகிழ்விக்கும் பக்தியின் மொழி எனலாம்.

பக்தி மொழியே நமக்கு அளித்துப் பக்தி நெறி காட்டிய பேரருளாளர்களில் உயர்வற உயர்நலம் படைத்தவர்கள் நால்வர்கள். அவர்கள் வாழ்வாலும் வாக்காலும் தமிழர் வாழ்வு சீரும் சிறப்பும் பெற்றது. தமிழ் புத்தொளி பெற்றது. நால்வரின் தமிழ் நலமும் பக்திப் பண்பும் காலம் தோறும் தமிழர் வாழ்வுக்கு உயிர்ப் புத்தன்மை நல்கி வருகின்றன. இவர்களின் அளப்பரிய சாதனைகளை நம் முன்னோர்கள் நினைந்து நினைந்து உள்ளம் உருகினர். இந்நூற்றாண்டில் ஏற்பட்ட சமுதாய மாற்றங்களில் இன்றைய இளைஞர் உலகத்தில் இந்நாள்வரை அறியாத இடைவெளி ஏற்பட்டுவிட்டது. இது வருந்துதற்குரியது. சமயத்தோடு பின்னிப் பிணைந்த வாழ்வே தமிழர் வாழ்வு என்பதனை இளைஞர்கள் நினைவு கூர்தல் நலம் பயக்கும். இவர்களுக்கு இந்நினைவை ஊட்டுதலே சமயக் காவலர்களின் தலையாய பொறுப்பாகும்.

தமிழ்ச் சமுதாயத்தில் பழங்காலந் தொட்டுக் கோயில்கள் மனித வாழ்வின் நடுநாயகமாக விளங்கின. வரலாற்றினை உற்றுநோக்கினால் கோயில்கள் ஒரு சிலருக்கே உரிய ஏகபோக உரிமையாகவோ ஒதுக்கப்பட்ட தனியிடமாகவோ கருதப்பெறவில்லை. நம் திருக்கோயில்கள், நீண்ட நெடிய வரலாற்றுப் பெருமையுடைய தமிழினத்தின் நாகரிக மேம்பாட்டால் எழுந்தவை. இக்கோயில்களின் அமைப்பும் கலைத்திறனும் சிற்ப நலனும் மொழி வேறுபட்ட பிறநாட்டு மக்களையும் ஈர்க்கும் கலைப்பெருஞ் செல்வங்களாகத் திகழ்கின்றன. இவைகள் இந்தியச் சமயங்களின் வளர்ச்சிக்கும் பெருமைக்கும் தமிழர் அளித்த பெருங் கொடைகள்.

திருக்கோயில்களில் தில்லைப் பெருமான் கோயில் மலைகளில் இமயம் போலச் சிறப்பும் பெருமையும் மிக்கது. இங்குள்ள வழிபடும் தெய்வமாம் கூத்தப்பெருமான்

திருவுருவம், கலையுலகின் கவினுர்ந்த கவினுரும். அது ஆடற்கலையின் அழகோவியம்; உலகக் கலைஞர் என்றும் வியக்கும் புதுமைத் திருக்கோலம்; கற்பனையின் நிறைவு; கண்டார் யாவரும் விரும்பும் கலையெழிற் கருவூலம். காணுதன காட்டும் கலை வடிவம்; கண்டறியாதன காணச் செய்யும் கவிதையூற்று, கலைநலம் வல்லார்க்கன்றி எல்லார்க்கும் இன்பம் தரும் எழிலோவியம், கலைச்சிந்தனையின் முதிர்ச்சியால் விளைந்த நல்வடிவம். தமிழர் உலகுக்களித்த ஒப்பரிய கலைக்கொடை. உலகை இயக்கும் இப்பெருமகனுர் நட்டமிடும் தில்லைப் பெருங்கோட்டத்தில் உள்ள சிவகாமியம்மன் திருக்கோட்டக் குடமுழுக்கு விழா நடைபெறவிருத்தல் நம்மனோர் தவப்பயனுகும்.

இந்நன்னுளில் தில்லைத் திருநடத்தின் மெய்ஞ்ஞானப் பெருமையையும் அவன் ஆட்டத்திற்குக் கவிமணியவர்கள் கூறும் காரணத்தையும் எண்ணி நாம் இன்புறுவோமாக.

தில்லைப் பதியுடையான் சிற்றம்பலந்தன்னில்
அல்லும் பகலும்நின் ருடுகின்ருன்—எல்லைக்கண்
அண்ணு மலைமன் அமைத்த கலைக்கழகம்
கண்ணுரக் கண்டு களித்து.

# குமர குருபரர் அருளிய தில்லைத் திருப்பனுவல்கள்

சித்தாந்த நன்மணி
திரு. கு. சுந்தரமூர்த்தி

பதினேழாம் நூற்றாண்டில் தமிழர்செய் தவப் பயனாகத் தோன்றியருளிய அருள் முனிவர் குமரகுருபரர் ஆவர். அழுக்கில்லாத் துறவும் அடக்கமும் வாய்ந்தவர் இவர். செந்திலம்பதி வாழ் கந்தனது அருளால் ஓதாது உணர்ந்த ஞான வித்தகர்.

இவர் அருளிய பனுவல்கள் பல. அவை இலக்கண வல்லுநர்க்கு இலக்கணப் பேழையாகவும், இலக்கியச் சுவை நுகர்வார்க்கு இலக்கியக் கருவூலமாகவும், சித்தாந்தச் செந்நெறி நுகர்வார்க்குச் சிவஞானச் சர்க்கரையாகவும் விளங்குபவை. இறையருளையும் அவ்வருளால் குருவருளையும் பெற்ற அவர்கள், தில்லையிலிருந்து அருளிய திருப்பனுவல்கள் இரண்டாகும். ஒன்று சிதம்பர மும்மணிக்கோவை. இரண்டு சிதம்பரச் செய்யுட்கோவை. இவற்றை இம் மலரில் ஆராய்வது பொருத்தமுடைத்து ஆகும்.

## சிதம்பர மும்மணிக் கோவை :

மூன்று மணிகளால் ஆய மாலையைப் போல ஆசிரியம் வெண்பா கலித்துறை ஆகிய மூவகைப் பாக்களாலும் அந்தாதித் தொடையில் முப்பது பாடல்களால் இது பாடப்பட்டுள்ளது. இந்நூலில் தில்லைக் கூத்தப் பெருமானின் ஐந்தொழில் திறமும், அம்மையின் அருட் கருணையும், இல்லறம், துறவறம், செல்வம், வறுமை முதலியவற்றின் விளக்கமும், ஆசிரியரின் மெய்மைத் துறவொழுக்கம், தன்னடக்கம் முதலியனவும் விரிவாகவும், சுவையாகவும் பேசப்பட்டுள்ளன. அவற்றுள் சிலவற்றைக் காண்போம்.

## ஐந்தொழில் திறம் :

நடராசப் பெருமானின் திருக்கரங்களில் உடுக்கையைத் தாங்கிய திருக்கரம் ஒன்று. இது படைப்புத் தொழிலைச் செய்வதாகும். மார்போடு அமைத்த கரம் ஒன்று. இது காத்தல் தொழிலைச் செய்வதாகும் அழல் ஏந்திய கரம் ஒன்று. இது அழித்தல் தொழிலைச் செய்வதாகும். திருவடிகளில் ஊன்றிய திருவடி மறைத்தல் தொழிலையும், தூக்கிய திருவடி அருளல் தொழிலையும் செய்வதாகும். இங்ஙனம் நடராசப் பெருமானின் திருவுருவத் தத்துவத்தை மிக அழகாக அடிகள் விளக்கியிருப்பது உளங்

கொள்ளுதற் குரியதாகும்.

“ பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பி னுனில வளாகமும்
ஏனைப் புவனமும் எண்ணிங்கு உயிரும்
தானே வகுத்ததுன் தமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையுங் காப்பதுன் னமைந்த பொற்கரமே
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும்
மாற்றுவ தாரழல் வைத்ததோர் கரமே
ஈட்டிய வினைப்பயன் எவற்றையும் மறைத்து நின்று
ஊட்டுவ தாகுநின் னூன்றிய பதமே
அடுத்த வின் னுயிர்கட் களவில்பே ரின்பம்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே

என்பது அப்பகுதியாகும். இப்பகுதி

தோற்றந் துடியதனிற் றேன்றுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம் — ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்ற திரோத முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

என்ற ஞான நூலின் பிழிவாய் அமைந்திருத்தல் கண்டு இன்புறுதற் குரியது.

அம்மையின் கருணை :

நடராசப் பெருமானின் திருநடனம் உயிர்கள் உய்வதன்பொருட்டே ஆகும். எனினும் அந்நடனத்தைக் கண்டு வணங்கி இன்புறும் நிலையை உயிர்கள் நேரே பெறுதற்கரிது. ஆதலின் அந்நடனத்தை அம்மையார் தான் வழிபட்டு அதன் பயனை உயிர்களுக்குத் தருகின்றார். நோயுற்ற குழந்தைக்கு நோய் நீங்க மருந்தை நேரே கொடுப்பின் அதன் இளங்குடர் பொருது எனத் தாய் தானுண்டு தன் பாலின் வழியே அக்குழந்தையின் நோயை நீக்குவது போல, அம்மையும் இங்ஙனம் செய்கின்றார் என உவமை காட்டி விளக்கியிருப்பது உலகியல் நலத்தையும் அருளியல் நலத்தையும் ஒப்ப இணைத்துக் காட்டும் அழகான பகுதியாகும்.

செல்வமும் நல்குரவும் :

பொதுவாக உலகியலில் பொருள் உடையாரைச்செல்வமுடையார் என்றும் அஃதில்லாரை வறியர் என்றும் கூறுவர். ஆயினும் அடிகள் மிகவும் நுண்மையாகவும் உண்மையாகவும் ஆய்ந்து இதற்கு விளக்கம் தந்திருப்பது பெரிதும் போற்றுதற்கு உரியதாகும்.

இருநிலம் புரக்கும் ஒருபெரு வேந்தனையினும், தன்னினும் மிக்கான் ஒருவனின் செல்வத்தைக் காணுங்கால் அதனை ஒப்பத் தானும் பெருமை கண்டு, பொறாமைகொண்டு அயிற் சுவை பெறுதும், துயிற்சுவை பெறுதும் பெருமூச்செறிந்து கவலையுற்று அழிவதைக் காண்கின்றோம். ஆனால் விறகு விற்று உண்ணும் ஏழ்மை உடைய ஒருவன், தான் விற்றுப் பெற்ற பொருளைக் கொண்டு உண வருந்தி மனைவி மக்களுடன் மகிழ்ச்சியாய் இருப்பதையும் காண்கின்றோம். இவ்வனுபவத்தைக் கொண்டு செல்வம் நல்குரவிற்கு அடிகளார் விளக்கம் கருகின்றார். செல்வம் என்பது பொருள் உடைமையைக் குறிப்பதன்று. தனக்குக் கிடைத்ததை வைத்துக்கொண்டு பொறுமையும் நிறையும் பெற்று மனமகிழ்வாக வாழ்பவன் எவனோ அவனே செல்வன்.

எத்துணைச் செல்வம் இருப்பினும் மேலும் வேண்டுமென்று வெஃகிப் பொருமையும், ஆசையும் கொண்டு வாழ்பவன் எவனோ அவனே வறியன் என்பது அடிகளின் கருத்தாகும்.

செல்வ மென்பது சிந்தையி
னிறைவே
அல்கா நல்குரவு அவாவெனப் படுமே

என்பது அப்பாடற் பகுதியாகும்.

தன்னடக்கமும் இறையுண்மையும்:-

அடிகள் இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டவர்கள். உரன் என்னும் தோட்டியால் ஓரைந்தும் காத்து ஒழுகியவர்கள். இத்தகைய பழுத்த துறவுநிலை உடையவர்களா யினும் தம்பால் தூய துறவுநிலை இல்லை என்றும் துறவு வேடங் கொண்டு தொண்டரோடு பயின் றிருந்ததைக் கொண்டு பார்ப் பவர்கள் தம் வேடத்தை நம்பி தம் உளத்தில் இறைவன் இருப்ப தாகப் பாவனை செய்தமையால் அவ் வுண்மைத் துறவுநிலை தமக்குக் கிட் டியது என்றும் தன்னடக்கத்தோடு கூறுகின்ற பகுதி இதயத்தைத் தொடு வதாகும். இங்ஙனம் கூறிய அடிகள் இறையுண்மையையும் விளக்குகின் றார். அடியவர்கள் இறைவனை அன்ப பால் எவ்விடத்தெல்லாம் இருக்கின் ருன் என நினைக்கின்றனரோ அவ்வி டத்திலெல்லாம் இறைவன் எழுந் தருளி அருள் செய்கின்ருன் என்பது அப்பேருண்மையாகும்.

கூடா ஒழுக்கம் பூண்டும் வேடம்
கொண்டதற் கேற்பநின்
றெண்டரொடு பயிறலிற்
பூண்டவவ் வேடங் காண்டொறுங்
காண்டொறும்
நின்னிலை யென்னிடத் துன்னி யுன்னிப்
பன்னு ளேக்கின ராகலி னன்னவர்
பாவனை முற்றிய பாவகப் பயனின்யான்
யேவரப் பெற்றனன் போலு மாகலின்
எவ்விடத் தவருனை யெண்ணினர்
நீயுமற்
றவ்விடத் துளையெனற் கையம்வே
றின்றே.

என்பது அப்பாடற் பகுதியாகும். இன்னும் எத்துணையோ அருங்கருத் துக்கள் உள. இதனுடன் அமைந்து இனிச் சிதம்பரச் செய்யுட்கோவை யைக் காண்போம்.

சிதம்பரச் செய்யுட் கோவை:-

இந்நூல் 84 பாடல்களால் ஆயது. யாப்பிலக்கணத்தில் உள்ள பாக்கள், பாவினங்கள் ஆகிய அத்துணைக்கும் இலக்கியமாகத் திகழ்வது. சொற் சுவையும் பொருட்சுவையும் நிரம்பி யது. யாப்பிலக்கண நூல்களில் எடுத்துக்காட்டாக உள்ள செய்யுள் சிலவற்றில் இலக்கண அமைதிகாண இயலுமேயன்றிப் பொருள் நலமோ சொல் நலமோ காண்டல் அரிதாக வுள்ளது. ஆனுல் அடிகள் அருளிய இச்செய்யுட் கோவையோ சொற் சுவை பொருட்சுவைகள் பொதிந் திருத்தலோடு வீட்டின்பத்திற்கு வாயிலாகவும் அமைந்துள்ளது. எடுத் துக்காட்டாக ஒன்று.

வெளி விருத்தம்:-

வெண்பாவின் இனத்துள் வெளி விருத்தம் என்பது ஒன்று. இது அடி தோறும் தனிச்சொல் பெற்று மூன் றடியாயும் வரும்; நான்கடியாயும் வரும் யாப்பருங் கலக் காரிக்கையில் வெளிவிருத்தத்திற்கு

ஆவாவென்றே யஞ்சின ராழ்ந்தா
— ரொருசாரார்
கூகூவென்றே கூவிளி கொண்டா
— ரொருசாரார்
மாமாவென்றே மாய்ந்தனர் நீந்தா
— ரொருசாரார்
ஏகீர்நாய்கி ரென்செய்து மென்ரு
— ரொருசாரார்

என்ற பாடல் உளது. இதில் இலக்கண அமைதி இருப்பினும் சொல் நலமோ பொருள்நலமோ ஏதும் இல்லை. இதே இனத்திற்கு அடிகள் அருளிய பாடல்

வெஞ்சமனஞ்ச வேலோ டெதிர்ந்தா
னமரங்காள்
அஞ்ச லெனும்சொல் லார்சொல
வல்லார் நமரங்காள்
மஞ்சிவ ரிஞ்சி மன்றமிறைஞ்சீர்
நமரங்காள்
நஞ்சமயின்ருர் நல்குவர் மாதோ
நமரங்காள்

என்பதாகும். மேற்போக்காக ஒரு முறை இதைப் படிப்பினும் ஓசைநலமும் சொல்நலமும் விளங்கும். எத்தகைய செல்வமோ செல்வாக்கோ இருப்பினும் இயமன் வருங்கால் அஞ்சல் எனும் சொல் ஆர்சொலவல்லார்? என்னும் வினவை எழுப்பிப் பொன் மன்றத்தில் மக்களை ஈடுபடுத்தும் பொருள் நலம் எத்துணைச் சிறப்புடையது. அங்ஙனம் இறைஞ்சுவார்க்கு இறைவன் நல்குவன் என்னும் உண்மையைத் தெளிவுறுத்த இறைவன் அடியவர்க்காக நஞ்சை உண்டான் என்னும் வரலாற்றையும் விளக்கி யருளுகின்ருர். அடியவர்க்காக நஞ்சை அயின்றவர் ஆதலால் பொன்மன்றம் இறைஞ்சும் அடியவர் எவர்க்கும் நல்குவர் என்பது குறிப்பு. இங்ஙனம் அழகு நலம் சான்ற இலக்கண வரம்பு அமைந்த செய்யுட் கோவை முழுதும் கற்று இன்புறுவதற்குரியதாகும்.

**தில்லைச் சிவகாமியம்மை இரட்டை மணிமாலை :-**

இந்நூல் அடிகளால் அருளப்பட்டதன்று எனினும் அடிகள் அனைய அருளாளர் ஒருவரால் பாடப்பெற்றது ஆதலின் எங்கள் காசி மடத்துப் பதிப்பில் குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்தின் இறுதியில் இந்நூல் சேர்க்கப்பட்டுள்ளது. இந்நூலில் தில்லைச் சிவகாமியம்மனின் அருட்கொடை ஆற்றல் முதலியன அழகுற எடுத்துக் கூறப்பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று சிவகாமியம்மை தான் இருத்தற்கு உடம்பையே பகிர்ந்தளித்த அம்பலத்தார்க்குத் தந்த அருட்கொடை கொங்கைத் தழும்பு ஒன்றேயாகும். ஆனல் அவ்வம்மையை வணங்குவார்க்குத்தரும் அருட்கொடையோ உலகு ஏழுமாம். இத்தகைய அருட் கொடையை

'அங்கம் பகுந்தளித்த வம்பலத்தார்க்
காம்பலங்கைச்
சங்கொன்று கொங்கைத் தழும்
பொன்றே-நங்கையுனை
வந்திப்பார் பெற்றவர மற்ருெருநீ
வாய்த்ததிரு
உந்திப்பா ரேழு மொருங்கு.

என்னும் பாடலால் விளக்குகின்ருர் அவ்வருளாளர். இத்தகைய அருள் நலம் சான்ற சிவகாமியம்மையையும் நடராசப் பெருமானையும் வணங்கி உய்வோமாக. திருவருள் முன்னிற்க.

# ஸ்ரீசிவகாம சுந்தரியம்மாள் துதிமாலை

புலவர். வெ வை. சிவசங்கர தீக்ஷிதர்

1. உலகெலாம் படைத்தளித் துயிர்களின் உணர்வாகி
   ஒருகையில் ஜெபமாலையும்,
   ஒரு கையில் கிளியோடும் ஒரு கையில் நீலமலர்
   ஒரு கையை யிடையில் சேர்த்
   துலகினர் பெறஞானம் ஒழிவிலா தளித்திடும்
   உமையான சிவகாமியே!
   ஓங்காரி! ரீங்காரி! ருத்ரமா காளியெனும்
   ஒளியுடைய வடிவு கொண்டோய்!
   அலகிலா வெகுளியில் அட்டகாசம் செய்(து)
   அழித்திடும் காளியாகி
   அரக்கரை வெல்பொழுது துர்க்கையாய் வடிவுடன்
   அரனரின் பாகமுமையாய்,
   உலகினைக் காத்திடும் அமயத்தில் அரியுமாய்
   உள்ள சிவகாமியுமையே!
   ஒரு நாளும் மறவாத அடியவர் துயர்தீர்க்கும்
   உயர்தில்லை யுறைதேவியே!

2. "யா,மா,ஸாச,மாயா," என்னுமொழி சிறந்திட
   ஈடிணை யின்றி நின்று,
   எங்குநி றைந்திடும் எழிற்சோதி தில்லையான்
   இடதுபா கத்துறைந்து.
   யாவையும் படைப்பவள் எல்லாம் புரப்பவள்
   இறுதியில் யாவு மாய்த்து
   யாவுந் தன்னுருவிலேயிக்கி மறைவித்(து)
   எழிலுருவம் காணவைத்தும்

யாவரையும் மோகிக்க வைப்பவள் நீயன்றி
வேறுயாவர் உலகிலே
யுந்தன தருள்ஞானம் பெற்றவர் "த்ருபுடியே"
ஒழிந்திடப் பெற்றவர் தான்
யாவுமாய் உலகினில் எவ்வகைப் பொருள்களும்
தானாக வுள்ள வுமையே !
என்றுமே மனிதினினை யடியவர் துயர்தீர்க்கும்
எழிற்றில்லை யுறைதேவியே !!

3. அண்டம் படைத்து நீ ஆட்டிடும் தேவிநீ
அழகான அம்மை நீயே !
அழித்துநீ யருள்தந்தும் அகிலமதடக்கிடும்
அகிலாண்ட தேவி நீயே !
குண்ட ரரக்கரைக் கூண்டோ டழித்திடக்
குமரியாய் தோன்றினாய் நீ !
கூறுசெய்திட்டுநீ கோலமாய் நின்றதைக்
குறுகினவர் கண்டு போற்ற
மண்டுதீ யுமிழ்நோக்கு மாண்பிலவர் காணவே
மகிழன்பு மனங் கண்டிட
மங்கையர்த் தெய்வமாய் நின்றவள் நீயெதென்
மதுரைமீ னாக்ஷி நீயே !
அண்டுவார்க் கமுதமே ! யம்பலவன் மனமகிழும்
அழகுசிவ காமியுமையே !
அனுதினமும் மனதினினை யடியவர் துயர்தீர்க்கும்
அணிதில்லை யுறைதேவியே !

4. தில்லைவளர் நடராஜர் ஈசான முகமாகத்
திகழ் கோகர் ணம்மாகுமே,
திருசைலம் தத்புருஷம் இடைமரு தகோரமாம்
திரு முகஸத் யோஜாதமோ,
மல்லல்மலி திருமதுரை வர்மதேவம் காசி
வழங்கருள் கொண்டமுகமாம்,
மறைபரவு சித்ஸபையே மதித்த(கு) இருதயமாம்
மன்னுதல கேதாரமாம்,

அல்லினுரு மாலறியா வண்ணுமலே சிகையும்
அழகுகா னத்திகவசம்
அணிகாஞ்சி நேத்திரம் அத்திரம் ராமன்பணி
அலேதழுவு ராமேஸ்வரம்,
வல்லமைகொள் எம்பலவன் வாம பாகங்கொண்டு
வளருசிவ காமியுமையே !
வருபவரின் துயர்தீர வளவாழ்வு கொடுக்கின்ற
வன்தில்லே யுறைதேவியே !!

5. வல்லகண பதிகந்தர் மாலயன் பைரவர்கள்
சோமாஸ்கந் தர்வ்ருஷபரும்,
துர்க்கைசண் பீசர்வதி திரிசிரமும் திருமலேயும்
தொன்மை திரு வாங்கரகரும்,
கல்மலியும் அஜாமரமும், கண்டியூர் முதலான
வீரட்டதியாக தலமும்,
கோணமலே விந்தயமலே திருக்கழுக்குன்றமும்,
காஞுபரி வரமென்றே,
தில்லேசிவ ரகஸியமும், சிதம்பர ரகஸியமும்
செப்பிடும் மொழியைக் கொள்க !
திருமாலும் அவன் சுதனும் தினந்தினமேவேண்டியே
திகழ்சக்தி பெற நின்றனர்
அல்லேநிகர் திகழ்கண்டன் அம்பலவன் மனமகிழும்
அழகு சிவகாமியுமையே !
அனுதினமும் மனதினினே அடியவர் துயர்தீர்க்கும்
அணிதில்லே யுறைதேவியே !!

6. ஈடிணையின்றியே யிருக்கின்ற தலமதில்
என்றுமே நடுவினுற்றே
இருதயத் தானமாய் விராட்டனும் புருடனின்
இருக்கின்ற தில்லேமன்றுள்
நாடிடும் நால்வேதம் நவினுமே புராணமும்
ஞானசம் பந்தர்முதலா
நற்சமய வாசார்யர் பணிவுடன் பாடியே
நாடோறும் தொழுதுபோற்ற

வாடிடும் பயிர்கட்கு நனிமழைப் பொழிவென
 வழங்கியருள் தந்தராஜன்
வற்றாத மகிழ்வெள்ளம் கிட்டாத முத்தியும்
 வழங்கபதம் தூக்குமீசன்
தேடிடும் வடிவிழித் தேனினும் கனிமொழித்
 தென்தில்லை சிவகாமியே !
தினந்தினமும் மனதினிலே அடியவர் துயர்தீர்க்கும்
 தில்லைநகர் உறைதேவியே !!

7. தில்லைவா ழந்தணர் திருமாயிற் றேன்றியே
 திகழாதி சங்கரர் தாம்
திருமாலின் பாயலாய்த் திகழாதி சேடனின்
 திருவவ தாரமான
வல்லப தஞ்சலி மாற்றுருவ கோவிந்த
 பகவத் பா தர்சீடராய்
ஈடிணை யின்றியே வேதாந்த சாத்திர
 உரையெழுத முயன்றபோது,
தொல்லுரை கேனோப விடதத்தில் கூறிடும்
 "உமா"வாக்யத் துரைகாணொ
தண்ணெக்கு கைந்துமே யொருநிலைத் தியானத்தில்
 உயிரைவி டுத்துமளவில்,
எல்லையில் அருண்ஞான வடிவாகத் தோன்றிய
 இனியசிவ காமியுமையே !
என்றுமே மனதினிலே அடியவர் துயர்தீர்க்கும்
 எழிற்றில்லை யுறை தேவியே !!

8. தேவியின் அருள்கொண்டு "வியாகர்ண மாபாஷ்யம்"
 ஸ்ரீபதஞ் சலிசெய்தனர்
திருமூலர் திருநந்தி முதலான சித்தர்கள்
 திருமந்த்ர யந்த்ர பூஜை
பாவினால் பலர்கணப் பாடியே வைத்தனர்
 பாமணத் தேவியோடு
பாட்டிலே கூட்டியே தேவாரத் தேனிலும்
 பாக்கவே காணகிற்போம்

தேவியின் பாகவதம் "கடம்பவன மீனாக்ஷி
சிவகாம கோட்டபீடம்"
தேர்ந்திடுக வென்றே தான்தெளிவாக உணர்த்துமமை
தெளிந்திடக் கண்டுஞானத்
தேவியாய் நின்றவுன் திருமலர்ப் பணிந்திடத்
தெளிவுசெய் சிவகாமியே!
தினந்தினமும் மனதினினைஅடியவர் துயர்தீர்க்கும்
தில்லைநகர் உறைதேவியே!!

9. பாரதம் அருள்செய்த வியாசமுனி புதல்வராம்
விளங்குசுக முனிவரிங்கு,
ஸ்ரீசக்ர ராஜத்தைத்ஸ்தாபித்து வடபுறமாய்
சிரத்தையுடன் பூஜைசெய்து,
பாரதனை வாழ்வித்த கௌடபாதர் மந்த்ர
மூர்த்திதீக்ஷிதர் முதலிய
பெரியவர் பலராலும் பூஜித்த சிறப்புற்று,
பின்னுமதி பெருமை யுற்றும்,
ஆரதனை மாலையாய் அணிகின்ற சோழரால்
ஆயிரம் ஆண்டுகள்முன்,
அழகான திருப்பணிகள் அமைவுறச் செயப்பெற்(று)
அமர்ந்திடும் தேவி நீயே!
சூரதனை மாய்த்திடச் சுதனையே தந்தவன்
சூழுசிவ காமி யுமையே!
சுடர்தூக்கு நடராஜன் உடல்பாதி தனைக்கொண்டு
தென்றில்லை யுறை தேவியே!!

10. அண்டம ளிக்குமுன் ஆதிசிவன் கண்டத்
தரிய"வோம்" உண்டாகிட
அதன்பின்பு "பூதவும்" "புவகவும்" "ஸுவகவும்
அகன்முறையில் தான்றோன்றிட
எண்டிசை துளங்கிட இணையில்கா யத்திரியும்
இலங்குவே, தங்கடோன்ற
இவையாவும் தேர்ந்தயன் நுண்பொருள் நுணுகிடா
திறைவியைத் தியானம் செய்

தண்டம் ப டைக்கவே யத்தே வி யங்கனுல்
அருணேக்குச் செய்துநிற்க,
அகிலமதைப் படைத்திட் டதுமுதல் தொடங்கியே
அயனேவினே செய்யவைத்த
எண்டிசை யொளிவீசு வைரவடி கொண்டவ
ளிசையுசிவ காமி யுமையே !
என்றுமே மனதினினே அடியவர் துயர்தீர்க்கும்
எழிற்றில்லே யுறைதேவியே !!

11. தீயுமே வளியுமே காணுத சுடருருவச்
சிவனரின் திருவுருவினேத்
திகிழ்விழிமெய்ச் சுரபதி விழிகளால் காணவே
சென்றருகு நின்றபோது,
காயுமவ் வுருமறையக் கண்டிடுவேட்கையால்
காணும்"ஐம்" மென்ற மந்த்ரம்
கருத்திலேநிறுத்தியே, கண்டுமெய் மகிழ்கொண்டு
கமல பதம் போற்றிநிற்க,
நீயுமுன் னருள்தந்து நிகரிலாவல்லமை
நிலேபாகத் தந்தவுமையே !
நிலேயாக வென்னெஞ்சம் என்றென்றும் நிற்கவே
நேர்வந்து முன்னிற்கவே
பாயுமான் கொள்கையன், பாலனின் சிடன்தன்
பாகமுறை சிவகாமியே !
பணிவோடு மனதினிலே அடியவர் துயர்தீர்க்கும்
பதிதில்லே யுறைதேவியே !!

12. திருநந்தி திருமூலர் முதலான சித்தர்கள்
"கிம்"மென்ற மந்திரத்தை
திருநாவில் தினங்கொண்டு திகழட்ட சித்திகளேத்
தெளிந்தனர் தேவியுன்னுல்,
திருமுனிவர் பல்லோரும்திகழ்கின்ற 'ஸௌம்மெனும்"
திருமந்த்ர வன்மைதன்னுல்,
தேவேந்த்ரன் நிகரான "சாயுச்ய" வாழ்க்கையும்
ஜீவதசை யுள்ளமட்டும்

பரசிவனின் நினைவதாய் வாழ்வாங்கு வாழ்ந்தபின்
பதஞ்சேர்த்துக் கொண்டதேவி !
பிரமனது புத்திரர் "சனகர்"முதல் நால்வரும்
"மம்"மந்த்ர வைபவத்தால்
பிரமரந் தரமதில் இதழாயிரங்கொண்ட
பதுமபீ டகந்தன்னிலே
பேருருவில் காட்டிய பெரும்பற்றப் புலியூரில்
பெருமையுடன் உறைதேவியே !

13. நூருண்டு முன்னதாய் நுணுக்கமாய்ச்சில பணிகள்
நாட்டுக்கோட் டைநகரத்தார்
முறைமையாய்ச்செய்தனர் ஆயினும் திருச்சுற்று
மாளிகையைச் செப்பனிடச்
சீராரும் தில்லைவாழந்தணர்கள் ஊக்கவே
திருநிறை செல்வராலே
திகழோவி,யத்துடன் திருப்பணிகள் யாவுமே
சிறப்புடன் நடக்குதின்று
"பாரோதுவி ரோதிகிருது தைத்திங்கள் இருபான்
மூன்ருகின்ற வாதிவாரம்
சுவாதிபுணர் சுபதினம் கும்பநல் லோரையில்
கும்பாபி ஷேகமாக"
பாரோரே வாரீரே பேரோடு வாழ்வீரே
பரமனருள் சிவகாமியாள்
பாதத்தை வேண்டியே பலமுறைப்பாடியே
பணிபலவும் செய்யவாரீர்.

—— —

# அன்னையின் அருள்

அருட்செல்வன்
திரு. சி. சிவராஜ தீக்ஷிதர்

சிவந்த திருமேனியும் முழுமதி யன்னமலர்ந்த திருமுகமும், இந்திர நீலக்கல் போன்று ஒளி பொருந்திய மூன்று கயல்விழிகளும், அன்பர்களுக்கு அருளைவாரி வழங்கும் நான்கு திருக்கரங்களும், வெண்சங்கு ஒத்த கழுத்தும், முல்லைக்கொடி போன்ற மெல்லிய இடையும், தேவாதி தேவர் பலரும் வணங்க அவர் முடிபட்டு சிவந்தனவும், அன்று அலர்ந்த செந்தாமரையினும் மென்மையானவையும் ஆகிய பாதார விந்தங்களும் உடைய அழகின் இருப்பிடமாம் அன்னை சிவகாம சுந்தரியின் அருள் திறம் ஆயிரம் நா படைத்த ஆதி சேஷனும் வர்ணித்துச் சொல்லி முடிவுறாதது.

அகில உலகங்களையும் படைத்து அதில் கோடான கோடி ஜீவராசிகளையும் தன்னிச்சைபோல் சிருஷ்டித்துத் தன் அருள்பார்வை ஒன்றாலேயே அவைகளைக் காத்து மேலும் அவ்வான்மாக்கள் விரும்பி வேண்டினவை எல்லாவற்றையும் கொடுத்து அனுபவிக்கச் செய்து முடிவில் தன்னிடத்திலேயே அவைகளைஒடுக்கி எல்லாவற்றிற்கும் மூல காரணமாய் ஏகசக்ராதிபதியாய் ராஜ ராஜேஸ்வரியாய் விளங்குகிறாள் என்பதைத் தேவி மஹாத்மீயம் போன்ற புராண நூல்கள் அறிவுறுத்துகின்றன.

இசைத் தமிழ்ச் செல்வராகிய ஞான சம்பந்தப் பெருமானுக்குத் தனது திருமுலைப்பால் வழங்கி அவருக்கு ஞானத்தமிழ் கொடுத்ததும் அவர் இசையில் மகிழ்ந்து சிவபெருமான் கொடுத்த பொற்றாளத்திற்கு ஓசை நயம் கொடுத்துச் சிறப்பித்ததும், குமர குருபர சுவாமிகளுக்கு முத்து மாலை கொடுத்துச் சிறப்புறச் செய்ததும் பின்னும் மகாகவி காளிதாஸன், கவி காளமேகம், கவிச்சக்கரவர்த்தி கம்பன் இவர்களைப் பாரோர் புகழ வாழச்செய்ததும் அன்னையின் திருவருள் என்றால் மிகையாகாது. குமர குருபர சுவாமிகள் தாமியற்றிய சிவகாமியம்மை இரட்டை மணிமாலையிலும் மீனாக்ஷியம்மைபிள்ளைத் தமிழிலும் மிக மிக அழகாகவும், சிறப்பாகவும் அன்னையின் அருள் உள்ளத்தைப் பற்றி விரிவாக அருளியிருக்கிறார்.

ஆதி சங்கராரும் தன்னை அண்டிப் பூஜிக்கும் அன்பர்களுக்குத் தேவி பராசக்தி அமுதம் போன்ற தமது அன்பு மொழியாலும், தன்னை வணங்கும் பக்தர்களுக்குத் தேவேந்திர பதவியினும் மேலான பதவியின்

மனத்தாலும், இன்னும் நீராகவும், நெருப்பாகவும், காற்ருகவும், ஒலி, ஒளிகளாகவும் ஜீவராசிகளுக்கு உதவும் எல்லாப் பொருள்களாகவும் தானே இருந்து உலகு அனைத்தையும் காத்து அருள்கின்ருள் என்பதை "ச்யாமளா தண்டகம்" முதலிய வடமொழித் தோத்திரங்களில் நவின்றிருக்கிருர்.

மேலும் உலக மாதாவான அன்னை குளத்திலுள்ள பாசிகளாகிய குற்றத்தை மீன்கள் எப்படி யாருமறியாது போக்குமோ அப்படி ஆன்மாக்களின் அஞ்ஞானமாகிய இருளை நீக்க ஞானத்தை வழங்குகின்ருள் என்றும் தாயானவள் தன் குழந்தைகளின் பிணி போக்கத்தான் மருந்து முதலியவைகள் உண்டு அவைகளின் சத்துக்களைத் தனது தாய்ப்பால் மூலம் குழந்தைகளுக்கு ஊட்டுகின்ருளோ அது போல் நமது பிறவிப் பிணியை ஒழிக்கப் பெறுவதற்கரிய சிவபெருமானின் சிவானந்தப் பெருவெள்ளமாகிய ஞானமிருத தேனைத் தாம் பருகி அதன் பலனும் பேரின்ப முக்தியை மிக மிகச் சுலபமாகத் தன்னை வந்து தெரிசித்து மாத்திரத்திலேயே தன் அருள் பார்வையால் பக்தகோடிகளுக்கு வழங்குகிருள் என்றும், பக்திமான்களின் வேண்டுகோளைத் தானே யறிந்து அவரவர்களின் தகுதிக்கேற்ப அவ்வப் பொழுது வழங்குகிருள் என்றும் மிகமிக அழகாகத் தெளிவாக உரைத்து அருளி இருக்கிருர்.

தேவியின் திருநாமங்களில் ஒன்றே எவனொருவன் சொல்லுகின்ருனே அவனது சகல பாபங்களும் விலகி நற்கதி அடைகின்ருன் என்றும், சக்தி இன்றேல் சிவன் இல்லை சக்தியின் சேர்க்கையாலேயே உலக இயக்கம் செவ்வனே நடைபெறுகிறது என்றும் லலிதா ஸஹஸ்ரநாமத்தில் தேவியின் முக்யத்துவத்தை மஹான்கள் சொல்லியிருக்கிருர்கள். இன்னும் தேவியின் திருவருட்பெருமை ப்ரம்மாண்ட புராணத்தில் லலிதோபக்யானத்திலும், திருபுரோபநிஷத் "பாவனே பரிஷத்" தேவீ மஹாத்மீயம், தேவீபராக்ரமம் முதலிய நூல்களில் மிக விளக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றது.

'தாயிற் சிறந்ததோர் தெய்வமில்லை' என்றபடி எல்லா வல்லமைகளும் படைத்த சர்வலோக மாதாவான சிவகாமசுந்தரி பொன்னர் திருப்பாதங்களை என்றும் எப்பொழுதும் நாம் அனைவரும் வழிபட்டு அவள் அருளால் நீடுழி வாழ்ந்து உய்வோமாக.



உ
அம்மைதுணை.

வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் அருளிய

# சிதம்பரம் சிவகாமசுந்தரி யம்மை
# பஞ்சரத்தினம்.

(ஐவித யாப்பு பாமாலை)

திரு. வா. ச. சுந்தரேசம் பிள்ளை.

பஞ்சரத்தினம் என்பது ஐந்துவித மணிகளாகும். ஐந்துவித மணிகள் போல ஐந்துவித யாப்புக்களால் ஆகியதால் இது பஞ்சரத்தினம் எனப் பெயர்பெற்றது. இதனை யருளியவர், மகான், வண்ணச்சரபம், புலவரேறு, திருப்புகழ் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என்று கூறப்பெறும் அருள் மிகு. தண்டபாணி சுவாமிகளாவார்கள்.

இந்த சுவாமிகள் 19ஆம் நூற்றூண்டில், தவத்திரு. ஆறுமுக நாவலர், வடலூர் வள்ளலார் முதலானோர் காலத்தவர். இவர் திருநெல்வேலியில் சைவ வேளாளர் மரபில் தோன்றியவர். திரு அருணகிரிநாதர் போல திருமலையிலிருந்து கீழே விழுந்து முருகனருள் பெற்றவர். அது முதல் கவிபாடும் திறம்பெற்று ஐம்பதாயிரம் கவிகட்கு மேல் அருளியவர். அதனைத் தம் கரத்தாலேயே சர்வசாதாரணி என்னும் எழுத்தாணியால் பனையேட்டில் அழகுற எழுதியும் வைத்துள்ளார்.

தில்லைத் திருவாயிரம். தில்லைபாதி நெல்லைபாதி, பாண்டிய நாயகம் முருகன் பிள்ளைத் தமிழ், துணைகத்துறை குகன்பதிகம், சிவகாமசுந்தரி பஞ்சரத்தினம் முதலியன தில்லையைப் பற்றி இவர் அருளிய நூல்களாகும். புலவர் புராணம், தமிழலங்காரம் முதலிய ஐம்பதுக்கு மேற்பட்ட தமிழ் நூல்கள் அருளியுள்ளார். பல தலங்கட்கும் பதிகங்கள் பாடியுள்ளார்.

இவரது சிவகாமசுந்தரி பஞ்சரத்தின நூலை இவர் ஞான சமாதி கொண்டருளிய திருவாமாத்தூர் நூல் நிலையப் பனையேட்டிலிருந்து எழுதி யுதவியவர் ஷை சுவாமிகளின் பெயரரின் திருமகனர் வித்துவான் திரு. தி. மு. சங்கரலிங்கனாராவார்கள். இவரது தந்தையார் தவத்திரு. முருகதாசையா அவர்கள் இப்பஞ்சரத்தினப் பாடல்கட்கு அழகிய உரை விளக்கமும் எழுதி யுதவி யுள்ளார்கள்.

இந்நூல் எண்குணமும், எட்டுருவும், ஐந்தொழிலும் உடைய ஸ்ரீ நடராஜப் பெருமான் உடனுறையும் அம்பிகைக்கு காப்பு-1. நூற்பா-1. பஞ்சரத்தினம்-5. நூற்பயன்-1. ஆக எட்டுப்பாடல்களுடன் திகழ்கிறது.

இது தொழுது தோத்தரிப்பதற்கு ஏற்றதாகவுள்ளது. எளிய தமிழாலும், அரிய கருத்தாலும் மிளிரும் இந்நூலைச் சைவ உலகம் போற்றிப் பயன்படுத்தி எண்ணியதனைத் தும் எய்திவாழுமாக.

வாழ்க சிவகாமசுந்தரி மலரடி !
வளர்க வண்ணச் சரபம் வண்டமிழ் நூல்கள் !!

### காப்பு வெண்பா

செஞ்சதங்கைப் பூந்தாட் சிவகாமி தில்லையினிற்
பஞ்சரத்தி னப்பாடல் பாடுதற்குக் — குஞ்சரமும்
பூதமும்போல் மேனிகொண்ட புண்ணியனைப்
போர்வேற்கை
நாதனைக்கை கூப்புகின்றேன் நான்.

### நூல் வெண்பா

திங்கள் அணிந்தாடும் தில்லைப் பிரானருகில்
தங்கும் சிவகாமித் தாயாரே — எங்கள்மனக்
கோதகற்றி நல்ல குணம்பொருந்தச் செய்துனது
பாதநிழற் கீழமையப் பார்.

### கட்டளைக் கலித்துறை.

1. பார்புகழ் தில்லைப் பதியான் திருநடம் பார்த்துமகிழ்
சீர்புனை கின்ற சிவகாமி அம்மைதன் சேவடியில்
தார்புரை நெஞ்சந் தனைச்சூடும் உண்மைத்
தவமுயல
வார்புணர் கொங்கை மடவார்தம் மோக வலை
யில்லையே

### கட்டளைக் கலிப்பா.

2. இல்லை யென்று தலைவாசல் தோறும் நின் (று)
ஏற்று வாடும் எளியேற்கும் இன்றமிழ்ச்
சொல்லை நின்றிருத் தாட்கணி யாமெனச்
சூட்டி அன்பிற் றொழும்சீர்தந் தாள்வையோ

வல்லை வென்ற முலைப்பாலில் ஞானமும்
வைத்தி ருக்கும் மரகதப் பாவையே
தில்லை நம்பனும் தெண்டனிட் டேத்துமெய்த்
தெய்வ மான சிவகாம வல்லியே.

### இரட்டை யாசிரிய விருத்தம்.

3. காமன்தொ டுத்தகணை வந்துவந் துள்ளம்
கலங்கிடப் பொருவதாலும்
கல்வியறி வில்லாத புல்லரும் இகழ்ந்திடக்
கலிநோய் மிகுப்பதாலும்
தாமத குணக்கயவர் பன்னெறிச் சமயம்
தழைக்கின்ற தாலும்நொந்து
தடுமாறும் என்னையும் உனக்காக மெய்யன்பர்
தம்மோ டிருக்கவைப் பாய்
கோமளவி னோதநய சீலத் தமிழ்க்கவி
கொழிப்பவர்க் கினிய துணையே
குஞ்சர முகத்தவனைக் கந்தனைப் பெற்றெழில்
குவலயங் காத்த குயிலே
தேமலர்ப் பொழில்மருவு தில்லைநட ராயனது
சிந்தைக் கிசைந்த மயிலே
திருவருட் கடலனைய சிவகாமி யேஅமரர்
தெய்வமென நின்ற பரையே.

### நிலைமண்டில ஆசிரியப்பா.

4. பரமதத் திமிரம் படலம் போக்கிக்
கரவில்மெய் ஞானக் களிக்கடல் விளைக்கும்
மெய்ந்நெறி யனைத்தும் விரிதர விளக்கிச்
செந்நெறிப் புலமைத் திறல்மிகப் பெருக்கித்
தொண்டர்தம் குழுவில் துகளறும் பணிபுரிந்(து)
அண்டரும் பெறுதற்கு அரியவீ டடைந்து
பிறப்புறு இன்பம் பெறும்பயன் புரிவான்
மறப்புறு உரிமை வரும்படி ஒளிரும்

பைம்புனற் பொன்னி படர்தரு சோணாட்(டு)
ஐம்புலச் சீற்றம் அகன்றோர் மலியும்
தில்லைமா நகரின் செம்பொன்அம் பலத்திற்
குல்லையங் கானிற் குலவுசீர்ப் பெருமான்
திருநடங் கண்டு சிந்தைமிக் களிகூர்ந்(து)
அருள்நலந் தோன்ற அறமெலாம் வளர்த்து
நெகிழ்மனத் தன்பர்முன் நின்று
மகிழ்சிவ காமி வதனம் திங்களே.

நூற் பயன் — வெண்பா

5. வஞ்சருருத் தில்லைநகர் வாழும் சிவகாமி
பஞ்சரத்தி னத்தைப் படிப்போர்க்குச் — சஞ்
சலங்கள்
எல்லாம் தவிரும் இன்பநலம் கைகூடும்
பொல்லாங் கணைத்தும்விட்டுப் போம்

# ஐந்தெழுத்தின் புணை

சைவ சித்தாந்தப் புலவர்
**வித்துவான். திரு. கு. திருநாவுக்கரசு**

ஐந்தெழுத்தென்பது சைவர்களுக் குரிய மந்திரமாகும். ஒவ்வொரு சமயத்தார்க்கும் ஒவ்வொரு மந்திர முண்டு. அவை அக்கடவுளரை வழி படும் மந்திரங்களாகும். இவ் வைந் தெழுத்து ஓதும் வகையால் தூலம் சூக்குமம், அதிசூக்குமம், மகா காரணம் எனப் பல வகைப்படும். இதனை அவரவர்களின் பக்குவத்திற் கும் தகுதிக்கும் ஏற்ப ஞானசிரியர் பால் கேட்டுச் சிந்தித்துப் பயன்பெறு தல் வேண்டும். "உரு ஏறத் திரு ஏறும்" என்பது பழமொழி.

பிறவியாகிய கடலில் வீழ்ந்து கரை காணுது துன்புறும் மக்களைக் கரை ஏற்றத் தெப்பமாக உதவுவது இத் திருவைந்தெழுத்தேயாம். இதனையே தெய்வப்புலவர் திருவள்ளுவர் திரு வடி என்று கூறியுள்ளார்—

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடிசேரா தார்"

இக்கருத்தையே மாணிக்கவாசகர் தாம் பிறவி என்னும் பெருங்கடலில் வீழ்ந்து, துன்பமென்னும் பேரலை யாலும் இன்பம் என்னும் சிற்றலை யாலும் அலைக்கப்பட்டு, பற்றுக் கோடின்றிப் பெண்ணுசை என்னும் பெருங் காற்ருல் கலக்கப்பெற்று, ஆசை எனும் சுரு மீன் பற்ற வரும் போது, இத்துன்பங்களினின்றும் பிழைக்கும் வழி யாதெனக் கலங்கிக் கொண்டிருக்குங்கால் "திருவைந் தெழுத்து" எனும் தெப்பம் தமக்குக் கிடைக்க, அதனை விடாது பற்றிக் கொண்டதும், முன்னர்த் துன்புறுத் திய பெருங்காற்றும் பேரலையும் ஆகிய வற்றை அடக்கிப் பேரின்பமாகிய முத்தி என்னுங்கரையைச் சேர்த்தது என்கிருர்.

"தனியனேன் பெரும் பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்ரென் றின்றிக்
கனியை நேர் துவர் வாயார் என்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினி என்னே உய்யுமா றென்றென் றெண்ணி
ஐந்தெழுத்தின் புணை பிடித்துக் கிடக்கின்றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லற்
கரை காட்டி யாட்கொண்டாய் மூர்க்கனேற்கே"

பட்டினத்துப் பிள்ளையார் திரு விடைமருதூர் மும்மணிக் கோவை

யில், மனமாகிய காட்டில், தோன்றி வளர்ந்துள்ள வஞ்சனை என்னும் மரக் கட்டைகளை வேரோடு பறித்தெறிந்து, மூடி, அன்பெனும் பாத்தி கோலி, உண்மை என்னும் எருவிட்டு, பத்தி என்னும் விதை ஊன்றி, ஆர்வம் என்னும் தண்ணீர் பாய்ச்சி, பொறுமை என்னும் வேலியிட்டு, ஞானமென்னும் முளை தோன்றி, கருணைத் தளிர் காட்டி, காமக் குரோதாதி களைகளைப் பிடுங்கி, மெய்ம்மயிர்ப்புளகம் தோன்றி, கண்ணீர் அரும்பி, ஐந்தெழுத்தென் னுங்காய் தோன்றி, அது கனியாகி அதையுண்டு வாழ்கின்றனர் மெய்ஞ் ஞானிகள் என்று குறிப்பிடுகின்ருர். (11–ஆம் திருமுறை திருவிடை மருதூர் மும்மணிக்கோவை பாட்டு 10) திருஞானசம்பந்தரும்.

“காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது„ என்ருர்.

பட்டினத்துப் பிள்ளையாரே அந் நூல் 19-ம் பாடலில் “இவ்வுலகில் அனைத்து இன்பங்களும் ஆரத்துய்த் தும், மனைவி மக்களோடு வாழ்ந்தும்” மந்திர எழுத்தைந்தும் வாயிடை மறவாது, சிந்தை நின்வழி செலுத்த லின், அந்த முத்தியும் இழந்திலம் முதல்வ” என்றும், அதே பாடலில் ‘ஒரு கல்லை வல்லவன் எறிந்தாலும், மெலியவன் எறிந்தாலும்; அக்கல் நிலத்தில் தவருது விழுதலைப்போல உன் திருஐந்தெழுத்தைச் சொன் னேர் யாவரும் தவருது முத்தியடை வர்’ என்றும் கூறுகிருர்.

‘‘வல்லா னொருவன் கைம்முயன் றெறியினும்
மாட்டா ஒருவன் வாளா எறியினும்
நிலத்தின் வழாஅக் கல்லே போல
நலத்தின் வழார்நின் நாமம் நவின்ருேரே”

“படைக்கலமாக நின் நாமத் தெழுத் தைந்தும் என் நாவிற்கொண்டேன்” என்கிருர் அப்பர்.

உலகியலில் வாழும் மக்கள் குய வன் வீட்டிலுள்ள சுடப்பெருத மண் பானையை ஒப்பர். அது சிறிது தண் ணீர் படினும் அழிந்துபோம் அது போல உலக ஆசைகளால் துன்புறு வர்.

அம்மண்பானையைத் தீயிலிட்டுச் சுட்டுவிட்டால் தண்ணீரிலேயே கிடக்கலாம் அழியாது, அதுபோல் அம்மக்களே திருவைந்தெழுத்தை இடையருது சிந்திப்பராயின் உலகி யல் வாழ்வில் சிறிதுமே தவறமாட் டார்கள். ‘‘விதியையும் மதியால் வெல்லலாம்” என்பது பழமொழி. பொதுநெறியை அறிவுறுத்து வந்த ஔவையாரும்

“சிவாயநம என்று சிந்தித் திருப்பார்க்கு
அபாய மொருநாளு மில்லை — உபாயம்
இதுவே மதியாகும் மற்றல்லாத எல்லாம்
விதியே மதியாய் விடும்.”

என்று கூறுகின்ருர். எல்லாத் தீவினை களையும் நீக்கவல்லது திருவைந் தெழுத்து எனும் இவ்வுண்மையினை

‘‘விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை ஒன்றும் இல்லையாம்

பண்ணிய உலகினிற் பயின்ற
பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி
வாயவே."

என்ற திருப்பாடலால் திருநாவுக்கரசர் அறிவுறுத்தியுள்ளார். இக்கருத்துக்களை எல்லாம் அடக்கித் திருவைந்தெழுத்தின் பெருமையினை

"நமச்சிவாயவே ஞானமும்
கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின்
றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி
காட்டுமே
(திருநாவுக்கரசர்)

சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவருமாவர்
சிவசிவ என்றிடச் சிவகதி தானே
(திருமூலர் திருமந்திரம்)

என ஆன்றேர் கூறுவதால் உணரலாம்.

எனவே மக்களாய்ப் பிறந்த நாம் அனைவரும் வினைப் போகமாய இவ்வாழ்வில் நாளும் ஐந்தெழுத்தோதி அரனை வழி பட்டு, அல்லலை அகற்றி வையத்துள் வாழ்வாங்கு வாழந்து, பேரின்பப் பெருவாழ்வையும் பெறுவோமாக.

# அம்மை காட்டும் அருமைத் திருவுரு

ஞானமணி, ஞானத்தமிழாகரர்
**வித்துவான், வை. இரத்தினசபாபதி,** எம்.ஏ., பி.ஓ.எல்.,

முன்னுரை :

தமிழ்கூறும் நல்லுலகம் எனப் பெறும் சைவ நன்னெறிச் சார்புடைய மக்கள் உலகில் அம்மை என்ற வழக்கு காரைக்காலம்மையாரையே குறிக்கும். "இவள் நம்மைப் பேணும் அம்மை காண்" என்றும், மூன்று முறை 'அம்மையே' என்றும் திருக் கயிலையில் இறைவனால் அழைத்தரு ளப்பெற்ற பேறுடைய நம் அம்மை பாடிய பதிகங்களுள் 'அற்புதத் திரு வந்தாதி'யும் ஒன்று. தேவார ஆசிரி யர்களுக்குப் பற்பல வகையான கருத் துக்களையும் நெறிகளையும் முன்னேடி யாக நின்று எடுத்துக்காட்டிப் பதிகங் கள் பாடி, சைவமாம் திருவினை அனை வரும் பெறுமாறு எடுத்து வழங்கிய வகையாலும் 'அம்மை' எனப் போற் றப்பெறும் தகுதிபெற்றவர் காரைக்கா லம்மையார் ஆவர்.

காரைக்காலம்மையார் அற்புதத் திருவந்தாதியில் இறைவனுடைய திருவுருவச் சிறப்புக்களை, திருவுருவ அமைப்புக்களை விரிவாகவும் தெளி வாகவும் எடுத்துக் கூறியுள்ளார். அவர்களால் சிறப்பித்துப் பேசப் பெறும் திருவுருவ அமைப்பு ஒன்றை எடுத்து நோக்குவதே இக்கட்டுரை யின் குறிக்கோள்.

காலச்சூழ்நிலை :

அம்மையார் காலத்தில் சிவபெரு மான் உயிர்கள்மேல் வைத்த அருள் காரணமாக ஏற்கும் திருவுருவங் களின் பண்பையும்; அவ்விறைவன் பிச்சைக்காக ஊர் திரிதல் போன்ற செயல்களைச் செய்வதன் உள்ளீட்டை யும் உணர்ந்து பார்க்காமல் பற்பல வாறுஇகழ்ந்து பேசுவோர் இருந்தனர் என்பதை அம்மையார் திருவாக்குக் களினலேயே அறிகிறோம்.

" இவரைப் பொருள் உணர
மாட்டாதார் எல்லாம்
இவரை இகழ்வதே கண்டீர் "
—அற்புதத் திருவந்தாதி 29.

சிவன் பிச்சைக்காகத் திரியும் செயலை வானோர்கள் தடுக்கவில்லை என்றாலும் யாம் அவனைக் காணின் தடுப்போம் என்றுகூடக் கூறுகிறார் கள்,

நீ வணங்கும் இறைவனின் திருவுரு எது? என்று நேர் நின்று கேட்பவர் களும் அம்மையார் காலத்தில் இருந் தார்கள். அதனலே அம்மையாருக்கு

அன்றும் திருவுருவம்
காணதே ஆட்பட்டேன்
இன்றும் திருவுருவம்
காண்கிலேன்—என்றுந்தான்

எவ்வுருவோ நும்பிரான்?
என்பார்கட்கு என்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவம் ஏது?
—அற்புதத்திருவந்தாதி 61.

என்று பாடும் சூழ்நிலை உண்டாயிற்றுப்போலும்.

எனவே அமையார் காலத்துச் சூழ்நிலையானது சிவமுதற் பழம்பொருளை—அதன் அருட்செயலை அனைத்துச் சமயத்தவர்களும் ஒட்டியும் வெட்டியும் பேசிவரும் கருத்துக்கள் நிறைந்த சந்தையொன்றை உருவாக்கி விட்டிடிருப்பதை நாம் அறிய முடிகிறது.

இனி, அம்மையார் அற்புதத் திருவந்தாதியைப் பாடியருளிய சூழ்நிலை எது? என்பதையும் ஓரளவு அறிஞர்கள் விளங்கியுள்ளார்கள். அம்மையார் பேயுடர்பு பெற்று, திருக்கயிலைக்கு எழுந்தருளும்போது முதன் முதற் பாடிய நூல் 'அற்புதத் திருவந்தாதி'

"உற்பவித் தெழுந்த ஞானத்து
ஒருமையின் உமைகோன் தன்னை
அற்புதத் திருவந்தாதி
அப்பொழுது அருளிச் செய்வார்"

என்றார் சேக்கிழாரடிகள், பேய்வடிவம் பெற்ற அம்மையார் தாம் ஆட்கொள்ளப்பெற்ற அந்தக்காலத்திலும் பேயுருவம் பெற்றுவிட்ட இன்றும் இறைவன் திருவுருவத்தைக் காணவில்லை என்று கூறுகிறார்.

[செய்யுள்-61]

பின்னர், திருக்கயிலையில் இறைவன் திருவுருவத்தை நேர் நின்று காணும் பேற்றைப் பெற்றார்கள் என்பது ஒருபுறம் இருக்க அம்மையார் தொடக்க காலமுதலே அருவ வழிபாட்டையே மேற்கொண்டிருந்தார்கள் என்று கூறுவதற்கும் அற்புதத் திருவந்தாதி இடந்தரவில்லை.

**அகமும் புறமும் :**

அம்மையார் தம் திருவுள்ளத்தில் இறைவனை ஒரு மின்னற் கீற்று போன்ற ஒளி வடிவினனாக அமைத்து அகப்பூசை செய்து, பின்னர் அவ்வடிவையே புறத்தும் காணும் பெற்றியுடையவராக இருந்தார்கள் என்று கூறுவது சான்றோர் மரபு. இறைவனைக் கண்ணும், தோளும் முதலிய உறுக்கள் அமையக் கண்டு போற்றும் நிலை இல்லாமல் ஒளிவடிவினனாக அகத்தே கண்டு, பின்னர்ப் புறத்தே அமைத்துக் கண்டார்கள் என்று விளக்கம் கூறுவர். அம்மையார் தம் திருவுள்ளத்தில் இறைவனைச் சுடர் உருவாய் மின்னும் சுடர்உரு வாய்-தோன்றி நெடிது நில்லாது உடன் மறையும் சுடர் உருவாய்க் கண்டார்கள்; வழிபட்டார்கள் என்பதைப் பின் வரும் அற்புதத் திருவந்தாதியால் அறியலாம்.

"இதுவன்றே ஈசன் திருவுருவம் ஆமாறு
இதுவன்றே என்றனுக்கோர், சேமம் - இதுவன்றே
மின்னும் சுடர் உறுவாய் மீண்டாய் என் சித்தனைக்கே
இன்னும் சுழல்கின்றது இங்கு"
செய்யுள் - 24

இச்செய்யுளில் மின்னல் போன்ற சுடர் உருவில் தோன்றி மறையும் உருவத்தை ஈசன் திருவுருவம் என்றும், அதுவே தனக்குச் சேமம் ஆவது

என்றும் கொள்ளுகின்ற அம்மையார் என் சிந்தனையில் அவ்வுருவம் இன்னும் சுழன்றுகொண்டே இருக்கிறது என்று கூறுவதால் இச்செய்யுள் புறத்தே கண்ட காட்சி என்பதை விட அகத்தே கண்ட காட்சி என்று கொள்ளுவதே சிறப்புடையதாகும். ஆயின் அம்மையார், இவ்வுருவைப் புறத்தே கண்டது எவ்வாறு ?

அம்மையார் 41-ஆம் செய்யுளில் தம் புறக்காட்சி அனுபவத்தை விளக்கியருளுகின்றார்கள். அம்மையார் கண்டதாக நமக்குக் காட்டும் அத் திருவுருவ அமைப்பை இப்போது நாம் எந்தக் கோயிலிலும் காண இயவில்லை. சிவனின் மூர்த்தி பேதங்களிலும் இத்தகைய உருவ அமைப்பைக் காண இயலவில்லை.

ஒரு பக்கம் திருமால், ஏனைப் பக்கம் உமையம்மை, இவ்வாறு பாதிப்பாகம் திருமாலாக, பாதிப்பாகம் உமையாகக் கொள்ளும் திருவுருவ அமைப்பை அம்மையார் குறித்தருளுகின்றார்கள். பாதிப் பெண்ணும் பாதி ஆணுமாக இருப்பது அர்த்தநாரீசுவர மூர்த்தம் உமையின் பாகம் திருமாலாக ஏனைப் பாகம் சிவனாக அமைந்த மூர்த்தம் ஒன்று உண்டு அது சங்கரநாராயணர் என்றும் கேசவார்த்தம் என்றும் கூறப்பெறும் மூர்த்தம். திருமாலே சிவனின் தேவியாக அமைகிறார் என்ற தத்துவத்தை விளக்கும் மூர்த்தம்.

"அரியலால் தேவியில்லை
ஐயன் ஐயாறனார்க்கே"

என்று முழங்குவார் அப்பமூர்த்தியடிகள்.

இத்தகைய இருவகை உருவ அமைப்பையும் கொள்ளாமல் ஒரு பால் உமை, ஏனைப்பால் திருமால் ஆக இருபக்கமும் அமைந்துவிடுகின்றன என்றருளுகின்றார்கள்.

"ஒருபால் உலகளந்த மாலவனும்
மற்றை
ஒருபால் உமையவளாம் என்றால்-
இருபாலும்
நின்னுருவ மாக நிறம் தெரிய
மாட்டேமால்"

என்பது அற்புதத் திருவந்தாதி. இக் கருத்தை மேலும் அம்மையார்

"பண்புணர மாட்டேன் நான்
நீயே பணித்துக் காண்
கண்புணரும் நெற்றிக் கரைக்
கண்டா . பெண்புணரும்
அவ்வுருவோ மாலுருவோ
ஆனேற்றாய் ! நீறணிவது
எவவுருவோ நின்னுருவமேல்"

என்ற 59 ஆம் செய்யுளில் திருநீறணிவது எப்பக்கத்தில் என்று கேட்கும் முறையில் இவ்வுருவ அமைப்பை விளக்குகின்றார்கள்.

உமை வடிவத்தையும், திருமால் வடிவத்தையும் பெருமான் ஏற்றுக் கொண்டான். உமை வடிவமும், திருமால் வடிவமும் தங்கும் வடிவங்களேயன்றித் தாங்கும் வடிவம் ஆகா. தாரகமாய் நின்று தாங்கும் பரம் பொருள் இவ்விரு உருவங்களையும் இணைத்துக் காட்டி நின்றாலும், அடிப்படையாய் நின்றுதாங்கும் தன்னையும் மின்னுக் கீற்று ஒளிபோலக் காட்டி நின்றது என்பதையே அம்மையார் குறிப்பிடுகின்றார்கள்.

செய்யுள் 41ல் இறுதிவரி "நின்னுருவோ மின்னுருவோ நேர்ந்து" என

முடிகிறது. 'நின்னுருவோ மின்னுருவோ நேர்ந்து' என்ற தொடருக்கு நின்னுருவத்தைப் பொருந்தி மறைத்தது மின்னற்கொடி போன்ற உமையம்மையின் திருவுருவோ, திருமாலின் திருவுருவோ என்றுகேட்டதாக உரை கூறப்பெறுகிறது ஆயினும் அம்மையின் திருவாக்குக்கள் அவ்வுரைக்கு ஏற்றாற் போல் அமையப் பெறவில்லை.

"…. … … … … …. … இருபாலும்
நின்னுருவமாக நிறம் தெரிய
மாட்டா மால்
நின்னுருவோ மின்னுருவோ
நேர்ந்து

என்ற இறுதி இரண்டு வரிகளில், நின்னுருவமாக நிறம் தெரியமாட்டாம் என நிறுத்தி, மால் நின்னுருவோ மின் (உமை) நின் உருவோ தெரியவில்லை என்று விளக்கம் கூறப் பெறுகிறது. இரண்டு பக்கங்களிலும் இரண்டு திருவுருவ அமைப்பு இருக்கும்போது இவற்றில் எது நின்னுருவம் என்று கேட்கும் கேள்விக்கே இடம் இல்லை. நின் உருவத்தை மறைத்தது திருமால் உருவமா? உமை உருவமா? என்று விளக்கங் கூறுவோமானால் செய்யுட் சொற்கள் அக்கருத்துக்கு ஏற்றவாறு அமையப் பெறவில்லை. இறுதிவரி "நின்னுருவோ மின்னுருவம் நேர்ந்து" எனப் பாட பேதமாகக் காணப்பெறுகிறது. எனவே ஒருபக்கம் உமையாக, ஏனைப் பக்கம் திருமாலாக இவ்விரண்டற்கும் இடையில் மின்னுக்கீற்றுப் போன்ற ஒளியுருவம் தோன்றித் திகழ அத்திருவுருவ அமைப்பையே அம்மையார் கண்டு போற்றியதாகக் கொள்ள வேண்டும் இரு உருவங்களுக்கும் இடையில் மின்னுக் கீற்றுப்போலத் தோன்றும் இவனின் திருவுருவ அமைப்போடு கூடிய திருவுருவமாக அது அமையப் பெறவில்லையெனில் அது சிவனின் திருவுருவ அமைப்பாகக் கூடக் கொள்ளக் கூடாமற் போய்விடும் திருமாலும், அவர் சக்தியும் இணைந்து நிற்கும் கோலமாகக் கொண்டால், அல்லது கொள்ள இடமேற்படவும் கூடும். எனவே சோமாஸ்கந்த மூர்த்தத்துள் சிவன் உமை, கந்தன் ஆகிய மூவரும் விளங்குமாப் போல, திருமால், உமை இருவருக்கும் மத்தியில் மின்னொளி வடிவில் சிவன் நின்ற திருவுருவ அமைப்பை அம்மையார் புறத்தே கண்டு வழிப்பட்டார்கள் எனக் கொள்ளுதல் செவ்விதாம்.

சிவன் அருவமாக, உருவமாக, அருவுருவமாக நின்ற நிலைகளை முறையே சிவதத்துவம், மகேசுவரத் தத்துவம், சாதாக்கியத் தத்துவம் (இலிங்கம்) எனச் சாத்திரம் விரித்துரைக்கும். இவற்றுள் மகேசுவரத் தத்துவத்தில் அமைந்த மூர்த்தி பேதங்கள் 25. அவை: சந்திரசேகரர், உமாமகேசர், இடபாரூடர், கல்யாணசுந்தரர், நடராசர், பிட்சாடனர், காலாரி, காமாரி திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்த்தநாரீசுரர், கிராத்ர, கங்காளர், சண்டேசானுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதானர், விக்கினேசுவரானுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசனர், தட்சிணாமூர்த்தி, இலிங்கோற்பவர். இவ்விருபத்தைந்து வகை மூர்த்தங்களுக்கும் வேறுபட்ட வகையில் அம்மையார் கண்ட திருவுருவ அமைப்பு அமைந்துள்ளது என்பதையும் கருதுதல் வேண்டும்.

இனி, அகப்பூசை முறையில்,— ஆறு ஆதாரங்களிலும் இறைவனை எழுந்தருளப் பண்ணிப் பூசிக்கும் வகையில் குண்டலினி சக்தி மூலாதாரத்திலிருந்து படிப்படியாக மேலேறி வரும்போது ஆக்ஞா சக்கரத்தில் அதிக நேரம் தாமதிக்காமல் மின்னற் கொடிபோல் காட்சியளித்து விரைவில் சஹஸ்ராரத்தை அடைகிறது என்று கொண்டு அம்மையார் மின்னொளியாக இறைவனை அமைத்து வழிபட்டார்கள் என்று கூறினாலும், அம்மையார் அவ்வொளி யுருவைப் புறத்தே கண்டு வழிபட்ட முறை ஒரு புதிய திருவுருவ அமைப்பை அடிப்படையாகக் கொண்டன என்பதாம்.

திருஞான சம்பந்தப் பெருமான் இதே திருவுருவ அமைப்பை எடுத்துக் கூறுகின்றார்கள்

"மாது ஒருபாலும் மால் ஒருபாலும்
மகிழ்கின்ற நாதன்"

என்பது தேவாரம். உமையை ஒரு பக்கத்திலும், திருமாலை மறு பக்கத்திலும் வைத்திருந்தபோதிலும் இடையில் சிவமுதற் பரம்பொருளின் உருவமும்வெளிப்படத் தோற்றுமாறு அமைந்துள்ளது என்பதே ஞானசம்தப் பெருமானின் உள்ளக் கிடக்கையாக அமைகிறது.

முடிப்புரை :

தத்துவச்சிந்தனையாளர்கள் சைவ நல்லுலகப் பெருமக்களுக்கு வடித்தெடுத்துக் காட்டியுள்ள திருவுருவத் திருமேனிகளுக்கு அப்பாற்பட்ட வகையில் ஒரு புதிய திருவுருவ அமைப்பை — உமையும் திருமாலும் இரு பக்கமாக இடையிற் சிவன் மின்னற் கீற்று வடிவாக அமைந்துள திருவுருவ அமைப்பை அம்மையாரவர்கள் அகத்திலும் புறத்திலும் கண்டு வழிபட்டதோடன்றி, நமக்கும் காட்டிச் சென்றார்கள் என்பதாம். மேலும் உமையின் உருவே திருமாலாக அமைக்கப் பெறுகிறது என்ற கருத்துக்கும் அப்பாலாக, உமையும் திருமாலும் தனித்தனியே நிற்க, இடையில் இணைக்கும் மின்னுருவமாக அது விளங்கியது எனவும் அம்மையார், காட்டியருளினார்கள். இப்புதிய திருவுருவ அமைப்பில் திருமேனி அமைக்கப் பெறில் அது 'அம்மை காட்டிய அருமைத் திருவுரு" எனக் கொண்டு போற்றுவோமாக.



# அஞ்சுவது யாதொன்றுமில்லை!

சிற்பி. பாலசுப்பிரமணியம், எம்.ஏ.,

மண்ணும் தழலாகி வானும் புகையாகும் கொடிய காட்சி அது. மழைத் துளிகள் அந்தரத்தே வெந்துபோகும் கோடை வெம்மையின் கொலு மண்டபமாய்க் கிடந்தது மண். ஆறுகள் நீருயின ; குளங்கள் சேருயின ; ஓடைகளும் வாய்க்கால்களும் தண்ணீர் ஓடிய தழும்புகளாய்க் கிடந்தன. பச்சை வயல்வெளிகள் கனவுகளாய், பனி குலுங்கும் தோட்டங்கள் வெறும் நினைவுகளாய்ச் சலங்கியது அந்த அழகிய சிற்றூர். அது திருவீழிமிழலை.

'வையகம் முற்றும் மாமழை துறந்து
வயலில் நீரிலை'

எனும் வண்ணம் திருவீழிமிழலையைப் பஞ்சமும் பசியும் பட்டினியும் பற்றியிருந்த நேரம்.

ஆண்டவனின் கருணை அற்றதோ என்று மக்கள் அரற்றி அழுது நின்ற கோலமாய் எங்கும் வேதனைச் சித்திரமாய் விளங்கியது. திருவீழிமிழலை ஆலயம் பேரமைதியில் ஆழ்ந்து கிடந்தது. அங்கே முதுமையின் கனிவு முகத்துக்கு எழிலூட்டும் ஒரு சிவனடியார் கண்களிரண்டில் கரையது புரளக் கைகூப்பி நின்ருர். அவர் அருகே பால் வடியும் முகமும், திருநீறு துலங்கும் நெற்றியுமாய் ஓர் இளம்பிள்ளை...

பெரியவர் வாய் முணுமுணுக்கின்றது. மலர் வாயில் மணம் கமழும் பண்ணமுதம் பொழிகின்றது. அதனூடே சுற்றிக்கிடந்து பற்றியலைக்கும் பஞ்சத்தின் எதிரொலிகள் தொனிக்கின்றன.

'உண்டியில் பட்டினி நோயில்
உறக்கத்தில் உம்மை ஐவர்
கொண்டியில் பட்டு மறக்கினும்
என்னைக் குறிக் கொண்மினே!'

ஐயனே! நாட்டை வருத்தி நலிவுறுத்தும் பட்டினியால் நான் மாயும் போதும் உன்னை மறவேன் என்று கரைந்து உருகிறுர் போலும்! திருவீழிமிழலையான் அடைந்தார்க்கு அருள் செய்பவன்.. வாய் பிளந்து காய்ந்துகிடக்கும் இந்தப் பூமிக்கு அவனே வாரி வழங்கும் மாரியாகவும் இலங்குபவன் அல்லனே? அவன் திருக்கோலமே மழை மேகங்கள் செறிந்த வானத்தின் கோலமல்லவா? அவனது நீலகண்டம் கருமேக விசும்புபோல் இருக்கும்; அவனது சடைகள் அம்மேகத்தில் விளையாடும் மின்னல்களாய் விரியும்; அவன் கருணையே மழை! அவனது பூத வேதாள கணங்களுடன் உலகதிர ஆடும் ஊழி நர்த்தனம்—ஒ! அது இடிகள் கனைக்க வெடிபடும் மழையின் அற்புதக் காட்சி! இந்தப்

பூதலமும் அந்த விண்தலமும் செழித்துக் கொழித்துக் குதூகலிக்க எமையாளும் இறைவன் மழையாகி வாராஞே? சிவனருட் செல்வரின் சிந்தனைகள் தெய்வக் கவிதையாகி ஒலித்தது.

'மைவான மிடற்ருனே
அவ்வான் மின்போல்
வளர் சடைமேல் மதியானை
மழையாய் எங்கும்
பெய்வானைப் பிச்சாடல்
ஆடுவானைப் பிலவாய
பேய்க் கணங்கள்
ஆர்க்கச் சூலம்
பொய்வானைப் பொய்யிலா
மெய்யன் தன்னைப்
பூதலமும் மண்டலமும்
பொருந்தும் வாழ்க்கை
செய்வானைத் திருவீழி
மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே
சேர்கின்ருரே'

என்று தம் ஆராத் துயரைத் திருவீழி மிழலை அப்பர்பால் சாற்றினர்.

நம்பிக்கையே இறையருளுக்கு வழி காட்டும் ஒளிச்சுடர். மின் கூரும் சடைமுடியார் விடையின் பாகர் வீழிமிழலை மேவினர் நம்பிய அன்பரைக் கைவிடுவாரோ? அன்ருெரு நாள் புவி சிலிர்க்கக் கங்கை ஓடிவந்தாளே! எம்பெருமான் பகீரதன் வேண்டிய பக்திக்குத் தந்த பரிசு அல்லவா அது?

'...........பகீரதற்காய்
வானேர் வேண்டப்
பரந்திழியும் புனற்கங்கை
பனிபோலாங்கு
செறித்தானைத் திருவீழி
மிழலையானைச்
சேராதார் தீநெறிக்கே
சேர்கின்ருரே'

யான் வேண்டவும் அப்பரிசு வழங்கு வாஞே? இவ்வாறு இவ்வுலகத்துயிர்கள் படுந்துயரில் நெக்குருகி நின்று பாடித்தொழுதார் தமிழ்ச்சிங்கமான திருநாவுக்கரசு சுவாமிகள்

எனினும் மாரி வறம் கூர்ந்து பசித் துன்பம் மல்கி நின்றது. ஊமைத் துயரில் உலகலைந்த காலத்தில் அடியார்க்கிரங்கும் ஆண்டவன் வாகீசப் பெருமானுக்கும் திருஞான சம்பந்தப் பிள்ளையார்க்கும் தன்பீடத்தில் பொற் காசுகள் தந்தருளினன். திருமடங்களில் அன்னம் பாலிப்பு தொடங்கியது. பசித்தவனுக்கு கடவுள் ரொட்டி வடிவத்தில் வருகிருர்' என்ருர் காந்தியடிகள். திருவீழிமிழலையில் வாடிய மக்கள் கூட்டத்துக்கு — பாவரசர் கரத்திலும் பண்ணர் பிள்ளை கரத்திலும் காசு வடிவில் காட்சிதந்து கலிதீர்த்தார் இறையவனர்!

இந்த வரலாறு தேவார அகச்சான்றுகளாலும், சேக்கிழார் பெரிய புராணத்தாலும் நமக்குத் தெரிய வருகின்றது. ஒரு புனிதப் பெருங்கருத்தை இக்கதை நமக்கு நினைவூட்டுகின்றது.

காடுகளிலும் மேடுகளிலும் ஓடி மறைந்து வீடு துறந்து நாடு மறந்து வாழும் போலித் துறவை நமது சமய மூதாதையர் நமக்குக் கூறிச் செல்லவில்லை. 'மந்திரத்தை முணுமுணுத் தேட்டை வரிசையாக அடுக்கி அதன் மேல் சந்தனத்தை மலரை இடுமோர் சாத்திரத்தை' நமது அருளாளர்கள்

போற்றிக் கூறிப் புகழ்ந்து திரிய வில்லை. சமுதாயத்தின் ஆணிவேரில் பிடித்த வறுமைச் சிறுபிணியை அகற் றுவதற்குத் தங்கள் சமய நம்பிக் கையை ஓர் ஆற்றல் மிகு படைக்கல மாக அவர்கள் பயன்படுத்தினுர்கள் என்பதை 'திருவீழிமிழலை'கள் நமக் குச் சுட்டிக்காட்டுகின்றன. நாட்டு மாந்தர் நலிவில், துயரத்தில் தாங்க ளும் கரைந்து கலந்து – அதனை நீக்க வும் மாற்றவும் தம் அறப்பணிகளை ஆற்றிய தத்துவம் இன்றைய சமய உலகுக்கு ஒரு சிந்தனைச் சோதனை!

திருநாவுக்கரசர் பெருமான் வாழ் வும் வாக்கும் இந்தத் தத்துவத்தின் வித்தக விளக்கமேயாக ஓங்குகின் றன. 'நாமார்க்கும் குடி அல்லோம்' என்ற விருப்பு, 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே' என்ற அருள் வாக்கு, 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்ற உள் ளத் தெளிவு, 'குறிக்கோளிலாது கெட்டேன்' என்ற பரிதவிப்பு 'தன்னை மறந்தாள்; தன் நாமங் கெட்டாள்; தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே' என்ற உயிர்ச் சங் கமத்தின் உவகை, 'கண்டேனவர் திருப்பாதம் கண்டறியாதன கண் டேன்' என்ற மனித உலகத் தெய்வக் காட்சி — இவையெல்லாம் ஒன்று கலந்து திருவீழிமிழலை'த் திருப்பணி களாய் உருப்பெறும் அற்புதத்தை அப்பர் பெருமான் பெரு வாழ்வின் உயிர்ச்சரடாய்த் தரிசிக்கிறோம்.

'கனி தந்தால் கனி உண்ணவும் வல்லீரோ?' என வினவித் கனிந்த தத்துவமாக நமக்குத் தம் வாழ்க்கை ஓவியத்தையே தருகிறுர் நாவுக்கரசர். மண்ணுலகைக் கைலாயமாக்கி மகிழ்ந்த மனிதச் செந்நெறி வாக்கின் வேந்தர் வழங்கிய சமயநெறி. கோத் திரமும் குலமும் கொண்டு சாத்திரம் பலபேசும் சழக்கருக்கும் புதுநெறி போதித்த பொன்மனம் அப்பர் நன் மனம்.

'இடையறுப் பேரன்பும் மழைவா ரும் இணைவிழியும் உழவாரத்திண் படையறுத் திருக்கரமும்' சைவ சம யத்தின் அலங்காரங்கள் அல்ல உழைப்பின் அறைகூவல்கள் இவை இந்த அறை கூவலை இன்றைய சமய உலகும், சமதரும உலகும் ஏற்றுல் —

'அஞ்சுவது யாதொன்றுமில்லை!

அஞ்ச வருவதும் இல்லை!



# தில்லையின் எல்லைத் தேவாரத் தலங்கள்

திரு. க. சுவாமிநாதன், பி.எஸ்ஸி., பி.டி.,

முன்னுரை :

தலங்கள் எல்லாவற்றிலும் கோயில் உண்டு. ஆனால் 'கோயில்' என்ற சொல்லாலேயே குறிப்பிடப்பெறும் சிறப்பு வாய்ந்த தலம் தில்லை—சிதம்பரம். ஐந்து சபைத் தலங்களில் பொற்சபைத் தலமாக; ஐந்து பூதத் தலங்களில் ஆகாயத் தலமாக விளங்கும் சிதம்பரம் 'பெரும் பற்றப் புலியூர் எனவும் வழங்கப்பெறும் சைவசமய குரவர்கள் நால்வராலும் பாடப்பெற்ற இத்தலத்தில் சந்தானுசாரியார்களில் மறைஞான சம்பந்தரும், உமாபதி சிவாசாரியாரும் முத்திபெற்ற சிறப்பு உண்டு. இவ்விரு சந்தானுசாரியர்களின் கோயில்களும் உள்ளன. இன்னோரன்ன பெருஞ் சிறப்புக்கள் வாய்ந்த தில்லைத் தலத்தின் பக்கத்தில் உள்ளனவாய், தேவார ஆசிரியர்களாற் பாடப்பெற்ற சிறப்பினை உடையனவாய் உள்ள சில தலங்களைப்பற்றிய குறிப்புக்களை நினைவூட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

1. திருவேட்களம் : சிதம்பரம் புகைவண்டி நிலையத்துக்குக் கிழக்கே ஒரு கல் தொலைவில் உள்ள இத்தலத்தைத் திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் பாடியுள்ளனர். திருஞானசம்பந்தர் தில்லையில் தங்கியிருந்து நாளும் கூத்தப் பிரானைத் தரிசிப்பதை விடுத்து, திருவேட்களத்தில் தங்கியிருந்து நாள்தோறும் சென்று வழிபட்டு வந்ததை வரலாற்றால் அறியலாம். இறைவன் பெயர் பாசுபதேசுரர்; இறைவியின் பெயர் நல்லநாயகி. அருச்சுனனுக்குப் பாசுபதம் கொடுத்தருளிய தலம். அண்ணாமலைப் பல்கலைக் கழகம் இப்பகுதியில்தான் அமைந்துள்ளது.

2. திருநெல்வாயில் : சிதம்பரம் புகைவண்டி நிலையத்திலிருந்து தென்கிழக்கே மூன்றுகல் தொலைவில் உள்ளது, இத்தலம் இப்பபோது சிவபுரி என வழங்கப்பெறுகிறது. திருஞான சம்பந்தர் இத்தலத்தைப் பாடியுள்ளார். இறைவன் பெயர் உச்சிநாதேசுரர்; இறைவியின் பெயர் கனகாம்பிகை. இத்தலத்துக் கோயிலிலேயே திருக்கழிப்பாலைத் தலத்துக் கோயிலும் இருக்கிறது. வடக்குப் பக்கத்துக்கோயிலே திருநெல்வாயில் தலத்துக்குரிய கோயில்.

3. திருக்கழிப்பாலை : சிதம்பரத்துக்குத் தென்கிழக்கே, கொள்ளிட நதியின் வடகரையில்காரைமேட்டில் இருந்தது இத்தலம். கொள்ளிட நதியால் பாழ்பட்ட பின், அங்குள்ள மூர்த்தங்களைக் கொண்டு வந்து, மேலே கூறிய திருநெல் வாயில் (சிவபுரி) கோயிலின் தெற்குப் பக்கத்

தில் ஒருகோயிலமைத்து, வைத்து வழிபட்டார்கள். திருக்கழிப்பாலை வன்மீக முனிவராற் பூசிக்கப் பெற்ற தலம். திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய மூவராலும் பாடப் பெற்ற பெருமையுடையது. இறைவன் பெயர் பால் வண்ண நாதர். இறைவியின் பெயர் வேதநாயகி.

சிவபுரிக் கோயில் வழிபாட்டுக்குச் சென்றால் திருநெல் வாயில், திருக் கழிப்பாலை ஆகிய இரு தலங்களின் மூர்த்திகளையும் வணங்கலாம்

4. திருநாரையூர்: சிதம்பரத்துக்குத் தென்மேற்கே பத்துக் கல் தொலைவில் உள்ள தலம். சிதம்பரம் — காட்டு மன்னார்குடிப் பேருந்துப் பாதையில் உள்ளது. குமராட்சிக்கு அப்பால் உள்ள திருப்பம் ஒன்றில் திரும்பித் தெற்கு நோக்கி முக்கால் கல் தொலைவு சென்றால் இத்தலத்தை அடையலாம். நாள்தோறும் கங்கையில் நீராடிய பின் வந்து வணங்கும் வழக்கத்தைக் கொண்டிருந்த நாரையானது இறையருளால் மிகவும் சோதனைகளுக்குள்ளாகி வந்து வணங்கி முத்தி பெற்றது. சிறகிழந்தநல்லூர் என இதன் பக்கத்திலுள்ள சிற்றூர் இவ் வரலாற்றை மேலும் உறுதிப்படுத்துகிறது.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் பாடி வழிபட்ட தலம். இறைவன் பெயர் சுந்தரேசர், இறைவியின் பெயர் திரிபுரசுந்தரியம்மை.

தேவாரத் திருமுறைகளை வெளிப்படுத்தியருளிய பொல்லாப் பிள்ளையார் கருணை பொழியும் தலம். தேவாரத் திருமுறைகளைத் தொகுத்தருளிய நம்பியாண்டார் நம்பியின் அவதாரத் தலம்

5. திருக்கானாட்டு முள்ளூர் :— இத்தலம் இப்போது 'கானாட்டாம் புலியூர்' என வழங்கப்பெறுகிறது. சிதம்பரத்துக்குத் தென் மேற்கே உள்ள காட்டுமன்னார்குடியை அடைந்து, அங்கிருந்து தெற்கே ஓமாம்புலியூர் செல்லும் வழியில் இரண்டு கல் தூரம் சென்று பின் கிழக்கே திரும்பி ஒரு கல் தூரம் சென்றால் இத்தலம். பதஞ்சலி முனிவர் பூசித்த தலம். சுந்தரரால் பாடப்பெற்ற தலம் இறைவன் பெயர் பதஞ்சலிநாதேசுரர் ; இறைவியின் பெயர் கானார்குழலி – கோல் வளைக்கையம்மை.

6. திருஓமாம்புலியூர் :– சிதம்பரத்துக்குத் தென்மேற்கேயுள்ள காட்டு மன்னார்குடியிலிருந்து தெற்கே நான்கு கல் தொலைவில் உள்ளது இத் தலம். கொள்ளிட நதியைச் தாண்டிச் செல்லவேண்டும். உமையம்மை தட்சிணாமூர்த்தியிடம் பிரணவ உபதேசம் பெற்ற தலம். புலிக்குப் பயந்து வில்வமரத்தின்மேல் ஏறிய வேடன் இரவு முழுவதும் வில்வ இலைகளைப் பறித்துப் போட்டுக்கொண்டிருக்க, அவை கீழே உள்ள சிவலிங்கத்தின்மேல் விழ, அவனுக்கு முத்தியளித்த தலம். கோயிலுக்குக் கீழ்ப் பக்கத்தே 'வடதளி' என்ற கோயிலொன்றும் உண்டு. திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் பாடிப் போற்றிய தலம். இத்தலத்தின் தென்கிழக்கே இரண்டு கல் தூரத்தில் 'மண்ணிப்படிக்கரை' என்ற தலம் உண்டு. இறைவன் பெயர் துயர்

தீர்த்தநாதர் ; இறைவியின் பெயர் பூங்கொடிநாயகி.

7. திருக்கடம்பூர் :— சிதம்பரத்துக்குத் தென்மேற்கேயுள்ள காட்டுமன்னார் குடியின் மேற்கே மூன்று கல் தூரத்தில் உள்ளது. ஓமாம்புலியூரிலிருந்து வடமேற்கே நான்கு கல் தொலைவில் உள்ளது கோயிலின் கருவறை தேர் வடிவில் அமைந்துள்ளது. கோயிலுக்குக் 'கரக்கோயில்' என்று பெயர். இந்திரன் அமிர்தம் வேண்டிப் பூசித்த தலம். இந்திரன் தன் கரத்தால் அகழ்ந்து எடுத்துப் போக முயற்சித்ததால் 'கரக்கோயில்' எனப் பெயர் பெற்றது என்பர். கணங்கள் பூசித்த தலம் திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் பாடிப் போற்றிய தலம். இறைவன் பெயர் அமுதகடேசுரர் இறைவியின் பெயர் சோதி மின்னம்மை.

"நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் அடியேனையுந் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே"

என்ற அப்பர் தேவாரம் எழுந்தது இத்தலத்தில்தான்.

8. திருமண்ணிப்படிக்கரை :- திருஓமாம்புலியூருக்குத் தென்கிழக்கே இரண்டு கல் தொலைவில் உள்ள தலம். இலுப்பைப்பட்டு என இத்தலம் இப்போது வழங்கப்பெறுகிறது. சிவபெருமான் நஞ்சுண்டபொழுது உமையம்மை அவருடைய கண்டத்தைப் பிடிக்க, அந்நச்சுக் கறையுடன் தம் கண்டத்தைத் 'திருநீலகண்டமாக' அமைத்துக்காட்டி உயிர்களைக் காத்தருளிய தலம் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிப் பரவிய தலம். இறைவன் பெயர் நீலகண்டர் ; இறைவியின் பெயர் அமிர்தகரவல்லியம்மை.

9. திருக்கூடலையாற்றூர் :- சிதம்பரம் புகைவண்டி நிலையத்திலிருந்து மேற்கே பதினாறு கல் தொலைவில் உள்ள தலம். சேத்தியாதோப்பு, குமரகுடி வழியாகச் செல்லல் நலம். சிதம்பரம் விருத்தாசலம் பேருந்துப் பாதையில் வளையமாதேவியில் இறங்கி, தெற்கே இரண்டு கல் சென்றால் மணிமுத்தாறும் நிவா நதியும் (வெள்ளாறு) கலக்கும் இடத்தை அடையலாம். கரையேறினால் இத்தலம் சுந்தரமூர்த்திசுவாமிகள் விருந்தாசலம் போகும்போது இறைவன் ஓர் அந்தணனாகத் தோன்றி, இக்கூடலையாற்றூர் வழியாகத்தான் விருத்தாசலம் போக வேண்டும் என்று சொல்லி அவரை அழைத்து வந்து பதிகம் பாடச் செய்த தலம். இறைவன் பெயர் நெறிகாட்டு நாயகர் ; இறைவியின் பெயர் புரிகுழலாம்பிகை.

12. திருநெல்வாயில் அரத்துறை பெண்ணாகடம் புகைவண்டி நிலையத்திலிருந்து மேற்கே மூன்று கல் தொலைவில் உள்ள தலம் ஆதித்துறை (காரியனூர்). திருவாலந்துறை, திருமாந்துறை, ஆடுதுறை திருவதிட்டத்துறை, (திட்டக்குடி), திருவரத்துறை, திருக்கைத்துறை என உள்ள துறைகள் ஏழையும் பூசை செய்ய விரும்பிய ஏழு முனி புங்கவர்களும் 'நீவா' என அழைத்ததால் வந்த நிவா நதியின் (வெள்ளாறு) வடகரையில் உள்ள தலம். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய மூவரும் தேவாரப் பதிகம் பாடிப்பரவிய தலம்

திருஞானசம்பந்தப் பெருமானுக்கு முத்துச்சிவிகையும், முத்துக்குடையும் முத்துச் சின்னங்களும் கொடுத்தருளிய தலம். இறைவன் பெயர் அரத்துறைநாதர்; இறைவியின் பெயர் ஆனந்தநாயகி.

11. திருமுதுகுன்றம் : விருத்தாசலம் என வழங்கப்பெறும் தலம் சிதம்பரத்திலிருந்து முப்பது கல் தொலைவிலுள்ள தலம். சிவன் முதன் முதல் படைத்த மலையாதலின் முதுகுன்றம் – பழமலை. இங்கே இறக்கும் உயிர்களின் துயரத்தை இறைவி தன் ஆடை முனையால் விசிறித் தீர்க்க, இறைவன் திருவைந்தெழுத்து உபதேசிக்கும் தலம். இதனால் இதற்கு 'விருத்தகாசி' என்ற பெயர் உண்டு சுந்தரர் பொன் வேண்டிப் பெற்ற தலம். பின் அதனை மணிமுத்தாற்றில் இட்டார். மாற்றுரைத்த விநாயகர் வடிவம் உண்டு. ஆழத்துப் பிள்ளையார் சிறப்புடைய மூர்த்தி. பெருமை விரியும் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய மூவரும் பாடிப் பரவிய தலம். இறைவன் பெயர் பழமலைநாதர். இறைவியர் இருவர்-பாலாம்பிகை, விருத்தாம்பிகை.

'தூசினல் அம்மை வீசத் தொடை
யின் மேற் கிடத்தித் துஞ்சு
மாசிலா உயிர்கட் கெல்லாம்
அஞ்செழுத் தியல்பு கூறி
ஈசனே தனது கோலம் ஈந்திடும்
இயல்பால் அந்தக்
காசியின் விழுமிதான முதுகுன்ற
வரையுங் கண்டான் "

— கந்தபுராணம்

12 திரு எருக்கத்தம்புலியூர் : இத்தலம் இப்போது 'ராசேந்திரப்பட்டனம்' என வழங்கப் பெறுகிறது. சிதம்பரத்திலிருந்து திருமுட்டம் (ஸ்ரீ முஷ்ணம்) என்ற விஷ்ணுத் தலத்தை அடைந்து அங்கிருந்து மேற்கே நான்கு கல் தொலைவிலுள்ள தலம். சிதம்பரத்திலிருந்து 28 கல் தூரம். விருத்தாசலத்திலிருந்து தெற்கே ஏழு கல் தூரம்.

திருஞானசம்பந்தர் பாடிப் பரவிய தலம் திருஞானசம்பந்தர் திருப்பதிகங்களை உடனிருந்து யாழில் இசைத்து வந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர், அவதாரம் செய்த தலம் உருத்திரசன்மர் வழிபட்டு ஊமை நீங்கப் பெற்ற தலம் வெள்ளெருக்கஞ்செடி இங்கே தெய்வதத் தரு. இறைவன் பெயர் நீலகண்டேசுரர், இறைவியின் பெயர் நீலமலர்க் கண்ணம்மை.

13. திருப்பெண்ணுகடம்:- விருத்தாசலம் திருச்சிக் குறுக்குப் புகைவண்டிப் பாதையில் 'பெண்ணுகடம் புகைவண்டி நிலையம். பெண் – தேவகன்னியர்; ஆ – காமதேனு; கடம் – தெய்வயானை ஆகியோர் பூசை செய்ததால் 'பெண்ணுகடம்' என்று பெயர். ஆலயத்துக்குத் 'தூங்கானை மாடம்' என்பது பெயர். யானை படுத்திருப்பதுபோன்ற அமைப்புடைய கோயில். திருஞானசம்பந்தரும் அப்பரும் பாடிப் பரவிய தலம் அப்பரடிகள் தம் தோளில் சூலக் குறியும் இடபக் குறியும் பொறித்தருளவேண்டும் என வேண்டி, அவை பொறித்தருளப் பெற்ற தலம்,

"பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு
விண்ணப்பம் போற்றி செய்யும்
என் ஆவி காப்பதற்கு இச்சை
யுண்டேல் இருங் கூற்றகல
மின்னாரும் மூவிலைச் சூலம் என்மேற்
பொறிமேவு கொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை
மாடச் சுடர்க் கொழுந்தே"
— அப்பர் தேவாரம்

கலிக்கம்ப நாயனாரின் தலம். சந்தானாச்சாரியர்களில் முதல்வராகிச் சிவஞானபோதம் அருளிய மெய்கண்டதேவ நாயனாரின் தந்தை அச்சுதக் களப்பாளரின் தலம். இறைவன் பெயர் சுடர்க்கொழுந்தீசர்; இறைவியின் பெயர் கடந்தை நாயகி.

14. திருச்சோபுரம்: சிதம்பரம் – கடலூர் இடை ஆலப்பாக்கம் புகைவண்டி நிலையத்திலிருந்து வட கிழக்கே இரண்டுகல் தூரம். தோணியில் ஏறி உப்பங்கழியைக் கடந்து மணல் மேற் செல்ல வேண்டும். அகத்தியர் பூசித்த தலம். 'தியாகவல்லி' என்னும் அரசகுமாரி பூசித்ததால் இத்தலம் 'தியாகவல்லி' என்றே வழங்கப் பெறுகிறது. நீண்ட நாட்கள் மணலினால் மூடப்பெற்றிருந்த இத்தலத்தை இரண்டு தம்பிரான்கள் சுமார் 125 ஆண்டுகளுக்குப்பின் கண்டுபிடித்து அகழ்ந்து திருப்பணி செய்வித்தமையால் 'தம்பிரான் கண்ட தலம்' என்ற பெயரும் உண்டு. கடலுக்கு அண்மை. திருஞானசம்பந்தர் பாடிப் பரவிய தலம் இறைவன் பெயர் சோபுரநாதர்; இறைவி பெயர் சோபுர நாயகி.

15 திருத்தினைநகர்: இப்போது வழங்கும் பெயர் "தீர்த்தனகிரி". புதுச்சத்திரம் புகைவண்டி நிலையத்திலிருந்து வடமேற்கே மூன்றுகல் தொலைவில் உள்ளது. பெரியான் என்ற பள்ளன் ஒருவன் உழுது கொண்டிருக்கையில் இறைவன் சங்கமர் வடிவில் தோன்றி அன்னம் கேட்க, அவன் ஊரின் உள்சென்று கொண்டு வருவதாகச் சொல்லிப் போய் வருவதற்குள் அவன் உழுது கொண்டிருந்த நிலத்தில் தினைவிளைந்து முற்றியிருக்கும்படிச் செய்துவிட்டு மறைந்துவிட்டார் பெரியான் வந்து அவ்வதிசயத்தைக் கண்டு திகைக்க, இறைவன் வெளிப்பட்டுக் காட்சி கொடுத்த தலம். திருத்தினைநகர் என்ற பெயர் இதனாலேயே. இறைவனுக்கு நிவேத்யம் தினையமுது. இவ்வூரில் தாமரைப் பொய்கை ஒன்றுண்டு அதன் நீர் குட்டநோயைத் தீர்க்கவல்லது. ஜாம்புவர் பூசித்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிப்பரவிய தலம் இறைவன் பெயர் சிவக்கொழுந்தீசர்; இறைவியின் பெயர் ஒப்பிலா நாயகி.

முடிப்புரை:

சிவகாமியம்மைத் திருக்கோயில் திருப்பணிக் குடமுழுக்கு விழாவில் கலந்துகொள்ளும் அன்பர்கள் மேலே குறிப்பிட்ட பதினைந்து தேவாரத் திருத்தலங்களையும் வணங்கி, எல்லாம் வல்ல பரம் பொருளின் இன்னருளைத் துய்ப்பார்களாக.



உ

# ஸ்ரீசங்கரரும் அபிராம பட்டரும்

வியாகரண, வேதாந்த, ஸாஹித்திய சிரோமணி, ராஷ்டரபாஷாப்ர்வீன
ஸ்ரீ T. துரைசாமிரத்ன தீக்ஷிதர்
(தற்கால) ஸெக்ரட்டரி ஸ்ரீ ஸபாநாயகர் கோயில் சிதம்பரம்

உலகில் உள்ள உயிர்களுக்கு மானிடப் பிறவி கிடைப்பது அரிது. அப்படி மானிடராகப் பிறந்தவர்கள் கடவுள் பக்தியுடையவர்களாக இருப்பது மிக முக்கியமாகிறது. சிறு குழந்தைகள் கூட தனக்குப் பசி ஏற்பட்டவுடன் அம்மா என்று அழைப்பதைக் காண்கிறோம். அதுபோல நம் மனதில் உள்ள துயரங்களை நீக்க உலகத்திற்கு எல்லாம் தாயான பராசக்தியால் தான் முடியும் என்று நம் எல்லோருக்கும் அன்னையின் வழிபாடு மிக அவசியமாகிறது. அன்னையின் அருளால் பல மகான்கள் நன்மைகளை அடைந்துள்ளனர் என்று நாம் காண்கிறோம். தேவியின் புகழைப் பலர் பல நூல்களில் பேசியிருக்கிறார்கள். ஸ்ரீசங்கரரும், அபிராமபட்டரும் தம் நூல்களில் அம்பிகையைப்பற்றி புகழ்ந்து பேசியுள்ளார்கள். அவர்களுடைய ஒற்றுமையான சில கருத்துகளை இங்கு நான் கூறவிரும்புகிறேன்.

ஸ்ரீ சங்கரர் ஸ்ரீதேவியைத் துதிக்க ஆரம்பிக்கும்பொழுது,

"प्रणन्तुं स्तोतुं वा कथमकृतपुण्यः प्रभवति"

என்ற சுலோகத்தில் முன் பிறவியில் எவன் அளவிடமுடியாத புண்ணியத்தைச் செய்கிறானோ அவன்தான் தேவியைத் தோத்திரம் செய்யவோ, வணங்கவோ முடியும். அவ்வாறு புண்ணியம் செய்யாதவர்கள் தேவியைத் துதிக்கவோ, வணங்கவோ முடியாது என்று கூறுகிறார்.

அதுபோலவே அபிராமபட்டரும், தேவியைத் துதிக்கவோ, சிந்திக்கவோ, வணங்கவோ, முன் பிறவியில் செய்த புண்ணியம் வேண்டும் என்று

"நண்ணியதுன்னை நயந்தோர
வையத்து நான்முன் செய்த
புண்ணியமே தென்னம் மேபுவியே
ழையும் பூத்தவளே" (11)

"பூணுதற் கெண்ணிய வெண்ண
மன்றோ முன்செய் புண்ணியமே"(39)

"பண்ணியஎஞ் சென்னியின்மேற்
பத்ம பாதம் பதித்திட" (40)

என்ற மூன்று பாடல்களிலும் குறிப்பிடுகின்றார். ஆகையால் அன்னையைத் துதிக்கவோ, சிந்திக்கவோ, அவள் தரிசனம் கிடைக்கவோ முன் செய்த புண்ணியம் இல்லாமல் முடியாது என்று புலப்படுகிறது.

மேலும் ஸ்ரீசங்கரர் பராசக்தியின் பெருமையைக் கூறும்பொழுது அன்னையின் அருளால்தான் இறைவனும் நன்மை அடைந்திருக்கிறார் என்று,

"न शम्भोः तन्मूलं तव जननि ताटङ्कमहिमा" என்ற சுலோகத்தில் பிரும்மா, இந்திரன் முதலான தேவர்கள் அமுதத்தைச் சாப்பிட்டும் பிரளய காலத்தில் அழிகிருர்கள். ஆனல் மிகவும் உக்ரமான நஞ்சையும் உண்ட பரமசிவனுக்கோ அழிவு என்பதே கிடையாது, அதற்குக் காரணம் உன்னுடைய தாடங்கத்தின் (தோட்டின்) பெருமைதான் என்று அன்னையின் தாடங்கத்தின் பெருமையைக் கூறும் பொழுது கூறுகிருர். இதே கருத்தை அபிராமபட்டரின் வாக்கிலும் நாம் காணலாம். "வார் சடையோன், அருந்திய நஞ்சமுதாக்கிய வம்பிகை" (5) என்ற பாடலில் அபிராமபட்டர் சிவபெருமான் நஞ்சுண்டும் இறவாமைக்குக் காரணம் தேவியின் மங்கல நாணும் தோடும் தான் என்று கூறுகிருர்.

தேவியின் ஸ்வரூபத்தை வர்ணித்துக் கூறும்பொழுது ஸ்ரீ சங்கரர்தேவியின் ஸ்வரூபத்தை

मनस्त्वं व्योम त्वं मरुदसि मरुत्सारथिरसि
त्वमापस्त्वं भूमिः त्वयि परिणतायां नहि परम्।

என்று புகழ்ந்து கூறுகிருர். அம்பிகையானவள் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற பஞ்ச பூதங்களையும் தன்னகத்துள் அடக்கிக் கொண்டு விளங்குகிருள் என்று கூறியுள்ளார். இக்கருத்தையே

ஒளியே யொளிரு மொளிக்கிடமே
யெண்ணிலொன்று மில்லா
வெளியே வெளிமுதற் பூதங்களாகி
விரிந்த வம்மே (15)

என்ற அபிராமபட்டரின் பாடலில் காண்கிருேம். அம்பிகையானவள் ஒளிமயமாகவும் சிதாகாச ரூபமாகவும் வானுதி பூதங்களாகவும் இருந்து விளங்குகிருள் என்று அபிராமபட்டர் விளக்கியுள்ளார்.

அம்பிகையின் பாதார விந்தங்களை

ययोः पाद्यं पाथः पशुपतिजटाजूटतटिनी
ययोः लक्षालक्ष्मीः अरुणहरिचूटामणि रुचिः।
(84)

मुकुन्दब्रह्मेन्द्र स्फुटमुकुटनीराजितपदाम् (22)

என்ற இரண்டு சுலோகங்களாலும் புகழ்ந்து கூறுகிருர், பரம சிவனுடைய ஜடையிலிருந்து பெருகும் கங்காஜலம் ஸ்ரீ அம்பிகையின் கால்களை அலம்பும்ஜலமாக ஆகிறது என்று கூறுவதால் ப்ரணய கோபம் ஏற்படும் பொழுது ஆண்கள் பெண்களின் கால்களில் நமஸ்காரம் செய்வது வழக்கமுண்டு என்ற முறைப்படி சிவபிரானும் அம்பிகையின் தாள்களில் நமஸ்காரம் செய்கிருர் என்று கூறப்படுகிறது. மேலும் அம்பிகையின் கால்களில் உள்ள மருதாணியின் சிவப்பு காந்தி யானது மகாவிஷ்ணுவினுடைய தலையில் உள்ள மணியின் காந்தியால் ஏற்பட்டதோ என்று சங்கரர் கூறுவதால் விஷ்ணு முதலானவர்கள் தம் அதிகார பதவி ஸ்திரமாக இருக்கவேண்டும் என்பதற்காக அன்னையின் கால்களில் நமஸ்காரம் செய்வது வழக்கமுண்டு மேலும்.

"मुकुन्दब्रहमेन्द्रस्फुटमुकुट नीराजितपदाम्"

என்று கூறுவதால் பிரும்மா, விஷ்ணு ருத்திரன், இந்திரன் முதலானவர்கள் ஸ்ரீ அம்பிகையின் சரணங்களில் நமஸ்காரம் செய்கிருர்கள் என்று ஸ்ரீ அம்பிகையின் பாதார விந்தங்களின் பெருமையைப் புகழ்ந்து கூறுகிருர். இக்கருத்தையே

மதியுறுவேணி மகிழ்நனு மாலும்
வணங்கி யென்றும்

துதியுறு சேவடியாய் சிந்துரானன
சுந்தரியே (7)

என்ற பாடலில் அபிராமபட்டர் விளக்கிக் கூறியுள்ளார். பிரமனும், சிவபிரானும் திருமாலும் சிரங்களைத் தாழ்த்தி எப்பொழுதும் அம்பிகையாகிய உனது திருவடியைப் போற்றி வணங்குகிறார்கள் என்று கூறுகிறார்.

அம்பிகையை வழிபடுவதால் பக்தர்களுக்குக் கிடைக்கும் பயனைப்பற்றி ஸ்ரீ சங்கரர்,

अविद्यानां अन्तस्तिमिरमिहिरद्वीपनगरी
जडानां चैतन्यस्तवकमकरन्दस्रुतिझरी ।
दरिद्राणां चिन्तामणिगुणगणिका जन्मजलधौ
निमग्नानां दम्ष्ट्र मुररिपुवराहस्य भवति ॥

என்ற சுலோகத்தில் கீழ்க்கண்டவாறு கூறுகிறார். தேவியானவள் தன்னை ஆராதிக்கின்றவர்களை மாயா பாசத்திலிருந்து விடுவித்து ஸர்வக்ஞத்வசக்தியையும், அகண்டமான ஐச்வரியத்தையும் கொடுத்து எல்லா சுகபோகங்களையும் அனுபவிக்கும்படிச் செய்து மோக்ஷமாகிற பேரின்பத்தையும் தந்து அருள் செய்கிறாள் என்று கூறுகிறார். இக்கருத்தையே

"தனந்தரும் கல்விதரு மொருநாளுந்
தளர்வறியா
மனந்தருந் தெய்வ வடிவந்தரு
நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லனவெல்லாந்தரு
மன்பரென்பவர்க்கே
கனம்தரும் பூங்குழ லாளபிராமி
கடைக்கண்களே" என்ற பாடலில் அபிராமபட்டர் விளக்கிக் கூறியுள்ளார். அபிராமியன்னையானவள் தன்னை ஆராதிப்பவர்களுக்கு கல்வி, பொருள், மோக்ஷம் முதலிய எல்லாப் பொருள்களையும் கொடுத்து அருள் செய்கிறாள் என்று கூறியுள்ளார்.

இவ்வாறு சான்றோர்களால் புகழ்ந்து பேசப்பட்ட அம்பிகையானவள் சிதம்பரத்தில் ஸ்ரீநடராஜப் பெருமானுடையஞானசக்தியாகிய ஸ்ரீசிவகாமி சுந்தரி என்றதிருநாமத்தோடு காட்சியளித்துக்கொண்டிருக்கிறாள். அப்படிப்பட்ட ஸ்ரீ சிவகாமிசுந்தரி அம்பிகைக்கு நடைபெறும் கும்பாபிஷேகத்தில் நாம் பலவகையிலும் பங்கு கொண்டு ஸ்ரீ அம்பிகையின் கிருபைக்குப் பாத்திரமாகும்படி கேட்டுக் கொள்கிறேன்.





(திருப்புலீச்சரம்) இளமையாக்கினர் திருக்கோயில்



அனந்தீசுவரம் திருக்கோயில்



சிவபுரி திருக்கோயில்



ஸ்ரீ தில்லையம்மன் திருக்கோயில்



கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியார் திருக்கோயில்



திருவேட்களம்
பாசுபதேசுவரர் திருக்கோயில்



கீழத்தெரு
மாரியம்மன்கோயில்



ஸ்ரீ காளி நர்த்தனவிநாயகர் ஆலயம்



தட்சிண காளியம்மன் கோயில்

# தில்லைப் பெருங்கோயிலைச் சுற்றியமைந்துள்ள திருக்கோயில்கள்

சிவநெறிச் செல்வர்களாற் கோயில் என அடை மொழியின்றிப் போற்றப் பெறும் தனிச் சிறப்புடையது தனியூர் பெரும்பற்ற புலியூராகிய சிதம்பரமாகும் உலகெலாம் உணர்ந்தோதற்கரியவனும் நிலவுலாவிய நீர்மலிவேணியனும் அலகில் சோதியனுமாகிய கூத்தப்பெருமான் ஐந்தொழில் திருக்கூத்தினை நிகழ்த்தியருளும் தில்லைத் திருச்சிற்றம்பலமாகிய இத் திருக்கோயிலைச் சூழ இத் தலத்துடன் நெருங்கிய தொடர்புடைய திருக்கோயில்கள் பல தில்லையின் எல்லையில் அமைந்துள்ளன.

## இளமையாக்கினர்கோயில் என அழைக்கப்பெறும் திருப்புலீச்சரத் திருக்கோயில்

புலவர், திரு து. சோ. நடராசன்

தில்லைப்பெருங் கோயிலுக்கு மேற்கில் மிக அண்மையில் இளமையாக்கினர் கோயில் என அழைக்கப்பெறும் திருப்புலீச்சரம் என்னும் திருக்கோயில் அமைந்துள்ளது. இக் கோயில் சிவனடியார்கள் பலர் போற்றி வழிபட்ட கோயிலாகும்.

தில்லைத் திருத்தலத்திலே குயவர் குலத்தில் தோன்றிய திருநீலகண்ட நாயனர், நடராசப்பெருமானை நியதியாக வழிபட்டுக்கொண்டு. சிவனடியார்களுக்குச் செய்யவேண்டிய திருத்தொண்டுகளையும் முறையாகச் செய்து வருவாராயினர். தம் வாழ்விற்காகத் தம் குலத் தொழிலாகிய மட்பண்டங்களைச் செய்து விற்று வந்தாராயினும், சிவனடியார்களுக்கெல்லாம் பிச்சைப் பாத்திரமாகிய திருவோடுகளைக் கொடுத்து வந்தார்.

இவர் மனைவியாரும் கற்பிலும், அழகிலும், சிவத்தொண்டிலும் சிறந்து விளங்கினர். திருநீலகண்டரோ மிகுந்த இளமைப் பருவம் காரணமாகச் சிற்றின்பத்துறையில் தம்மை எளியராக ஆக்கிக்கொண்டு ஒழுகுவாராயினர். இளமை மீதூரா இன்பத்துறையில் எளியராகிய திருநீலகண்டர் ஒருநாள் பரத்தைபால் அணைந்து தம் மனைவியாரை அணுகிய நிலையில் அவரது புறத்தொழுக்கினையறிந்த அவ்வம்மையார் தம் கணவரை நோக்கி "எம்மைத்தீண்டுவிராகில் திருநீலகண்டம்" எனத் திருநீலகண்டத்தின் மேல் ஆணையிட்டுக்

கூறினார். அதனைக்கேட்ட நாயனார் தம் மனைவியாரை அயலவர் போல நோக்கி "எம்மை எனப் பன்மைச் சொல்லாற் கூறினமையால் மற்றை மாதர்களையும் என் மனத்தாலும் தீண்டேன்" என உறுதி கூறினார். கற்பிற் சிறந்த அவர்தம் மனைவியார் தம் கணவனார்க்கு இயைந்த பணிகளையெல்லாம் நாள்தோறும் விருப்புடன் செய்துவர. திருநீலகண்டத்தின் பால் அன்புடைய அவ்விருவரும் உடனுறைவின்றி, மெய்யுறுபுணர்ச்சியின்மையை அயலறியாது வாழ்ந்து வந்தனர். ஆண்டுகள் பலசெல்ல தமது இளமைநீங்கி முதுமை நிலையெய்தி உடல் தளர்ச்சியுற்ற பின்னரும் இறைவன் பால் வைத்த அன்பின் திறத்தில் தளராதவர்களாய் ஒழுகினர்.

சிவபெருமான் இவர்களது இல்வாழ்க்கைச் சிறப்பினை உலகத்தார் அறிந்து உய்யும் வண்ணம் புலப்படுத்தத் திருவுளங்கொண்டார். சிவபெருமான் சிவயோகியார் வேடங்கொண்டு திருநீலகண்டர் மனையை அடைந்து, தம்பாலுள்ள திருவோடு ஒன்றினை அவரிடம் தந்து 'நம்பி! நீ இதனைப் பாதுகாத்து வைத்திருந்து நாம் வேண்டும்போது தருக' என்று கூறிச்சென்றார். சென்ற சிவயோகியார் நாட்கள் பல கழிந்த பிறகு தாம் கொடுத்திருந்த திருவோட்டினை வைத்த இடத்தில் இல்லாமல் மறையச் செய்து திருநீலகண்டரை அணுகி, 'யான் முன்பு உன்னிடம் தந்த ஓட்டினைத் தருக,' எனக் கேட்டார். தாம் பாதுகாத்து வைத்திருந்த இடத்தில் ஓட்டினைக் காணப்பெருமையால், அதனைப் பலவிடங்களிலும் தேடித்திகைப்புற்ற திருநீலகண்ட நாயனார், சிவயோகியாரை வணங்கி 'எம்பெருமானே! நீ தந்து சென்ற திருவோட்டினை யான் பாதுகாத்து வைத்திருந்த இடத்திலும், வேறு இடங்களிலும் பலமுறைத் தேடியும் காணப் பெற்றிலேன். அதனினும் சிறப்புடைய நல்லதொரு பாத்திரம் தருகின்றேன். அதனை ஏற்றுக்கொண்டு எனது பிழையைப் பொறுத்தருள வேண்டும் என இரந்து வேண்டினார். அதுகேட்ட சிவயோகியார் "யான் தந்த மண்ணோட்டினையன்றி, நீ கொடுப்பது பொன்னினாற் செய்யப்பட்டது என்றாலும் அதனை நான் ஏற்றுக்கொள்ளமாட்டேன் முன்பு நான் கொடுத்த ஓட்டினையே கொண்டு வா," என்றார். நாயனாரும் மீண்டும். மீண்டும் பலவாறு வருந்திவேண்ட சிவயோகியார், "என் ஓட்டினை நீ கெடுத்து விட்டது உண்மையாயின் உன் மகனைக் கைபற்றிக் குளத்தில் மூழ்கி சத்தியம் செய்க" என்றார். தமக்கு மகனில்லை என்று கூற அப்படியானால் உன் மனைவியார் கைப்பற்றி நீரில் மூழ்கி சத்தியம் செய் எனக் கூறினார்.

"நானும் என் மனைவியும் எங்களிடையே உள்ளதொரு சபதத்தால் உடன் மூழ்க இசைவில்லை. யானே புனலில் மூழ்கி சத்தியம் செய்கிறேன். என்னுடன் வாரும்" என்றார் நாயனார் சினங்கொண்ட சிவயோகியார் தில்லை வாழந்தணர்கள் கூடியிருக்கும் பேரவையில் இவ்வழக்கினைக் கூறுவேன் என்று சொல்ல, திருநீலகண்டரும் அதற்கிசைந்து அவருடன் சென்றார்.

சிவயோகியாரும், நாயனாரும் தத்தம் வழக்கை எடுத்துக்கூற

கேட்ட தில்லை வாழந்தணர்கள் திருநீலகண்டரைப் பார்த்து "இவர் தாம் வைத்த ஓட்டினைக் கெடுத்தீ ரானால் தரும் இவர் 'குளத்தில் மூழ்கித் தருக' என உரைத்தாராயின் மனைவியோடு மூழ்கி உறுதி கூறுதலே முறையாகும்' என்று முடிவு கூறினர்.

அது கேட்ட திருநீலகண்ட நாயனார் தம் மனைவியாரைத் தீண்ட இயலாமைக்குரிய சபதத்தை வெளிப் படுத்த இயலாதவராய்ப் "பொருந் திய வகையால் மூழ்கித் தருகின் றேன்" எனக்கூறி சிவயோகியாருடன் தன் இல்லத்தை அடைந்தார். பிறகு தம் மனைவியாரை அழைத்துக் கொண்டு தில்லைத் திருப்புலீச்சரத் திருக்கோயிலின் முன்னுள்ள குளத் தினை அடைந்தார். திருநீலகண்ட ரின் ஆணையினை வழுவாது காக்கும் நிலையில் மூங்கில் கோல் ஒன்றினை ஒரு முனையைத் தாமும், மற்றொரு முனையைத் தம் மனைவியாரும் பற்றிக் கொண்டு குளத்தில் மூழ்கப் புக்க பொழுது, சிவயோகியார் 'மாதைத் தீண்டிக்கொண்டு உடன் மூழ்குக' என்று வற்புறுத்த, அவ்வாறு செய்தற் குத் தடையாக தங்களிடையே உள்ள சபதத்தை ஆங்குள்ளார் கேட்ப எடுத்துக்கூறி திருநீலகண்டர் தம் மனைவியாருடன் குளத்தில் மூழ்கி னார். வாவியில் மூழ்கிக் கரையேறும் கணவரும் மனைவியாரும் மேவிய முதுமை நீங்கி இளமை பெற்றுத் தோன்றினார்கள். அப்பொழுது சிவ யோகியாரும் அங்கிருந்து மறைந்து அம்மையப்பராக விடை மேலே வந்து காட்சியளித்து நாயனாரையும் அவர் தம் மனைவியாரையும் நோக்கி "ஐம்புலன்களையும் வென்றவர்களே! என்றும் இவ்விளமை நீங்காது நம் பால் விருப்போடு இருப்பீராக!" என்று அருள் புரிந்தார்.

புலிக்கால் முனிவராகிய வியாக்ர பாதர் நாள்தோறும் ஆன்மார்த்த பூசனை புரிந்துவந்தமையால் திருப் புலீச்சரம் என்னும் திருப்பெயரை உடைய இத்திருக்கோயில், திருநீல கண்டநாயனாருக்கும் அவர் தம் மனைவியாருக்கும் இளமைத் தன் மையை வழங்கியதால் இளமை யாக்கினார் கோயில் என்னும் திருப் பெயராலும் வழங்கப்பெற்றுவருகிறது.

## கணம்புல்ல நாயனார்

வடவெள்ளாற்றுத் தென்கரையில் அமைந்த இருக்குவேளூரில் கணம் புல்ல நாயனார் தோன்றினார். இப் பெயர் இவருக்கு உண்டாகிய கார ணப் பெயராகும். இவரது இயற் பெயர் தெரிந்திலது. இவர் இவ்வூர் குடிமக்களுக்குத் தலைவராய் விளங்கினார்.

பெருஞ்செல்வத்தினராகிய இவர் "செல்வத்துப் பயன் சிவத்தொண்டு செய்தலே" என்னும் சிறந்த கொள் கையை மேற்கொண்டொழுகினார். நாள்தோறும் சிவபெருமானின் திருக் கோயிலில் திருவிளக்கெரிக்கும் நற் பணியினை மிக்க ஆர்வத்துடன் செய்துவந்தார்.

நெடுங்காலஞ் சென்று வறுமை எய் திய நிலையில் தில்லையை அடைந்து தம் வீடு முதலியவற்றை விற்ற பொருளைக் கொண்டு திருப்புலீச்சரத் திருக் கோயிலில் திருவிளக்கெரித்து வந்தார். தம் செல்வங்களையெல்லாம்

இழந்த நிலையிலும் பிறர்பால் இரந்து பொருள் பெறுவது இழிவெனக் கருதி ‘கணம்புல்’ என்ற ஒருவகைப் புல்லை அரிந்து விற்று அதனால் கிடைத்த பொருளைக் கொண்டு நெய் வாங்கி திருவிளக்கேற்றி வந்தார்.

ஒருநாள் தான் அறிந்து வந்த கணம்புல் விலைக்கு விற்காதொழிய அப்புல்லைக் கொண்டே திருக்கோயி லில் திருவிளக் கெரித்தார். தாம் வழக்கமாக விளக்கெரிக்கும் யாமம் வரையிலும் விளக்கெரிக்க அப்புல் போதாமையால் அதனுடன் தமது திருமுடியினையும் சேர்த்து எரித்தார்.

அப்பொழுது சிவபெருமான் அம்மையப்பராக அவர் முன் காட்சி அளித்து அருள் புரிந்தார்.

## ஸ்ரீஅனந்தீசுவரன் திருக்கோயில்

சான்றோர்களால் கோயில் எனப் போற்றப் பெறும் பெருஞ் சிறப்பினை யுடைய சிதம்பரத்தில், தில்லைப் பெருங்கோயிலின் மேற்குத் திக்கில் அரை மைல் தூரத்தில் இத் திருக் கோயில் அமைந்துள்ளது. பதஞ்சலி முனிவர் தமது ஆன்மார்த்தமாகப் பூசனை புரிந்த திருக்கோயிலாகும் இது.

இறைவன் ஆடியருளும் ஆனந்தத் திருக்கூத்தினை உலக மக்கள் எல் லோரும் எக்காலத்தும் கண்டு வழி படுதல் வேண்டும் என்னும் பேரார் வத்துடன் பதஞ்சலி முனிவர் பெருந் தவம் இயற்றினர். இம்முனிவரது வேண்டுகோளுக் கிணங்கியே சிவ பெருமான் தில்லைச் சிற்றம்பலத்தில் அனவரத தாண்டவமாகிய ஆனந் தத் திருக் கூத்தினை என்றும் ஆடி யருள்கின்றார். இச் செய்தியினைப் ‘பதஞ்சலிக்கு அருளிய பரம நாடக’ எனத் திருவாசகத்திலும் ‘நாகம் தொழ எழில் அம்பலம் நண்ணி நடம் நவில்வோன்’ எனத் திருக்கோவை யாரிலும் மணிவாசகப் பெருமான் எடுத்துரைத்துப் போற்றியுள்ளார்.

பாற்கடலிலே பாம்பணையில் அரி துயில்கொள்ளும் திருமால், ஒருநாள் சிவபெருமான் திருக் கூத்துத் தரி சனத்தைச் சிந்தையில் எண்ணியவ ராய்க் கண்களில் நீர் மல்க கைகளைத் தலைமேற் குவித்து ‘அரகர சங்கர’ எனப் போற்றிச் சிவானந்தத்தில் திளைத்து அசைவின்றியிருந்தார். அவர் தம்முணர்வு பெற்று விழித்துப் பார்த்தபொழுது, அவர்க்குப் படுக் கையாகப் பணிபுரியும் ஆதிசேடன் அவரது பேரானந்த நிலைக்குக் காரணமாக அமைந்தது சிவபெரு மானது திருக்கூத்து என்பதனைக் கேட்டறிந்து, தானும் அத்திருநடனத் தைக் கண்டு மகிழ்தற்குப் பெரிதும் விரும்பினன். அவனது தணியா வேட்கையினை உணர்ந்த திருமால், அவனை நோக்கி ‘சேடனே!’ நீ உன் புதல்வனை எனக்குப் பாயற்பணிபுரிய கற்பித்துவிட்டு இறைவனது திருக் கூத்தினைக் கண்டு மகிழும் பெருந் தவத்தினை மேற்கொள்வாயாக எனப் பணித்தருளினர்.

ஆதிசேடன் அவ்வாறே திருக் கயிலாய மலையை யடைந்து பெருந்



திருக்களாஞ் செடியுடையார் திருக்கோயில்
(சிதம்பரம் சிங்காரத்தோப்பு)



சைவ சமயக் குரவர்கள்



குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சி ரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண் ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப் பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிந்த மாநி லத்தே.

தவம் புரிந்து, சிவபெருமானது திரு வருளைப் பெற்று, அவர் பணித்த வண்ணம், அத்திரி முனிவர்க்கும் அநசூயைக்கும் மகனாகத் தோன்றிய பழைய வடிவினை மேற்கொண்டு நாகலோகத்தை யடைந்து ஞானமய மாய்த்தோன்றிய மலையினை வணங்கி, அதனருகே உள்ள பிலத்தின் வழியே தில்லைத் தலத்தையடைந்து, வியாக் கிரபாதர் என்னும் புலிக்கால் முனிவரைக் கண்டு அவருடன் நட்பு பூண்டார். தில்லையின் மேற்றிசையில் நாகசேரி என்ற தீர்த்தத்தை உண் டாக்கி அதன் கண் நீராடி, அதன் கீழ்க்கரையில் சிவலிங்கப் பெருமானை தாபித்து ஆன்மார்த்த மூர்த்தியாக நாள்தோறும் பூசனை புரிந்துவந்தார். அத்திருக் கோயிலின் வடதிசையில் அமைந்த பர்ண சாலையில் தங்கிக் கொண்டு திருமூலட்டானப் பெருமா னையும், திருப்புலீச்சரப் பெருமானை யும் நாள் தோறும் வணங்கி மகிழ் வுற்றார்.

பதஞ்சலி முனிவர், வியாக்ரபாதர் ஆகியவர்களது பேரன்பிற்கு உள முவந்த சிவபெருமான் தைப் பூசத் திருநாளில் நண்பகலில் திருச்சிற்றம் பலத்திலே நடராசப் பெருமானாகச் சிவகாமி அம்மையுடன் தோன்றித் திருக்கூத்துத் தரிசனம் வழங்கியரு ளினான் எனக் கோயிற் புராணம் கூறுகிறது.

அனந்தனாகிய பதஞ்சலி முனிவரால் தாபிக்கப் பெற்ற இறைவன் எழுந் தருளியுள்ளமை பற்றி இத் திருக் கோயில் அனந்தீஸ்வரம் என்னும் திருப்பெயரையுடையதாயிறறு.

## திருக்களாஞ்செடியுடையார் திருக்கோயில்

திருமுறை ஆராய்ச்சிக் கலைஞர்
வித்துவான், திரு. க. வெள்ளைவாரணன்

சிதம்பரத்தின் வடமேற்குத் திசை யில் சிங்காரத் தோப்பு என வழங்கப் பெறும் இடத்திலுள்ள திருக்களாஞ் செடியுடையார் திருக்கோயிலாகும். இது திருக்களாஞ்சேரி எனவும் வழங் கும். இத்திருக்கோயிலில் எழுந்தரு ளிய இறைவனைப் பிரமபுரீசர் எனவும் இத்திருக்கோயிலின் எதிரே வட கீழ்த்திசையிலுள்ள இதன் தீர்த்தத் தைப் பிரமதீர்த்தம் எனவும் வழங் குவர் பெரியோர்.

கௌடதேச மன்னன் மனுவின் மூத்த மைந்தன் சிங்கவன்மன். உடற்பிணியால் வெண்ணிறமுடைய சிங்கவன்மன் தனக்கு அரசபதவி ஏற்புடையதன்று என அதனை வெறுத்துத் தம்பியருள் ஒருவர்க்கே அப்பதவியைக் கொடுக்கும்படி தந்தையை வேண்டித் தான் சிவதல யாத்திரை செய்தற்குச் சென்றான் தீர்த்த யாத்திரை செய்து தென் னாட்டை யடைந்த சிங்கவன்மன் வேடனொருவன் வழிகாட்டத் தில்லை வனத்தை யடைந்து வியாக்கிரபாத முனிவரை வணங்கித் திருவைந் தெழுத்துபதேசம் பெற்றான். அவர் பணித்த வண்ணம் சிவகங்கையில்

நீராடி உடற்பிணி நீங்கிப் பொன்னிற் மேனியனுய் இரணியவன்மன் என அழைக்கப் பெற்ருன். இவன் தில்லையில் இருக்கும் பொழுது இவன் தந்தையாகிய கௌடதேச மன்னன் தன் அரசினை மூத்த மைந்தன் சிங்கவன்மனைக்கொண்டு நடத்துவிக்கும்படி வசிட்ட முனிவரை வேண்டிக் கொண்டு விண்ணுலகடைந்தான். அவனுக்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்களை அவனுடைய இளைய மைந்தர்கள் முற்றுவித்தனர், அவர்களது வேண்டுகோளின்படி இரணியவன்மனை அழைத்தற்கெனத் தென்றிசை நோக்கிவந்த வசிட்ட முனிவர் தில்லை வனத்தின் வடமேற்றிசையில் உள்ள திருக்களாமர நிழலில் எழுந்தருளியிருக்கும் பிரமபுரீசரை வழிபட்டுப் போற்றினர். அந்நிலையில் திருப்புலீச்சரப் பெருமானை வழிபாடு செய்திருந்த வியாக்கிரபாத முனிவர் வசிட்ட முனிவரது வருகையையுணர்ந்து தன் அருகேயுள்ள இரணியவன்மனை நோக்கி "நாம் இப்பூசையை முடித்துக் கொண்டு வருவோம் நீ முன்னே செல்க" எனப் பணித்தருளினர். அப்பணியினை மேற்கொண்ட இரணியவன்மன் முன்சென்று வசிட்டமுனிவரை வணங்கினன்; தன் தந்தை விண்ணுலகடைந்த செய்தியை வசிட்டர்கூறக் கேட்டுத் துக்கமுற்ருன். சிறிதுநேரத்திற்குள்ளே வியாக்கிரபாதர் பதஞ்சலி ஆகிய முனிவர் இருவரும் அங்குவந்தனர். வசிட்டர் எதிர்கொண்டு அவ்விருவரையும் வரவேற்ருர். வியாகிரபாத முனிவர் இரணியவன்மனை மனந்தெளிவித்து வசிட்ட முனிவரை அழைத்துக்கொண்டு சென்று சிவகங்கையில் நீரரடச் செய்து தில்லைச் சிற்றம்பலத்தில் ஆனந்த நிருத்தஞ் செய்தருளும் கூத்தப் பெருமானையும் திருமூலட்டான முடையாரையும் திருப்புலீச்சரமுடையாரையும் திருவனந்தீச்சுரமுடையாரையும் வணங்குவித்துத் தமது ஆச்சிரமத்தில் வசிட்ட முனிவர்க்கு விருந்துபசரித்தார், இவ்வரலாறு கோயிற் புராணத்திற் கூறப்பெற்றுள்ளது.

இவ்வரலாற்றைக் கூர்ந்து நோக்குமிடத்து சிதம்பரம் சிங்காரத் தோப்பிலுள்ள திருக்களாஞ்செடியுடையார் திருக்கோயிலாகிய பிரமபுரீசர் கோயில் தில்லைத் திருமூலட்டானம், திருப்புலீச்சரமாகிய இளமையாக்கினர் திருக்கோயில் அனந்தீச்சுரத் திருக்கோயில் ஆகிய கோயில்களைப் போன்றேமிகவும் தொன்மைவாய்ந்ததென்பதும், இத்திருக்கோயிலில் எழுந்தருளிய சிவலிங்கத் திருமேனி வசிட்டமுனிவரால் வழிபாடு செய்யப் பெற்றமூர்த்தியென்பதும் இக்கோயிலின் எதிரே வட கீழ்த்திசையிலுள்ள திருக்குளம் தில்லைக் கூத்தப்பெருமானுக்குரிய பத்துத் தீர்த்தங்களில் ஒன்ருகிய பிரமதீர்த்தம் என்பதும் நன்கு விளங்கும்.

இவ்வாறு மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்ருலும் முதன்மை பெற்று விளங்கும் திருக்களாஞ்செடியுடையார் திருக்கோயில் கி. பி. பன்னிரண்டாம் நூற்ருண்டில் சோழர் ஆட்சியிற் கருங்கற் கோயிலாகத் திருத்தி அமைக்கப்பெறறதெனத் தெரிகிறது. இக்கோயில் விமானத்தில் தென்புறத்தே தெட்சிணமூர்த்தி சந்நிதியின் கிழக்குப் பக்கத்தில் இத்திருக்கோயிலின் புராண நிகழ்ச்சி

கருங்கற் சிற்பமாகப் பதிக்கப் பெற்றுள்ளமை காணலாம். திரிபுவன வீர தேவனாகிய மூன்றாங் குலோத்துங்கன் ஆட்சிக் காலத்தும் அவனுடைய படைத்தலைவனும் பல்லவர் குலக் குறுநில மன்னனுமாகிய கோப்பெருஞ்சிங்கன் ஆட்சியிலும் இத்திருக்கோயிலிற் பொறிக்கப் பெற்றுள்ள கல் வெட்டுக்கள் இத்திருக்கோயிலின் நாள் வழிபாட்டிற்கும் திருவிளக்கிற்கும் நிபந்தமாக நிலம் அளிக்கப்பெற்ற அறச்செயலையும் இத்திருக்கோயிலுக்குரியோர் நிலம் வாங்கிய செய்தியையும் அறிவுறுத்துகின்றன. இத்திருக்கோயிலுக்குச் சிதம்பரத்தின் மேல்பாலுள்ள இளநாங்கூரிலும் வடபாலுள்ள மணலூரிலும் நிலங்கள் நிபந்தமாக அளிக்கப்பெற்றிருந்தன என்பது இக்கோயிலிலுள்ள கல்வெட்டுக்களால் அறியப்படும்.

தில்லையின் எல்லையில் இத்திருக்கோயில் அமைந்துள்ள இடம் முற்காலத்தில் 'பண்ணங்குடிச் சேரியான பரகேசரி நல்லூர்' என வழங்கப்பெற்றதென்பதும், இத்திருக்கோயிலை நிர்வாகஞ் செய்ய மாஹேஸ்வரக் கண்காணி செய்வார்களும் தேவர்கன்மியும் கோயிற் கணக்கரும் என அதிகாரிகள் பலர் இருந்தனர் என்பதும், இங்குள்ள கல்வெட்டுக்களால் நன்கு விளங்கும். சகல புவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ கோப்பெருஞ்சிங்கதேவரது ஆட்சியின் பதினேராம் ஆண்டில் இக்கோயிலில் வரையப்பெற்றுள்ள கல்வெட்டில் பெரும்பற்றப்புலியூர் ஆலச்சன் பொன்னம்பலக்கூத்தன் நிருத்தராசன் என்பான் திருக்களாஞ்செடியுடையார் கோயில் ஆதிசண்டேஸ்வரதேவர் திருவருளால் ஐயாயிரம் காசினைப் பெற்று இளநாங்கூரில் தனக்குரியதாகவுள்ள ஒன்பது மா நிலத்தை விற்றுக்கொடுத்த செய்தியைத் தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி XIIல் 161-ஆம் எண்ணில் வெளியிடப்பெற்றுள்ள இக்கோயிற் கல்வெட்டால் அறியலாம்.

சைவ சமய சந்தான ஆசிரியருள் மூன்றாமவரும் நாலாமவராகிய உமாபதிசிவாசாரியாரின் ஞானசிரியரும் ஆகிய மறைஞானசம்பந்தர் திருக்களாஞ்செடியுடையார் திருக்கோயிலில் பிரமபுரீசுவரரை வழிபட்டு இத்திருக்கோயில் திருமுற்றத்தையே தமது தவநிலையிருக்கையாகக் கொண்டு தில்லைப் பெருமானைச் சிந்தையிற் கொண்டுபோற்றிச் சிவயோக நெறியிற் சமாதி கூடியுள்ளார். இக்குருமூர்த்தியின்பால் ஞானோபதேசம் பெற்ற தில்லைவாழந்தணராகிய உமாபதி சிவாசாரியாரின் மாணவ பரம்பரையில் வந்த திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்தார் இத்திருக்கோயிலின் முற்றத்திலுள்ள மறைஞான சம்பந்தர் சமாதிக் கோயிலுக்கு இன்றும் பூசை செய்து வருதல் இங்குக் குறிப்பிடத்தகுவதாகும். இச்சமாதிக் கோயிலைத் தவிர இதன் மேற்புறத்திலுள்ள திருக்களாஞ்செடியுடையார் கோயிற்குப்பூசை செய்யும் வழக்கம் நாற்பதாண்டுகளாக நின்றுபோயிற்று எனத் தெரிகிறது. கோயிலுக்குரிய நித்திய பூசை நின்றமையால் கோயிலுக்குச் செல்வாரின்றிக் கோயிலில் மரஞ்செடிகள் வளர்ந்து புற்று மூடி இடிந்து சிதைவுறுவதாயிற்று. இடிந்து வீழ்ந்த கருங்

கற்களைக் கண்டோர் அவரவர் விரும்பிய இடங்களுக்கு எடுத்துச் சென்று விட்டார்கள் பிள்ளையார் கோயிலும் அம்பிகை கோயிலும் சிதைவுற்று இடிந்தன. கோயில் விமானத்தின் முன் மண்டபம் வேராற் பிளப்புற்றுத் தூண் ஒடிந்து சரியும் நிலையில் உளது. கோயிலில் உள்ள மூர்த்தங்கள் சில காணப்பெறவில்லை. இந்நிலையில் உள்ள மூர்த்தங்களும் வெளியாராற் கவரப்படாதவாறு பிள்ளையார் அம்பிகை சண்டீசர் முதலிய திருவுருவங்களை அன்பர் சிலர் கோயில் கருவறையை யொட்டிய முன் மண்டபத்னுள்ளே வைத்துள்ளனர். இக் கோயிலிலுள்ள ஆலமர் செல்வராகிய தட்சிணாமூர்த்தியின் திருவுருவம் கண்டோர் உளங்கவரும் வனப்பினதாகும்.

இக்கோயிலுக்குரிய நிலங்களும் உடைமைகளும் கவனிப்பாரின்றி அவரவர் அனுபவப் பொருளாக மாறினமையால் இக்கோயிலில் நித்திய பூசை செய்வதற்கோ இரவில் விளக்கெரிப்பதற்கோ ஒருவரும் இலராயினர். சிதம்பரத்திலுள்ள பெருங் கோயில்களுள் ஒன்றாகிய இதனைக் கவனிக்கும் பொறுப்புடையார் இன்னார் என்பது தெரியாமலே இக் கோயில் கேட்பாரற்று உளது. இதற்குரிய நிலங்களும் பிற உடைமைகளும் எப்படியோ கைமாறியிருத்தல் வேண்டும் இக் கோயிலைக் கண்காணிக்கும் பொறுப்புடையவர்கள் தம் கடமையினை கைநெகிழ விட்டமையினாலேதான் இக்கோயில் இவ்வாறு இடிந்து சிதைவுறும் நிலையினை எய்தியது. பிரமபுரீசர் திருக்கோயிலும் இதன் திருமுற்றத்தின் தென் கீழ்ப் பகுதியிலுள்ள இடிந்த மண்டபமும் இதன் வடக்கிலுள்ள மறைஞான சம்பந்தர் சமாதிக் கோயிலும் சிதம்பரம் நகருக்குரிய பழைய வரைபடத்தில் ஈசுரன் கோயிலுக்குரியனவாகக் குறிக்கப்பட்டுள்ளன. இதன் வடகீழ்த் திசையிலுள்ள தீர்த்தம் ஈசுரன் கோயிற் குளம் எனக் குறிக்கப் பெற்றுள்ளது. இத் திருக்கோயில் பல்லாண்டுகளாக யாருடைய பாதுகாப்பிலுமின்றிச் சிதைந்து கேட்பாரற்று உள்ளது. சென்ற ஆண்டு முதல் அன்பர் சிலர் இத்திருக்கோயிலில் அவ்வப்பொழுது உழவாரப்பணி புரிந்து வருகின்றமை இங்குக் குறிப்பிடத் தகுவதாகும்

பூலோக கயிலாயமெனப் போற்றப் பெறும் சிதம்பர புராண வரலாறுகளுடன் நெருங்கிய சம்பந்தமும், சோழமன்னர் திருப்பணிகளைப் பெற்றுள்ள வரலாற்றுத் தொடர்பும் சைவ சமய சந்தான குரவருள் மூன்றாமவராகிய மறைஞான சம்பந்தரால் வழிபடப் பெற்றதாகிய சித்தாந்த பரம்பரைத் தொடர்பும் ஒருங்கு வாய்க்கப் பெற்றது சிதம்பரம் சிங்காரத் தோப்பிலுள்ள திருக்களாஞ்செடியுடையார் திருக்கோயில் என்பது முன்னர்க் காட்டியசெய்திகளால் நன்கு புலனும். சைவ சமயத்திற்கு உய்வகையருளிய திருவருள் நிலையமாகிய இந் திருக் கோயிலின் சிதைவகற்றித் திருப்பணி செய்து இத் திருக்கோயிலில் நாள்தோறும் ஒரு காலமாவது நித்திய பூசை நடைபெறவும் நாள்தோறும் மாலைப்பொழுதில் திருவிளக்கு எரியவும் ஏற்பாடு செய்வது சைவ நன்மக்களது இன்றியமையாக் கடமையாகும். இன்னார்க் குரியதென்று சொல்லமுடியாத நிலையிற்

கேட்பாரற்றுச் சிதைவுற்றுள்ள இத் திருக்கோயிலைத் தமிழ் நாட்டு அற நிலையப் பாதுகாப்புத் துறையினரே தம் பொறுப்பில் எடுத்துக்கொண்டு ஊர் மக்களில் கோயில் திருப்பணியில் விருப்புடைய குழுவினரைக் கொண்டு திருப்பணி செய்வித்து நாள்தோறும் ஒரு காலமேனும் நித்திய பூசை நடைபெறுதற்குரிய ஏற்பாடுகளைச் செய்துதவுதல் காலத்தினாற் செய்த அறப்பணியாகும்.

## ஸ்ரீ தில்லையம்மன் கோயில்

புலவர், திரு. து. சோ. நடராசன்

இப்பரத கண்டத்தில் பூலோக கைலாயம் எனப் போற்றப்படுவது பெரும் பற்றப் புலியூராகிய சிதம்பரமே. இத்தலத்தில் இறைவனது திருவருளைப் பெற்ற தெய்வங்களுறையும் திருக்கோயில்கள் பல உள்ளன. அவற்றுள் தில்லை நடராசப் பெருமான் திருக்கோயிலையடுத்து மக்களால் போற்றப்பெறும் திருக்கோயில் தில்லையம்மன் கோயிலாகும்.

இக்கோயில் தில்லைப்பெருங் கோயிலுக்கு வடக்கே கால் மைல் தூரத்தில் அமைந்துள்ளது இக்கோயில் மேற்கு நோக்கிய சந்நிதியாகும். இச்சந்நிதியாகும். இச் சந்நிதியின் எதிரே சிவப்பிரியை என்ற தீர்த்தம் அமைந்துள்ளது. இத்தீர்த்தம் தில்லை நடராசப் பெருமானுக்குரிய பத்துத் தீர்த்தங்களுள் ஒன்றாகும். இத் திருக்கோயிலின் கருவறையில் எழுந்தருளியிருக்கும் அம்மையின் திருப்பெயர் "தில்லைவனமுடைய பரமேசுவரி" எனக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. வடமொழிப் புராணத்தில் இவ் அம்மையின் பெயர் "பிரம்ம சாமுண்டீசுவரி" எனக் குறிக்கப்பட்டுள்ளது. இவ் அம்மை நான்கு திருக்கரங்களும் கொண்டு தன்னை வழிபடும் அன்பர்களுக்கு வேண்டிய வரங்களையருளும் அமைதித்தோற்றத்துடன் அமர்ந்த திருக்கோலத்துடன் எழுந்தருளியிருக்கிறாள்.

இக் கோயிலுக்குள் அம்மையின் சந்நிதிக்கு எதிரே சிறிது வடக்கில் தில்லைக் காளியின் சந்நிதி அமைந்துள்ளது. கிழக்கு நோக்கிய நிலையில் அமைந்த இச்சந்நிதியில் எழுந்தருளியுள்ள கோர சக்தியாகிய ஸ்ரீகாளியின் திருவுருவம் சுதையினால் அமைக்கப் பெற்றுள்ளது. இத்திருவுருவமே தில்லைக்காளியென வழங்கப்படுகிறது. இதனுடைய கோரநிலைக்கு அடையாள மாக இதனைக் குங்குமத்தால் மூடியிருத்தலைக் காணலாம்.

கோயிலின் நடுவே மேற்கு நோக்கிய நிலையில் அமைந்த பிரம்ம சாமூண்டீசுவரியின் திருவுருவம் அமைதிக் கோலமாகவும், அதனெதிரே வடமேற்குத் திசையில் கிழக்கு நோக்கி யமைந்த தில்லைக் காளியின் திருவுருவம் கோரரூபமாகவும் காணப் பெறுகிறது. இவைபற்றி புராணங்களில் காணப்பெறும் வரலாறு.

தில்லைவனமாகிய இத் தலத்தில் நடராசப் பெருமானுக்குத் திருக்

கோயில் ஏற்படுவதற்குமுன்னமேயே ஸ்ரீகாளிதேவிக்குக் கோயில் அமைந்திருந்தது. சிவபெருமான் வியாக்கிர பாதமும் பதஞ்சலி முனிவரும் தம்மை வேண்டி வழிபட்டமைக்கு இரங்கி ஆனந்த தாண்டவ தரிசனத்தைக் காட்டியருளத் திருவுளங்கொண்டார். அப்பொழுது தில்லைவனத்தின் ஆதி தெய்வமாய் இருந்த காளி மிகவும் செருக்குற்றுத் தன்னுடன் ஆடற் போட்டிக்கு வரவேண்டுமென்று சிவ பெருமானை அழைத்தாள். அவளது செருக்கை அடக்க எண்ணிய சிவ பெருமான் நடனத்தில் வெற்றி பெற்றவர் எவரோ அவரே இத்தில்லைத் திருக்தலத்திற்குத் தலைவராக வேண்டுமென்றும், ஆடலில் தோல்வியுற்றவர் இத்தலத்தை விட்டு இதன் எல்லையை அடைய வேண்டுமெனலாம் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டு, தேவர், முனிவர் முதலியோர் காணக் காளியுடன் ஆடத் தொடங்கினர். சிவபெருமானோடு ஆடற் போட்டியிற் கலந்துகொண்ட காளி அப்பெருமான் ஆடிய ஊர்த்துவத் தாண்டவம் என்னும் நடனத்தைக்கண்டு அதனையொப்பத்தானும் ஆட முடியாத நிலையில் வெட்கி தலைகுனிந்து தனது தோல்வியை ஒப்புக்கொண்டாள். அதனல் தில்லைவனத்தின் நடுவில் கோயில் கொண்டிருந்த அவ்அம்மை அந்நகரத்தைவிட்டு அதன் எல்லையை அடைய வேண்டிய நிலை ஏற்பட்டது இவ்வரலாற்றை ஒட்டியே "தில்லைக்காளி எல்லைக்கப்பால்" என்ற பழமொழியும் வழங்குவதாயிற்று

தில்லையின் எல்லையை அடைந்த ஸ்ரீகாளிதேவி தான் முன் சிவபெருமானை மதியாது வாதுக்கு அழைத்த குற்றம் தீரவேண்டிச் சிவப்பிரியை என்ற தீர்த்தத்தில் மூழ்கி இறைவனை வழிபட்டு கோரவுருவம் நீங்கி "தில்லை வனமுடைய பரமேசுவரி" என்னும் திருப்பெயருடன் இத்திருக்கோயிலில் எழுந்தருளி, தன்னை வழிபடும் அன்பர்கள் வேண்டிய நலங்களையெல்லாம் வேண்டியவாறே வழங்கியருளுகின்றாள்.

எவ்வுயிர்க்கும் அன்னையாகிய இறைவியே கொடியோரை ஒறுத்து நல்லோரைக் காத்தற் பொருட்டுக் கோர சக்தியாகிய காளியாகத் திருவுருக் கொண்டாள். தீமையைச் சினந்து நீக்கும் நிலையில் அமைந்த இவ் அன்னையை வழிபடுதல் தீயவைகளையும் தீய எண்ணங்களையும் எதிர்த்து அழிக்க வல்ல பேராண்மையை நமக்கு வழங்கும் ஆற்றல்மிக்க வழிபாடாகும்.

தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி-8, எண் 77 லிருந்து கி. பி. 1229 முதல் 1278 வரை சோழ நாட்டின் வடபகுதியைக் கைப்பற்றி ஆட்சி புரிந்த பல்லவகுலச் சிற்றரசனாகிய கோப்பெருஞ்சிங்கன் காலத்தில் தில்லையம்மன் கோயிலாகிய இத்திருக்கோயில் புதிதாகக் கட்டப்பட்டிருத்தல் வேண்டுமெனத் தெரிய வருகிறது.

## கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார்

சைவசமயச் சான்றோர்களால் சந்தனுசிரியர் எனப்போற்றப் பெறும் நால்வருள் நான்காமவராக வைத்துப் போற்றப் பெறுபவர் கொற்றவன் குடி உமாபதி சிவாசாரியார் ஆவர்.

வேதமும், சைவ நெறியும் தழைத்தோங்க கி பி. நான்காம் நூற்றுண்டில் தில்லை வாழந்தணர் மரபில் தோன்றினர். செந்தமிழையும் வட

மொழியையும் நன்கு பயின்று தேர்ந்தார். வேதங்களையும் சிவாகமங்களையும் ஓதியுணர்ந்தார். தில்லை மூவாயிரவருள் ஒருவராய்த் தில்லைச் சிற்றம்பலப் பெருமானது திருமேனியினைத் தீண்டிப் பூசிக்கும் நற்பேறு பெற்ற இப்பெருந்தகையார், ஒருநாள் சிவிகையிலமர்ந்து பகல் விளக்குடன் திருக்கோயிலுக்குச் சென்றார். அப்பொழுது மெய்கண்ட தேவர் மாணவராகிய அருணந்தி சிவாசாரியார்க்கு மாணவராகிய மறைஞான சம்பந்தர் என்பவர், இவரது பரிபக்குவத்தினை நன்குணர்ந்து 'பட்ட கட்டையிற் பகற் குருடு எகுதல் பாரீர்' என்று இவர் செவியிற் படுமாறு கூறினார். இச் சொல்லைச் செவிமடுத்த இவர், சிவிகையை விட்டுக் குதித்து விரைந்து ஓடி மறைஞான சம்பந்தர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அவ்வாசிரியர்பால் மெய்யுணர்வு உபதேசம் பெற்றுச் சிவஞானச் செல்வராயினார். தம் பண்டைக் குலத்தை மறந்து, தொண்டக் குலத்துள் முதல்வராகிய உமாபதி சிவாசாரியர், தில்லையின் கீழ்த்திசையிலுள்ள கொற்றவன் குடியில் எழுந்தருளியிருந்து, தம்மை யடைந்த மாணுக்கர் பலருக்கும் சிவ தீக்கை செய்து சிவஞான உபதேசம் செய்தருளிச் சைவசித்தாந்த நுண்பொருள்களையும் சைவத் திருமுறைகளின் பெருமையினையும் விரித்துரைக்கும் சிறந்த நூல்கள் பலவற்றையும் இயற்றியருளினார்.

பெற்றான் சாம்பான் என்பவன் சிவஞானச் செல்வராகிய இவரது பெற்றியை யுணர்ந்து பேரன்பினால் இவரது மடத்திற்கு நாள்தோறும் விறகு கொணர்ந்து கொடுத்தலை நியமமாக மேற்கொண்டான். அத்தகைய பெற்றான் சாம்பானது வேண்டுகோட்கிணங்கித் தில்லைச் சிற்றம்பலமுடையவனாகிய இறைவன்

'அடியார்க் கெளியன்சிற்
றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச்
சீட்டு — படியின் மிசைப்
பெற்றான்சாம் பானுக்குப்
பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்கை முறை'

என்ற பாடலை எழுதி அவனிடம் கொடுத்தருளினார். அதனைப்பெற்ற உமாபதி சிவாசாரியார் அவ்வண்ணமே அவனுக்குப் பேதமற சிவதீக்கை செய்து இப்பிறவியிலேயே அவனுக்குச் சிவபேறு நல்கினார். அவனுடைய சுற்றத்தார் அதனை நம்பாமல் ஐயுற்றனர். எனவே அவர்களும் காணத் தம் திருமடத்தில் அபிடேக நீரிற்செழித்து வளர்ந்திருந்த முள்ளிச்செடிக்கும் அம்முறையிலேயே சிவதீக்கை செய்து முத்தி கொடுத்தருளினார் என்பது இவ்வாசிரியரைக் குறித்து வழங்கும் செவிவழிச் செய்தியாகும்.

சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் என்னும் சித்தாந்த நூல்கள் எட்டும், கோயிற்புராணம், திருமுறை கண்ட புராணம், சேக்கிழார் புராணம், திருத்தொண்டர் புராண சாரம், திருப்பதிக் கோவை என்பனவும், வடமொழியில் பவுட்கரம் என்னும் உபாகமத்திற்கு எழுதிய விருத்தியுரையும் இவரால் எழுதப் பெற்ற

நூல்களாகும். இவர் சங்கற்ப நிரா கரணம் என்னும் நூலினை 'ஏழஞ்சிரு நூறெடுத்த ஆயிரம், வாழுநாற் சகனம் மருவா நிற்ப' இயற்றியதாக அந்நூலில் தெளிவாகக் குறிப்பிட்டிருத்தலால், அந்நூல் சாலிவாகன சகம் 1235-க்குச் சரியான கி. பி. 1313-ல் இயற்றப் பெற்றதென்பதும், இவரது காலம் பதினான்காம் நூற்றாண்டு என்பதும் தெற்றென விளங்கும். சைவ சமயசந்தான ஆசிரியர்களுள் மூன்றாமவராகிய மறைஞான சம்பந்தரது சிவயோக சமாதி தில்லையின் வடமேற்குத் திசையில் சிங்காரத்தோப்பிலும் அவர்தம் மாணவராகிய உமாபதி சிவாசாரியாரின் சிவயோகசமாதி தில்லையின் தென்கீழ்த் திசையில் கொற்றவன் குடியிலும் அமைந்துள்ளமை தில்லை நகருக்குரிய தனிச் சிறப்பாகும்.

## சுடலையமர்ந்தார் கோயில் (மத்தியந்தனேசுவரம்)

திருமுறை ஆராய்ச்சிக் கலைஞர்
வித்துவான், திரு. க. வெள்ளைவாரணன்

சிதம்பரத்தின் தென்னெல்லையில் அமைந்த இத் திருக்கோயில் வியாக்கிரபாத முனிவருடைய தந்தையார் மத்தியந்தன முனிவரால் வழிபடப் பெற்றதாகும். அதுபற்றி இத் திருக்கோயில் மத்தியந்தனேசுவரம் எனப் பெயர் பெறுவதாயிற்று. தில்லையின் எல்லையிலே யமைந்த மயானத்தின் அருகேயுள்ள இத்திருக்கோயில் சுடலையமாந்தார் கோயில் எனக் கல்வெட்டுக்களிற் குறிக்கப் பெற்றுளது.

தொன்மை வாய்ந்த இத் திருக்கோயிலைக் கற்றளியாகக் (கருங்கற் கோயிலாக)ப் புதுப்பித்தவன் முதற் குலோத்துங்க சோழனாட்சியிலும் அவன் மகன் விக்கிரமசோழனாட்சியிலும் படைத் தலைவனாக விளங்கிய அரும்பாக்கிழான் மணவிற்கூத்தனான காலிங்கராயன் ஆவன். இவன் தொண்டைமண்டலத்து மணவிற் கோட்டத்து மணவில் என்னும் ஊரினன்; அருளாகரன், அரும்பாக்கிழான், பொன்னம்பலக் கூத்தன், நரலோகவீரன் முதலிய பெயர்களையுடையவன்; முதற் குலோத்துங்கன் வேணாடு, மலைநாடு, பாண்டிநாடு, வடநாடு முதலியவற்றுடன் நிகழ்த்திய போர்களிற் படைத் தலைமை தாங்கிப் பகைவரை வென்று தன் வேந்தனுக்குப் பெரு வெற்றியையும் பெரும் புகழையும் உண்டாக்கியவன்; அதுபற்றி வேந்தனாற் காலிங்கராயன் எனப் பாராட்டப்பெற்றவன். இவன் தில்லைக்கூத்தப் பெருமான்பால் பேரன்புடையனாய்ச் சிதம்பரத்திற் செய்த திருப்பணிகள் பலவாகும். அவற்றையெல்லாந் தொகுத்துரைக்கும் முறையில் அமைந்த 37 வெண்பாக்கள் சிதம்பரம் நடராசர் திருக்கோயில் திருச்சுற்றின் வடபுற மதிலில் வரையப்பெற்றுள்ளன (தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி IV பக்கம் 33,34) அத்திருப்பணிகளுள் சுடலையமர்ந்தார் கோயிலைக் கற்றளியாகப் புதுப்பித்தமையும் ஒன்றாகும், அதனை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது,

"தொல்லோர்வாழ் தில்லைச் சுடலை
யமர்ந் தார்கோயிற்
கல்லா லெடுத்தமைத்தான்
காசினியிற்-றெல்லை
மறைவளர்க்க வெங்கலியை
மாற்றிவழு வாமல்
அறம் வளர்க்கக் காலிங்கன்
ஆய்ந்து"

எனவரும் வெண்பாவாகும்.

இத் திருக்கோயிலின் எதிரில் அமைந்த புலிமடு என்பது தில்லை யிறைவர்க்குரிய பத்துத் தீர்த்தங் களுள் ஒன்ருகும். இறந்தோரது ஆன்மா நற்கதியிற் சேர்தற் பொருட்டு அவர்தம் எலும்பினை இப் புலிமடுவில் இட்டு மூழ்கியெழுந்து இங்குக் கோயில் கொண்டருளிய மத்தியந்தனேசுவரரை வழிபட்டு மன அமைதி பெறுதலைத் தில்லை நகர மக்கள் பலரும் இன்றும் வழக்கமாகக் கொண்டுள்ளமை இங்குக் குறிக்கத் தகுவதாகும்.

## தில்லையில் திருப்பாற்கடல் தீர்த்தமும் திருப்பெருந்துறைத் திருக்கோயிலும்

இது சிதம்பரத்தின் வடகீழ்த் திசை யில் தில்லையம்மன் என்னும் கோயி லின் தென்புறத்தே திருப்பாற் கடல் தீர்த்தம் உள்ளது. இத் தீர்த்தத் தினைத் தன்பாற்கொண்டுவிளங்குவது திருப்பாற்கடல் மடமாகும்.

தந்தையார் மத்தியந்தன முனி வரது ஆணைப்படி வியாக்கிரபாதர் வசிட்ட முனிவருடைய தங்கையை மணந்து மனையறம் நிகழ்த்தும் நிலை யில் அவ்விருவருக்கும் மகவாகத் தோன்றியவர் உபமன்னிய முனிவ ராவர். தம்பாட்டானுர் ஆச்சிரமத்திற் காமதேனுவின் பாலைப்பருகி வளர்ந்த குழந்தையாகிய இவர் தம் தந்தை யாரால் அழைக்கக்கப்பெற்றுத் தில்லையில் அவரது ஆசிரமத்திற்குக் கொணரப் பெற்ற பொழுது கிழங்கு பழ முதலியவற்றையும் நீரிற்கரைத்த மாவையும் உட் கொள்ளாது காம தேனுவின் பாலையே விரும்பி யழுதார் அந்நிலையில் வியாக்கிரபாதர் தம் குழந்தையைத் திருமூலட்டானர் சந்நிதியிற் கொண்டுவந்து வளர்த்தி ஞர். குழந்தையின் அழுகைக்கு இரங்கிய சிவபெருமான் அக்குழந்தை யின் பசிதீர்த்தற்பொருட்டுத் திருப் பாற் கடலை அழைத்தருளினுர். குழந்தை பாற்கடலைப் பருகிப் பசி தீர்ந்து வளர்ந்தது. இப்புராணச் செதியினை,

"பாலுக்குப் பாலகன் வேண்டியழு
திடப் பாற்கடல் ஈந்த பிரான்'

எனவரும் திருப்பல்லாண்டில் சேந்த னுர் இத்தலத்தின் வரலாருகக் குறித் துள்ளார். இறைவனுல் உபமன்னிய முனிவர் பொருட்டு அழைக்கப்பெற்ற பாற்கடலினை நினைவுகூரும் முறையில் அமைந்த தீர்த்தமே சிதம்பரத்தி லுள்ள திருப்பாற்கடல் என்னும் இத் தீர்த்தமாகும்.

இத்தீர்த்தத்தினை யொட்டி இதன் வடக்கேயமைந்தது திருப்பெருந் துறை என்னும் திருக்கோயிலாகும். சிதம்பரத்தின் கீழ்த்திசையில் பர்ண

சாலேயில் மணிவாசகப் பெருமான் சிவயோகம் புரிந்திருக்கும் நிலேயில், பாண்டி நாட்டில் திருப்பெருந்துறை என்னுந்தலத்தில் குருவாக எழுந்தருளித் திருவைந்தெழுத்து பதேசித்துத் தம்மை ஆண்டுகொண்டருளிய ஆன்மநாதப் பெருமானேயும் சிவயோகாம்பிகையினேயும் திருப்பெருந்துறையில் திருவடியுருவில் வழிபட்டு மகிழ்ந்தாற் போலவே சிதம்பரத்திலும் அவ்வாறு திருவடியுருவில் வழிபட்டு மகிழந்தார் என்பதனேப் புலப்படுத்தும் முறையிம் தெற்கு நோக்கிய இத்திருக் கோயில் அமைந்துள்ளமையும் திருப்பெருந்துறையிற் போலவே மேற்புறத்திலும் கீழ்ப்புறத்திலுமாக அம்பிகை கோயிலும் இறைவன் கோயிலும் அமைந்துள்ளமையும் அவ் விருகோயில்களினுள்ளேயும் திருவுருவமாக அன்றித் திருவடிகளே அமைக்கப்பெற்றுள்ளமையும் ஆன்மநாதர் கோயில் விமானத்திற் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டில் அக்கோயில் திருப்பெருந்துறை எனக் குறிக்கப் பெற்றுள்ளமையும் காணலாம். இவ்வாறு மணிவாசகப் பெருமான் வரலாற்றுடன் நெருங்கிய தொடர்புடைய திருவருள் நிலேயமாகிய இத் திருக்கோயில் நன்கு பேணப்படாது சுற்றுமதில்கள் தகர்ந்து தன்னெல்லேயில் மிகவும் சுருங்கி பலர்க்கும் விளேயாட்டிடமாகவும் ஒதுக்கிடமாகவும் அமைந்து தனது தொன்மைச் சிறப்பினேயிழந்துள்ளமை பெரிதும் வருந்தத் தகுவதாகும். வரலாற்றுச் சிறப்புவாய்ந்த இத் திருக்கோயிலே மேலுஞ் சிதைவுருதவாறு பேணிக் காத்தல் தில்லேநகரப் பெருமக்களது தலேசிறந்த கடமையாகும்.

## சேக்கிழார் நாயனுர் திருக்கோயில்

சைவத் திருமுறைகளுள் பன்னிரண்டாந் திருமுறையெனப் போற்றப் பெறும் திருத்தொண்டர்புராணத்தை அருளிச்செய்தவர் சேக்கிழார் நாயனுர் என்பதனேத் தமிழகம் நன்குணரும். இன்றைக்கு எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர்த் தொண்டை நாட்டிற் புலியூர்க்கோட்டத்தினேச்சார்ந்த குன்றத்தூரில் வேளாண் மரபாகிய சேக்கிழார் குடியிற்ருேன்றிய அருண்மொழித்தேவர் என்னும் இயற்பெயருடையராய் வளர்ந்து கல்வி கேள்விகளிற் சிறந்த இப்பெருந்தகையார் சென்னி அபயன் குலோத்துங்க சோழனுக்கு அமைச்சராய்த் திருநாகேச்சரப் பெருமானே வழிபட்டிருந்தார்; பயனற்ற வெறுங் கதைகளேப் படித்து வீணுக்காது நாடும் மொழியும் சமயமும் வளம் பெறுதற்குரிய திருத்தொண்டர் வரலாறுகளேயே கற்றல் வேண்டும் என அரசிளங் குமரனுக்கு அறிவுரை பகர்ந்தார்; மன்னனது வேண்டுகோட் கிணங்கித் தில்லேயையடைந்து கூத்தப்பெருமானே வழிபட்டு ‘உலகெலாம்’ என அம்பலவர் அடியெடுத்துக் கொடுக்கப் பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டத் திருத்தொண்டர் புராணமாகிய பெருங்காப்பியத்தைப் பாடி முடித்தார் சோழமன்னது ஆதரவிற்பெரிய புராணமாகிய இத்திருவருட் பெருங் காப்பியத்தினே தில்லேப் பெருங் கோயில் ஆயிரக்கால் மண்டபத்தில் அமர்ந்து அரங்கேற்றியருளினுர்.

சித்திரைத் திருவாதிரை தொடங்கி அடுத்த ஆண்டு சித்திரைத் திருவாதிரை முடிய இவ்வரங்கேற்றம் ஓராண்டு நிகழ்ந்து இனிது நிறைவேறியது. இவ்வருள் நூலைப் பாடினமையால் 'தொண்டர் சீர் பரவுவார்' என்னும் சிறப்புப் பெயரினைப் பெற்ற சேக்கிழார் நாயனுர் அமைச்சர் பதவியினைத்துறந்து துறவு மேற்கொண்டு தில்லையம்பலவரைக் காலங்கள் தோறும் வழிபட்டிருந்து ஆடவெடுத்திட்ட சேவடிக் கீழ் அமரும் பெருவாழ்வு பெற்றுர் என்பது வரலாறு.

தில்லையம்பதியிற் சிவபதமடைந்த சேக்கிழார் நாயனுர்க்குத் தில்லைப் பெருங் கோயிலில் அக்காலத்தில் சந்நிதியமைந்திருத்தல் வேண்டும். சிவநெறிச் செல்வத்தை உலகினர்க்களித்த சேக்கிழார் நாயனுர்க்குச் சிதம்பரத்தில் சிறப்புடைய திருக்கோயில் இருத்தல் வேண்டும் என இலங்கைத் தமிழர்கள் பல்லாண்டுகட்கு முன்னரே சிதம்பரம் ஞானப்பிரகாசத் திருக்குளத்தின் வடகரையில் அமைத்துச் சேக்கிழார் திருவுருவத்தைப் பிரதிட்டை செய்து நாள் தோறும் பூசை நிகழ ஏற்பாடு செய்துள்ளார்கள். இத்திருக் கோயிலில் சேக்கிழார் பெருமானுக்கு தவத்திரு ஆறுமுகநாவலர் அறக் கட்டளையின் சார்பில் நாள்தோறும் பூசனை நிகழ்ந்து வருதல் இங்குக் குறிப்பிடத் தகுவதாகும்.

## கீழத்தெரு மாரியம்மன் கோயில்

திரு, S. வெங்கட்ராம சாஸ்திரிகள்

ஸ்ரீ சிவசக்தி ஐக்ய ரூபிண்யை நம: ஸ்ரீ தில்லையம்பதியில் சிவகாமசுந்தரி அம்பிகையோடு ஸ்ரீ நடராஜமூர்த்தி எழுந்தருளியிருக்கிருர். இப்பதி 1008 சிவலிங்கமும், அதன் சக்தியும் அமையப்பெற்ற இடம்.

தில்லைக்கோயிலில் ஞானசக்தியாக விளங்கிவரும் சிவகாமசுந்தரி தனியிடம் பெற்று விளங்கி வருகிருர்.

தற்போது மகா மாரியாக விளங்கி வரும் அக்கினித்திக்கில் அக்கினீஸ்வரர் என்னும் லிங்கம் சக்தியுடன் பூஜிக்கப்பட்டு வந்தது. சிவகாம சுந்தரி நோன்புக்கு இணங்கி இறைவன் புரிந்த ஆனந்தத்தாண்டவ தரிசனத்தைத் தைமாத புஷ்ய நட்சத்திரத்தில் பதஞ்சலி, வியாக்ரபாதரும் 48000 மகரிஷிகளும் தரிசித்தனர். சில ரிஷிமார்கள் ஸ்போடகம் என்ற நோயால் வருந்தினர். அவர்கள் சிவகாம சுந்தரியைத் துதிக்க தேவி தோற்றமளித்து அக்கினித்திக்கில் விளங்கிவரும் அக்கினிக்கு, நீக்க கட்டளையிட்டாள். அக்கினிதேவர், தேவியின் சிதம்பர ரகசியம் என்ற பூஜா விதியை மேற்கொண்டு அதன் வழியாக உபாசித்து வரும் சமயம், மகாமாரியாக ஆவிர்பதித்து சீதளாஷ்டகத்தை உபதேசித்து அதன் மூலமாக ரிஷிகளின் ஸ்போடக ரோகம் நீங்கச்செய்தார். அனைவரும் நடராஜரையும், சிவகாம சுந்தரியையும், போற்றினர். அக்கினிதேவரும் அருள் வழங்கி இன்றுமுதல் இவ்விடம்

அக்கினிமாரி என்றும், சிவமாரி என்றும் அனைவராலும் வழங்கப்படும் என்றார்.

அந்த மாரியம்மன் ஆலயம் சிதம்பரம் கீழத்தெரு மாரியம்மன் என்று புகழப்பெற்று இன்றுவரை எல்லாராலும் கொண்டாடப்பட்டு வருகிறது. இதன் உண்மையைத் தேவி மகாத்மியம் 11, 12, 13 ஆகிய அத்யாயங்களிலும், ரகசிய தீரயத்திலும் 'ஸர்வஸ்வம்' என்ற நூலிலும் விரிவாகக் காணலாம்.

இக்கோயிலில் ஒவ்வோர் ஆண்டும் ஆடி மாதத்தில் முதல் வெள்ளிக்கிழமையன்று ஸ்ரீ மாரியம்மன் உற்சவம் துவங்கி, பதினோராம் நாள் திங்கட்கிழமையன்று "தீ மிதித்தல்" என்கிற வைபவம் நடைபெறுவது மரபு. இதுவே அக்கினி தேவதையால் வழிபட்ட 'அக்கினி மாரியம்மனு'க்குப் பக்தர்கள் செய்யும் 'அக்னி வழிபாடு' எனக் கூறலாம்.

## ஸ்ரீ தெக்ஷிண காளியம்மன் கோவில்

திரு, சிவசங்கர தீக்ஷிதர்

முன்னொரு காலம் "தாருகன்" என்னும் அசுரன் குலத்தில் உதித்த "ஸ்போடன்" என்னும் அரக்கன் இச்சிதம்பர க்ஷேத்திரத்தைத் துன்புறுத்தலானான், அவ்வமயம் தில்லை வாழந்தணர்கள் கனகசபையை அடைந்து, பரமனிடம் இவ்வரக்கனின் துஷ்கிருத்தியத்தை விண்ணப்பித்தனர்.

அது கேட்டுப் பரமன் தயைகூர்ந்து 'ஓ அந்தணர்களே! பயப்படாதீர்கள்' என அபயம் தந்து, கைலயங்கிரியில் தெற்குக் கோபுரத்தில் விளங்குபவளும், ருத்ரனுடைய அட்டகாஸத்தில் உதித்தவளும், 'தாருகன்' என்கிற அசுரனை ஸங்கரித்தவளுமான காளிகாதேவியை நினைத்தார்.

அத்தேவியும் பரமனை அண்டிப் போற்றி, "யாது காரணம் பற்றி என்னை இங்கு வரும்படி நினைத்தீர்" எனக் கூறி அடி பணிந்து நின்றனள்.

உடனே, பரமன் கிருபை கூர்ந்து அக்காளியை நோக்கி, "இத்தலத்தைப் பாதிக்கும் ஸ்போடன்" என்கிற அரக்கனை ஸங்கரித்து, எனது தென்புறத்தில் இருந்து இத்தலத்தைக் காப்பாயாகுக, என்று சூலம், முதலிய ஆயுதங்களை அளித்து அருளினர்.

அத்தேவியும் பரமன் கட்டளைப்படி அவ்வசுரனை யுத்தத்தில் ஸங்கரித்து, அடங்காத கோபத்தோடு இருக்கும் தருணம் பரமனால் ஏவப்பட்ட விநாயகக் கடவுளின், நிர்த்தனத்தைக் கண்டு, கோபம் தணியப்பெற்று, பரமனது தென்புறத்தில் தெக்ஷிண காளிகா என்னும் பெயரோடு இத்தலத்தைக் காத்து, அன்பர்களுக்கு அருள் புரிந்து, அக்காலம் தொட்டு விளங்குகிறவளானாள்.

மணிவாசகரும், "உமையோடு காளிக்கு அருளிய திருமுகத்தழகு"

என இத்தேவியின் சரித்திரத்தை ஸூசிக்கின்றனர்.

'காளியோடாடி கனகாகலத்தாடி' என்ற திருமூலர் திருமந்திர ஒலியும், பரமனும், விநயகனும் ஒன்ருதலால் அவ்விதம் நிர்த்தனம், காளியின் கோபத்தைப் போக்கவேண்டி பரமனது ஆக்ஞையால் விநயகரால் அருளிச் செய்யப்பட்டது" என்னும் பொருளையும் உணர்த்துகின்றது.

பின்னும், சேக்கிழாரும், திருஞான சம்பந்தர் தில்லையம்பதியை அடையும் தருணம்,

"இழைத்தடங் கொங்கை
இமயமா மலைக்கொடி
யின்ன (ம்) முத் என ஞானங்
குழைத்தளித்திட வமுது
செய்தருளிய
குருளையார் வரக் கண்டு,
மழைத்த மந்தமாரு தத்திளுறு
மலர்
வண்ண நுண்டு கடுவித்
தழைத்த பொங்கெழின் முகஞ்
செய்து
வணங்கின தடம்பணை
வயற்சாலி
(திருஞானச்ம்பந்தர்புராணம்:
150 பாடல்)

இழைத்தடங் கொங்கை இமயமா மலைக்கொடி ஆபரணமணிந்த கொங்கைகளை உடைய இமவானின் குமாரி. ஞானங் குழைத்தளித்திட ஞானத்தோடு கூடி அளிக்கப்பட்ட வஸ்துவை (ஷீரத்தை), அமுது செய்தருளிய - உண்ட, குருளையார் வரக் கண்டு - குழந்தை (ஞானசம்பந்தர்) வரக்கண்டு, இன்னம் — பின்னும், முத் — ஸந்தோஷம், என — என்று மெச்ச, "மழைத்த மந்தமாருதம்" முதல் உள்ள பின் ஈரடிகள் வளப்பத்தைக் குறித்தது.

"உமா காத்யாயனி கௌரீ
காளீ ஹைம வதீஸ்வரி"

என்னும் பெயர்கள் அவ்விமயமலைப் புதல்விக்குக் கூறப்பட்டுள்ளன.

ஆகையால் 'இமயமாமலைக் ககாடி' என்பது இத்தெக்ஷிண காளியைக் குறித்ததே.

உபமன்யு பக்தவிலாஸ பரிசிஷ்டம் திருஞான சம்பந்தமூர்த்தி ஸகஸ்ர நாமத்தில் உள்ள, "சிதம்பர ஸ்வாக மன ப்ரித தெக்ஷிண காளிக:" என்னும் நாமாவே சேக்கிழார் வாக்குக்கு மூலமாக ஆகும்.

தெற்கிலிருந்து இக்காளிகாதேவியின் ஸந்நிதி வழியாக வந்தபடியால், இத்தேவிக்கு ஸந்தோஷம் உண்டானது என்பது பொருந்தமே.

இத்தேவியின் சரித்திரம் சிதம்பர ரஹஸ்யத்தில் கூறப்பட்டுள்ளது.

இத்தேவியின் ஆலயம் சேக்கிழார் காலத்திற்கு முன் கோபுரம் முதலியவைகளோடு விரிவாக இருந்ததாகத் தோன்றுகிறது.

இத்தேவியின் பூஜை தில்லை வாழந்தணர்களால் வைதிக முறைப்படி நடத்தப்பட்டு வருகிறது.



# ஞானமெலாம் ஈன்றளித்தும் தான்குமரியாகி இருந்தாள்

திரு. க. பாலசுப்பிரமணியம், எம்.ஏ.,

## 1. தில்லைச் சிவகாமி அம்மை இரட்டை மணிமாலை

அம்பலத்தாடியின் அருகமர்ந்து புகழ் பரப்பும் அன்னை சிவகாமிக்குப் பவழமும் முத்தும் என வெண்பாவும் கட்டளைக்கலியும் மிடைந்து நறுந்தமிழ்ப் பாமாலையாம் 'இரட்டை மணிமாலை' சூடி மகிழ்ந்தார் புலவரொருவர். அப்பெயர் தெரியாப் புலவர் பெருமான் கவி இருபானுள் படைத்தளிக்கும் விருந்து உண்ண உண்ணத் தெவிட்டாதது; அன்னை சிவகாமியின் சிறப்பையும் அன்னையால் ஆடும் பெருமான் பெறும் சிறப்பையும் அவளால் அடியார் பெறும் சிறப்பையும் விதந்தோதுவது; கற்பனை வளமும் சொற்பொருள் நயமும் சிறந்து கற்போர் நெஞ்சை நிறைவிப்பது.

## 2 அன்னையின் சிறப்பு

அன்னை சிவகாமி யார்? அவள் சிறப்பென்ன? அன்னையைத் தெரியாதா! அவள் திருத்தில்லை மன்றகத்து அடியார் தம் ஆணவவிருள் சூழ்ந்த நெஞ்சகமாக் கைக்கொண்டாள். அவள், உண்டோ? இல்லையோ? என ஐயுறும் மருங்கொசிய இவ்வையம் முழுதீன்றமான் (1). அவள் திருவுந்தி வாய்த்தது இவ்வோருலகு மட்டுமோ? இல்லை. பாரேழும் வாய்த்தது அவள் திருவுந்தி [2]. 'வடமேரு வில்லியை வாட்கண் அம்பாற்பொரும்' சிவகாமி வல்லி பூத்தலினால் அன்றே இப்பூமியைப் 'பூ' என்றார்! [4] பூத்த இவ்வீரேழ் புவனத்தைக் காத்தது அவள் கருணையன்றோ? [5]

ஒன்றும் [1] ஏழும் [3] ஈரேழும் [5] ஆகிய புவன மட்டுமோ அன்னை கருணையினால் பூத்துக் காத்தவை? 'பொன்னம்பலத்துள் ஓரானந்தவாரிபுக்காடும் பச்சை அன்னம் பல்லாயிர அண்டமும்(2)' பயந்து வளைக்கைச் சிறகால் தன் வயிற்றினுள் வைத்து சராசரங்களாம் ஈர்ங்குஞ்சுகளை அணைத்து இரை தேர்ந்தருத்திக் காத்தனள் அல்லளோ? (10) கலை மறைகள் நான்கினையும் மருவிய எந்தையின் தண்ணளிக்குத் தலைவளைத்து நாணி ஒல்கி இவ்வண்ட சராசரமெலாம் ஈன்றளித்த அன்னை இன்னும் 'தான் குமரி' யாகி இருந்தாள் [15]! என்னே அவள் சிறப்பு!

அன்னையின் 'சாதனை' அவ்வளவேயோ? கண்ணுதல் எந்தை கனக வெற்பை செங்கை கொண்டு குழைத்தார். ஆனால் சிவகாமி அவர்தம் பொற்புயக் குன்றெட்டையும் 'தன் சித்திர மென் கொங்கை கொண்டே குழைத்தாள்' (6). யாரே வலியர்!

### 3. அன்னையால் ஆடும் பெருமான் பெறும் சிறப்பு

அண்ணலினும் அன்னை வலியள் என் பது மட்டுமோ? ஆடும்பிரான் பெறுஞ் சிறப்பத்தனையும் அன்னையால் வருவன அல்லவோ? மன்றுடையார் மங்கைக்குப் பாகம் தந்ததில் வியப்பென்ன இருக்கிறது? 'மாகம் திருவுரு' உடையார்க்கு எண்ணி றந்த ஆகம் (மூர்த்தங்கள்) தருவது அம்மையின் ஆடல் அல்லவா? [2]

அம்முத்தலைவேல் அண்ணல் கறையை மிடற்றிற்கொண்டும் நச்சரவக் கச்சணிந் தும் அஞ்சாது திரிவது 'தில்லைவனத்து மயில்' அருகிருக்கையால் அல்லவா? (9)

தில்லைவாணர் வென்றிவிற்காமனைக் காய்ந்தது சிவகாமியோடு மனைவாழ்க்கை வாய்ந்த சிறப்பால் அல்லவா? (12)

### 4. அன்னையால் அடியார் பெறும் சிறப்பு

மக்கள் வரும்வரை மணாளர்க்குச் சிறப் புச் செய்யும் மங்கையர் பின் மக்கட்கே முதலிடம் அளித்தல் மரபல்லவா? அன்னை சிவகாமி மட்டும் அவ்விதிக்கு விலக்கா வளோ? அண்ணலார்க்களித்த சிறப் பினும் அன்னை அடியாராம் மக்கட்களித்த சிறப்பே மாண்புடையது. தன் அங்கத் தையே பகுந்தளித்த அம்பலத்தார்க்கு அன்னை அளித்தவை வளைத்தழும்பும் கொங்கைத் தழும்புமே! ஆயின் நங் கையை வந்திப்பார்க்கு அவள் அளித்த வரம் தன் திருவுந்தி வாய்ந்த ஏழுலகுமாம்! (3)

அன்னையின் கோயிலையும் பொன்னம் பலத்தையும் பணிந்தோரது வழி கூற்று வன் வாரான். ஏனெனில் அவ்வாறு வரின் தன் வென்றிப்பறை தனக்கே நெய் தற்பறையாக மாறும் என அவன் அறிவானுதலால். (7)

மன்றிடம் கொண்டார் இடம்கொண்ட மங்கை சிவகாமியின் தாமரைத் தாள்களைப் பணிந்தாள் திருமகள். அவள் பெற்ற பயன் திருமாலின் நெஞ்சிடம் ஆகும்? (17)

### 5. அன்னையின் 'குறை'

'வையமொருங்கீன்'றுலும்' 'ஈரேழ்புவன மும் பூ'த்தாலும் 'பல்லாயிர அண்டம் பயந் தாலும்' மன்றுளாடும் மறை நாயகனின் தலை நாயகியாயிருப்பினும் சிவகாமி அம்மை பெண்ணல்லவா? பெண்ணியல் பாற் பேதமை செய்தலில் வியப்பேது?

அன்னையின் 'அழல்' ஆறப்பணியும் போது எம்பிரான் அவள் தாளில் பதித்த மதித்தழும்பிற்கு அவர் தம் தோளில் அன்னை பதித்த வளைத்தழும்பு 'சரி'யாகி விட்டதல்லவா? அவ்வாறிருக்க எம் பிராட்டி அந்நாளில் அண்ணலின் மார் பில் முலைத்தழும்பும் பதித்த 'நடுவின் மை'யை என்னவென்று சொல்வது? [16]

இதுமட்டுமா? எந்தை புலியூரில் மண மற்ற ஊமத்த மலரை மூடித்து வாயிற் கடைதோறும் பிச்சை தேர்ந்து தெரு வெலாம் ஓடித்திரியும்பொழுது, அம்மை கற்கபத்தருவும் நாணும்படி திருவறச் சாலை சமைத்து நல்லறம் பூண்டாள்! என்னே 'பேதமை'

### 6. ஊடலும் உணர்தலும்!

'ஊடுதல் காமத்திற்கு இன்பம்' அல் லவா? அகிலமெலாம் படைத்தளிக்கும் அன்னையும் அத்தனும் ஆயினும் ஊடலும் உணர்த்தலும், உணர்தலும் இயல்பல் லவா?

ஊடிய அன்னையின் 'அழல் ஆற' அண் ணல் அடிதைவந்து முடிக்கங்கை கொண்டு ஆட்டினர் [6] "அன்னையே! நின்மென்பதம் தாக்கியமையால் வெண் மதியும் தேய்ந்தது! காமனை வென்றவர்

கங்கையை வேய்ந்தது பாவமே! [12[ எனினும் திருத்தில்லை நன்னுதலாய் அண்ணலின் நுதல் நாட்டம்போல் உன் செங்காவியங்கண் சிவப்பதென்? நின் பங்காளர் நின்னைப்பணியும்போது கங்கையைக் கைப்பற்றி 'தங்காய் எழுந்திரு' என்று கூறினல் பின் அவட்குத் தலையெடுப்பு ஏது?'' [14]

ஊடிய காமத்திற்கின்பம் கூடிமுயங்குதல் அல்லவா? ஒலைவளைத்த கற்பகப் பூங்கொம்பராம் அன்னை சிவகாமி எந்தை தண்ணளிக்குத் தலைவளைத்து நாணி ஒல்கினள் [15].

## 7. கற்பனை வளம்

சிவகாமிஅம்மையின் புகழ்க்கொடி பறக்கும் இத்தில்லைவனத்து நிகழும் வேடிக்கையைப் பாருங்கள்! முத்தலைவேல் அண்ணல் மிடற்றில் ஆல கால விடம் கொண்டது மட்டுமின்றி நச்சரவமாகிய கச்சினையும் அணிந்தார் என்று மறை மந்திரம் கொண்டு வாழ்த்துகின்றார்! அந்தில்லை வனத்தில் அண்ணலின் அருகே சிவகாமியாம் 'மயில்' இருக்கும்போது மறை மந்திரம் எதற்கு? [9]

இறைவனின் கறைக்கண்டம் எவ்வாறு வந்தது தெரியுமா? இறைவியின் புன்மூரல் இறைவர்க்கு ஆரமாகி முகிழ்த்தன. அவர்தம் மார்பில் இறைவியின் பெருந்தடங்கொங்கைகள் குறியிட்டன. இது கண்டு பொருத கருந்தடங்கண் கறைக்கண்டமாகக் குறியிட்டது [8].

## 8. அன்னையை வேண்டல்

நாளும் பயிறலான் 'மறை நாறும் செவ்வாயை உடைய கிள்ளையே' இறைவன் முடிதாழ்த்தி வணங்கலால் பிறைத் திங்கள் மணக்கும் சீறடியையுடைய சிவகாமியே! நின் தாளாகிய கமலங்களைச் சூடத்தருவாயாயின் பிரமபதவியையும் திருமால் பதவியையும்கூட விரும்பேன் (19).

## 9. பேரின்ப வழி!

தில்லையில் மறை பயிலும் மொழியும் பிறை பொருவும் நுதலும் உடைய சிவகாமியைக் கண்ணுதற் பிரானேடு உள்ளத்திருத்தி பேரின்பம் அடைதலைக் கருதுதலே நன்மை பயப்பதாம் (13).

குறிப்பு :—எண் - பாடல் - எண்



# மணியும் நிழலும்

சித்தாந்தக் கலைமணி
**மகாவித்துவான். திரு. சி. அருணை வடிவேல் முதலியார்**

அழகு தரும் பொருள்களுள் மணிகள் [இரத்தினங்கள்] சிறந்தனவாகும். அதனால் அணிகலன்களை [ஆபரணங்களை] அணிகின்றவர்களும், அணிவிக்கின்றவர்களும் மணிகள் இழைத்த அணிகலன்களையே பெரிதும் விரும்பி அணிகின்றனர்; அணிவிக்கின்றனர். உண்மையான நன்மணிகளைப் பெற இயலாதவர்கள்கூடச் செயற்கையில் போலியாகவேனும் சில மணிகளைச் செய்து கொள்கின்றார்கள். ஆயினும், உண்மை மணிகள்கூட, நல்லிசைப் புலவர்கள் தங்கள் புலமையால் உருவாக்கும் சொன்மணிகளுக்கு ஈடாகா.

நன்மணிகளுக்கு விலையில்லை' என்று சொல்வார்கள். ஆயினும், உண்மையில் விலை வரம்பில்லாத மணிகள், புலவர்கள் ஆக்கியளிக்கும் சொன்மணிகளே. இனி அச்சொன்மணிகள் அருட்புலவர்களால் ஆக்கப்பட்டனவாயின், அவை விலை மதிக்க ஒண்ணாதனவாதல் சொல்ல வேண்டா. இவ்வகையில் அருட் புலவராகிய குமரகுருபர அடிகள் தில்லைச் சிவகாமியம்மைக்கு ஆக்கியளித்துள்ள சில அரிய சொன்மணிகளின் சிறப்பை ஒரு சிறிது நோக்குதலைக் கருதியது இச் சிறு கட்டுரை.

மணிகளை அணிகலன்களில் பதித்து அணிதலினும், அவற்றையே வடங்களாகக் கோத்து அணிதல் சிறப்பு. அத்தகைய மணி வடங்கள் ஒருவகை மணியினாலும், பலவகை மணிகளாலும் அமைவனவாம். அவ்வமைப்பு முறைகளை ஒட்டிப் புலவர்களும், இரட்டைமணிமாலை இணைமணிமாலை மும்மணிக்கோவை நான்மணி மாலை என்று இத்தகைய சொன்மணி மாலைகளை ஆக்கித் தம் வழிபடு கடவுளர்க்கும், பெரியார்கட்கும் அணிவிப்பர். குமரகுருபர அடிகள் திருவாரூர்த் தியாகேசருக்கு நான்மணி மாலையையும், தம் ஞானாசிரியர் ஸ்ரீ மாசிலாமணி தேசிகர்க்கும், தில்லைக் கூத்தபிரானுக்கும் மும்மணிக் கோவையும் செய்து அணிவித்து, மதுரை மீனாட்சியம்மைக்கும், தில்லைச் சிவகாமியம்மைக்கும் இரட்டை மணிமாலை யாத்து அணிவித்தார்.

மணிமாலைகளை அணிந்து கொள்ளும் பொழுது மணிகளின் ஒளி அணிநதுள்ளவர்மேல் வீசுதலோடு, அவர்களது உருவம் அந்த மணிகளில் நிழலாடுவதும் அந்த நிழல், மணியின் தன்மைகளுக்கு ஏற்பச் சிறிது சிறிது வேறுபடுதலும் இயல்பே. ஆயினும், குமரகுருபரர் தில்லைச் சிவகாமியம்மைக்கு ஆக்கியணிந்த இரட்டைமணி மாலையில் உள்ள மணிகளில் அவ்வம்மையின் வடிவம் வேறுபட்ட பல நிலைகளில் நிழலாடுதல் வியக்கத்தக்கதாய் உள்ளது.

**பூ வல்லி :**

தில்லைச் சிவகாமியம்மையை, சிவகாம வல்லி என்பர். வல்லி—கொடி. 3தவர்

உலகத்தில் உள்ளதாகச் சொல்லப்படும் 'காம வல்லி' என்னும் கொடி. கற்பக தருவில் படர்ந்து அழகைத் தருவதோடு, கேட்டவற்றையும் கொடுக்கும் என்பர். இத் தில்லைச் சிவகாம வல்லி ஆனந்த நடராசரைப்பற்றிப் படர்ந்து, உயிர்கட்கு ஆனந்தத்தை விளைக்கின்றது. உயிர்கட்கு என்ன — அந்த இறைவனையே ஆனந்தமயனாகச் செய்கின்றது என்பதைச் குமரகுருபரர் இவ்விரட்டை மணி மாலையிலே "மன்றுடையார்க்கு... ...... பரமானந்தமே ஏகம் தரும் திருமேனிய தாக்கி" என்கிறார். சிவனைப்பற்றி படர்ந்து சிவானந்தத்தைத் தருதல் பற்றியே தில்லைப் பிராட்டி, சிவகாம வல்லி எனப்படுகின்றாள். இதனை, "தன் ஆனந்தக் கொடி" என்று கூறிய பரஞ் சோதிமுனிவர் வாக்கால் அறியலாம்.

சிவகாமியம்மையை 'வல்லி—கொடி' என்றால் எவ்வாறு பொருந்தும் என்பதற்கு அடிகள் தரும் விளக்கம், 'அவளிடத்தினின்றும் தோன்றிய இவ்வுலகம் 'பூ' என்று சொல்லப்பெறுதல் யாவரும் அறிந்தது. 'கோட்டுப் பூ, கொடிப் பூ, நீர்ப் பூ, நிலப் பூ' என்னும் நால்வகைப் பூக்களில் கொடிப்பூவே சிறப்புடையது என்பர். ஆகவே அனைவராலும் பூ எனப் பாராட்டப்படும் இவ்வுலகத்தைப் பூத்தவனை [தோற்றுவித்தவளை] 'ஓர் அரிய கொடி' என்பதில் ஐயம் என்னை என்பது. அபிராமி பட்டரும் அம்பிகையை, "பூத்தவளே புவனம் பதினான்கையும்" என்று அழைக்கின்றார். அதனால் குமரகுருபரரது இரட்டைமணி மாலையில் ஒரு மணியில் சிவகாமியம்மையின் திருவுருவம் அழகிய கொடியாக நிழலாடுகின்றது; ஒரு கொடியன்று; பல கொடிகளாக—வல்லிகளாக நிழலாடுகின்றது.

ஒரு வல்லி; அல்லிக் கமலத்தில் ஊறு
　பைந் தேறல் ஒத்த
திருவல்லி; தில்லைச் சிவகாம வல்லி;
　என் சித்தத் துள்ளே
வருவல்லி; செம்பொன் வடமேரு வில்
　லியை
　வாட்கண் அம்பால்
பொரு வல்லி பூத்தலின் அன்றோ இப்
　பூமியைப் பூஎன்பதே.

வன மயில்;

சிவகாம சுந்தரி, ஒரு மணி நிழலில் சிவகாம வல்லியாய் விளங்குதலே யன்றி, மற்றொரு மணியில் வனமயிலாய்க் காட்சி யளிக்கின்றாள். சிவகாமக் கொடிக்குக் கொழுகொம்பாய் உள்ள தில்லை வனப் பெருமான் நஞ்சினை அஞ்சாது உண்டான்; அதுவன்றி நஞ்சுடைய பாம்புகள் பலவற்றை அணிகலங்களாக எடுத்து அணிந்து நிற்கின்றான். இதற்கெல்லாம் காரணம், தன்னிடத்தில் (தன் இடப் பாகத்தில்) தில்லை வனத்து மயில் ஒன்று நீங்காதிருக்கின்றது என்னும் துணிவே யாகும் என்கின்றார் குமரகுருபரர். எனவே, அவர் அணிவித்த மணிகளில் ஒன்றில் அம்மை வன மயிலாக நிழலாடுதல் காணலாம்.

கறைகொண்டு நச்சரவக் கச்சணிந்தா
　ரென்று
மறைகொண்டு வாழ்த்துவதும் வம்பே—
　இறைகொண்டு
அயிலிருக்கும் முத்தலைவே லண்ணலுக்
　கென் னேஓர்
மயிலிருக்கத் தில்லைவனத் தே.

பச்சை அன்னம்'

ஒரு மணியில் மயிலாய்க் காட்சியளிக்கின்ற அம்மை மற்றொரு மணியில் அன்னமாய்க் காட்சி அளிக்கின்றாள். அன்னம் வெண்மை நிறம் உடையது; இது பச்சை நிறம் உடையது. எனவே, இஃது ஓர் அதிசய அன்னம். இவ்வன்னம் பல்லாயிரம் அண்டங்களை [முட்டைகளை - உலகங்களை] ஈன்றது] தனது சிறகுகளால் [கைகளால்] பல குஞ்சுகளையும் [உயிர்களோரும்] அணைத்துக் கொண்டு, இரை தேடித் தந்து [உலகப் பயன்களைக் கூட்டுவித்து] வளர்க்கின்றது. இது மூழ்கி

விளையாடுவது, தில்லைக் கனக சபையில் அலை வீசுகின்ற [ஆடுகின்ற] ஓர் ஆனந் தக் கடலிலேயாகும்;

வன்னஞ் செறிவளைக் கைச்சிறகால்
தன் வயிற்றி னுள் வைத்து
இன்னஞ் சராசர ஈர்ங்குஞ் சணைத்(து)
இரை தேர்ந்தருத்திப்
பொன்னம்பலத்துளோர் ஆனந்த
வாரிபுக்[கு]

ஆடும் பச்சை
அன்னம் பயந்தன கொல்லாம்
பல்லாயிர அண்டமுமே.

கொம்பர் - குமரி :

மயிலாய், பச்சை அன்னமாய்க் காட்சி வழங்கும் சிவகாமி, மற்றொரு மணியில் கற்பகப் பூங்கொம்பாய் இறுதியில் என்றும் அழியாத கன்னிகையாய்க் காட்சி வழங்குகின்றாள்.

நிறையப் பூத்த பூக்களையுடைய பூங் கொம்புகள் அளிக்கூட்டம் [வண்டின் குழாம்] வந்து இசையைத் தோற்றுவிக்க தலையிறங்கிப் பூங்கொத்துக்களை வளைத்து நிற்கும். ஆயினும் தேவர் உலகத்தில் உள்ள கற்பக தருவின் பூங்கொம்புகளை அளிகள் [வண்டுகள்] அணுகுவதில்லை. எனினும், தில்லைச் சிவகாமி, தில்லைப் பெருமானது அளிக்கூட்டத்திற்கு (அருள் வெள்ளத்திற்கு)த் தலையிறங்கிக் குலை வளைக்கின்ற பூங்கொத்துக்களைத் தரு கின்ற—உடல் வளைகின்ற கற்பகப் பூங் கொம்பாயும் அப்பெருமானுக்குப் பிறந்த பல உயிர்களைப் பெற்றும் என் றுமே குமரியாயும் காட்சியளிக்கின்ருள். அக்காட்சி நிழலையுடையு மணி இது:

தலைவளைத்து நாணி, எந்தை
தன்னளிக்கே ஒல்கும்
குலைவளைத்த கற்பகப் பூங்கொம்பர்—
கலைமறைகள்
நான்குமரி யார்க்கிந்த ஞாலமெலாம்
ஈன்றளிந்தும்
தான்குமரி யாகியிருந் தாள்.

(பெருது பெற்றவள் ஆதலின் குமரியே யாகின்ருள்)

இவ்வாறு, அலகில் சோதியனுய் அம்ப லத்தில் ஆடும் ஆனந்தக் கூத்தனை அகலாது அணைந்து நிற்கின்ற அம்மை சிவகாமி, அலகிலா வடிவில் காட்சி யளிக்குமாறு அவட்குக் குமரகுருபரர் அணிவித்த இரட்டைமணி மாலையால் நாமும் அவ்வம்மையை அலங்கரித்து அவளது அருளைப் பெற்று உய்வோமாக.



# மனித்தப்பிறவியை மதித்திடுமின்

கவித்தென்றல்
திரு. உ. ர. உமாநாத தீக்ஷிதர்

அளித்தான் உலகெங்குந் தானான
வுண்மை
அளித்தானமரர் அறியா வுலகம்
அளித்தான் திருமன் றுள்ளாடும்
திருத்தாள்
அளித்தான் பேரின்பத் தருள்வெளி
தானே.
—திருமூலர்.

"வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்" ஆமூர் நாவுக்கரசரின் அருள் வாக்கு. இம்மாநிலத்தில் கிடைத்தற்கரிய பெரும்பேறு ஒன்று உண்டெனில் அதுவே மனிதப்பிறவி. இப்பிறவி ஒன்றினால்தான் முக்தியாகிய இறைவனின் இணையார் திருவடிகளைப் பெற முடியும். "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார்" எனும் திருக்குறளுக்கொப்ப பிறவிப் பெருங்கடலை நீந்தி முக்தியெனும் கரையை அடைய பல பிறவிகளில் ஈட்டிய புண்ணியங்களால் ஈண்டு மனிதப் பிறவியெனும் படைக்கலம் நமக்கு உறுதுணையாக அமைந்துள்ளது. காற்றுள்ள போதே தூற்றிக்கொள்ளாமல் இவ்வாய்ப்பினை நாம் இழந்துவிட்டு மீண்டும் இப்பிறவி எடுத்தற்கு எத்தனை அளவிடற்பால் இடர்க்கடலில் மூழ்கவேண்டும் என்பதை நன்கு சிந்திக்கவேண்டும்.

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பலவிருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக் கல்லாய், மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய் வல்லசுரராகி முனிவராய்த் தேவராய் எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்! என மணிவாசகர் இயம்ப தில்லை மன்றீசன் அதனை எடுகளில் எழுத்தாணி கொண்டு எழுதிய சிவபுராணம் பிறவியின் பெருந் துன்பங்களை நன்கு விளக்கிடும். மலைமங்கை மணாளன், கருணாமூர்த்தி கயிலை நாதன் அபயங்காட்டி அருளும் அம்பலக் கூத்தன், தவச்சிறப்புப் பெற்ற பதஞ்சலி வியாக்ரபாத முனிவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி மண்ணுலக மக்கள் கண்டு மகிழவும், அருள்பாலிக்கவும் இப் பூவுலக கயிலாயமாகத் திகழும் இத்திருத் தில்லை மன்றினுள் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் தன்னகத்தே கொண்டு அனுதினமும் ஆனந்தக் கூத்தாடி நம்மை ஆனந்த வெள்ளத்துள் திளைக்கவைக்கின்றான்.

இம்மையில் பேறுகள் அனைத்தும் பெற்று இனிது வாழ்ந்து மறுமையிலாத பேறுபெற அடியவர்க்காக காலனைக் காலாற் கடிந்த தில்லைக்கூத்தனை மனத்துக்கண் மாசிலனாகி, ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள அளப்பருங்கரணங்கள் நான்கும் ஒரே சிந்தையாகக்கொண்டு ஒன்றியிருந்து நினைந்தால், வேண்டுவார்க்கு வேண்டுவன ஈவானும், தொழுதகை துன்பம் துடைப்பவனும் ஒப்பாரும் மிக்காரும் இலாத கருணைக்கடல் அருள்பாலிப்பான் என்பதில் ஐயமோ!

பொற்பாதங் காணலாம் புத்திரர்
உண்டாகும்
பொற்பாதக்காணையே செம்பு
பொன்னாயிடும்
பொற்பாதங்காணத் திருமேனி
யாயிடும்
பொற்பாத நன்னடஞ் சிந்தனை
சொல்லுமே.
— மந்திரம்.

திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் தவமியற்றி ஆண்டொன்றுக்கு நாலடிகளைக் கொண்டு ஒரு பாட்டு வீதம் 3000 பாக்களை இயற்றினர் என்றால் ஒவ்வொரு பாட்டின் ஈற்றடிகளே அதன் சாரமாகும். தில்லையில் இறைவனைத் தரிசிக்க முக்தியாம் என்றபடி தில்லை முக்தித் தலங்களுள் ஒன்றென விளங்கும் பொற்பாதங்காணவிட்டால் சிந்தனை தோன்றுவது எங்ஙனம்? இறைவனைத் தரிசித்துப் பயன் அடைய ஒரேவழி தவப்பெரியார்கள் சொலவிச் சென்ற முறையில் சிறிதும் வழுவாது, பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்பரிந்து ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி, ஆனந்தமாய தேனினைச் சொரியும் கமல மலரடிகளைத் தொடர்ந்து சிக்கெனப் பற்றிவிட்டால், தீரா நோயெல்லாம் திண்ணமாய்த் தீர்ப்பவனும், மாளா நோய்களை வாளா மாய்ப்பவனும் ஆன அழுவார்க்கிரங்கும் அம்பலக்கூத்தன் நமக்கன்றி யாருக்கு அருளுவார்!

ஆர்க்கு மிடுமின் அவரிவர்
என்னன்மின்
காக்கை கரைந்துண்ணும் கால
மறிமினே.
தாமறிவார் அண்ணல் தாள் பணிவார்
தாமறிவார்க் குத்தமர் பரனுமே.
வேதத்தை விட்ட அறம் இல்லை
வேதத்தை ஓதியே வீடு பெற்றார்களே.
ஆக்கையைவிட்டு ஆருயிர் போனபின்
மூக்கினிற் கைவைத்து மூடிட்டுக்
கொண்டுபோய்க்
காக்கைக்குப்பலி காட்டிய வாறே.
அன்புடனே நின்று அமுதமும்
ஏற்றியே
பொன்செய் விளக்கும் புகைதீபந்திசை
தொறுந்
துன்பம் அகற்றி தொழுவோர்
நினையுங்கால்

இன்புடனே வந்து எய்திடும் முக்தியே எனும் திருமூலர் அருள்வாக்கினை மனத்திற்கொண்டு அநுதினமும் மனிதப் பிறவியை மதித்து சிந்தித்து செயல்பட்டு எடுத்த நற்பணியினைச் சிறப்புற முடிப்போமாக. வெற்றியை அடைவோமாக.



# அம்பிகையின் பெருமையும் லலிதா தேவியின் ஸ்வரூபமும்

டாக்டர் C. S. வெங்கடேஸ்வரன், எம்.ஏ., பிஎச்.டி.,

உலகமெங்கும் நிறைந்து அதனைக் காத்து ஆளும் ஒரு தத்துவம் இயங்குகின்றது. வளர்ந்து நிறைந்து இருப்பதால் இதனை ப்ரம்மம் என்று கூறுவர். வன்மை வாய்ந்ததால் இதனைச் சக்தி என்றும் கூறுவர். இந்ததத்துவம் ஒன்றே மனிதன் சுகத்தை நாடுகின்றான்: அதனை அமைதியுடைய மனதிலேதான் பெறமுடியும் மன அமைதி அடைவதற்காக மனிதன் முன் கூறிய தத்துவத்தை வணங்கி வழிபடுகின்றான். இதற்கு 'உபாஸனை' என்றுபெயர். வழிபடும்முறைகள் இரண்டு. உருவமற்ற பரம்பொருளை ஆராதிப்பதுஒருமுறை. இது அரூபோபாஸனை, அல்லது நிர்குணோபாஸனை எனப்படும். இது சிறந்த முறை ஆனால் ஒருசில மகான்களுக்கே இது ஸாத்தியமானது.

உருவமற்ற பொருள்கள் மனிதன் மனத்தில் ஏறுவதில்லை. ஒரு பொருளில் உருவத்துடன் குணங்களையும் நாம் சேர்த்துப் பார்க்கின்றோம். அது மட்டுமன்று, அப்பொருளுக்குப் பெயரையும் சூட்டுகின்றோம், அப்பொழுது அது தெளிவாகின்றது; அதாவது அந்தப்பொருள் வ்யக்தமாகின்றது. அரூபமாயும் நிர்குணமாயும் உள்ள பொருளை 'அவ்யக்தம்' என்று கூறுகின்றோம் 'சரீரம் வாய்ந்த மனிதர்களுக்கு அவ்யக்த உபாஸனை எளிதன்று' என்று பகவத்கீதையும் கூறுகின்றது[1] உருவமும் குணங்களும் கொண்ட வ்யக்தமான மூர்த்தியை ஆராதிப்பது மனிதனுக்கு இயல்பானதும் எளிதானதுமாகும். ஆகவேதான் உருவமற்ற பரம்பொருளுக்குப் பல உருவங்களைக் கற்பிக்கின்றோம். குணமற்று நிற்கும் பொருளுக்கு, உபாஸனைக்காக குணங்களைக் கற்பித்து, அவைகளுக்கு ஏற்பப் பெயரையும் சூட்டுகின்றோம். இது நாம் நம் சௌகரியத்துக்காகவே செய்து கொள்வது வடிவமற்ற பரம்பொருள் நாம் கொடுத்த வடிவத்தை ஏற்றுக்கொண்டு தோன்றுகின்றது. வடிவமற்ற பொன்கட்டியானது நம் விருப்பப்படி எவ்வளவோ அணிகளின் உருவத்தை ஏற்றுக்கொள்கிறதல்லவா?

எனவே, அடிப்படையான தத்துவம் ஒன்றே. உலகத்தில் பிறப்பு, வளர்ச்சி, அழிவு என்ற மூன்று நிலைகளற்ற பொருள் ஒன்றுமே கிடையாது சக்தி ஒன்றாக இருந்தாலும் மூவகைப் படுகின்றது. ஆக்கும் சக்தியை பிர்மா என்றும், காக்கும் சக்தியை விஷ்ணு என்றும் அழிக்கும் சக்தியை ருத்ரன் (சிவன்) என்றும் அழைக்கின்றோம். ஒரே சக்திக்கு, மூன்று குணங்களுக்கும் செயல்களுக்கும் ஏற்ப மூன்று பெயர்களைச் சூட்டுகின்றோம். இதுதான் திரிமூர்த்திகளின் தத்துவம்

---

1 क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।
अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥ 12-5

சக்தியின் தத்துவம் போல் மாதாவின் தத்துவமும் ஒன்றே இதனைப் பிரகிருதி என்றும் மூலப்ரகிருதி என்றும் கூறுவர். சக்தி - ப்ரகிருதி - மாதா – என்ற தத்து துவமின்றி உலகமே கிடையாது. அன்னை இல்லாமல் குழந்தை தோன்ற முடியாது முக்கியமாக, பெற்றெடுத்து அன்புடன் வளர்ப்பது அன்னையின் இயல்பாகும். தெய்வம் அச்செயலை செய்யும் பொழுது அம்பாள் (அம்மா) ஆகிறது. தாயானவள் குற்றமிருக்கும் குழந்தையையும் மன்னித்து ஏற்றுக்கொள்கின்ருள். கெட்ட மக்கள் இருப்பினும் எங்குமே கெட்ட அன்னை கிடையாது[2]. அன்பு, இரக்கம், இன்பம் இவைகளுக்கெல்லாம் இருப்பிடம் அன்னையே. ஆகவே அம்பிகையை மக்கள் யாவரும் வழிபடுவது எல்லாவற்றினும் சிறந்த, எளிய முறையாகும். அம்பாள் சக்திஸவரூபிணியாக எல்லா தேவதைகளிடமும் விளங்குகின்ருள். ஒளியுடையவள் தேவீ—ஐச்வர்யாதி ஷட்குணங்களைக் கொண்டவள் பகவதீ. துக்கத்தையும் கஷ்டங்களையும் விலக்கிக் காப்பவள் துர்க்கை. தீய சக்திகளை வென்று சௌக்கியத்தையளிப்பவள் காளி. அழகிய வடிவத்துடன் ஸகல ஸௌபாக்கியங்களையும் அளிக்க வல்லவள் லலிதை–த்ரிபுரஸுந்தரி. எல்லாம் அம்பிகையின் வடிவங்களே. அம்பிகையை எல்லா உருவங்களிலும் வழிபடலாம்.

தேவியின் வடிவங்களுள் அழகும், அன்பும், அருளும்மிக்கவாய்ந்தது லலிதா தேவியின் வடிவமாகும். பிரம்மாண்ட புராணத்திலுள்ள சிறந்த ஸஹஸ்ரநாமத்தில் லலிதா தேவியின் பெருமை சிறப்பாக வர்ணிக்கப்படுகிறது. தேவியின் வடிவங்கள் பல அவைகளுள் ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என்பன இரண்டு. கை, கால் முதலிய அங்கங்களுடன் வர்ணிக்கப்படுகின்ற உருவம் ஸ்தூலமானது. மந்திரமயமாக இருப்பது ஸூக்ஷ்ம வடிவம். இவ்விரண்டு வடிவங்களையும் லலிதா ஸஹஸ்ர நாமத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளதைக் காண்கிருேம். சதுர்பாஹுஸமன்விதா என்று ஏழாவது நாமத்திலாரம்பித்து, ஸர்வாபரணபூஷிதா என்று 51-ம் நாமம் முடிய தேவியின் கேசம் முதல் பாதம் வரை உள்ள ஸ்தூலரூபத்தின் வர்ணனை ஆகும். லலிதா தேவிக்குக் கைகள் நான்கு. அவளது இடது பின்கையில் ஆசை வடிவான (இச்சாசக்தியாகிய) பாசமும், வலது பின்கையில் தீமையை எரிக்கும் கோபமாகிய (ஞானசக்தியாகிய) அங்குசமும், இடது முன்கையில் மனமாகிய கரும்பு வில்லும், வலது முன் கையில் ஐந்து தன்மாத்திரைகளாகிய பாணங்களும் உள. அவளது சிவந்த திருமேனியின் காந்தி வெள்ளத்தில் உலகங்கள் எல்லாம் மூழ்கியிருக்கின்றன. அவள் எல்லையில்லாத அழகின் உருவமே

நறுமணம் கொண்ட சண்பகம் முதலிய புஷ்பங்களால் பிரகாசிக்கும் கூந்தல், அதற்குமேல் பத்மராக மணிகள் வரிசையாகப் பதிக்கப்பெற்று ஒளிவீசும் கிரீடம், அஷ்டமிச் சந்திரன்போல் அரை வட்ட வடிவமாக விளங்கும் நெற்றி, முகமாகிய சந்திரனில், சந்திரனின் கறுப்புப் புள்ளி போல் விளங்கும் கஸ்தூரி திலகம், மன்மதனுடைய மங்கல வீடான முகத்திற்கு அலங்காரத் தோரணங்கள் போன்ற புருவங்கள், முகத்தின் அழகு வெள்ளத்தில் துள்ளி விளையாடும் மீன்களைப் போன்ற கண்கள், அன்றலர்ந்த செண்பகம்போல் அழகிய மூக்கு, அதில் நக்ஷத்திரத்தின் காந்தியை வெல்லும் மூக்குத்திகள், கதம்ப மஞ்சரியால் அமைக்கப்பெற்ற கர்ணபூரங்களையும் ஸூர்ய சந்திர மண்டலங்களாகிய இரு தோடுகளையும் அணிந்த செவிகள், பத்மராகக் கண்ணுடியை வெல்லும் பிரகாசமுடைய கன்னங்கள் புதுப்பவழம் கோவைப் பழம் இரண்

2 कुपुत्रो जायेत क्वचिदपि कुमाता न भवति ।

டினது அழகையும் வெல்லும் உதடுகள், சுத்தமான ஸ்ரீஷோடசாக்ஷரீ வித்யையின் முனைகள் போன்ற இரண்டு வரிசை களான பற்கள், எத்திக்கிலுள்ளவரையும் ஆகர்ஷிக்கும் நறுமணமுடைய தாம்பூலம், ஸரஸ்வதியினுடைய வீணையின் இனிய நாதத்தை வெல்லும் இனிய மொழி, காமேசரின் மனதை மூழ்கவைக்கும் ஒளி வெள்ளம் கொண்ட புன்னகை, நிகரற்ற அழகுவாய்ந்த முகவாய்க்கட்டு, காமேசர் கட்டிய மங்கல சூத்திரத்தால் பிரகாசிக் கும் கழுத்து, பொன்னாலாகிய தோள் வளையணிகளால் பிரகாசிக்கும் கைகள், அசைகின்ற முத்துக்களுடன் கூடிய பதக் கம் பொருந்திய ரத்தின அட்டிகை. காமே சருடைய பிரேமையைவிலைக்கு வாங்கிய ரத்தினக் கலசம் போன்ற மார்பிடம். நாபி என்னும் பாத்தியிலிருந்து முளைத்தெழுந்த கொடி போன்ற மெல்லிய ரோமவரிசை யின்மேல் பழுத்த பழங்களையொத்த ஸ்த னங்கள். காணப்படும் ரோமவரிசையா கிறகொடிக்கு ஆதாரமாக ஊகிக்கப்படும் இடை, ஸ்தன பாரத்தினால் இடைக்கு ஊனமேற்படாது காப்பதற்காக அணியப் பட்ட முப்பட்டைபோல விளங்கும் மூன்று மடிப்புக்கள், சிவப்புப்பட்டாடையால் பிர காசிக்கும் இடுப்பு. ரத்தினச் சதங்கை களுடன் பிரகாசிக்கும் ஒட்டியாணம், சிறந்த ஊருப்பிரதேசங்கள், மாணிக்க மகு டம் போன்ற இரண்டு முட்டுக்கள், இந் திர கோபப்பூச்சிகள் மொய்க்கப்பெற்ற காமதேவனின் அம்பறாத்தூணிகள் போன்ற முன்னங்கால்கள். உருண்ட அழ கிய கணைக்கால்கள் ஆமையின் முதுகு போல் வளைந்த புறங்கால்கள், தம் பாதங் களை வணங்குவோர் தமோகுணத்தைப் போக்கும் ஒளிவாய்ந்த நகங்கள், தாமரை யினும் மிக்க அழகு வாய்ந்ததும் ஒலிக்கும் ரத்தினப் பரல்கள்கொண்ட சிலம்புகளால் அழகுசெய்யப்பட்டதுமான பொற்பாதங் கள், அன்னத்தின் மெதுவான நடை, பேரழகின் பொக்கிஷம், ஆடை, ஆப ரணம், உருவம் எல்லாம் சிவப்பு வர்ணம் கொண்டவை, குற்றமற்ற அங்கங்கள், அவைகளுக்கேற்ற எல்லாவிதமான அணிகள், இவைகளுடன் பிரகாசிப்பவள் லலிதாதேவி, இதுவே அவளது ஸ்தூல ரூபமாகும்.

ஸூக்ஷ்மரூபம் மந்திரவர்ணங்களின் வடிவமானது. பல மந்திரங்கள் தேவியை உலகமனைத்துக்கும் தாயாக வர்ணிக்கின் றன.1;

சில மந்திரங்கள் தாயின் அன்பையும் கருணையையும் விளக்குகின்றன. 2;

அருமருந்துபோலவும் அமிருதம் போல வும் புத்துயிர் அளிக்கிருள் தேவி. 3; மங் கல வடிவத்தைக் கொண்ட அன்னை எல்லா மங்கலங்களையும் அளிக்கவல்ல வள். 4; அன்னை பக்திக்கு வசப்பட்ட வள். 5; நன்னடத்தையில் ஈடுபட்டவள்; துராசாரத்தை ஒழித்து ஸதாசாரத்தை நிலைநாட்டுபவள் 6; பயத்தை விளக்கி அபயத்தை அளிப்பவள் 7; துன்பத்தைத் துடைத்து இன்பத்தை அளிப்பவள்8 ; மரண பயத்தை ஒழிப்பவள்; புருஷார்த் தமானமோக்ஷத்தை அளிப்பவள் 9; காப் பாற்றுபவள் 10; நோய்களை நீக்கி, பாக்கி யங்களைப், பெருக்குபவள் 11; பிரம்மா, விஷ்ணு, ருத்திரர் என்னும் மும்மூர்த்தி களின் செயலைத் தானே செய்யவல்ல வள் 12; மோகத்தையும் அஞ்ஞானத்தை யும் விலக்கி ஞானத்தை அளிப்பவள் 13; மந்திரம், தந்திரம், யந்திரம், கலை, சாஸ் திரம், விதயைக்கள் போன்றவற்றை வடிவமாகக் கொண்டவள்14; ஐச்வர்யம், தர்மம், கீர்த்தி ஸ்ரீஞானம், வைராக்யம் போன்ற எல்லாம் பொருந்தியவளாய் தேவர்களின் சக்தியா யமைந்தவள் 15; அழகும் ஒளியும் வாய்ந் தவள்; பிறப்பற்றவளாய் எப்பொழுதும் இருப்பவள் 16; மூலாதாரம் போன்ற சக்க ரங்களில் தோன்றுபவள் 17; குண்டலி னீ சக்தியின் உருவத்தைக்கொண்டவள் 18; பாபத்தையும் கலியின் தோஷத்தையும்

விலக்குபவள் 19; துர்க்கை, லக்ஷ்மி, ஸரஸ்வதி என்னும் வடிவங்களைக்கொண்டவள் 20; சிவனும் சக்தியும் சேர்ந்த உருவத்தில் பிரகாசிப்பவள் 21;

இவ்வாறு அன்புமிக்கத் தாயின் வடிவமான அம்பிகையாகவும், ஸர்வசக்திகளையும் கொண்ட பராசக்தியாகவும், எல்லையில்லாத அழகின் வடிவமாகவும் விளங்குகின்ற லலிதா பரமேசுவரியின் வழிபாடு எல்லா நலங்களையும் அளிக்கவல்லசிறந்த ஸாதனையாகும்.

---

1 श्रीमाता, अम्बिका, जननीं, प्रसवित्री, प्रसूः, जगद्धात्री ।

2 करुणारससागरा, दयामूर्तिः, अव्याजकरुणामूर्ति, सान्द्रकरुणा, नित्यक्लिन्ना, राजत्कृपा ।

3 हरनेत्राग्निसन्दग्धकामसञ्जीवनौषधिः, भवदावसुधावृष्टिः, सुधासाराभिवर्षिणी ।

4 सर्वमङ्गला, सुमङ्गली, मङ्गलाकृतिः, शिवशङ्करी, कल्याणी, शुभकरी, शोभना,
भद्रमूर्तिः शिवमूर्तिः ।

5 भक्तिप्रिया, भक्तिगम्या, भक्तिवश्या, भक्तमानसहंसिका, भक्तिमत्कल्पलतिका ।

6 समयाचारतत्परा, दुराचारशमनी, सदाचारप्रवर्तिका ।

7 भयापहा, अभयदा ।

8 दुःखहन्त्री, सुखप्रदा, निर्वाणसुखदायिनी ।

9 मृत्युमथनी, मृत्यदारुकुठारिका, पुरुषार्थप्रदा, मोक्षप्रदा, मृक्तिदा, कैवल्यपददायिनी,
मुक्तिरूपिणी, मुक्तिनिलया ।

10 रक्षाकरी, गोप्त्री ।

11 रोगपर्वतदम्भोलिः सर्वव्याधिप्रशमनी जराध्वान्तरविप्रभा. भाग्याब्धिचन्द्रिका ।

12 सृष्टिकर्त्री, ब्रह्मरूपा, ब्रह्माणी, विधात्री, ।
वैष्णवीं, नारायणी, गोविन्दरूपिणी, मुकुन्दा ।
ईश्वरी, तिरोधानकरी, संहारिणी रूद्ररूपा, शिवा, भवानी शङ्करी, शाम्भवी,
मृडानी, शर्वाणी ।

13 निर्मोहा, मोहनाशिनी, ।
अज्ञानध्वान्तदीपिका, भक्तहार्दतमोभेदभानुमत्भानुसन्ततिः ज्ञानदा, ज्ञानप्रदा, ।

14 सर्वमन्त्ररूपिणी, महामन्त्रा, महातन्त्रा, महायन्त्रा, ।
कलात्मिका, कलानाथा, काव्यकला, कलावतीं, ।
शास्त्रमयी,। श्रीविद्या, आत्मविद्या, श्रीषोडशाक्षरीविद्या,
महाविद्या, मनुविद्या, चन्द्रविद्या, ।

15 शाश्वतैश्वर्या, सर्वशक्तिमयी, ज्ञानरूपिणी, सर्वज्ञा,
प्रज्ञानघनरूपिणी, ज्ञानदा, ज्ञानविग्रहा, नीरागा, रागमथनी, भगवतीं, भगमालिनी ।

16 चारुरूपा, चारुहासा, कान्ता, कोमलाकारा
तेजोमयी तैजसात्मिका, तडिल्लतासमरुचिः ।

17 मूलाधाराम्बुजारूढा, स्वाधिष्ठानाम्बुजगता, मणिपूराब्जनिलया, अनाहताब्जनिलया,
विशुद्धि चक्रनिलया आज्ञाचक्राब्जनिलया सहस्राराम्बुजारूढा षटचक्रोपरिसंस्थिता

18 महाशक्तिः, कुण्डलिनी, बिसतन्तुतनीयसी।

19 पापशमनी, पापारण्यदवानला पापनाशिनी, निष्पापा कलिकन्मषनाशिनी।

20 पार्वती, उमा, रमा, सरस्वती।

21 शिवशक्त्यैक्यरूपिणी।

# சங்க நூல்களில் சிவன்பற்றிய குறிப்புகள்

திரு. **இரா. இராமலிங்கம்**, எம்.ஏ.,

[க. வா — கடவுள் வாழ்த்து

அகம் — அகநானூறு

ஐங் — ஐங்குறுநூறு

கலி — கலித்தொகை

நற் — நற்றிணை

பதி — பதிற்றுப்பத்து

பரி — பரிபாடல்

புறம் — புறநானூறு

திருமுருகு — திருமுருகாற்றுப் படை

மது — மதுரைக்காஞ்சி

மலை — மலைபடுகடாம்

குறிப்பில் முன்காணும் எண், பாடலின் எண்ணையும், தொடர்ந்து வரும் எண், அப்பாடலின் வரியையும் சுட்டும்]

1 இராவணன் கயிலையை எடுக்க முனைந்தது :—

இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமைஅமர்ந்து உயர்மலை இருந்தனனாக
ஐ-இரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையின் கீழ்புகுத்து, அம்மலை
எடுக்கல் செல்லாது உழப்பவன் போல கலி 38; 1-2

2 முருகன் பிறப்பு :—

உமையொடு புணர்ந்த, காமவதுவையுள்,
அமையாப் புணர்ச்சி அமைய, நெற்றி
இமையா நாட்டத்து ஒருவரம் கொண்டு,
'விலக்கு' என, விண்ணோர் வேள்விமுதல்வன்
விரிகதிர் மணிப் பூணவற்குத் தான் ஈத்தது
அரிது எனமாற்றான், வாய்மையன் ஆதலின்,
எரிகனன்று ஆனுக்குடாரி கொண்டு அவன்உருவு
திரித்திட்டோன், இவ்வுலகு ஏழும்மருள;
கருப்பெற்றுக் கொண்டோர, கழிந்தசேய்யாக்கை
நொசிப்பின், ஏழ்உறுமுனிவர், நனி உணர்ந்து,
வசித்ததைக் கண்டம் ஆகமாதவர்,
மனைவியர், நிறைவயின், வசிதடி சமைப்பின்
சாலார்; தானேதரிக்க என, அவர்அவி
உடன் பெய்தோரே, அழல்வேட்டு: அவ்அவித்
தடவுநிமிர் முத்தீப்பேணிய மன்எச்சில்,
வடவயின், விளங்குஆல். உறை எழுமகளிருள்
கடவுள் ஒரு மீன்சாலினி ஒழிய,
அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர்:
மறு அறுகற்பின் மாதவர் மனைவியர்
நிறைவயின் வழாஅது நிற்சூலினரே:
நிவந்து ஓங்குஇமயத்து நீலப்பைஞ்சுனைப்
பயந்தோர் என்ப, பதுமத்துப் பாயல்;
பெரும் பெயர் முருக! பரி 5; 29-50

3 விடம் உண்டது :—

நாகம் நாண, மலை வில்லாக
மூவகை ஆர்எயில் ஓர் அழல் – அம்பின் முநிய,
மாதிரம் அழல எய்து, அமரர் வேள்விப்
பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான் பரி 5, 24-27

4 ஆதிரை நாளொடு தொடர்பு படுத்தியமை:—

1) அரும் பெறல் ஆதிரையான் கலி 150, 20

2) ஆதிரை முதல்வன் பரி. 8, 6

5 ஆலமர் செல்வன் :—

நாள்மறை முதநூல் முக்கட் செல்வன்
ஆலமுற்றம் கவின்பெறத் தைஇய அகம் 181, 16-17

6 பிறரால் அறிய இயலாதவன் :—

மூவர் அமரரும் முனிவரும் பிறரும்
யாவரும் அறியாத் தொல்மறை மரபின் அகம் (க.வா,)12-13

7 படைப்புக் கடவுள் :—

1) நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்போடு ஐந்து உடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவன் . . . மது 453-455

2) .... .... அந்தணன்
தாஇல்தாள் நிழல் தவிர்ந்தன்றால் உலகே
அகம் (க.வா.) 15-16

8 அந்தணர்க்கு அருமறை சொன்னது :—

ஆறு அறி அந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து
கலி (க.வா.) 1

9 உமையுடன் இருத்தல் :—

1) இமைய வில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக கலி 38, 1-2

2) உமை அமர்ந்து விளங்கும், இமையா முக்கண்
திருமுருகு 153

3) ... ... சேர்ந்தோள் உமையே அகம் (க.வா.) 7

4) உமையொடு புணர்ந்து... பரி 5, 28

10 உமைபங்கன் :—

1) பெண்உரு ஒருதிறன் ஆகின்று, அவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும் புறம் 1, 7-8

2) நீலமேனி வாலிழை பாகத்து ஐங் (க.வா) 1

11 நிறம் :—

1) படர் அணி அந்தி, பசுங்கட்கடவுள் கலி 101, 24

2) செவ்வான் அன்னமேனி அகம் (க.வா) 8

3) நீலமேனி ஐங் (க.வா) 1

12 தாழ்சடை :—

1) மிக்கு ஒளிர் தாழ்சடை மேவரும் கலி 104, 11

2) தாழ்சடை புறம் 1, 13

3) எரி அகைந்தன்ன அவிர்ந்து விளங்குபுரிசடை அகம் (க.வா) 10

4) விரிசடை பரி 9, 5

13 பிறைநுதல் :—

1) பிறைநுதல் புறம் 1, 1

2) பிறைநுதல் விளங்கும் ஒருகண்போல புறம் 55, 5

3) ... ... .... கலி 104, 11

14 முக்கண் :—

1) பிறைநுதல் விளங்கும் ஒரு கண்... புறம் 55,5

2) முக்கண்ணான் கலி 2, 3

3) ... ... ... கலி 104, 12

15 இமையா நாட்டம் :—

1) நுதலது இமையா நாட்டம் அகம் (க.வா) 4

2) ... ... ... நெற்றி
இமையாநாட்டத்து ஒருவரம்கொண்டு பரி 5, 29-30

3) இமையா முக்கண் திருமுருகு 159

16 நீலகண்டன் :—

1) நீலமணி மிடற்று ஒருவன் புறம் 91, 6

2) மணிமிடற்று அண்ணல் பரி 9, 7

3) மறுமிடற்று அண்ணல் பரி 8, 127

4) யாழ்கெழு மணி மிடற்று அகம் (க.வா) 15

5) கறைக்கண்டன் பதி (க. வா)

6) கறைமிடற்று அணியலும் புறம் 1,5

7) கறை மிடற்று அண்ணல் புறம் 55, 4

8) மணி மிடறு கலி (க. வா) 4

கலி 105, 13

கலி 142, 27

9) காரியுண்டிக் கடவுள் மலை

17 கறை மிடறு அந்தணரால் நுவலப்படுதல்:

கறைமிடறு அணியலும் அணிந்தன்று, அக்கறை
மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே புறம் 1, 5-6

18 எண்கை:—

...மாறுப்போர் ... மணிமிடற்று எண்கையாய் கலி (க.வா) 4

19 கங்கைகொண்டமை :—

1) எரிமலர்த்தாமரை இறைவீழ்த்த பெருவாரி
விரிசடை பொறைஊழ்த்து, விழுநிகர் மலர்ஏய்ப்ப
தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி பரி 9, 4-6

2) பிறங்குநீர் சடைக்கரந்தான் கலி 150, 6

3) தேறுநீர் சடைக்கரந்து கலி 1, 2

4) ........ஈர்ஞ்சடை அந்தணன் கலி 38,1

20 திங்கள் சூடியமை ;—

1) கொலைவன் சூடிய குழவித்திங்கள் கலி 103, 15

2) எரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறை கலி 103, 25

3) புதுத்திங்கட் கண்ணியான் கலி 150, 16

4) முதிராத் திங்களொடு சுடரும் சென்னி
அகம் (க.வா.) 11

5) இளம்பிறை சேர்ந்த நுதலன் பதி (க.வா) 9

6) பிறைநுதல் வண்ணம் ஆகின்று புறம் 1,9

7) பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீலமணிமிடற்று ஒருவன்போல புறம் 91, 5-6

8) கோடுவாய் கூடாப்பிறையை, பிறிதுஒன்று
நாடுவேன், கண்டனென், சிற்றிலுள்கண்டு, ஆங்கே
ஆடையான்மூஉய் அகப்படுப்பேன், சூடிய
காணுன், திரிதரும் கொல்லோ — மணிமிடற்று
மாண்மலர்க் கொன்றையான் கலி 142, 24-28

21 காற்றைப்பூ சூடியமை :—

1) மாண்மலர்க் கொன்றையான் கலி 142, 28

2) கண்ணிகார் நறுங்கொன்றை, காமர்
வண்ணமார்பின் தாருங்கொன்றை புறம் 1, 1-2

3) கார் விரி கொன்றைப் பொன் நேர்புது மலர்த்தாரன்,
மாலையன், மலைந்த கண்ணியன் அகம் (க.வா) 1-2

22 மார்பில் ஞாண் அணிந்தமை :—

1) மார்பினஃதே மைஇல் நுண்ஞாண் அகம் (க.வா) 3

2) — — பாயபு ஞாண் கொளீஇ றம் 55, 1

23 புலியாடை :—

1) வரிகிளர் வயமான் உரிவை தைஇய அகம் (க.வா) 14

2) கொலை உழுவைத் தோல் அசைஇ கலி (க.வா) 11

24 ஊர்தி :—

1) ......புங்கவம் ஊர்வோனும் பரி 8, 2

2) உருவ ஏற்று ஊர்தியான் கலி 150, 13

3) ஊர்ந்தது ஏறே.... ... அகம் (க.வா) 7

4) ஊர்தி வால்வெள் ஏறே புறம் 1, 3

25 ஆன் ஏற்றுக்கொடி :—

1) ஆன் ஏற்றுக்கொடியோன் கலி 26, 5

2) சீர் கெழுகொடியும் அவ்வேறு என்ப புறம் 1, 4

26 ஆயுதங்கள் :—

1 கணிச்சி

1) ஏற்று வலன் உயரிய எரிமருள் அவிர்சடை மாற்று
அருங் கணிச்சி மணிமிடற்றோனும் புறம் 56, 1-2

2) சீறு அருங்கணிச் சியோன் சினவலின் கலி 2, 6

3) சீறு அருமுன்பினோன் கணிச்சிபோல் கோடுசீஇ
கலி 101, 8

4) எரிதிகழ் கணிச்சியோன் கலி 103, 25

5) பெரும் பெயர்க் கணிச்சியோன் கலி 105, 13

6) கையது கணிச்சியொடு —— அகம் (க.வா) 5

2 பிற ஆயுதங்கள் (மழு, வேல், வாள், சூலம்)

1) கையது கணிச்சியொடு மழுவே; மூவாய் வேலும்
உண்டு அகம் (க.வா) 5-6

2) மழு வாள் நெடியோன் மது 455

3) எயில் எரியூட்டிய வில்லன் பதி (க.வா) 3

4) சூலம் பிடித்த சுடர்ப்படை பதி (க.வா) 11

27 இமைய வில் :—

1 இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன் கலி 38, 1

[இமைய வில் என்பதற்கு இமயமலையில் விளைந்த மூங்கில் கொண்டு செய்யப்பட்ட வேல் என்பார் உரையாசிரியர் நச்சினார்க்கினியர்; பிறர் இமயமலையையே வில்லாகக் கொண்டுள்ளதாகக் கூறுவர்.]

2) ஓங்குமலைப் பெருவில் புறம் 55,1

28 ஆடல்

1) கொடுகொட்டி கலி (க வா) 6

2) பண்டரங்கம் கலி (க.வா) 9

3) காபாலம் கலி (க.வா) 12

29 காலக்கடவுள் :—

சூலம்பிடித்த சுடர்ப்படைக்
காலக் கடவுட்கு...... பதி (க.வா) 11-12

30 அழித்தற் கடவுள் :—
கொலைவன் கலி 103, 15

31 அவுணரைக் கடத்தல் :—

1) மாயம் செய் அவுணரைக்
கடந்து அடுமுன்பொடு, முக்கண்ணான் மூவெயிலும்
உடன்றக்கால் கலி 2, 3-4

32 முப்புரம் எரித்தல் :—

1) மூஎயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்
திருமுருகு 154
2) மூவகை ஆரெயில் ஓழல் பரி 5, 25
3) —— திரிபுரம் தீமடுத்து கலி (க.வா) 2
4) ——முக்கண்ணான் மூ எயிலும் உடன்றக்கால் ——
கலி 2, 4-5
5) ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றி
பெருவிறல் அமரர்க்கு வென்றிதந்த புறம் 55, 2-3

33 புலவர்கள் சுட்டிய பெயர்கள் :—

1) பார்ப்பான் பரி 5, 27
2) அந்தணன் அகம் (க.வா) 15
3) சீறு அருமுன்பினோன் கலி 101, 9
முன்பினோன் —1. இறைவன் (நச்சி உரை)
2. சிவபெருமான் (பெருமழைப்புலவர் உரை)
4) கடவுள் கலி 101, 24
5) அருந்தவத்தோன் புறம் 1, 13
6) முக்கண்ணான் கலி 2, 4
7) பசுங்கட்கடவுள் பலி 101, 24
8) பைங்கட்பார்ப்பான் பரி 5, 27
9) எண் கையாய் கலி (க.வா) 4
10) கணிச்சியோன் கலி 2, 4
11) சலதாரி பரி 9, 6
12) மணிமிடற்றோன் புறம் 56, 2
13) மறுமிடற்று அண்ணல் பரி 8, 127
14) கறைமிடற்று அண்ணல புறம் 55, 4
15) கறைக்கண்டன் பரி (க.வா)

—— ——

# சிவமும் சிவகாம சுந்தரியும்

திரு. மு. தம்பிராசா, M.O.L.

சிவம் பெரிதா? சத்தி பெரிதா?

சிவம்தான் பெரிது, சிவத்தில் இருந்துதானே சத்தி வருகிறது. சிவம் பண்பி சத்தி பண்பு.

சத்திதான் பெரிது. சத்தியில்லா விட்டால் சிவம் என்ன செய்யும். சிவமே என்று இருக்கவேண்டியதுதானே! இவ்வாறு அவரவர் திறமைக்குத் தகப் பேசலாம். அண்மையில் ஒரு படம் பார்க்கச் சென்றிருந்தேன். அதில் சத்திதான் பெரிது என்ற கருத்தை வலிந்து நுழைப்பதற்காகச் சிவத்தைக்காட்டிய நிலை பரிதாபமாக இருந்தது. சேரன் செங்குட்டுவன் போன்ற மன்னர்கள், ஆறுமுக நாவலர் போன்ற அறிஞர்கள் இருந்தால் இந்த மாதிரியான கருத்துக்கள் பாமர மக்களின் மனத்தில் இடம்பெறுதபடி பார்த்துக்கொள்வார்களே! அந்தோ! கற்றவர்களைவிடக் கல்லாதவர்களே பெரும்பான்மையுள்ள இந்நாட்டில் கருத்துக்களை விதைப்பவர்கள் மிகவும் கவனத்தோடு பரப்பவேண்டும். தெண்ணீர்க் கரந்த செஞ்சடைக் கடவுள் வண்ண சேவடியைத் தொழும், என்போன்றார் மனம் மிகவும் வேதனைப்படுமே என்று எண்ணினேன்.

சிவமும் சத்தியும் ஒன்றைவிட்டு ஒன்றைப் பிரிக்கமுடியாத ஒரு பொருளும் அதன் தன்மையும் ஆகும். இதனை ஒரு புராணக்கதை மூலம் விளக்கலாம்.

கைலாயத்தில் பரமனும் பார்வதியும் வீற்றிருந்தனர். பிருங்கி முனிவர் அங்கு வந்தார். முக்கண்ணனை மட்டும் தொழ விரும்பிய அம்முனிவர் வண்டின் வடிவெடுத்து அவர்கள் இருக்கையைத் துளைத்துப் பிறவா யாக்கை பெரியோனை மட்டும் வணங்கினர். அதுகண்ட இறைவி, பிருங்கி முனிவர் இவ்வாறு செய்ததேன் என்று இறைவனைக்கேட்க நீலமணி மிடற்று எம்மான் இம்மை நலத்தை விரும்புவோர் உன்னையும், மறுமை நலத்தை விரும்புவோர் என்னையும் தொழுகின்றனர் என்றனர். அதற்கு உலகேழையும் ஈன்ற கன்னி எம்பெருமானை நோக்கி ஐயனே! தங்களுந்தள்ளதில் எனக்கும் பங்கில்லையோ என இரங்கிக் கேட்கத் திரிபுரம் எரித்த விரிசடை கடவுள் தனது இடப்பாகத்தை அவளுக்கு ஈந்து ஆதி பகவனாக விளங்கினர், என்பது கதை.

கதையுள் கருத்தைக் காணவல்லவர் அறிஞர் பெருமக்கள். சிவமும் சத்தியும் பிரிக்கமுடியாத ஒரே பொருள். சிவம் என்றுள்ளதோ சத்தியும் அன்றுள்ளது. சிவம் எங்குள்ளதோ சத்தியும் அங்குள்ளது.

"பாணியும் தூக்கும் சீரும்
என்றிவை
மாணிழை அரிவை காப்ப
வாணமில் பொருள்எமக் கமர்ந்தனை
யாடி"
(கலித்தொகை : கடவுள் வாழ்த்து
15—17)

வள்ளுவப் பெருந்தகை முதல் அதிகாரம் கடவுள் வாழ்த்தெனவும், அடுத்தது வான்சிறப்பு எனவும் வைத்ததையும் வாதவூரடிகள்,

"அவன் அருளே என்னப்
பொழியாய் மழையே"

என்று விளக்கியமையும் ஆராயற்பாற்று.

சிவமும் சத்தியும் எவ்வாறுள்ளன என்ற வினவுக்கு வாதவூரடிகள் திருக்கோவையாரில் விடைகூறுகின்றார்.

"தவளத்த நீறணி யுந்தடந்தோ
ளண்ணல் தன்னொருபால்
அவளத்த னும்மக னுந்தில்லை யானன்
றுரித்ததன்ன
கவளத்த யானை கடிந்தார் கரந்தகண்
ணார்தழையும்
துவளத் தகுவன வோசுரும் பார்
குழல் தூமொழியே"
(திருக்கோவையார். 112)

இதன்கண் அமைந்துள்ள இரண்டாவது அடியை நோக்குவாம்.

"அவள் அத்தனும் மகனும்
தில்லையான்"

சத்திக்குச் சிவம் தந்தையாகவும் மகனாகவும் இருக்கிறது. அதாவது சிவத்தின் மகன் சத்தி. சத்தியின் மகன் சிவம்.

இதென்ன குழப்பம்.

திருவாசகத்தைப் பார்ப்போம்.

"இமவான் மகட்குத் தன்னுடைக்
கேள்வன்
மகன் தகப்பன் தமையன்"
(திருவாசகம்: திருப்பொற்சுண்ணம்
13)

இதில் ஒன்றுகூடிவிட்டது. சத்திக்குச் சிவம் தமயனும்கூட. ஒரு குழப்பத்தை நீக்கப்போய்ப் புதுக்குழப்பத்தில் மாட்டப்பட்ட கதைதான். குமரகுருபரர் கூறுகிறார்,

"கனகமார் கவின்செய் மன்றில்
அனகநாடகற்கெம் மன்னை
மனைவிதாய் தங்கை மகள்"
(சிதம்பரச் செய்யுட் கோவை)

அடிகளே ஒன்றும் புரியவில்லையே! மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழைக் குமரகுருபரர் காட்டுகின்றார்.

"அம்மனையாயவர் தம்மனையாயவள்"
அம்மனையாகிப் பின் தம் மனையாயவள் முதலில் தாயாகி இருந்து பின் மனைவியாகியவள். சிவத்துக்குச் சத்தி தாயும் மனைவியாயும் உள்ளாள்.

ஐயா, திருமூலரே தத்துவங்களைக் கரைகண்டவரே, சிறிதே அருள் செய்யும். அவர் கூறுகின்றார்.

வாயும் மனமும் கடந்த மனோன்மணி
பேயும் கணமும் பெரிதுடைப்
பெண்பிள்ளை
ஆயும் அறிவும் கடந்த அவனுக்குத்

தாயும் மகளும் தாரமும் ஆமே

(திருமந்திரம், ஆதாரதேயம் 24)

சத்தியின் மகனே சதாசிவம். சிவத்தின் மகளே சத்தி.

அட கடவுளே! அருணந்தி சிவமே பாதி விருத்தத்தினால் பார் விரித்த நூலெல்லாம் சாதித்தவரே! தாங்கள் சிறிதே அருள்செய்க.

சிவம் சத்தி தன்னை யீன்றும்
சத்திதான் சிவத்தை யீன்றும்
உவந்திரு வருப்பு ணர்ந்திங் குலகுயி
ரெல்லாம் ஈன்றும்
பவன்பிரம சாரியாகும் பான்மொழி
கன்னியாகும்
தவந்தரு ஞானத்தோர்க்கித் தன்மை
தான் தெரியுமன்றே

(சிவஞா. சித். சுபக். 167)

சிவன் சத்தியைப் பெற்றது. சத்தி சிவத்தைப் பெற்றது. உடன் இருவரும் சேர்ந்து உலகத்து உயிர்கள் எல்லாவற்றையும் பெற்றனர். இருந்தாலும் சிவப் பிரமசாரியாகும். சத்தி கன்னியாகும். சரிதான். மூலப் பிரகிருதியென்றால் என்னவென்பதே புரியாத நிலையில் முப்பத்தாறுவது தத்துவத்தைப் புரிய முற்பட்டோமே பிழை எமதுதான்.

அதோ பேராசிரியர் வருகின்றார். "சிவதத்துவத்தினின்றும் சத்தி தத்துவம் தோன்றலின் அவள் அத்தனும் என்றும் சத்தி தத்துவத்தினின்றும் சதாசிவ தத்துவம் தோன்றலின் மகனும் என்றும் கூறினர்

(திருக்கோவையா. செய். 122
பேரா. உரை)

ஒருவாறு புரிந்ததுபோலத் தெரிகிறது. உப்பால் செய்த பொம்மை கடலுக்குள் இறங்கி ஆழம்பார்க்க முற்பட்டதுபோல எமது சிற்றறிவைக்கொண்டு செய்யும் ஆராய்ச்சியும் முற்றுப் பெறும். இதனையே அபிராமிபட்டரும்

பூத்தவ ளேபுவ னம்பதி னான்கையும்
பூத்தவண்ணம்
காத்தவ ளேபின் கரந்தவ ளேகறைக்
கண்டனுக்கு
மூத்தவ ளேயென்று மூவா முகுந்தற்
கிளையவளே
மாற்றவ ளேயுன்னை யன்றிமற்
றோர்தெய்வம் வந்திப்பதே

அபிரா, அந். 13

இதில் கறைக்கண்டனுக்கு மூத்தவளே என்று கூறியுள்ளமையும் நோக்கற்பாற்று

இவற்றிலிருந்து நாம் ஒரு முடிவுக்கு வரலாம் காணப்பட்ட உலகம் ஆண், பெண் தன்மையாக இருப்பதினால் அவ்வுலகிற்கு மூலப்பொருளான ஒன்றும் அத்தன்மையதாகவே கொள்ளப்படும். என்னை! காரணத்தில் உள்ளதே காரியத்திலும் காணப்படுதலின்.

இனி இவ்வாறு காணப்படும் அம்மை நீலநிற வடிவும், அத்தன் செந்நிற வடிவும் உடையவர்களென நூல்கள் கூறும்

நீலமேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன
முறையே

(ஐங்குறுநூறு கடவுள் வாழ்த்து)

அம்மை நிறம் நீலம். ஐயன் நிறம் செம்மை அதாவது செம்மை நிறம்

ஆண்மையையும் நீலநிறம் பெண்மையை யும் காட்டும்.

"In witty imaginative minds on the other hand, the routine is broken through with ease at any moment, and one field of mental objects will suggest another with which perhaps in the whole history of human thinking it had never once before been coupled. The link here is usually some analogy between the objects successively through of an analogy often so subtle that, although we feel it we can with difficulty analyse it ground, *as where, for example we find something was-culine in the colour bale blue*, or where of these human beings Characters one will remind us of a cak, another of a dog, third perhaps of a cow Talk to teachers' by Prof : Jenes.

Chapter IX
"Assosiation of Ideias"

இவ்வாறு இருநிறங்களும் இருதன்மை களும் பொருந்தி அத்தனும் அம்மையும் விளங்குகின்றனர்

சத்தியும் சிவமும் ஆய தன்மை
இவ்வுலகமெல்லாம்
ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும்
உணர்குண குணியுமாகி
வைத்தனள் அவளால் வந்த ஆக்கம்
இவ்வாழ்க்கை எல்லாம்
இத்தையும் உணரார் பீட லிங்கத்தின்
இயல்பும் ஓரார்
(சிவஞானசித்தியார் சுபக்கம் 89)

இவ்வாறு கூறப்பட்ட ஒரே பொருளின் இருதன்மைகளில் எது பெரிது, எது சிறிது என்று கூறமுடியாது. அடிப்படை இவ்வாறு அமைந்ததினாலே தலைவன் தலைவியரும் "ஒரு தன்மையாராய், உருவும், திருவும், பருவமும், குலமும் குணனும் முதலியவற்றால் தம்முள் ஒப்புடையவரே யாவர் என்று அகப் பொருள் நூல்களும் தமிழில் கூறுகின்றன,

விவிலியத்தில் (The Bible) முதலில் கடவுளால் ஆக்கப்பட்ட பெண் ஆதியிற் றோன்றிய மனிதனின் விலா எலும்பில் இருந்து உண்டாக்கப்பட்டாள் என்று விளம்பி இருப்பது ஆழ்ந்து நோக்கத் தக்கது விலா என்பது மேல்பாகமும் அன்று கீழ்ப்பாகமும் அன்று அங்கிருந்து அவள் ஆக்கப்பட்டாள் என்பதன் கருத்து அவள் கணவனுக்கு உயர்ந்த வளும் அல்லள் தாழ்ந்தவளும் அல்லள் என்ற எண்ணத்தை உண்டாக்குவதற்கே யாகும்

இனி இருவரும் பிரிக்க முடியாத ஒரே பொருள் ஆவர் என்பதை இளங்கோவடிகளும் சிலப்பதிகாரத்தில்

"விண்ணோர் அமுதுண்டும் சாவ
ஒருவரும்
உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள்
செய்குவாய்"
(சிலம்பு-வேட்டுவவரி)

எனச்சிவத்தின் செய்கையை சத்தியின் மேலேற்றி வைத்துரைத்தனர். இவ்வாறு தொல்லாசிரியர் பலரும் சிவம் சத்தியாகிய இரண்டும் ஒன்றற்கொன்று உயர்வு தாழ்வின்றி ஒத்து விளங்குவன வாகும் என்று கூறியிருப்பது கருதத் தக்கது.

# சைவச் சிறப்பு*

(திருக்குறள்பீடம், குருகுலம், அழகரடிகள்.)

சைவ சமயம் இயற்கை நெறியாகவும், வாழ்க்கை நெறியாகவும், முழுமுதல் நெறியாகவும், நெறிகடந்த உயர் நிலையாகவும் விளங்குகிறது. "சைவ சமயமே சமயம்" என்பது தாயுமானுர் வாக்கு. அதற்கு அவர் கூறும் காரணம் சமயாதித பரம் பொருளாகிய எல்லாம் வல்ல திருவருளை கைவந்திடக் காட்டும் என்பது.

தென்னுடு சைவநாடு எனப் பெயர் பெற்றது "தென்னுடுடைய சிவனே போற்றி" என்று குரல்கொடுத்தார் மாணிக்கவாசகர். தென்னுட்டு மக்கள் சைவ சமயத்தவர். இந்திய நாடே தென்னுடு எனப்படுவது, வட இமயத்தில் திருக்கயிலைப் பதியும் தென்கோடி முனையில் குமரிப் பதியும் எல்லைகளாக இப்போதும் காணப்படுகின்றது. இறைவனும் இறைவியும் இவ்வாறு எல்லையில் முதன்மை கொண்டிருக்கின்றனர்,

இந்திய மக்கள் இந்து மக்கள், சைவ மக்கள் எனப்படுவர். இந்து சமயம் என்பது நிலாச் சமயம், இந்து என்பது வெண்ணிலா. "இந்து இளம்பிறை போலும் எயிற்றினர்" என்னுந் திருமந்திரத்தில் இந்து நிலா என்னுங் கருத்தில் ஆட்சிபெற்றிருத்தல் காணலாம். இறைவனுக்குப் "பிறைசூடி" என்பது ஒரு சிறப்புப் பெயர். சிவபோகத்தில் அமிர்த நிலையை அடைதல் சிறந்த அருள் நிலையாகும். குற்றம் ஒறுத்தல், பொறுத்து அருள் செய்தல் பாவமன்னிப்பு என்பது சமய நிலையில் ஒரு பெரிய பக்குவ நிலையாகும், சிவபெருமான் தன்னிடம் அடைக்கலம் என்று வந்த பிறை நிலாவை குற்றம் பொறுத்து அவன் பாவத்தை மன்னித்து, அவன் திருத்தத்துக்கு பரிகாரமாகத் தன் தலை மீது வைத்துக் கொண்டார். இந்த புராணத்தின் கருத்து பாவமன்னிப்பாகும். இந்த உணர்ச்சி அமிர்த நிலையில் விளையும்.

இந்து மதம் என்பதை இப்போது ஹிந்துமதம் என்று கூறுவது பொருத்தமில்லை. ஹிண்டியா என்று சொல்லுவது இல்லை. சிந்து சமவெளியையும் இந்து சமவெளி எனவும், சைவ சமய நாகரிகம் மிகப்பழைய காலத்தில் அச்சமவெளி விளங்கியிருந்தது எனவும் சொல்லப்படுகின்ற வழக்கும் இங்கே நினைவு கூறற்குரியது. இந்தியா இவ்வாற்ருல் சைவநாடாதல் நினைவு கூறலாம்,

---

* இது குடந்தை சிவனடியார் திருக்கூட்டத்தில் 24—12—71ல் நிகழ்த்திய விரிவுரை.

இந்தியாவின் பெருஞ் சமயமாகிய இத்தகைய சைவ இந்து சமயம் முதலில் தெரிவித்தபடி இயற்கை நெறி, வாழ்க்கை நெறி முதலிய திறத்திலும் விளங்குதல் அதன் சிறப்பை எடுத்துக் காட்டுகிறது.

இயற்கை நெறி:-

"ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானுன்" என்பது திருவாசகம். இயற்கையோடு இசைந்த இன்பம் நம்பியாரூரால் அருளப்பட்டது.

இயற்கைப் பாடமே சமய பாடம். மேலே விண்வெளியும், கீழே கடல் அலையும் இரண்டின் தொடர்பாய் மலை உருவும் காணலாம் உலகத்தின் இந்த இயற்கையின் வடிவமே சிவபெருமான் வடிவமாகவும் தோற்றுகிறது. விண்ணில் காணப்படும் மேகங்கள் இறைவனுக்குச் சடையாகவும் அதனில் விளங்கும் நிலாவும் நீரும் இறைவன் சடையிலும் இருப்பனவாகவும் இடைப்பட்ட மலையின் பசுமை இறைவனுக்குப் பாரமாக விளங்கும் அம்மையின் பசுமை நிறமாகவும், தலையில் காணப்படும் புலித்தோல், எலும்புக் கோவைகள், மான், தீ, முதலியன இறைவனின் உடம்பிலும் உள்ளனவாகவும், இத்தகைய அம்பலவாணரின் திருவடிச் சிலம்பொலி கடல் அலையொலியே போலும் அமைந்திருப்பது நினைவு கூரத்தக்கது.

உலகம் என்பது உயிர்களும் இறைவனும் ஆகிய முப்பொருள்களும் அமைந்த ஒன்று. சைவ சமயத்தின் இம்மூன்று இயற்கைகளும் நுவலப்படுகின்றன.

வாழ்க்கை நெறி:-

நல்ல வாழ்க்கை என்பது காமம் இல்லாமலும், இடையில் இறப்பு நேராமலும் வாழ்வது. இறைவனிடம் இம்மூன்றையும் காணலாம். சிவபெருமான் காமனை எரித்தவன். யமனை உதைத்தவன். நஞ்சு உண்டும் மாய்தல் இல்லாதவன். சிவபெருமானைத் தவிர வேறு தேவர்கள் எவர்க்கும் இந்நிலைமைகள் கூறப்படுவதில்லை.

காமனை எரிப்பதற்கு, காமம் இல்லாமல் இருப்பதற்கும் ஆண் பெண் வாழ்க்கைக்கும் மாட்டாமை யாதும் இல்லை. சிவபெருமான் மாது ஒரு கூறன். ஆயினும் காமம் இல்லாதவன். காமனை எரித்தவன். வடலூர் வள்ளலார் இந்த அழகிய பெரு வாழ்க்கையை

"காமம் அகற்றிய தூயனடி – சிவ
காம சௌந்தரி நேயனடி"

என்று அருள் செய்தார். காமம் அகற்றிய தூயனுகிய நிலையில் சிவபெருமான் சிவகாம சௌந்தரி என்னும் அம்மைக்கு நேயனுகவும் திகழ்கிருர் என்னுங் கருத்து இவ்வரிகளில் வருகிறது.

பெண்ணின் நல்லாளோடும் வீற்றிருக்கும் பெருந்தகையாகிய சிவத்தோடு தொடர்புடையோர் அவரைப் போலவே, அவரைத் தலைவனுகக் கொண்ட சைவ மக்களும் மாட்சி சான்ற மனைவியோடு இல்லறத்தில் இருந்து கொண்டே இம்மையில் மண்ணில் நல்லவண்ணம் வாழலாம். மறுமையிலும் நல்ல கதிக்கு யாதும் குறை இல்லை. பெண்ணின் நல்லாளோடும் சிவபெருமான் பெருந்தகை

யாய் இருந்து இல்லற நெறியிலேயே தவசியாகவும் விளங்கி எல்லார்க்கும் வழி காட்டுகிறுர்.

"மண்ணில் நல்ல வண்ணம் வாழ
லாம் வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதும்
ஓர் குறைவில்லை
கண்ணில் நல்லஃ தரும் கழுமலர்
நகர்வளர்
பெண்ணின் நல்லாளோடும்
பெருந்தகை இருந்ததே"

என்பது தேவாரம் தெய்வத் திருவள்ளுவரும் நால்வர் சமய குரவர்களும், அறுபான் மும்மை நாயன்மார்களும் ஏனைய சைவப் பெரியோர்களும் பெரும்பாலும் தம் தலைவனுகிய சிவபெருமானைப் போலவே இல்லறமும் துறவும் கொண்டு தாமும் வாழ்ந்து பிற க்கும் வழிகாட்டி இருக்கின்றனர். வாழ்க்கை என்றுல் அது இல்வாழ்க்கையே யன்றி புறத்துறவு அன்று துறவு என்று ஓர் அதிகாரம் தமிழ்மறையில் உள்ளதேயன்றி துறவு வாழ்க்கை என்று அதனை ஒரு வாழ்க்கையாக திருவள்ளுவர் கூறவில்லை. இராமகிருஷ்ண தேவரும், சாரதா தேவியுடனிருந்து கொண்டே அகத்துறவில் இனிது விளங்கினர். ஆனுல் அவரைப் பின் பற்றியவர்களும், பின் பற்றுகிறவர்களும் அவ்வாறு இல்லை சங்கரர் கொள்கையினரும் அவ்வாறு இல்லை சைவச் சிவபெருமானும் அவர் அடியார்களும் இல்லற வாழ்க்கைக்கு வேறுபட்டவர்களல்லர். சில சைவ மடங்கள் இக் கொள்கைக்கு வேருக இருத்தல் சைவ நெறிக்குச் சிறப்பு ஆகாது. தமக்கு ஏற்ற வாழ்க்கைத் துணை கிடைக்காத காலத்தில் அக்காலம் வரை தனித்திருப்பது ஒரு குறையாகாது. உபநிடதத்தில் கூட ஓர் ஆணும் ஒரு பெண்ணும் கூடிய நல்வாழ்க்கையே இரண்டு பருப்புக்கள் கூடிய ஒரு விதைக்கு ஒப்புமைப் படுத்தி ஈருயிரும் ஒருயிராய் 'வாழ்கின்ற' மங்கல வாழ்க்கையைச் சிறப்பித்து கூறுகின்றது நேயன் தான் இங்கே பொருள். 'நேயத்தே நின்ற நிமலன்" என்றுர் மாணிக்கவாசகரும் காமமற்ற துய இந்நேய வாழ்க்கையில் சிவபெருமானைப் போல மண்ணில் நல்லவண்ணம் வாழ்வது சைவ நெறியின் சிறப்பு.

இனி காமமில்லாத இந்நேயத்தால் நோய் முதிர்வதில்லை. அதனுல் உடம்பு அமிழ்தமாகி இறப்பின்மை நேர்கிறது. நமனை உதைத்தவன் சிவபெருமான். அதற்குக் காரணம் காமமற்ற இத்தூய்மையே நமன்என்பவன் நோய்களின் அதிதேவதை நோய் ஒவ்வொருவருக்கும் உடன் பிறந்தது. "உடன்பிறந்தே கொல்லும் வியாதி என்றுர் ஔவையார் நோயினை முதிராதபடி செய்து கொள்வதே காமமற்ற தூய்மை உதவுகிறது. நமனும் நீங்குகிறுன். நோய்கள் உடன் பிறந்தனவாதலால் அவற்றின் அதிகார தேவனுகிய கூற்றுவன் நம்மவன் என்று உரிமையோடு அழைக்கப்பட்டான். நம்மவன் நமன் என்று கூறப்படுகிறது,

இல்வாழ்க்கையில் நஞ்சுபோலும் கசடுகள் உள்ளனவாக சிலர் கருதுவர். காமமற்ற நேயத் தூய்மை இக்கசடுகளையும் அமிழ்தமாக்குகிறது. அமிழ்தம் சாகாமைக்கு ஏதுவானது. சிவபெருமான் நஞ்சுண்ட மணிமிடற்றன். நஞ்சு உண்டும் இறவாமல்

இருப்பவன். சிலப்பதிகாரத்தில் இந்த அழகு.

விண்ணோர்கள் அமுதுண்டும் சாவ சிவபெருமான் நஞ்சுண்டும் இருந் தருள் செய்வான் என்று சிவ பெருமானது பேராற்றல் விளக்கப்பட்டுள்ளது. புறநானூற்றிலும் இக்கருத்து ஔவையார் வாய்மொழியில் வந்தது.

இனி நல்வாழ்க்கைக்கு முக்கண்ணன் கண்ணுதலோன் என்னும் சிவத்தின் சிறப்புப் பெயர்கள் நினைவு கூறுதற்குரியன. நுதற்கண் உள்ளத்தைக் குறிப்பது. மனங்கருவியாக வாழ்பவரை மானவர் அல்லது மனிதர் எனப்படுபவர். புலன்கள் கருவியாக வாழ்பவை மனிதர்க்கும் கீழ்ப்பட்ட சிற்றுயிர். மனிதர்க்குத் தலைவன் சிவபெருமான் என்பதும், மனித நெறி சைவநெறி என்பதும் பெறப்படும்.

முழுமுதல் நெறி :-

சைவ நெறி முழுமுகற் கடவுளைப் பற்றியது. முழு முதல்வனுகிய கடவுள் சிவபெருமான் என்று சைவ சமயத்தில் அழைக்கப்படுகிறது. காரணம் மங்கலமானவன். நிலையானவன். மாற்றம் இல்லாதவன். அமங்கலம் இல்லாதவன். அதாவது ஆதி அந்தம் இல்லாதவன் என்பது கருத்து, பிறப்பு இறப்பு அற்றவன்.

வேதம், உபவேதம், ஆகமம், உபாகமம், உபநிடதம், இதிகாசம், புராணங்கள், தோத்திரங்கள், சாத்திரங்கள் முதலிய எலலாவகையான சமய நூல்களிலும் சிவபெருமான் ஒருவனுக்கே கருவில் தோன்றி பிறக்கும் தோற்றம் இல்லாதவன் என்னுங் கருத்து எங்கும் ஒரு தன்மையாகக் கூறப்படுகிறது. மற்றவர் எவர்க்கும் பிறப்பு இறப்பு இல்லாத சிறப்பு நலம் எங்கும் கூறப்படவில்லை.

தெய்வத் திருவள்ளுவர் உலகுக்கு முதற்கடவுளைப் பற்றி முதல் குறளில் கூறியவர், அக்கடவுளின் இயல்புகளையெல்லாம் அந்த முதலதிகாரம் முழுவதும் விளக்கி கடைசியாக ஆருயிர்கள் பிறவிப்பெருங்கடல் நீந்துவதைப் பற்றியே சிறப்பாகக் கூறி பிறப்பு இறப்பு இல்லா பேரியல்பு இறைவன் ஒருவனுக்கே யென்பதை தெருட்டினுர்.

சைவநெறி பிறப்பறுக்கும் பெருநெறி ஆதலின் முழுமுதல்நெறி ஆயிற்று.

அதற்கு ஏற்றபடி இந்தியாவில் உள்ள சிவபெருமான் கோவில்கள் பெரிய கோவில்களாக உள்ளன. ஏனை கோவிள்களில் உள்ள எல்லா தேவர்க்கும் சிவபெருமான் கோவிலில் இடம் உண்டு. மூலத்தானத்தில் உருவம் அற்ற அருஉருவ லிங்கமே எங்கும் காணப்படும். வேறு எத்தேவருக்கும் மூலத்தானத்தில் முதலிடம் தருவதில்லை.

மேலும் உலகத்தில் காணப்படும் எல்லா சமய நெறிகளின் கொள்கைகளும் சைவ சமயத்தில் காணப்படும். புத்தரையும், ரிஷப தேவரையும் போன்ற அமைதியான கோலம் கொண்ட தென்முகக் கடவுளும் இக்கோயிலில் உண்டு. ஆடும் பெருமானுகிய ஐந்தொழில் அம்பலவாணரும் இப்பெருங்கோயிலில் காணப்படுபவர். அடியார்கள் பலப்

பலரும் கோயில் திருச்சுற்றில் வீற்றிருப்பர். இவ்வாறு எல்லா நிலைகளுக்கும் அருவ, உருவ, அருவுருவ வழிபாடுகளுக்கும் சரியை கிரியைகளுக்கும் யோக ஞானங்களுக்கும் சிவபெருமான் கோயில் இடந்தரும். ஆதலின் இது முழுமுதற் சமயநெறி ஆயிற்று.

நெறிகடந்த நிலை:

சமயம் என்னுஞ் சொல் உயிர்கள் அடையும் பக்குவப்பட்ட உயர் நிலையை உணர்த்தும் சமயம் நெறிக்கு நெறியாகவும் அந்நெறியில் சென்று அடைய வேண்டிய துறைக்குத் துறையாகவும் இருக்கிறது நெறியே செல்லாதவர் துறையை அடைதல் இயலாது. ஆதலின் யார்க்கும் சமயநெறி இன்றியமையாதது. துறை எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் துறையைச் சேருவதற்குரிய நெறியும்.

ஒருமாடிவீட்டுக்கு மெத்தைப்படிகள் அமைந்திருப்பது உண்டு. ஒவ்வொரு படியும் ஒவ்வொரு சமயம் போன்றது. இச் சமய படிகளில் சைவ சமயம் கடைசி மேல் படியாக உள்ளது. அந்தபடி, படியாகவும் இருக்கிறது. அதுவே மேடையாகவும் இருக்கிறது. படியா? படிகடந்த மேடையா? என்பதை எடுத்துக் கூற முடியாதபடி அந்த மேல்படி விளங்குகிறது. அது போலவே சைவ சமயம் நெறியாகவும் நெறிகடந்த துறையாகவும் திகழ்கிறது. "சைவ சமயமே சமயம் சமயாதித பழம் பொருளை கைவந்திடவே மன்றுள் வெளிகாட்டும்" என்னும் தாயுமானர் வாய்மொழியில் இக்கருத்தும் நிழலாடுகின்றது.

# நீலமேனி வாலிழை

## வித்துவான், திரு, வேங்கடராமச் செட்டியார்

நம் நாட்டுச் சான்றோர் சமய உணர்வில் தலைமை சான்றோர்களாகத் திகழ்ந்தார்கள். காணப்படும் இவ்வுலகத்தைக் கண்டவாறே கொண்டொழியாது இதன்கண் என்ன என்ன கூறுகள் அமைந்துள்ளன என்பதை நுட்பமாக ஆராய்ந்தார்கள். மண்ணும் புனலும் அனலும் காற்றும் விண்ணும் ஆகிய ஐந்தும் கலந்த கலப்பே இவ்வுலகம் என்பதை நுண்ணிதின் உணர்ந்தார்கள். இவ்வைந்தும் பெரும் பொருளாக இருத்தலின் இவற்றுக்குப் பூதங்கள் என்று பெயரிட்டனர். இவ்வைந்து பூதங்களும் ஐவகையான நுண்பொருள்களிலிருந்து தோன்றியன என்பதை மேலும் ஆய்ந்து கண்டார்கள். அந் நுண்பொருள்களாவன சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்துமேயாம். நாற்றம் என்ற நுண்பொருளிலிருந்து மண்ணும், சுவை என்ற நுண்பொருளிலிருந்து நீரும் ஒளி என்ற நுண்பொருளிலிருந்து நெருப்பும் ஊறு என்ற நுண்பொருளிலிருந்தும் காற்றும் ஓசை என்ற நுண் பொருளிலிருந்து தோன்றின என்பதைத் தெளிந்தார்கள். நம் வாழ்க்கைக்கு ஆதாரமாக இருக்கின்ற இப்புறவுலகமாகிய அண்டம் இவ்வாறு ஐந்து கூறு கலந்த கலப்பு என்பதையுணர்ந்தவுடன் இவ்வுலகத்து வாழும் உயிர்களின் உடம்பு-பிண்டம் எத்தகையது என்பதை ஆராய்ந்து அண்டத்திலுள்ளவை பிண்டத்திலும் இருக்கின்றன என்பதைத் தெளிந்தார்கள். நம்முடம்பில் உள்ள தசை முதலிய மண்ணின் பாகத்திற்கு இந்த மண்தரைப் பரப்பு ஆதாரமாயிருந்து உதவுவதையும் நம்முடம்பின் குருதி முதலிய நீர்ப் பகுதிக்குக் கடல் முதலிய பெரு நீர்ப் பரப்பு ஆதாரமாயிந்து உதவுவதையும். நம்முடம்பின் மூலக்கனல் (உத்ராக்கினி) கண் முதலிய நெருப்புப் பகுதிக்கு நெருப்பு, சூரியன் முதலிய பேரொளிப் பரப்பு ஆதாரமாயிருந்து உதவுவதையும், நம்முடம்பில் இயங்கும் பிராணவாயுவுக்கு அண்டத்தில் இயங்கும் காற்றுப் பரப்பு ஆதாரமாயிருந்தது உதவுவதையும் நம்முடம்பில் உள்ள ஒலியறிகருவியாகிய செவியென்னும் பகுதிக்கு இவ்வண்டத்திலுள்ள விண் (ஆகாயம்) ஆதாரமாயிருந்து உதவுவதையும் நுணுகி நுணுகி ஆராய்ந்து தெளிந்தார்கள். பிண்டம் நிலைபெற்று வாழ்வது அண்டத்தின் ஆதரவால்தான் என்று முடிவுகட்டினார்கள். நம்முடம்பு பரிசத்தை உணர்வது காற்று என்னும் பெரும் பொருளை இடமாகக் கொண்டே என்பதையும் நம் நாக்குச் சுவையினையுணர்வது நீராகிய பெரும் பொருளை இடமாகக் கொண்டே என்பதையும் நம் மூக்கு

நாற்றத்தை உணர்வது பூமியையிட மாகக் கொண்டே என்பதையும் நம் கண்கள் ஒளி உருவத்தைப் பார்ப்பது சூரியன் முதலிய ஒளிப் பொருள்களைக் கொண்டே என்பதையும் நம் காது ஒலியை அறிவது விண்ணின் துணை கொண்டே என்பதையும் அறிந்தார்கள். நம் மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறியும் தம் புலன்கள் ஐந்தையும் உணர்தற்கு மண் முதலிய ஐம்பெரும் பூதங்கள் ஆதாரமாய் உள்ளன என்பதை அறிந்தவுடன் அவர்கட்கு ஒரு பெரிய ஐயம் உண்டாயிற்று. மக்கள் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிகின்ற இந்த ஐயறிவோடு அமையாமல் நல்லதன் நலனையும் தீயதன் தீமையினையும் பகுத்த அறிகின்ற ஆறுவது அறிவினையும் உடையவர்களாக இருக்கின்றார்கள். இந்த ஆறுவது அறிவு தான் மக்களை விலங்கினின்றும் வேறு படுத்தியுயர்த்துகின்றது. இத்தகைய சிறப்பு வாய்ந்த உயிரின் ஆறுவது அறிவுக்குப் புறத்தே ஆதாரமாயுள்ள பேரறிவுப் பொருள் எது என ஆராய்ந்தார்கள் அப்பேரறிவுப் பொருள் மண்ணும் அன்று; விண்ணும் அன்று; புனலும் அன்று; அனலும் அன்று; காற்றும் அன்று என்பதை நன்கு, ஆராய்ந்து அறிந்தார்கள். இவ்வுடம்பாகிய பிண்டம் அழியும்போது உடம்பிலுள்ள மண்ணின் கூறு மண்ணிலும் புனலின் கூறு புனலிலும் கனலின் கூறு கனலிலும் காற்றின் கூறு காற்றிலும் விண்ணின் கூறுவிண்ணிலும் ஒடுங்குவதை நுணுகியுணர்ந்தார்கள் இவ்வுடம்பை இயக்கும் அறிவுயாண்டு ஒடுங்குகிறது என்பதை அறிதல் அரிதாகத் தோன்றிற்று காணப்பட்ட உடலின்கூறுகள் காணப்படும் மண் முதலிய பூதங்களில் ஒடுங்குவதையுணர்தலில் அருமை தோன்றவில்லை. காணப்படாத உயிரின் அறிவு யாண்டு ஒடுங்கும் என்பதை அறிவதில் பெரு முயற்சி தேவைப்பட்டது உயிரின் அறிவிற்கு ஆதாரமாய் நின்று அறிவிக்கும் பேரறிவுப் பொருள் ஒன்று காணப்படும் இவ்வுலகிற்கு வேறாய் இருத்தல் வேண்டும் என்று உறுதி செய்தார்கள். அப்பேரறிவுப் பொருள் எது? என்ற ஆராய்ச்சியில் பற்பல ஆண்டுகள் பற்பல பேரறிஞர்கள் ஈடுபட்டு யோகியர்களால் முற்றுந்துறந்த தவ ஞானியராய் இவ்வுலகை மறந்து ஆராய்ந்தார்கள். காணப்படும் இப் பேருலகை யியக்கும் ஆற்றல் மிக்க பேரறிவுப் பொருள் உண்டு. இவ்வுலகை யியக்குவதால் அது, இயவுள் என்றும் மண் முதலிய பூதங்களையெல்லாம் கடந்து நிற்பதால் கடவுள் என்றும் பெயர் பெறுதற்குரியது என்று முடிவு கட்டினார்கள். அந்தப் பேராற்றல் வாய்ந்த கடவுள்தான் உயிர்களின் பகுத்தறிவிற்கு ஆதாரமாய் நின்று அறிவிப்பது என்பதையுணர்ந்து உலக மக்களுக்கும் உணர்த்தினார்கள். அன்று முதல் கடவுள் நெறியுலகில் தோன்றியது. அழியும் இயல்பினதாய் இவ்வுலக இயல்புகளையறிவதிலும் அழியாது என்றும் நிலை பெற்றுள்ள அக்கடவுள் நிலையையுணர்ந்து அக்கடவுளையே நீடு நினைந்து இவ்வுலகை மறந்திருப்பவர்கள் அந்தக் கடவுளைப்போல என்றும் நிலைபேறுடைய தன்மையையெய்தலாம் என்ற உண்மை ஞானம் ஓங்கியது. துன்ப உலகை மறந்து இன்ப வடிவினனான கடவுளையே நீடு நினைப்பவர்கள் துன்பமில்லாத் தூய பேரின்பத்தை அடையலாம் என்ற நம்பிக்கை உரம் பெற்றது.

காணப்படாத கடவுளைக் காணப்படும் இவ்வுலகைக் கொண்டு அனுமானித்து அறியலாம். அக்கடவுள் எந்த இயல்பினன் என்பதை எவ்வடிவினன் எவ்வண்ணத்தன் என்பதை-எங்ஙனம் அறிவது? அவன் வடிவு வண்ணம் முதலியன அறிதற்கு அரிதே ஆயினும் ஞானிகள் இந்நெறியில் பெரிதும் முயன்று தவங்கிடந்து உண்மை உணர்ந்தார்கள். அவர்தம் அனுமானத்தாலும் பின்பு நிகழ்ந்த அனுபவத்தாலும் அவர்கள் அறிந்த கடவுளின் வடிவு முதலியன உறுதி பெற்றன. உலகில் உள்ள எண்பத்து நான்கு நூறுயிரம் வகைப்பட்ட உயிரினங்கள் யாவும் ஆணும் பெண்ணுமாய் இருக்கக் கண்டு இவ்வுயிர்கட்கு ஆதாரமாய் நிற்கும் கடவுளும் ஆணும் பெண்ணுமாகிய இருவகை வடிவுடையனாக இருத்தல் வேண்டும் என அனுமித்துணர்ந்தவர்கள் பின் முயன்று செய்த தவப் பெருமையினுல் அக்கடவுள் அந்த ஞானிகளின் உள்ளத்திலும் புறத்திலும் ஆணும் பெண்ணுமாய் வடிவமுடையவனாய்த் தோற்றமளிக்கக் கண்டுணர்ந்தார்கள். அப்பேரறிஞர்களின் முடிவே உண்மை முடிவு என்பதை அவர் வழி வந்த பெருமக்களும் நம்பி நாடியுணர்ந்து நயம் பெற்றிருக்கின்ருர்கள். அந்த இரண்டு வடிவங்களில் ஆண்வடிவம் செந்நிறத்தது என்றும் பெண்வடிவம் நீல நிறத்தது என்றும் கண்டறிந்தார்கள். நம் தமிழ் நாட்டுச்சங்கச் சான்ருேர்கள் இவ்விரு வடிவமுடைய கடவுளைப் பற்றி நன்குணர்ந்து கூறியுள்ள சங்கச் செய்யுட்கள் இவ்வுண்மையை நமக்கு உணர்த்துகின்றன.

"நீலமேனி வாலிழை பாகத்
தொருவன் இருதா ணிழற்கீழ்
மூவகை யுலகமும் முகிழ்த்தன
முறையே"
(ஐங்குறு நூறு கடவுள் வாழ்த்து)

நீலநிறம் வாய்ந்த மேனியையுடையளாய்த் தூய்மையான ஆபரணங்களை அணிந்த உமையம்மையை இடது பாகத்தில் கொண்டுள்ள ஒருவனாகிய சிவபிரானின் இரண்டு திருவடிகளின் நிழலின் கீழே விண்ணும், மண்ணும் பாதலமுமாகிய மூவகையுலகங்களும் முறையே தோன்றின என்பது இப்பாடலின் பொருளாகும். வாலிழை என்றது அன்மொழித் தொகையாய் வாலிதாகிய அணியினை அணிந்த உமையம்மையை யுணர்த்தியது. இப்பாடலில் சிவபிரானின் சிறப்பைச் சொல்லவந்த புலவர் அப்பெருமானின் இடப்பாகத்திலிருக்கும் உமையம்மையை முதற்கண் குறிப்பிடுகின்ருர். அந்த அம்மை நீலமேனியை யுடையவர் என்பதும் அந்த மேனியின் அழகை எடுத்துக்காட்டும் தூய அணிகலன்களை அணிந்திருக்கின்ருள் என்பதும் இங்கு விளக்கப்படுகின்றது. நீலமேனியம்மையை இடப்பாகத்தே கொண்டுள்ள சிவனது நிறம் எதுவும் இங்குச் சொல்லப்படவில்லை. இங்குச் சொல்லவில்லையாயினும் பதிற்றுப்பத்துக் கடவுள் வாழ்த்தில்

"எரியெள்ளுவன்ன நிறத்தன்"

என்று குறிப்பிட்டிருத்தலால் சிவன் நிறம் நெருப்புப்போன்ற செந்நிறம் என்பது புலனுகின்றது. எனவே நீலக் கடல்போன்ற நிலத்தினள் ஆகிய உமையம்மைக்கு நெருப்பு போன்ற செந்நிறத்துச் சிவபிரான்கொழுநராக அமைத்தது பொருத்தமாக விளங்குகின்றது சிவன் என்ற சொல்லே சிவந்த மேனியன் என்ற பொரு

ளுடையதாக உள்ளது. நீலமும் சிவப்புமாகிய முரண்பட்ட இரண்டு நிறங்கள் ஒன்றுசேர்ந்திருப்பது எழில் மிக்க காட்சியாகும். இத்தகைய எழில்மிக்க உருவில் இறைவன் ஞானி களுக்குக் காட்சி யளித்தமையால் அவ்விருவகையுருவினையும் இங்குப் கூறுகின்றார். இத்தகைய கோலத்தை யே பின்வந்த அடியார்கள் எல்லாம் கூறியுள்ளார்கள்.

"தோலுந் துகிலும் குழையுஞ் சுருள் தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமுந் தொக்க வளையு முடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக்குளிர்ந்தூதாய் கோத்தும்பி"

என்று மாணிக்கவாசகர் இக் கோலத் தைக் கூறியிருத்தல் காணலாம். இறைவன் கோலங்களில் இந்த ஆணும் பெண்ணுமாய் அமைந்த கோலமே தொன்மையான-பழமை யான-கோலம் என்பதையும் அவர் குறிப்பிடுகின்றார்.

இந்த இரண்டு உருவங்களும் தனித் தனியே இருந்து காட்சியளிப்பதும் ஒன்ருயிருந்து காட்சியளிப்பதும் ஒன்றில் ஒன்று மறைந்து காட்சி யளிப்பதும் உண்டு.

"பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத்
தன்னு ளடக்கிக் கரக்கினுங் கரக்கும்"
(புறநானூறு கடவுள் வாழ்த்து)

என்று கூறுகின்றார் பாரதம் பாடிய பெருந்தேவனார். பெண் வடிவு ஒரு பக்கம் ஆயிற்று; ஆய அவ்வடிவுதான் தன்னுள்ளே ஒடுக்கி மறைக்கினும் மறைக்கப்படும் என்பது பொருள் இதில் சிவபிரான் உமையொரு பாக னாக இருக்குந் தன்மையும் பின்பு அப் பெண்ணுருவைத் தன்னுளடக்கிக் கொண்டு தான் மட்டும் விளங்கும் தன்மையும் குறிக்கப்படுகின்றன. இனி, 'அவ்வுருத் தன்னுளடக்கிக் கரக்கினும் கரக்கும்" என்பதற்கு அப் பெண்ணுரு தன்னுள்ளே அச்சிவனுரு வை அடக்கி மறைப்பினும் மறைக்கப் படும் என்று பொருள் கொண்டு சிவன் அம்மையைத் தன்னுள் மறைத்துக் கொள்ளுதல் போலவே அம்மையும் சிவனைத் தன்னுள்ளே மறைத்துக் கொண்டு தான் மட்டுமே காட்சியளிப் பதும் உண்டு என்றும் பொருள் கொள்ள இடமுண்டு. சிவன்மட்டுமே தோன்றும் போது சக்தி அவனிடத்து மறைந்து இருப்பாள்; சக்திமட்டுமே தோன்றும் போதும் சிவன் அவளிடத் தில் மறைந்திருப்பான் என்பது கருத்து. தனித்தனியே அம்மையும் அப்பனும் இணைந்து காட்சியளிக்கும் நிலையும் ஒருவரில் ஒருவர் மறைந்து காட்சியளிக்கும் நிலையும் ஆகிய இரு நிலைகள் கூறப்படுகின்றன. பின் கூறிய நிலையினையே மாணிக்கவாசகப் பெரு மான் "உடையாள் உன்றன் நடு விருக்கும் உடையாள் நடுவில் நீயிருத்தி" என்று குறிப்பிட்டுள்ளார். பெண்ணுரு வொருதிறனாகின்று என்பது இருவகையாகப் பொருள் கொள்ள இடம் அளிக்கின்றது. அம்மை அப்பன் என்ற இருவடிவங் களாய்க் காட்சியளிக்கும் நிலையைக் குறிப்பதாகக் கொள்வது ஒன்று மற்றொன்று ஒரேவடிவில் ஆண்பாதி பெண்பாதியாகத் தோன்றும் அர்த்த நாரீசுவர வடிவாகக் கொள்வது இத் தகைய வடிவம் பழங்காலந்தொட்டு

வழங்கிவரும் வடிவமேயாம் சிலப்பதிகாரத்தில் இவ் வடிவம் விரிவாய் பேசப்படுகின்றது.

செங்குட்டுவன் வடவரை வென்று கண்ணகிக்கு இமயத்துக்கல் கொணர்ந்த பின்பு தன் கோப்பெருந் தேவியோடு மாலையில் ஆடரங்கத்தில் ஆடல் காண்கின்ருன் பழையூர்க் கூத்தச் சாக்கையன் என்பான் அர்த்தநரீசுர வேடந்தாங்கி கொட்டிச்சேதம் என்னும் கூத்தினை ஆடுகின்ருன் அவ்வாடலின் அழகை இளங்கோவடிகள் அழகாக விவரிக்கின்ருர் வலதுபக்கம் உள்ள ஆண் வடிவின் திருவடியில் சிலம்பு அணியப்பட்டுள்ளது வலதுகையில் துடியாகிய பறையுள்ளது. வலக்கண் செங்கண்ணுக உள்ளது. (இடப்பக்கத்தில் கருங்க்ண்) தலையின் வலப்பக்கத்தில் செஞ்சடையுள்ளது. இடப்பக்கம் உள்ள பெண் வடிவின் ஒருகாலில் பாடகம் என்னும் அணி உள்ளது. இடக்கையில் வளையல் உள்ளது. இடப்பக்க இடையில் மேகலையுள்ளது இடப்பக்க மார்பில் நகில் இருக்கின்றது. இடப்பக்கத்துக் காதில் நீண்ட கனங்குழையுள்ளது. இடப்பக்கத் தலையில் கரிய கூந்தலின் முடியுளது. இப்படியுள்ள ஒரு வேடத்தைத் தாங்கி சாக்கையன் ஆடுகின்ருன். இவ்வாடல் மிக கடின ஆடல் இந்தஆட்டத்தில் இடப்பக்கம் செயல்படலாகாது. வலப்பக்கம் மட்டுமே செயல்பட வேண்டும், வலக்காலில் உள்ள சிலம்புமட்டும் சிலம்புகின்றது. இடக்காலில் உள்ள பாடகம் என்னும் அணி அசைதலும் செய்யவில்லை. வலக்கையில் உள்ள துடி ஆர்க்கின்றது. இடக்கையில் உள்ள வளை ஒலிக்கவில்லை. வலப்பக்கமுள்ள செங்கண் ஆயிரம் வகையான திருகுறிப்புகளை அருளுகின்றது. (ஆனல் இடப்பக்கமுள்ள கருங்கண் ஒரு குறிப்புமருளாதுள்ளது) வலப்பக்கத்திலுள்ள சடைதிசையளவு சென்று அலம்புகின்றது. இடப்பக்கத்திலுள்ள கருங்குழல் அவ்வாடலால் அவிழவே இல்லை. இடப்பக்கத்து மேகலை ஒலிக்கவே இல்லை. இடப்பக்க மார்பின் நகல் அசையவே இல்லை. இடக்காதில் அணிந்த நீண்டகுழை ஆடவேயில்லை இப்படிப் பட்ட ஆடலைத்தான் செங்குட்டுவன் தன் வேண்மாளோடு ஆடரங்கில் அமர்ந்து காண்கின்ருன். இவ்வாடல் கொடு கொட்டி எனவும் கொட்டிச் சேதம் எனவும் பெயர் பெறும். இக் கூத்து இறைவன் திரிபுரம் எரித்தபின் ஆடியது.

திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவுஞ்
செங்கணுயிரந் திருக் குறிப் பருளவுஞ்
செஞ்சடை சென்று திசைமுக மலம்பவும்
பாடகம் பதையாது சூடகந் துளங்காது
மேகலை யொலியாது மென்முலை யசையாது
வார்குழை யாடது மணிக்குழ லவிழா
துமையவ ளொருதிற னுக வோங்கிய
விமைய னுடிய கொட்டிச் சேதம்
(சிலப் – 28 67 – 75)

என்று இக்கூத்தின் இயல்பை இளங்கோவடிகள் விவரிக்கின்ருர்.

இந்த அர்த்த நாரீசுர வடிவத்தைச் சிவன் கோயிலில் இன்றும் காணலாம். ஆணும் பெண்ணும் கலந்த இந்த வடிவத்தை ஒருவன் என்றோ, ஒருத்தி என்றோ குறிப்பிட முடியவில்லை. ஒருவர் என்ற சொல் தமிழில் இல்லை என்றால் என் செய்வது? என நகைச்சுவை தோன்ற குமரகுருபரர் குறிப்பிடு கின்றார். ஒரு வடிவில் அம்மையாகிய ஒருபாதி முப்பத்திரண்டு அறங்களைச் செய்து கொண்டிருக்க மற்றொரு பாதி யாகிய சிவன் உடர்பு பிச்சை யேற்பது இம்மாநிலத்து இல்லாத நிகழ்ச்சி எனவும் வியப்புடன் குறிப்பிட்டுள்ளார்.

அம்மை இங்ஙனம் சிவன் மேனியில் செர்பாதியான நிலைமையேயன்றித் தனியான பெண்வடிவம் பெற்று சிவனது இடதுபாகத்தில் அமர்ந் திருக்கும் நிலையும் உண்டு. அந்த நிலையில் உயிர்கட்கு அம்மை எங்ஙனம் உதவுகின்றாள் என்பதை குமரகுருபரர் விளக்குகின்றார். உலகத்து குடும்பங்களில் அம்மையும் அப்பனும் குழந்தைகளிடத்தில் அன்பு நிறைந்தவர்களே யாயினும் குழந்தைகள் அப்பனைக் கண்டால் அச்சமுடன் பழகுதலும் அம்மையைக் கண்டால் உரிமையுடன் பழகுதலும் இயல்பு என்பதைக் காண்கின்றோம் தமக்குத் தேவையான ஒரு பொருளை ஒரு குழந்தை நேரே தந்தையைக் கேட்பதில்லை, தாயிடம்தான் கேட்கும். தாய் தன் கணவனிடம் அன்புரிமையோடு தெரிவித்துத் தன் குழந்தையின் வேண்டுகோளை முடித்துக் தருவது இவ்வுலகியல்பு. இந்த இயல்புதான் நாம் நம் சிவனாகிய அப்பாவிடம் ஒன்று பெற விரும்பினால் முன் தாயாகிய சிவகாமி யம்மையிடம் சொல்லிக் கொண்டால் போதும். அருள் மயமான அம்மை அப்பனிடம் வேண்டியதைப் பெற்றுத் தந்துவிடுவாள். அம்மையின் அருளைப் பெற்ற பின்தான் அப்பனை அடையவேண்டும். அவ்வாறு அடைதல்தான் எளிய முறை.

சிவபிரான் உயிர்கட்காகத் தில்லை யில் அருள் நடம் புரிகின்றான். அந்த ஆனந்த நடனத்தைக் கண்டு உயிர் கள் பயன் பெறல் வேண்டும். அந்த நடனத்தினைக் காண்பதற்குரிய பக்குவம் உயிர்கட்கு இல்லை என்றால் அவ்வுயிர்கள் பிறவி நோயில் வீழ்ந்து வருந்த வேண்டியே நேரும். ஆனால் அருள் வடிவமான சிவகாமி அம்மை அவ்வுயிர்கள் மீண்டும் மீண்டும் பிறந்து இறந்து வருந்துவதைப் பார்த்துப் பொறுத்துக் கொண்டிருப்ப தில்லையாம். புனிற்றிளங்குழவி நோயுற்று வருத்தினால் அந்நோய் தீர மருந்து அருந்தச்செய்தல் வேண்டும் தாய். ஆனால், அப்பச்சி ளங்குழவியின் பசுங்குடல் அம்மருந் தின் கடுமையைத் தாங்காது என்று அம்மருந்தை அன்புள்ளதாய் அருந் துதல் இயல்பு. தாயருந்திய அம்மருந்து அவளுடம்பில் பரவிப் பாலில் கலக்கின்றது. பின்பு அப்பாலை அருந்தும் குழவியின் வயிற்றில் சென்று நோயைத் தீர்க்கின்றது. இது மனித குலத்தில் நாம் காண்கின்ற காட்சி.

இந்த இயல்பினை உலகுக்கெல்லாம் தாயாகிய சிவகாம சுந்தரியும் மேற் கொள்கின்றாராம். நடராசப் பெருமானின் அருள் நடனத்தைக் கண்டு பயன் பெறும் பக்குவம் பெறாத

உயிர்களின் சார்பாக அம்மை உதவு கின்றார். சிவபிரானின் திருக் கூத்தாகிய மருந்தினை உட்கொள்ளு தற்குரிய ஞான வலிமையைப் பெருத உயிர்களும் தம் பிறவி நோய் தீர்ந்து முத்தியின்பம் பெறுமாறு உயிர்களின் சார்பாகச் சிவகாமசுந்தரியே சிவபிரான் நடனததைக் காண்கின்ரு ராம், குழந்தைகளாகிய நமக்கு வந்து சேர்ந்து நம் பிறவி நோயை அறுக் கின்றதாம்.

"பாலுண் குழவி பசுங்குடர்
பொருதென
நோயுண் மருந்து தாயுண்
டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக்
கின்னருள் கிடைப்ப
வையமீன்றளித்த தெய்வக்
கற்பின்
அருள் சூற்கொண்ட வையரித்
தடங்கட்
திருமாண் சாயல் திருந்திழை
காணச்
சிற்சபை பொலியத் திருநடம்
புரியும்
அற்புதக் கூத்து"

(சிதம்பர மும்மணிக்கோவை)

என்பது குமரகுருபரர் வாக்கு. சிவகாம சுந்தரியின் இந்த அருள் நிலையை நினைப்போமாயின் நாம் முன்னம் வணங்குதற்கும் அன்பு செய்தற்கும் உரியவர் சிவகாம சுந்தரியே என்பது தெளிவு. சிவகாம சுந்தரி நாணச் சிவபிரான் ஆடும் அம்பலக் கூத்தினைக் கம்பர் என்றும் நீடு நினையும் இயல்பினர். இராம பிரானின் ஒழுகலாற்றைக் கூறும் கம்பர்க்குத் தில்லைக் கூத்தனைப் பற்றி கூறுதற்குரிய வாய்ப்பு இல்லையெனி னும் வேண்டும் என்றே அந்த நிலையை வருவித்துக் கொண்டு சிலேடை வாகையால் இராமனோடு இயைபு படுத்திக் கூறுகின்றார். சீதை கரையில் நின்று பார்த்துக் கொண் டிருக்க இராமன் கங்கை ஆற்றி லிரங்கி நீராடுகின்ற காட்சியைக் கூறுகின்றபோது,

வெங்கணுகக் கரத்தினன்
வெண்ணிறக்
கங்கை வார்சடைக் கற்றையன்
கற்புடை
மங்கை காண நின்ருடுகின்ருன்
வகிர்த்
திங்கள் சூடிய செல்வனிற்
ரேன்றினான்

(கங்கைப் படலம் 18)

என்பது அவர் உளங்கனிந்து கூறும் பாடல்? சிவன் நாகம் அணிந்த கரத்தினன். இராமனும் யானையின் துதிக்கை போன்ற கரத்தையுடைய வனாக இருக்கின்ருன் எனவே இரா மனும் வெங்கணுகக் கரத்தினன் ஆகின்ருன். சிவபிரான் வெண் ணிறக் கங்கை சூடிய நீண்ட சடையை யுடையவனாக இருக்கின் ருன். இராமனும் கங்கையில் மூழ்கி எழுந்து நிற்கும்போது அவன் சடை யிலிருந்து கங்கை நீர் வீழ்கின்றது. எனவே இராமனும் கங்கைவார் சடையான் ஆகின்ருன். சிவபிரான் பொன்னம்பலத்துச் சிவகாமியம்மை காண ஆடுகின்ருன். அதுபோலவே இராமனும் சீதையாகிய கற்புடை மங்கை காண நீராடுகின்ருன் எனவே, இராமனும் சிவபிரானைப் போலவே கற்புடை மங்கை காண நின்ருடுகின்ருன் ஆதலால் பிறைச் சந்திரனை சூடிய செல்வனாகிய சிவ பிரான் போலக் காட்சியளிக்கின்ருன் இராமன் என இராமன் வடிவத்தில்

கம்பர் நடராசப்பெருமானைக் கண்டு மகிழ்கின்றார்

இனி உலகத்தை இயக்குபவரும் மண் முதலிய முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து நிற்கின்ற கடவுள் பெண்ணொரு பாகனாக இருத்தல் எது பற்றி? என்று நமக்கெழும் ஐயத்தையும் நம் முன்னோர்கள் அறிந்து அவ் வையத்தை அகற்றி யிருக்கின்றார்கள்.

சிவபிரானுடைய அருளையே சக்தியென வேறு பிரித்துப் பெயர்கொடுத்துக் கூறுவது தவிர வேறு இல்லை. மலரில் மணமும் பழத்தில் சுவையும் மணியில் ஒளியும் போல இறைவனும் சத்தியும் பிரிவின்றி ஒன்றுபட்டவர்களே யாவர். மலரின்றி மணமில்லை மணமின்றி மலரில்லை, அதுபோலச் சத்தியும் சிவனும்,

"அருளது சத்தியாகும் அரன்தனக்கு
அருளை யின்றித்
தெருள் சிவமில்லை அந்தச்
சிவமின்றிச் சத்தி யில்லை"
(சித்தியார் – 239)

என்பது அருணந்தி சிவத்தின் வாக்கு

இதனால் சிவனை விட அவன் அருள் வடிவாகிய சிவகாமசுந்தரியே நமக்குச்சிறந்தவர் என்பதைக் கூறவும் வேண்டுமோ? நெருப்பு நிறமுடையவனாக சிவபிரானிருக்க அந்நெருப்பின் முறுகி யெரியும் கனலின் நீல நிறத்தை யுடையவளாக அம்மை யிருப்பதும் இக்கருத்தை வலியுருத்துவதேயாகும். மேலும் சிவனடியார்களுக்கு அருளைப் பொழிவதும் அம்மையே யென்ற உண்மையை மணிவாசகப் பெருமான்

"தன்னிற் பிரிவிலா எங்கோமான்
அன்பர்க்கு
முன்னி யவள் நமக்கு முன்சுரக்கும்
இன்னருளே
யென்னப் பொழியாய்
மனழயேலோ ரெம்பாவாய்!"
(திருவெம்பாவை 16)

என்ற பாடலில் விளக்கி யிருத்தல் காணலாம். சிவன்பால் அன்புடையார்க்கும் அம்மையே அருளைப் பொழிகின்றாள் என்றால், சிவகாம சுந்தரியின் பெருமையை நன்கு புலப்படுத்தல் காணலாம்,

இனிச் சிவபிரானுடைய நடனத்தில் படைத்தல், காத்தல், அழித்தல் மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழிலின் குறிப்பு இருப்பதை ஞானிகள் விளக்கியிருக்கின்றார்கள். துடியேந்திய கையில் படைத்தலும், அபயம் தரும் அமைத்த கரத்தில் காத்தலும் அனலேந்திய கையில் அழித்தலும், முயலகனை மிதித்த பாதத்தில் மறைத்தலும், தூக்கிய திருவடியில் அருளலும் ஆகிய குறிப்புகள் இருக்கின்றன என்பர். எடுத்த பொற்பாதம் என்று புகழத்தக்க இடது பாதம் நீலமேனி வாலிழையின் பாதமே என்பதை உணர்ந்தோமாயின் சிவகாமசுந்தரியின் திருவடிக் கமலத்தை நாம் மறத்தலும் ஒல்லுமோ? அம்மை உயிர்களின் சார்பாக இறைவனது நடனத்தைக் கண்டு உயிர்கட்கு அருள் பாலிப்பது போலவே இவனுக்கும் துணைக் காரணமாய் நின்று உதவுகின்றாள், ஐந்தொழிலைச் சிவன் நிகழ்த்துங்கால் அவவத் தொழிலுக் கேற்ற வடிவத்தை அவன் கொள்கின்றான், பிரமன், திருமால், ஈசன், மகேசம், சதாசிவம் என்றபெயரில அவன்

வேறு வேறு கோலங்களைக் கொள்ளும்போது அம்மையும் அவ்வடிவுக்கேற்ற பெண் வடிவு கொள்கின்ருள்.

"எத்திரம் நின்ருனீசன் அத்திறம் அவளும் நிற்பாள் என்று கூறும் சிவஞானசித்தியார், அம்மை அருள் வடிவமாகக் கூறப்படுவது போலவே ஞான வடிவாகவும் கூறப்படுகின்ருள். "சத்திதன் வடிவே தென்னில் தடையிலா ஞானமாகும்" என்று அருள் நந்தி சிவம் கூறுதல் காணலாம்.

அம்மையின் திருமுலைப்பால் அருந்திச் சீர்காழிப் பிள்ளையார் திருஞான சம்பந்தர் ஆயினமை கொண்டும் இவ்வுண்மை தெளியலாம். இங்ஙனம் எல்லாம் அம்மை சிவனுக்குத் துணைக் காரணமாகவும் அருட்சத்தியாகவும் ஞான வடிவாகவும் விளங்கி உயிர்கட்கு உதவி புரிகின்ருள். என்பதையும் சிவபிரானை விட அம்மையே நமக்கு அணித்தாக நின்று அருள் புரிந்து சிவனெடு கூட்டும் தன்மையள் என்பதையும் உணர்ந்து நீலமேனி வாலிழையாகிய அவ் வம்மையின் திருவடிகளை வணங்கி வாழ்வும் வளமும் பெறுவோமாக.

# வேண்டத் தகுவன

திரு. முத்து. சிதம்பரராசன், எம்.ஏ.,

'பூங்கழல்கள் அவையல்லாது எவையாதும் புகழாத' நாவீறு கொண்டவர்களே தெய்வக் கவிஞர்கள் அக் கவிஞர்களின் தெய்வ நலஞ் சான்ற பாடல்கள் பலப்பல. அப்பாடல்கள் அனைத்தும் நம்மை நல்வழிப்படுத்த எழுந்தவைகளே. அப்பாடல்களைப் பாடி நல்வழி அடைந்தவர் பலர்; அடைபவர் பலர்; அடைய இருப்பவர் பலர். தாமார்க்கும் குடியல்லாத் தன்மையரான சங்கரனும் நற்சங்க வெண்குழையோர் காதிலே உடையவனுமான கோமாற்கே நாம் ஆட் செய்வோம் என்றார் அந்தமிழாளியார் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாரும்' உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்றார். மணிவாசகரோ யாவர்க்கு மேலாம் அளவிலாச் சீருடையானை பெறுதற்கு 'அழுதால் உன்னைப் பெறலாமே' என்று அரிய வழி காட்டினார்.

இவ்வாறெல்லாம் ஆன்றோர் காட்டிய வழிகளை நாம் மறந்து இறைவன் முன் நின்று பல பொருள்களை மட்டும் வேண்டும் நிலையில் இருக்கின்றோம். நமக்கு வேண்டும் பொருள்கள் யாவை என்பதனை இறைவன் நன்குணர்ந்தவன் என்பதனை வாதவூரர், 'வேண்டத்தக்கது அறிவோய் நீ' என்ற வரியின் மூலம் தெளிவாக விளக்கினார். மேலும் அவர் யான் ஏதேனும் தப்பித் தவறிக் கேட்டுவிட்டால் என் செய்வது என எண்ணும் பாங்கில், 'அதுவும் உன்றன் விருப்பன்றே' என்றார் சதுரப் பாட்டுடன் நம்பியாரூரரே பித்தனிடம் சோறும், கூறையும் பொன்னும் விரும்பிக்கேட்கவில்லையா! நாம் எம்மாத்திரம்! நாமும் இறைவனிடம் பல பொருள்களையும் வேண்டுகிறோம். ஆனால் நாம் கேட்கும் பொருளைப்பெறநாம் தகுதிபெற்றிருக்கிறோமா என நாம் எண்ணிப் பார்ப்பதில்லை. ஒவ்வொரு பொருளையும் நாம் பெற அதற்குத் தகுதிபெற்றிருத்தல் வேண்டும். இதனைத் தான் நமது சைவசித்தாந்தம் பக்குவநிலை எனக் கழறுகிறது.

இறைவனுக்கு 'பேராயிரம்' என்று அப்பரும் 'ஆயிரம் திருநாமம்' என்று மணிவாசகரும் பாடிச் சென்றனர். பேதித்து நம்மை வளர்த்தெடுக்கும் பெய்வளையான பிராட்டியும் இறைவனுடன் ஒன்றியவள். ஒன்றித்த நிலையில் உமையொரு பாகனைக் காண்பது நமது சைவ சித்தாந்தக் கொள்கையாகும். எனவே அர்பலத்தாடுவான் பலபெயர்களைப் பெறுதல்போல சிவகாம வல்லித்தாயும் பல பெயர்களைப் பெறுகிறாள். அவள் அலையாழி அறிதுயிலும் மாயனது தங்கையும் அமுதீசர் ஒருபாகம் அகலாத சுக

பாணியமாக ஆதி கடவூரில் அபிராமி என்ற பெயரினைப்பெற்று எழுந்தருளி அருள்புரிகின்றாள் இத்தாயின் பெருங்கருணைத் திறத்தில் தோய்ந்த அபிராமிபட்டர் என்பார் 'அபிராமி அந்தாதி' 'அபிராமி பதிகம்' என்ற இரு நூல்களைப் பாடியுள்ளார் ஈண்டு 'அபிராமி பதிகத்தில்' அமைந்துள்ள ஒரு பாடலை நாம் காணின் நம்மால் அம்மையிடம் வேண்டத்தகும் பொருள்கள் யாவையென்பதனை நன்கு உணரலாம்.

முதற்கண் வேண்டும் பொருள் கல்வி ஆகும். கல்வியின் பயன் அறிவு அறிவு கடந்த நிலையில் இறைவன் திகழ்கின்றான். கல்வி எவ்வாறு அளவிட முடியாத ஒன்றோ அதுபோல இறைவனும் அளவிட முடியாத ஒருவன். 'கல்வி என்னும் பல் கடற் பிழைத்தும் என்ற மணிவார்த்தை ஈண்டு எண்ணத்தக்கது. கல்விக்குக் கரை இல்லை, கல்வி வெள்ளத்தாற் போகாது வெந்தணலால் வேகாது, கல்விபோல் உலகத்து மம்மர் அறுக்கும் மருந்து எங்கனுமில்லை என்றெல்லாம் நமது தமிழிலக்கியங்கள் கல்வியின் சிறப்புக்களைப் பலவாறாக எடுத்தியம்புகின்றன. எனவே கல்வி என்பது கேடில் விழுச்செல்வமாகிறது. கல்வியும் முறையானதாக இருக்க வேண்டும். முறைமாறின் கல்வி சிறப்படையாது முறைமாறலும், நினைவு குறைதலும் கல்வி சிறப்படையாது. முறைமாறலும், நினைவு குறைதலும் கல்விபால் மிகுதியாக இடம் பெறுவன. எனவேதான் கவிஞர் 'கலையாத கல்வி' வேண்டும் என வேண்டினார்.

கலையாத கல்வியைப்பெற குறையாத வயதை அடுத்து வேண்டுகிறார் பட்டர். ஆனால் இன்ன வயதுவரை இருக்கவேண்டும் என குறிப்பிட்டு வேண்டினாரல்லர். ஒவ்வொருவரும் தன் வினை முடிக்குமளவாவது உலகத்து இருக்கவேண்டுமல்லவா! சிலர் ஊழ்வயத்தால் இளமையிலேயே சென்று விடுதலையும் காண்கிறோம். பலர் மூப்படைந்தும் தன் வினை முடிக்காமல் அலமருதலையும் காண்கிறோம். இவைகளையெல்லாம் எண்ணி சங்கக் கவிஞர் முதல் இற்றை நாட் கவிஞர் வரைப் பாடியுள்ளனர். எனவே ஒவ்வொருவரும் தத்தம் வினைகளை உரிய காலங்களில் செய்திடல்வேண்டும். எனவே வயது முடிவதற்குமுன் நாம் முந்திக்கொள்ள வேண்டும். எனவே தான் 'குறையாத வயதும்' வேண்டும் என வேண்டினார்.

குறையாத வயதை வேண்டிய கவிஞர் சிறிதும் வஞ்சனையற்ற நட்பு வேண்டும் என அடுத்து வேண்டுகிறார். நட்பினால் எதனையும் பெற்று விட முடியும் என்று எண்ணிய வள்ளுவர் 'நாடாச் சிறப்பு' என நட்பைச் சிறப்பித்தார் நம்பியாரூரர் இறைவனுடன் நட்பு பெற்றிருந்தமையால் தான் நினைத்த அனைத்தும் பெற்று வாழ முடிந்தது. ஔவைப்பிராட்டியும் 'நல்லாரோடு இணங்கியிருப்பதுவும் நன்று என்று நல் நட்பை விதந்தோதியதைக் காணலாம். சிறிதும் வஞ்சனை கலத்தல் கூடாது; கலப்பின் நட்பு அழிவதோடு மட்டுமல்லாது பகையும் வளர நேரிடும். எனவே தான் ஈண்டு "ஓர் கபடு வாராத நட்பும்" வேண்டும் என வேண்டினார்.

அடுத்து வளமையை வேண்டுகிறார் கவிஞர். வாழ்வில் எல்லாற்றானும் வளம் வேண்டும். வளமையே அனைத்திற்கும் வித்து. வளமையில்லா வாழ்வும் ஆண்மையில்லா மனிதனும் ஒன்று. ஈண்டு இவர் வேண்டும் வளமை தானிய வளமை என்றே கூறலாம். ஏனெனில் பின்னர் மன வளம், நிதிவளம், இவைகளைத் தனித் தனியே வேண்டுறார்! வளமையில் முழுமைவேண்டும். எனவே 'குன்றாத வளமை' வேண்டும் என வேண்டினார்.

கன்றாத வளமையை விரும்பிய பட்டர் அது அனுபவிக்க குன்றாத இளமையை வேண்டுகிறார். இளமையை விரும்பாதார் யாருமிலர். இளமையே முதுமைக்கு வித்தாகும். எனவே தான் 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா', 'இளமை பயமறியாது', 'விளையும்பயிர் முளையிலே தெரியும்' போன்ற பழமொழிகள் தமிழகத்துத் தோன்றின. இருப்பினும் மணிமேகலை போன்ற இலக்கியங்கள் இளமை நிலையாதது என எடுத்து வற்புறுத்திக் கூறினும் அதனை யாவரும் விரும்புதலையே காணுகிறோமே தவிர வெறுப்பவரைக் காணுமாறில்லை. எனவே இளமையில் உடலாலும் உள்ளத்தாலும் குறை சிறிதும் இல்லாமல் இருத்தல் வேண்டும் என்று எண்ணியே "குன்றாத இளமையும்" வேண்டும் என வேண்டினார்.

இளமையைப்பாடிய கவிக்கு உடல் பற்றிய எண்ணம் தலை தூக்கவே பிணியிலாத உடல் வேண்டும் என வேண்டுகிறார். கவிஞர்க்கு எண்ணம் கோர்வையாக வருதல் மிகவும் போற்றுதற்குரியது. பிணிதான் உலகத்து மனிதனை மிகவும் அல்லற்படுத்தும் வித்தாக அமைகிறது. பிணியனால் எதனையும் நிறைவாகச் செய்யமுடியாதல்லவா! பிணி தீர்க்கும் மருத்துவனாகவும் இறைவனை நம் அடியவர்கள் கண்டுள்ளனர். 'மருத்துவமாகித் தீராநோய் தீர்த்தருள வல்லான்' என்ற அப்பர் வாக்கு ஈண்டு சிந்திக்கற்பாலது. நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பது நமது பழமொழி. எனவே அபிராமிபட்டர் 'கழுபிணியிலாத உடலும்' வேண்டும் என வேண்டினார்.

உலகத்தில் உடற்பிணிகளையாவது போக்கிக்கொள்ள முயன்று வெற்றி காணலாம். ஆனால் உளப்பிணியைப் போக்குதல் என்பது மிக அரிது. எனவேதான் வள்ளுவரும்,

> " தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
> நாவினாற் சுட்ட வடு "

என்றார், மனத்தில் எப்போதும் சலிப்பு ஏற்படுதல் கூடாது. சலிப்பு ஏற்படின் எச்செயலும் நடைபெறாது. இறைவனை சலிக்காமல் இமைப்பொழுதும் நெஞ்சில் நீங்காதவாறு வழிபட்டமையால்தான் அடியவர்கள் திருவருளைப் பெற்றனர் எனலாம். எனவேதான் பட்டரும் 'சலியாத மனத்தை' வேண்டினார்.

அபிராமி பட்டரது மனம் விரிவடைந்து கொண்டே போகிறது. தனி மனிதனுக்கு வேண்டியவைகளை இதுவரை வேண்டிய கவிஞர் மனம் இப்போது மனை வாழ்க்கையை வேண்டும் பாங்கினை நாம் காணலாம். சாதாரணமாக மனைவி வேண்டும் என வேண்ட

வில்லை. அன்பு அகலாத மனைவி வேண்டும் என வேண்டினார். மன்பதையின் அனைவருக்கும் ஏற்றபடி மனைவி அமைந்திருக்கிறார்களா என்பது ஐயம் 'திருமணங்கள் தேவலோகத்தில் நிச்சயிக்கப்படுகின்றன' ('Marriages are made in Heaven')என்பர். இக்கூற்று முற்றிலும் உண்மை என்பதை அவரவர் அனுபவத்தில் தான் உணரமுடியும் எனவே ஒருவன் என்றைக்குமே அன்பு அகலாத மனைவியைப்பெற்றுவிட்டார் எனில்அனைத்தையும் பெற்றவனாகின்றான். எனவே தாய் தந்தையர் அன்பின் பிணைப்பில் தவறின் அவர்களுடையவழித்தோன்றல்களும் செம்மைவாழ்வை எய்தார். எனவேதான் கவிஞர் அன்புஅகலாத மனைவியை விரும்பி வேண்டினார்.

அன்பு அகலாத மனைவியைப் பெற்றவர் நன்மக்கட்பேற்றினைப் பெறுதல் திண்ணம். அனைத்து நலன்களும் பெற்ற சிலர் மக்கட்பேறே இல்லாமல் இடுக்கணோடு இருத்தலை நாம் காண்கிறோம். மேலும் மக்கட் பேற்றினைப் பெற்ற பலரும் நன்மக்கட் பேற்றினைப் பெற்றுள்ளனரா என்பதும் ஐயமே. இவையெல்லாம் உலகியற்கை என எண்ணி.வாழவேண்டியுள்ளது. இவைகளை யெல்லாம் மனதில் எண்ணியே 'தவறாத சந்தானமும்' எனப்பாடினார்.

'தோன்றிற் புகழொடு தோன்றுக என்றார் தெய்வப் புலவர். புகழே அழியாத செல்வம். யார் எப்படி முயன்றாலும் அது அழிவுறாது. ஆயின் சிலருடைய புகழ் அவர் உள்ளவரை நின்று அவர் போயபின் அப்புகழும் மாய்கிறது.அப்படிப்பட்ட புகழ் புகழாகாது. சமய அடியார்கள் புகழும், காந்தியடிகள் போன்ற விடுதலை வீரர்கள் புகழும் அன்றும் இன்றும் என்றும் நிலை பெறுதலைக்காண்கிறோம். எனவேதான் தெய்வக்கவிஞர் ஈண்டு 'தாழாத கீர்த்தியும்' வேண்டும் எனவேண்டிப் பாடினார்.

தாழாத கீர்த்தி நிலைபெற வேண்டுமாயின் உண்மையே பேச வேண்டும் என்று கூறுவார்போல அடுத்து 'மாறாத வார்த்தையும்' வேண்டும் என்றார். உலகத்து வாய்மையே பேசி துன்புற்றார் பலர். இதுவும் உலகியற்கை. வாய்மைக்கு எடுத்துக் காட்டாகத் திகழ்ந்தான் புராணக்கதாநாயகன் அரிச்சந்திரன். பாரதத்தாயின் தவப் புதல்வர் அண்ணல்காந்தியடிகள் வாய்மையின் திருவுருவமாகவே வாழ்ந்து காட்டினார். மொழித் தூய்மையாகிய வாய்மை இறைவனை வழிபாடு செய்யும், கருவிகளில் ஒன்று எனலாம். எனவே அருட்கவி "மாறாத வார்த்தையை" விரும்பி வேண்டினார்.

மாறாத வார்த்தையை உடையவனிடம் நல்ல அறச்சிந்தனை தானே தோன்றுதல் இயல்பு. கொடை கொடுத்துப் புகழ் நிறீஇயர் பலர். கொடையாலேயே தம் வாழ்வின் பங்களைப் பலர் துறந்தனர். 'செத்தும் கொடுத்தான்' என்றெல்லாம் புகழத் தக்கவகையில் நம்தமிழகம் கொடைப் பண்பில் சிறந்து விளங்குகிறது. இது அறப்பணியாளர்கள் கொடை வழங்கும் போது சில தடைகள் ஏற்படுவதுண்டு. கொடை வழங்குபவரைத் தடுத்தவன் எந்த நிலையை எய்துவான் என்பதனைப் பொய்யில் புலவர்,

"கொடுப்பது அழுக்கறுப்பான்
சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்"

என்றார் என. கொடைகொடுக்கும் மனம் வரும்போது எவ்வகையானும் தடைவரக் கூடாதே எனக்கவன்று தடைகள் வாராத கொடையும் என வேண்டினார்.

எக்காலமும் அறப்பணிபுரிய தொலையாத செல்வம் வேண்டுமல்லவா! அத்தொலையாத நிதியத்தை ஈட்ட நீதி நெறியில் அல்லவா செல்லவேண்டும். எனவே நிதியை நீதியோடு ஈட்டினோமாகில் அந்நிதி நம்மை விட்டு நீங்காது. நீதி தவறிய காலை அந்நிதி நம்மை நீத்துச் சென்றுவிடும். இவ்வாறு நீதியுடன் நிதியை ஈட்டினால் அச்செல்வம் தொலையாது என்பதனை வற்புறுத்தும் பொருட்டே 'தொலையாத நிதியமும்' என்று அடை கொடுத்துப் பாடினார்.

அனைத்தும் செயல்பட நல்லாட்சி தேவையல்லவா! செங்கோன்மையும் கொடுங்கோன்மையும் தமிழகத்தில் இருந்தமையைக்கண்ட வள்ளுவர் இரண்டையும் பற்றி தனித் தனி அதிகாரங்களில் விளக்கினார். செங்கோலாட்சி வேண்டும் பாங்கு அபிராமி பட்டரைப் பொது நோக்கால் முன்னையை விட ஒரு படி தூக்கிவிடுகிறது. 'கோன் முறை அரசு செய்க' என்ற கூற்று ஈண்டு இவரையும் "கோணாத கோலும்" என்று பாடத் தூண்டிவிட்டது எனலாம்.

உலக வாழ்வு இன்ப துன்பம் கலந்தது எனவேதான் பக்குடுக்கை நன் கணியார் என்ற சங்கக் கவிஞர் 'இன்னாதம்ம விவ் வுலகம்' என்றார். 'இன்பமும் துன்பமும் பிறர்தர வாரா' என்பதனை உணர்ந்து நாம் நடப்போமேயானால் துன்பமிலாத வாழ்வை நாம் எய்தலாம். நல்லொழுக்கம் நல் வாழ்வைத் தரும். அபிராமி பட்டர் சிறிது துன்பமும் கலவாத வாழ்வை வேண்டுவார் போல், ஒரு துன்பமில்லாத வாழ்வும்' வேண்டும் என வேண்டிப் பாடினார்.

'அன்பே சிவம்' என்பது சைவ சித்தாந்தக் கொள்கை 'அன்பே சிவமாவது' என்றார் திருமூலர். வள்ளுவம் 'அன்பின் வழியது உயிர்நிலை' எனப் பகருகிறது. அன்பின் முதிர்வால் கண்ணப்பர் திருவருளைப் பெற்றார். அவனருள் இருந்தால் தான் அவன் தாளை வணங்கலாம் என்பது மணி வார்த்தை. திருவாதவூரர் கூறியாங்கு நம்மிடம்தான் 'யானே பொய் என் நெஞ்சும் பொய் என் அன்பும் பொய்' என்று பல பாவமூட்டைகள் உளவே! எனவே அன்பையும் வேண்டி நிற்க வேண்டிய நிலையில் உள்ளோம். உண்மையன்பு நம்மிடம் மேலோங்கினால் நாம் அடியார் கூட்டத்துச்சேரத் தகுதி யுடையோமாகிறோம். அது தான் விருப்பமும் "நினது அடியாரொடு அல்லால் நரகம் புகினும் எள்ளேன்" என்ற மணிவாசகர் அருள் வாக்கும் "கூடும் அன்பினில் கும்பிடலேயன்றி" என்ற சேக்கிழார் அமுத வாக்கும் எண்ணி எண்ணி சிந்திக்கத் தக்கது. இவைகளை யெல்லாம் எண்ணியே "தூய்ய நின் பாதத்தில் அன்பும் உதவிப் பெரிய தொண்டரொடு கூட்டுகண்டாய்" என்று உளம் நெக்குருகிப் பாடினார்.

இவ்வளவு வேண்டத் தருவனவும் அமைந்த பாடல்,

கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்
கபடுவாராத நட்பும்

கன்றாத வளமையுங் குன்றாத
இளமையும்
கழுபிணியிலாத உடலும்
சலியாத மனமும் அன்பகலாத
மனைவியும்
தவறாத சந்தானமும்
தாழாத கீர்த்தியும் மாறாத
வார்த்தையும்
தடைகள் வாராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணாத
கோலுமொரு
துன்ப மில்லாத வாழ்வும்
துய்ய நின் பாதத்தில் அன்பும்
உதவிப் பெரிய
தொண்டரொடு கூட்டு
கண்டாய்
அலையாழி அறிதுயிலு மாயனது
தங்கையே
ஆதிகடவூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத
சுகபாணி
அருள்வாரி! அபிராமியே!

இப்பாடலில் அமைந்துள்ள வேண்டத்தகும் பொருள்கள் பதினாறு உள்ளன. அபிராமிபட்டர் இப் பதினாறு பொருள்களையுமே பதினாறு பேறுகளாக எண்ணுகிறார் எனலாம். இவரே தனது பதிகத்தின் மற்றொரு பாடலில் "பதினாறு பேறும் தந்தருளி நீ" எனக்குறித்துப் பாடுகிறார் வசை பாடுவதில் வல்ல காளமேகர் போன்ற புலவர்கள் பதினாறு பேறுகளைக் குறித்தும் பாடிச் சென்றுள்ளனர். ஆனால் அவர்கள் குறிக்கும் பதினாறு பொருள்கட்கும் இவர் கூறும் பதினாறு பொருள்கட்கும் இடையே வேறுபாடு கள் உள. அவைகளை நோக்கும் போது இவர் கூறும் பதினாறு பொருள் கள் சிறப்புடையனவாக அமைந் துள்ளன எனலாம். எனவே அப்பரடி கள் கூறியாங்கு "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்" என்றாற்போல நாமும் எண்ணி அபிராமிவல்லி யாம் சிவகாம வல்லித் தாயை ஒன்றியிருந்து நினைத்தும் நீள நினைந்து அழுதும் பாடிப் பரவினால் அவளருளைப் பெறுதல் திண்ணம்.



# தில்லையில் நந்தனர்

முருகனடி சேலம் திரு S. ஜெயராமன்

நந்தனர்—

திருநாளைப் போவார் நாயனர்;

நந்தனர் சிதம்பரத்துக்குச் செல்ல வேண்டும் என்னும் ஆசை கொண்டு "நாளைக்குப் போவேன்" என்று சொல்லி காலங்கழித்ததனல் அவருக்குத்திருநாளைப் போவார் என்னும் பெயர் உண்டாயிற்று. இவர் சோழ மண்டலத்திலே, ஆதனூரிலே, புலையர் குலத்திலே தோன்றியவர். பரமசிவனுடைய திருவடிகளிலே அபார பக்தி கொண்டவர். சிவாலயங்கடோறும் பேரிகை முதலிய கருவிகளுக்குத் தோலும், வாரும், வீணை, யாழுக்கு நரம்பும், அருச்சனைக்குக் கோரோசனையும் கொடுத்து திருத்தொண்டு செய்துவந்தார். அவர் இப்படியிருக்க ஒருநாள் சிதம்பர ஸ்தலத்திற்குப் போய் தில்லை திருநடனத்தைக் கண்டு வணங்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. ஆனல் தமது குலத்தின் குறைபாடு கண்டு, தில்லை எல்லையையடைந்தும், உள்ளே போகக்கூடாமையை நினைந்து வருந்தினர். தடை செய்கின்ற இந்த இழிந்த பிறப்பினுல் சபாநாயகரை எப்படிக் கும்பிடுவது என்று துக்கத்தோடு நித்திரை செய்தார். இவ்வருத்தத்தை நீக்க எண்ணிய இறைவன் இவர் தமக்கருள் செய்ய திருவுளங் கொண்டார். சொப்பனத்திலே தோன்றி இந்தப் பிறப்பு நீங்கும்படி நெருப்பிலே மூழ்கி எழுந்து, பிராமணர்களோடும் நம் சந்நிதானத்தில் வருவாய் என்று அருள் புரிந்தார் தில்லை வாழந்தணர். களுக்கும், திருநாளைப் போவார் பொருட்டு தீயமைத்துக் கொடுக்கும்படி அஞ்ஞாபித்தருளினர். அவர்கள் இறைவனது இக்கட்டளை விபரத்தை நந்தனரிடம் தெரிவித்து மதிற்புறத்துத் திருவாயிலின்முன் தீக்குழியினை அமைத்துத் தந்தார்கள். நந்தனரும் சபாநாயகருடைய திருவடிகளை மனதிலே தியானம் பண்ணி அழலினுட் புகுந்தார். உபவீதம், சடையோடு கூடி புண்ணிய முனிவராய்த் தீயினின்றும் எழுந்தார். அதுகண்டு தில்லை வாழந்தணர்களும், சிவபக்தர்களும் மற்ற மறையவர்களும் உடன் வர கோபுரத்தை அணுகி, அதனை நமஸ்கரித்து எழுந்து, உள்ளே போய் கனகசபையை அடைந்து, சிவ சிதம்பரநாதனின் ஸ்ரீ பாதங்களை அடைந்ததாகச் சரித்திரச் சுருக்கம்.



# ஒடுங்கிப் புகுந்தான் பரந்தான்

S. K. இராமராசன் (கட்பாசமன்)

மனிதனுக்கு மிக மிக இன்றியமையாத ஆற்றலைத் தருவது இரும்பாகும். "இளைத்தவன் இரும்பைத் தின்னுக" - என்பது பழமொழி. ஆனால், கிடைக்கும் இரும்பை அப்படியே உருட்டி விழுங்கினால் மனிதன் நன்மை பெற மாட்டான். மரணத்தைத் தான் காண்பான். இரும்பு மனிதன் உடம்பிற் கலந்து செறிவு பெற வேண்டுமானால் அது பொடியாகிப், பன்முறை கனலிற் குளித்து, முருங்கைச் சாற்றிலே நீராடி, நுண்ணிய அணுவாகிப், பல்வித மூலிகைகளின் சாரத்தை வாங்கி எளிமை பெற வேண்டும். அப்போதுதான் அது மெல்லிய — பூப்போன்ற — குடல்களால் ஜீரணிக்கப்படும். இரும்புத் துண்டு ஒன்று மக்களின் குருதியிற் கலக்க வேண்டுமானால் அது படிப்படியாகத் தன்னிலையினின்றும் கீழே இறங்கி வர வேண்டியுள்ளது.

இது போலவே, கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டாத பரம்பொருள். மண்ணிலே தூசியொடு தூசியாகக் கிடக்கின்ற ஆன்மாக்களிற் கலப்பதற்காகப் படிப்படியாக இறங்கி வருகின்றது. பரம்பொருள் தன்னுடைய இயல்பான நிலையில் இருந்தால் அதனை எவராலும் அறிய முடியாது. இன்ன தன்மையன் என்றறியவொண்ணா ஈசன் என்றும், உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன் என்றும், திருமுறை பேசும் கருத்துக்கு எட்டாத இப்பரம்பொருளின் உள்ளம் என்றும் கருணையால் கூடு பூரித்துள்ளது. ஆதலினால் அது அகளமாயிருப்பதை விடச் சகளமாயிருக்கவே விரும்புகிறது

யானை இருகை முடவனும் ஏறலாம்படி தன்னுடைய பேருடலைச் சிரமம் படுத்தி, நான்கு கால்களையும் மண்டியிட்டுக் கொண்டு, படிந்து கொடுப்பதைப் போல-எம்பெருமானும் சம்சாரி சேதனனும் வழிபடலாம்படி தன்னைக் கொண்டு வந்து தாழவிட்டு எளியவனும். இக்குணத்தையே 'ஸௌலப்யம்' என்று கூறுவர். இறைவன் பொறி புலன்கட்கு எட்டாதவன் என்று கருதிப் பின் வாங்காமலிருப்பதற்காக ஸௌலப்பியத்தை அநுசந்திக்க வேணும். இறைவனுடைய எளிவந்த தன்மையே நமக்குத் தஞ்சம்.

இறைவனுடைய மேன்மையையும் எளிமையையும் ஒன்று படுத்திப் பேசி பேசி மனங்கரைவது அனுபூதி மான்களின் இயல்பு வான்பழித்து இம்மண் புகுந்து மனிதரை ஆட்கொண்ட வள்ளல்", என்றும், தேவர்க்கும் அரியனுகும் தேவனே — அன்பராவார்

யாவர்க்கும் எளியனாகும் ஈசனே" — என்றும் பெருமக்கள் பாடிப்பாடியுருகினர்.

மேலேயிருப்பவன் கீழே வந்தால் ஒளிபெறுகிறான். கீழேயிருப்பவன் மேலே சென்றால் ஒளி பெறுகிறான். சில பொருள் கீழ் நோக்கி வருவதால் பயன் தருகிறது. சிலபொருள் மேல் நோக்கிச் செல்வதால் பயன் பெறுகிறது. "பெருக்கத்து வேண்டும் பணிவு" "தருக்கத்து வேண்டும் உயர்வு" — என்ற வள்ளுவரின் கட்டளை இறைவனையும் ஆன்மாவையும் நோக்கி எழுந்ததோ? என்னவோ?

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன், நிலவுலாவிய நீர்மலி வேணியனாய், அலகில் சோதியனாய், அம்பலத் தாடுவானாய், சிலம்படியுடையவனாய்த் இறங்கி வருகின்றனன், அரியவன் அடியவன் ஆனான் என்பது சேக்கிழாரின் திருவுள்ளம். "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன்" என்பது கூத்தப்பிரானின் திருமுகப்பாசுரம் அன்றோ? மதுரைப் பிரானின் திருமுகப்பாசுரத்தில் பரத்துவம் ஒளி வீசும் அம்பலத்தாடியின் திருமுகப் பாசுரத்தில் ஸௌலப்பியம் தேன் பிலிற்றும். இவையே இரண்டிற்கும் வாசி.

இறைவன் அன்பர்கள் யாவர்க்கும் எளியவன் தான். ஆனால் அவன் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுக்கு எளிமையானது போல் வேறு எவர்க்கும் எளிமையானதில்லை. ஆரூரர் "இறைவா! குண்டையூர்சில நெல்லுப் பெற்றேன்: ஆளிலை: அவை அட்டித் தரப்பணி" - என்றால் இறைவன் உடனே அப்பணியை நிறைவேற்றுகின்றான், ஆகமங்கள் வேதங்கள் யாவும் முயன்று குடியேற்றிய கோவிலைவிட்டு "நீ மகிழமரத்தடியில் தங்குக என்றது?" உடனே நம்பிரான் உடன்படுகிறான். வனப்பகை யப்பனாகிய நம்பியாரூரர் பொருட்டாகத் தூது சென்றதும், பொன்னையும், பொருளையும், போகத்தையும் வழங்கியதும், இறைவனின் எளிவந்த தன்மையை நமக்குப் புலப்படுத்துகின்றன. இங்ஙனம் இறைவன் ஆரூரருக்கு எளிவந்த பிரானுக்கு விளங்கியமை உண்ணும் உள்ளத்தை நீர்ப்பிண்டமாக வுருக்கும்.

இறைவன், வரலாற்று முறையில் நம்பியாரூரருக்கு எளிவந்த தன்மையைக் காண்கின்ற நாம், தத்துவ முறைப்படி எளிவந்த தன்மையைச் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் மிக மிக அழகாகத் தெரிவிப்பதைக் கண்டு அனுபவிக்க வேண்டும் நம்பியாரூரர் திருநனி பள்ளிக்குச் சென்று பெருமானைச் சேவிக்கின்றார். உடனே அவருடைய திருவுள்ளத்தில், எம்பெருமானுடைய பெருநிலையும், தம்பொருட்டுக் கீழேயிறங்கி வந்த கோலமும் புலனாகின்றன. இறைவனுடைய இயற்கை நிலையையும் (சொரூபம்) தம்பொருட்டாக அவன் மேற்கொண்ட செயற்கை நிலையையும் (ஸ்தடஸ்தம்) நினைந்து நினைந்து உருகுகின்றார். கருத்துக் கெட்டாதவன் பையப் பையக் கீழேயிறங்கி நம்மினும் தாழ வந்து எளிமையினும் எளிமையாக வுள்ளானே என்று நினைந்து உருகிப் பாசுரமிடுகிறார்

வானுடையான் பெரியான்
மனத்தாலும் நினைப் பரியான்:

ஆனிடை ஐந்தமர்ந்தான்
 அணுவாகியோர் தீயுருக்
 கொண்டு :
ஊனுடை யிவ்வுடலம்
 ஒடுங்கிப் புகுந்தான் பரந்தான் :
நானுடை மாடெம்பிரான் :
 நண்ணும் ஊர் நன்பள்ளியதே.

இப்பாசுரம் ஆற்றுநீர்ப் பொருள் கோள் அன்று கொண்டு கூட்டுப் பொருள்கோள். சுரையாழ அம்மி மிதப்ப என்ற பாட்டை ஆற்றுநீர்ப் பொருள் கோளாகக் கருதினல் அப் பாட்டில் உண்மைக்கு மாருன பொருள்தான் கிடைக்கும் இப் பாசுரமும் அப்படித்தான்.

நயத்துக்குச் சுந்தரர் என்ற அனுபவமுடையவர்களின் பேச்சுக்கு நிலமான நம்பியாரூரர், இப்பாசுரத்தில் மூன்று விளக்குகளை ஏற்றி வைத்துள்ளார். அவ்விளக்குகளின் துணை கொண்டால் அன்றி இப்பாசுரம் தன்னுடைய இதயத்தைப் பிறர்க்குக் காட்டாது. அணுவாகி – தீயுருக் கொண்டு – ஒடுங்கி என்பவையே அவ்விளக்குகள்.

திருக்குருகைப் பெருமாள் கவிராயர் மாறனலங் காரத்தில் தீபகத்திற்கு வழங்கிய இலக்கணம் இந்தக் கரும்புக் கவிதையிற் சாற்றைச் சுவைக்கவுதவிற்று.

தொழில், குணம், சாதி, பொருள்
 எனும் இவற்றுள் --ஒரு
மொழி—புணர் செய்யுளின்
 முதலிடை கடை நின்று
ஆங்கதன் பலபுடை
 யடைபொருள் விளக்கும்
பாங்குறு தீபகம் பன்னிரு பாற்றே.
என்பது மாறனலங்காரம்.

தொழிலையும், குணத்தையும், சாதியையும், பொருளையும் காட்டும் ஒரு சொல், புலவனுற் பாடப்படும் செய்யுளிலே. முதல், இடை, கடை, என்ற ஓரிடத்திலே நின்று, பலவிடங்களில் உள்ள சொற்களுடன் இசைந்து பொருளை விளக்கும் தீபகம், பன்னிரண்டு பகுதிகளையுடையது—என்பது சூத்திரத்தின் பொருள். இவ்விலக்கணம் காட்டும் வழியில் சுந்தரரின் கவிதைக் கனிக்குள் புகுந்தால், நாம் அற்புதமான பொருள் புலப்படுவதைக் காணலாம். இந்த இலக்கணத்தையும் திருவருளையும் துணைகொண்டு இப்பாசுரத்தினுள் புகுவோம்.

பெரியான், மனத்தாலும் நினைப்பரியான் : அவன் (அடியேனை ஆட்கொள்வதற்காக) ஒடுங்கி. அணுவாகி வான் உடையான் : (பின்னும்) ஒடுங்கி அணுவாகித் தீயுருக்கொண்டு ஆனிடை ஐந்து அமர்ந்தான். (மீளவும்) ஒடுங்கி அணுவாகி ஊனுடை இவ்வுடலம் ஒடுங்கிப் புகுந்தான். பரந்தான் (அவன்) நான் உடை மாடு எம்பிரான் அவன் நண்ணூர் ஊர் நணிபள்ளியதே.

மனத்துக்கெட்டாத, சிவபிரான் அடியேனை ஆட்கொள்வதற்காகச் சுருங்கிச் சுருங்கிவந்தான். முதன் முறை சுருங்கினன். அப்போதும் என்னுள் புகமுடியவில்லை. பின்னும் சுருங்கினை அப்போதும் அவனல் என்பால் வரமுடியவில்லை. மீளவும் அணுவாகிச் சுருங்கி என்னுள் புகுந்தான். பெருமான் எனக்குள் புகுந்த பின் விரிந்தான். அவ்விரிவை என்னல் அடக்கிக்கொள்ள முடியவில்லை அவனுடைய விரிவில் என்னுடைய

நான் என்பது சிதைந்துவிட்டது. அத்தகைய பெருமான் வாழும் ஊர் நனி பள்ளியாகும்—என்பது பாசுரத்தின் கருத்து.

(பெரியான)—ஒன்றினும் அடங்காதவன். ஒன்றினும் தோன்ருதவன். ஆதலின் அவனை பெரியான் என்ருர். உலகிலேயே பெரும்பொருள் இரண்டு. ஒன்று காலம் மற்றென்று இடம். எல்லாப் பொருள்களும் காலத்துக்கும் இடத்துக்கும் கட்டுப்பட்டவை. இறைவன் காலகாலன் இடத்துக்கு அப்பாற்பட்டவன். ஆதலின் இறைவன் ஒருவனே பெரியவன். (மனத்தாலும் நினைப்பரியான்) மனிதன் பெற்றிருக்கும் மனம் என்பது அற்புதமான பொருள். அதனல் நினைக்க முடியாதவையே இல்லை. ஒரு சிற்றூசியின் நுனியிலே உள்ள மல்லிகைப்பூ ஏழுமலைகளைச் சுமப்பதாகக் கற்பனை செய்யும் ஆற்றல் வாய்ந்ததல்லவா மனம்? அம்மனத்தாலும் பெருமானின் உண்மையியல்பை உணரமுடியாது. மாயையே மனமாக வுருக்கொண்டுள்ளது. ஆதலால் அது பேராற்றல் வாய்ந்தது. அம்மனமும் சென்று சேரமுடியாத இடம் சிவசந்நிதானம்.

"இந்தமனத் தைத்தூதா
ஏகென்பேன் அம்மனமும்
அந்தமனே தீதர்பால் அண்டாதே"

என்ற தமிழ் விடு தூது இங்கே கருதத்தகும். காலாதீதமாயும், க்ஷேத்ராதீதமாயும், மனேதீதமாயும் இருப்பது பரம்பொருளின் சொரூபம். 'பெரியான் மனத்தாலும் நினைப்பரியான்" என்ற இத்தொடர் வேதங்கள் நமக்கு நிலம் அன்று என்று தடுமாறிய பரம் பொருளை நமக்குக் காட்டித்தருகிறது.

(ஒடுங்கி அணுவாகி வானுடையான்)—மனத்துக்கெட்டாத பரம் பொருள் தம்மை ஆட்கொள்வதற்காகச் சுருங்கி வந்த முதல் நிலையை இங்கு பேசுகின்ருர். க்ஷேத்ராதீதமான (தேசங்கடந்த) பரம்பொருள் தன்னுடைய திருமேனியைச் சுருக்கிக்கொண்டது. அப்போது அப்பரம் பொருளின் வடிவம் அணுவளவினதாம். அவ்வணுவளவான அப்பரம் பொருளின் பரிணுமத்தை அவன் உடுத்துள்ள ஆடையைக்கொண்டு தெரிவிக்கிருர். (வானுடையான்) திகம்பரனுக இருக்கின்ற பெருமான் பரமாகாசத்தையே ஆடையாகவுடுத்துக்கொண்டான். உலகில் உள்ள எல்லாப் பொருளினும் மிகமிகப் பெரியது ஆகாயம், அவ்வாகாயத்தை உடையாகக்கொண்டவன் பெரியவன் ஆயிற்றே. அணுவாகி வானுடையான் என்பது முரணுகின்றதே. அணுவானவனுக்கு வான் உடை பொருந்தியிருக்குமா? முப்பது வயதுடையான் சட்டையை மூன்றுமாதக் குழந்தைக்கு அணிந்ததுபோல் ஆகுமோ? நன்று நின்கடா! அதற்கேற்ற விடையுள்ளது பெற்றுக்கொள் இறைவன் இயல்பான நிலையை நோக்கும்போது அவன் தற்போது மேற்கொண்டுள்ள வானுடைக் கோலம் அணுவளவினதே. அணு அண்டமாவதும் அண்டம் அணுவாவதும் தம்மைச் சார்ந்த பொருள்களை ஒட்டித்தானே.

" அண்டங்கள் எல்லாம் அணுவாக
அணுக்கள் எல்லாம் அண்டங்களாக"

என்ற பரஞ்சோதியின் தெய்வத் தண்டமிழை ஈண்டு சிந்தித்து அமைதியும் உவகையும் பெறுக.

மனத்தாலும் நினைப்பரியான் ஒடுங்கி அணுவாகி வானுடையான் ஆகியும் தம்முள் புகமுடியாதபடி புறத்தே நிற்கும் நிலையையும், மறுபடியும் சுருங்கி வந்ததையும் நினைந்து மேலே பாசுரமிடுகின்றார்.

(ஒடுங்கி, அணுவாகி ஓர் தீயுருக் கொண்டு ஆனிடை ஐந்து அமர்ந்தான்) பெரிய ஆலமரம் ஒரு சிறு வித்தினுள் அடங்கி அமர்வதுபோல் காலமும் கணக்கும் கடந்த பரம்பொருள் ஒடுங்கி அணுவாகித் தீயுருக் கொள்கிறது. சிலர் எரி பெருக்குவார்கள். ஆனால் அவர்கள் அவ்வெரி ஈசன் உருவமாவது உணர்கிலார். அவர்களும் உணரவேண்டும் என்பதற்காக இறைவன் கனலுருக் கொள்கின்றனன். வானை ஆடையாகத் தரித்த பெருமான் தற்போது கனலையே திருமேனியாகக் கொள்கின்றான் அந்தணன் "கனலையே கடவுளாகக் கொள்ளவேண்டும்" என்ற நல்லுரை ஈண்டு சிந்திக்கத் தக்கது. எல்லாவற்றையும் சாம்பலாக்குவது காலம் ஆதலினால் 'எல்லாம்-காலக்கனல் பட்டு வேம் வாழி நெஞ்சே' என்று மறைந்த காவியம் பேசிற்று. அந்தக் காலக் கனலை உண்டு விழுங்கி ஊழிக் கூத்தாடுபவன் இறைவன். ஆதலினால் பரமேஸ்வரனைத் தீவண்ணன் என்று தமிழ் மறை போற்றிற்று.

இறைவன் கனலுருவாகிப், பசு வழங்கும் ஐந்து புனிதப் பொருளால் செய்யப்படும் அபிஷேகத்தை விரும்புகின்றான். கருத்துக் கெட்டாப் பொருள் கைக்கு எட்டிவிட்டது. இடம் கடந்த பொருள் சுருங்கி நாம் விரும்பும் இடத்துள் வந்து தங்கி விட்டது. நல்ல கவிதையைப்போல் இறைவன் எளியவன் என்று குருதேவர் தாகூர் திருவாய் மலர்ந்தது இவ்விடத்தில் அனுசந்திக்க வேண்டும்.

இறைவன் இரண்டு முறை எளி வந்தும் தம்பால் பற்றமுடியாத நிலையில் மீளவும் அவன் மூன்றும் முறையாக ஒடுங்கி, "அணுவாகி ஊனுடை இவ்வுடலம் புகுந்தான்". என்கின்றனர். நுண்குடலுக்கு ஏற்றபடியாகத் தாயானவள் தன் குருதியையே பாலாக மாற்றி வழங்குவதுபோல் இறைவனும் கண்டார் உள்ளம் கவரும் எளிய திருக்கோலம் கொள்கின்றனன்.

வாடுபு கிடந்த பீடில் நெஞ்சத்து
நுலைழந்தனை புகுந்து தழைந்த நின்
சடையும்
செய்ய வாயும் மையமர் கண்டமும்
நெற்றியில் திகழ்ந்த ஒற்றை
நாட்டமும்
எடுத்த பாதமும் தடுத்த
செங்கையும்
புள்ளி யாடையும் ஒள்ளிதின்
விளங்க

நாடகம் ஆடுதி நம்ப! என்று பட்டினத்தடிகள் இக் கோலத்தைப் பாடிப் பரவசம் ஆகின்றார்.

இறைவன் இதயத்தில் அல்லவா குடிபுகுவான் ஆனால் நம்பியாரூரார் "உடலம் புகுந்தான்" என்கின்றனரே. ஏன்? வினா நன்று விடை எளிது. ஒருவன் மற்றொருவன் வீட்டில் நுழையும்போது முதலில் முற்றத்திலே தங்குவன் பிறகு இல்லத்துக் குரியானின் செவ்வியறிந்து உள்ளே புகுவன். இது உலகியலிற் கண்டது.

அதுபோலவே இறைவனும் முதற் கண் உடலில் தங்குகின்றான். "புன் புலால் யாக்கை புரை புரை களியப் பொன் நெடுங் கோயிலாப் புகுந்து" என்றும், "எந்தையே! ஈசா உட லிடம் கொண்டாய்" என்றும் "ஊனுடம்பு ஆலயம்" என்றும் "வினை படும் உடல் நீ புகுந்து நின் றமையால் விழுமிய விமானமாயி னதோ" என்றும் திருமறை பேசு கின்றது. ஆன்மா என்கின்ற வீட் டுக்கு உடலே முற்றம் போன்றதாகும்

ஒடுங்கிப் புகுந்தான் பரந்தான் — இறைவன் உடலிலே முதற்கண் தங்கிப் பின் உள்ளத்தில் புகுந்து விரி வடைந்தான். அடியேனின் உள்ளம் நான் என்கிற வீட்டை அமைத்துக் கொண்டு உள்ளே தங்கியிருந்தது. சுருங்கிப் புகுந்த பெருமான் பேருருக் கொண்டான். அவனுடைய பேருரு வுக்கு ஈடு கொடுக்க முடியாத "நான்" உடைந்து விட்டது உடை மாடு என்பது வினைத்தொகை. மதன் உடை நோன்றாள் என்ற திரு முருகாற்றுப் படைப் பகுதிக்கு உச்சி மேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் விரித்தவுரை நோக்கத்தக்கது. மாடு என்பது செல்வம். உலகிலே காண்கின்ற செல்வங்கள் நான் என்பதை வளர்த்து எனது என்பதை விளைக்கும். ஆனால் இங்கு அடியேன் பெற்ற சிவச்செல்வம் நான் என்பதை உடைக்கும் சிவச்சார்பு பெற்ற வுயிர் கள் தற்போதம் கிழக்கும் என்ற சாத்திரக் கருத்தை நினைகூர்தல் வேண்டும்.

அப்பெருமான் நித்தியவாசம் செய் யும் திருப்பதி நனிபள்ளி — என்று நம்பியாரூரர் பாசுரத்தைத் தலைக் கட்டுகிறார்.

வானுடையான் பெரியான் மனத் தாலும் நினைப்பரியான் — என்ற முதற் பாதம் சிவபரம் பொருளின் அருவத் திருமேனியையும், ஆனிடை ஐந்தமர்ந்தான் அனலாகியோர் தீயுருக் கொண்டு என்ற இரண்டாம் பாதம் இறைவனின் அருவுருவத் திரு மேனியையும் (சிவலிங்கம்) ஊனுடை யிவ்வுடலம் ஒடுங்கிப் புகுந்தான் என்ற மூன்றும் பாதம் பரமனின் உருவத் திருமேனியையும் பேசுகிறது. நானுடைய மாடெம்பிரான் — என்ற இப்பாசுரத்தின் இதயம் தற்போத அழிவைப் பேசுகின்றது.

பதியின் திருவருளால் பசு பாச நீக்கம் பெற்று சிவமாகும் தன்மையை விளக்குகின்ற இப்பாசுரம் சைவ சித்தாந்தத்தின் உயிர் என்னலாம். உயிர்தானும் சிவானுபவம் ஒன்றி னுக்கும் உரித்து. ஆகையால் வீடு பெற்ற ஆன்மாவுக்கு இறைவன் பிரானாகவே யுள்ளான் என்ற சித்தாந் தத்தின் நுட்பத்தை "எம்பிரான் நண்ணும் ஊர்நனி பள்ளியதே" என்ற பகுதியால் நம்பியாரூரர் அழகுற விளக்கியுள்ளார்.

இத்தகைய பாசுரக் கங்கையில் தோய்ந்து தோய்ந்து தூய்மைபெற இறைவன் திருவருள் புரிக!



# நாதசுர தியாக பிரம்மம்

திரு. வி. வே. சுவாமிநாதன், பி.எஸ்ஸி., பி.எல்.,

ஆண்டவனுக்கு பாமாலையும் பூமாலையும் அர்ப்பணித்தவர்கள் பரம்பரையில் பகவானுக்கென்றே கீர்த்தனங்களை அமைத்து அவர் நாமத்தைப்பற்றி பாசுரங்களைப் பாடி பக்திப் பரவசத்தில் திளைத்த தியாகய்யர் சமாதியில் ஆண்டுதோறும் வாய்ப்பாட்டு வல்லுனர்களும் நாதசுர வித்வான்களும் போட்டி போட்டுக்கொண்டு இசை மழை பொழிகிறார்கள்.

கோயில் என்றாலே தில்லை நடராசப் பெருமான் கோயிலையே குறிக்கும். சிதம்பரத்தில் ஆடற்கலையும் பாடற்கலையும் இணைந்து ஆலயத்தில் மிளிர்ந்த காலத்தில், 'கொஞ்சும் சலங்கை' 'தில்லானா மோகனாம்பாள்' போன்ற திரைப்படங்கள்மூலம் மிகவும் அறிமுகமாவதற்கு முன்பே நாதசுர இசையின் இனிமையை கேட்போர் மயங்கி மெய்சிலிர்க்கும் வண்ணம் விடியவிடிய வாரி வழங்கிய வள்ளல் இருந்தார். இளந் தலைமுறையினருக்கு அவ்வளவாக அத்தியாகத் திருஉருவத்தின் பெயர் தெரியாது.

அறிஞர் அண்ணா காலத்தில்தான் 'கூத்தாடிகள்' என்றழைக்கப்பட்ட நடிகர்கள் கலைஞர்களானார்கள். அண்ணா கூட்டிய மாநாடுகளிலும் சிறப்பு நிகழ்ச்சிகளிலும் நாதசுர இசையில்லாமல் எந்த விழாவும் துவங்காது. 'நாயனக்காரர்கள்' என்றும் அவர்களும் கலைஞர்கள் என்ற பெருமையும் அண்ணா காலத்தில்தான் தோன்றியது. ஆனால் மேளக்காரர்தானே என்று அலட்சியமாய் பேசப்பட்ட காலத்தில் தெவிட்டாத தேனினுமினிய நாதசுரக் கீதத்தை எழுப்பி நாதசுரத்திற்கு இறவாத புகழை திக்கெட்டும் தேடித் தந்தவர் திருநாமம் தெரியவில்லை. அவர் அமரக் குரலைக் கேட்போம் என்றால் இசைத்தட்டில் நாதசுரத்தை பதியவைக்காமலேயே போய்விட்டார்.

ஜார்ஜ் மன்னரை 'மாட்சிமை தங்கியவரே' என்றுதான் அழைக்கவேண்டும். அதுவும் பக்கிங்காம் அரண்மனையில் பகட்டான ஆடை அணிகளுடன் செல்வதுதான் மரபு என்றார்கள். ஆனால் அரை ஆடையுடன் சாதாரண மனிதர்களைக் கூப்பிடுவதுபோல் 'மிஸ்டர்' ஜார்ஜ் என்றுதான் அழைப்பேன் என்றார். அதன்படியே நடந்தார். அதனால்தான் மோகனகரம் சந்த் காந்தி மகாத்மாகாந்தியானார்.

ஒரு மகாகவி மன்னன் ஒருவனைப் பார்க்கச்சென்றான் கவியின் பெருமையை உணரா அரசன் பேட்டி தரவில்லை. ஆனால் கவியின் திறனையறிந்தபின் மன்னன் கவியைச் சந்திக்க பரிவாரங்களுடன் ஓடினான். பாதம் மன்னன் பக்கம் நோக்கியவாறு கவியின் உடல் இறுதி யாத்திரை வந்துகொண்டிருந்தது.

காவல் துறையில் மேலதிகாரியை மகிழச் செய்ய மாலையணிவிக்க சொன்னபோது ஒரு இளம் அதிகாரி ஆண்டவனுக்கன்றி பிரிதொருவருக்கு தான் மாலையணிவித்து பழக்கமில்லை என்று மறுத்துவிட்டார்.

இவர்களுடைய பிடிவாதங்கள் பைத்தியக்காரத்தனமாக தோன்றலாம். ஆனால் இவர்களின் குணத்தில் மேதையின் முத்திரை பொலிவதைக் காணலாம். அந்தப் பிடிவாதத்திற்கு நாயனக்காரர்களின் நடுநாயகமாக விளங்கிய நமது த. வைத்தியனாதப்பிள்ளையும் விதிவிலக்கல்ல.

வேங்கட முதல் குமரி வரை நாதசுரத்தை இசைப்பதில் இணையே இல்லையென ஒருமனதாகப் பாராட்டப்பெற்றவர்; திருச்செந்தூர் முருகன் சந்நிதானத்திலும்

திருவிதாங்கூர் அரசனிடமும் தனித் தனியே 'தோடா' பெற்றவர். வானமாமலை ஜீயர் 2? பவுன் எடையுள்ள தங்க நாத சுரத்தை பரிசாகத் தந்தார்; சென்னை கேசவப்பெருமான் முன் பொற் சங்கிலி பெற்றவர்; நாட்டரசன் கோட்டையில் நகரத்தாரால் பொன் கைச்சங்கிலியை பரிசாகப் பெற்றவர்; கர்நாடக பந்தா வில் காந்தம்போல் மக்களைக் கவர்ந்தவர்; ஒரு ராகத்திற்கு ஏற்ற பல்லவியில் பல ராகங்களைக் காட்டி எடுத்த ராகத்தில் முடிப்பதும், ஒரு ராகத்தை பலவிதமாக இடைவிடாது பலநாள் வாசிப்பதும் அவருக்கே உள்ள தனி பாணி—என்று கேட்டோர் வைத்தினதைப் பிள்ளையுடைய நாத சுரத்தை இசைத்தட்டில் பதிவு செய்ய கேட்டபோது 'என் இசை ஆண்டவனுக்கேயன்றி வேறொருவருக்கல்ல' என்று தனக்கு இசைத்தட்டுத் தர பிரியமில்லை என்று பிடிவாதமாக சொல்லிவிட்டாராம், விரும்பியிருந்தால் இசைத்தட்டு மூலம் செல்வத்தைச் சேர்த்திருக்கலாம்.

19—12—37 தனது 53-வது வயதில் ஆருத்ரா தரிசனத்தன்று இசையோசையாக உருவமில்லா திருநடனம் புரிபவருடன் கலந்துவிட்டார். இறைவனைத் தான் பார்க்கிறோம். வைத்தியனுதப் பிள்ளை இசையைக் கேட்கமுடியவில்லை. ஆனால் அவர் பிரதம சீடர் ராதாகிருட்டிணப்பிள்ளை ஆலயத்தில் மெய்மறந்து நாதசுரம் வாசிக்கும்போது அவர் குரலில் வைத்தியனுதப் பிள்ளையின் குரல் ஒலிப்பதாக இருவர் காலத்திலும் வாழும் இசை ரசிகர்கள் சொல்கிறார்கள்.

தில்லையில் இசை வேளாளர் பொது மனையில் இசையை விலக்கு விற்காமல் இறைவனுக்கு தியாகம் செய்த நாதசுர பிரம்மமான வைத்தியனுதப் பிள்ளை அவர்களுக்கு சிலையெடுத்து மணிமண்டபம் கட்டி ஆண்டுதோறும் தென்னகத்திலுள்ள நாயனக்காரர்கள் நாதசுரம் வாசித்து காணிக்கை செலுத்துவது மறைந்த மாமேதைக்கு நாம் எடுக்கும் அழியா அஞ்சலியாகும்.

அந்த திருப்பணியை நிரந்தர யாத்ரிகர்களின் திருத்தலமான தில்லையம்பதியில் நிறைவேற்ற அறப்பணிச் செல்வர்களும் ஆதீனக்கர்த்தர்களும் ஆதரவு தருவார்களாக!



# Chidambaram Temple

## History, Architecture & Sculpture

Text & Photos by *Thiru N. RAMAKRISHNA*

The temple at Chidambaram dedicated to Lord Nataraja covers an area of 40 acres. The different portions of the temple had been constructed during the course of 13 centuries by different kings probably from the 6th to the 13th century.

### GOPURAMS

The eastern Gopuram with 7 storeys was started during the reign of Kulothunga II (A. D. 1133-1150). The same king also started the work on the North Gopuram. The eastern one was later completed by Kadavarkon Kopperum Singan II (A. D. 1243-1279) and renovated in the 13th century. Later in recent years one Pachaiyappa Mudaliar (A. D. 1754-1794) renovated it.

The tower is noted for the sculptural figures depicting various poses in BHARATHA NATYAM. Another portion is continued on the western gopuram also. Over the sculptures the details have been chistled in stone. Apart from these there are lovely sculptures of Somaskandar, Pathanjali, Vyagrapathar, Naradar, Agasthiar, Thripuranthakar etc. It is a fine structure in stone.

The western Raja Gopuram was constructed by Jatavarma Sundara Pandian 1. Inscriptions explain this in detail. In addition to poses in Bharatha Natyam this tower contains some lovely sculptures also of Surya Tharaka Samharam, Subramania as a warrior and Karpaka Vinayakar in Nardhana pose.

The northern tower was built by the famous Nayak King, Krishna Deva Raya (A. D. 1500-1530) in memory of his Orissa victory. Its height is 140 feet. One finds the statue of the King in one of the niches. It has 7 storeys.

The southern gopuram was constructed round about A. D.1237 and completed in A. D. 1240 and is known as Chokka Cheeyan 7 storeyed mandapam and gopuram.

### MANDAPAM

The Thousand Pillared Mandapam is known as the Rajah Sabhai. It measures 340 feet by 190 feet. There

are 41 rows of Pillars with 24 in each row. There is a lovely Mandapam in the middle for the deity to be placed during the festival times. At the entrance we see fine Elephant sculptures and Dancing figures are chistled on the bottom portion.

## THE SABHAIS

Chidambaram is famous for Sabhais or Dance Halls. The Nritya Sabhai is inside the temple and is noted for excellent specimens in stone. The Hall is constructed in the form of a Chariot drawn by horses. In the Sanctum Sanctorum there is the figure of the Urdhuva Thandava Murthy. Ferguson the celebrated traveller in the History of Indian and Eastern Architecture has said "the oldest thing now existing here is a little shrine in the innermost enclosures of a porch of 56 pillars about 8 feet high and most delicately carved, ornamented with dance figures more graceful and more elegantly executed than any others of their class so far as I know in South India - It is the Natya Sabha or the Hall of Dance"

The Deva Sabhai is known as Perambalam. The bronze idols are kept here, It was built by Anabhaya Kulothunga Chola II,

Kanaka Sabhai is opposite to Chittrambalam. Here Pujah is offered to the Lord six times a day and four times in the year the Abhishegam is done. Every day at 10 in the morning Abhishegam is done to Rathna Sabapathy, a lovely Emerald Lingam. The roof of this hall is covered with gold.

Chit Sabhai is the Sanctum Sanctorum where Nataraja with Sivakama Sundari in bronze is installed. In the form of a Chakram known as Chidambara Rahasyam is installed with Golden Bilva leaves garland on the right side of the Lord. No one is allowed to go up with shirts on. The Dikshidars control the temple. Originally there were 3000 families but now there are only 300.

## THE SACRED TANK

The Tank goes by the name Sivagangai Theertham. It measures 160 feet by 100 feet and was built by a Pallava King who got cured of his disease. Later the outer corridors with the pillars were built by one Kalingarayan, a chieftain under the King, who named it after the king himself in A.D. 1118-1150,

The Hundred Pillared Mantapam known as Vikrama Chola Mandapam was built during the years A. D. 1070-1135 by Kulothunga Chola 1 and completed by his son Vikrama Chola. But actually it was constructed by Kalingarayan who named it after the king.

## THE GODDESS

There is a separate temple for Sivagami Amman built by Anabhaya Chola - Kulothungan 11. The temple



The Northern Gopuram with the Sivagangai Tank in the foreground.



The Nrithya Sabhai with lovely workmanship in stone.



A panel of Dance Studies from the 1000 pillared mandapam. No other temple in the South provides so many poses in stone on Bharatha Natya.



Bharatha Natyam Poses from the Eastern Gopuram.



A close up of a Lady Dancing with elaborate head dress and the Drummer playing on his instrument.



Brahma Playing on the Pancha Mukha Vadyam one of the intricate figures from Nritya Sabhai.



Close up of one of the figures from Nritya Sabhai. Note the creapers design in stone.



Every pillar is delicately carved with intricate workmanship in stone. The figures are just four or five inches only.

The Collonnade of Pillars at Chidambaram temple is attractive and beautifully constructed. The ceiling is decorated with three rows of ancient Globers in which were lighted candels when there was no electric light facility.









Nataraja & Sivakami
Konerirajapuram

is noted for lovely sculptures of Dance poses in Bass Relief. There is a stone chain attached to the pillars and one wonders how the links were assembled.

## ARUMUGHAR

The Pandya Nayakam temple dedicated to Arumughar was built by Sundara Pandian in A. D. 1216-1251 in the form of a Chariot drawn by elephants. In recent years some paintings have been introduced in the ceiling.

## VISHNU TEMPLE

Another interesting fact in Chidambaram is that of the temple dedicated to Vishnu which is within the Siva temple. It is known as Tillai Govindarajar temple. This was built by Nandivarman who built the Vaikunta Perumal temple in Conjeevaram round about A. D 717-782. * * *
* * * * * * * *

## HISTORY

Chidambaram temple is one of the oldest in the country. In A. D. 550-575, the pallava King Simha Varman had come to offer his worship to Nataraja and got rid of his ailments. In the 7th century Gnanasambandar and Appar had visited the place, Sundarar had visited the temple in the 8th century.

Later Manikkavachagar visited the temple and had his salvation here. Adi Sankarar (A. D. 788-820) had visited the temple * * * * * *
* * * * * * * * * * *

The Cholas, the Pandyas, the Vijayanagar kings and the Cheras have done their service to this great temple. In later years the English and the French had used the temple as their Fort. The Muhammadans held their sway over the temple. In A. D. 1781 with the help of the Tanjavur King, Chidambaram Nataraja was taken to Tiruvarur and brought back in A. D. 1781. Later one Pachayappa Mudaliar renovated the temple at a great cost. Finally the Nagarathars of Chettinad and in particular the Rajah of Chettinad, renovated the Gopurams and the tank. The Kumbhabhishegam was performed in A. D. 1891, Another was done in 1955.

## THIRU MATHIL–COMPOUND WALL

The great wall is in ruins and steps have been taken to collect funds for its renovation and philanthrophic-minded devotees can give a helping hand. It is impossible to build such a wall now adays. We can atleast maintain it. The Renovation work goes by the nameTHIRUMATHIL THIRUPPANI

## KALI TEMPLE

A visit to Chidambaram will not be complete without a visit to the Thillai Kali temple on the northern limits of the town. There is the Brahma

Chamundi Sannidhi and Kali Sannidhi in the small temple. It was built in the 13th century by one Kopperum Singan (A. D. 1228 - 1278) - a small king under Kulothungan III.

Modern Chidambaram is about 250 kilometers from Madras in Tamil Nadu on the Southern Railway. The Annamalai University is situated on the eastern side of the Railway line. while the temple is on the western side

# தமிழ் நாட்டின் சமய வாழ்வில் சமரசத்தின் எழுச்சி

திரு. ஏ. வி. சுப்பிரமணிய அய்யர்.

கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக தமிழ்நாட்டில் நிலவிய சமயங்களின் நிலைமையின் ஒரு இயல்பு. எடுத்துக்கொண்ட பொருள் பண்டைக் காலத்தில் (ஏறக்குறைய கி. மு. 3வது நூற்றுண்டு முதல் கி. பி. 6வது நூற்றுண்டு வரை) சமயத்துறையில் மக்களிடம் நட்பில் பிறந்த சகவாழ்வு உணர்ச்சியையே காண்கிறேம். பின்னர் இந்த நிலைமை மாறி, வைதிக மதங்களான சைவமும் வைணமும் ஓங்கி, சமணம் பௌத்தம் ஆகியவற்றின் விபாபகத்தையும் வலியையும் குன்றச்செய்து சமுதாயத்தில் போாதிக்கம் பெற்ற பிறகு, சைவத்திற்கும் வைணவத்திற்குமிடையே சில காலங்களில் பூசல்கள் தோன்றி, அவற்றின் பரத்வக் கொள்கைகள், ஆகமங்களைத் தழுவிய ஆலய வழிபாட்டு முறைகள், தத்துவ நுட்பங்களால் கட்டப்பெற்ற தர்சனக் கட்டுக்கோப்புகள் ஆகியவற்றில் வேற்றுமைகள் விளைந்ததுடன், ஒவ்வொரு சமயத்திலும் சில உட்பிரிவுகளும் எழுந்து இன்றுவரை நிலைத்திருக்கின்றன. எனினும், எத்தனையோவித வேற்றுமைகளுக்கிடையே, விரிந்த மனப்பான்மையும் சமரச உணர்ச்சியும் மங்கிப்போகாமல் வளர்ந்திருப்பதைச் சுருக்கமாக விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

பண்டைக் காலத்தில் தெளிந்த கடவுள் தத்துவத்தின் அடிப்படையில் தனிப்பட்ட வழிபாட்டுக் கூடங்களுடனும், முறைகளுடனும் இயங்கிய சமயங்கள் சைவம், வைணவம், சமணம், பௌத்தம் ஆகிய நான்குமே. இவைகளும் உயர்மட்டத்திலிருந்த அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் ஆகியோரடங்கிய சமுதாயத்தின் ஒரு பகுதியிலேயே பரவியிருந்தன. மற்றப் பகுதியிலுள்ள மக்கள் கொற்றவை, நடுகல், வேலன், வெறியாட்டம் ஆகிய பூசைகளில் ஈடுபட்டிருந்தார்கள். முன்னர்க் கூறப்பெற்ற ஆலயங்களில் வழிபாடுகள் தினந்தோறும் நடைபெற்றன. உயிர்ப்பலி கிடையாது. மற்றதில் குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில்தான் விழாக்களும் பூசைகளும் நடைபெற்றன. உயிர்பலி உண்டு.

தொல்காப்பியம் சமயங்களை விளக்கத்துடன் குறிப்பிடாமல் தெய்வங்களைப் பற்றிப் பேசுகிறது. அதில் திணைகளைக் கூறும் நூற்பா வருமாறு:—

''மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேயமை வரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை, குறிஞ்சி, மருதம் நெய்த
லெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும்
படுமே'' பொருள் – 5

இதில் இன்ன இன்ன தெய்வம் விரும்பும் நிலப்பகுதி இன்ன இன்ன திணையாகும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு திணைக்குரிய கருப்பொருள்கள் பலவற்றில் தெய்வம் ஒன்றாயிருந்தும், அதற்கே முழு முக்கியத்துவம் கொடுத்து அதனுடன் தொடர்பு கொடுத்து திணை விளக்கம் பெற்றிருப்பது கவனிக்கற்பாலது. இதில் கூறப்பெற்றிருக்கும் திருமால், முருகன், இந்திரன், வருணன் வேதங்களில் காணப்பெறும் கடவுள்கள் வேதசம்பந்தம்பெற்ற சிவன் நேரடியாகக் குறிப்பிடப்படாவிட்டாலும் அது 'சேயோன்' என்பதில் அடங்கிவிடும். பாலைத்திணை மேற்கண்ட சூத்திரத்தில் காணப்பெறாவிட்டாலும் அது 'நடுவணைந் திணை'யில் ஒன்று. அதற்கு தெய்வம் துர்க்கை, சில அம்சங்களில் சிவனுக்கு தேவி திணைகளுக்குரிய தெய்வங்களுக்கெல்லாம் மேலானவர் சிவன் என்ற கருத்து தொனிப்பதாகக் கருதலாம். புறநானூற்றுப் பாடல்கள் சில, சிவனை நேரடியாகக் குறிப்பிட்டு அவருடைய பெருமையையும் பேசுகின்றன. அதே போல் திருமாலும் முருகனும் குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள், அரசர்களைப் புகழ்வதற்கு கடவுள்களுடைய வலியும் குணங்களும், உவமைகளாகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனை மதுரை மருதன் இளநாகனாரும், நக்கீரரும் பாடிய பாடல்கள் இதற்கு உதாரணங்கள். மாங்குடி மருதனார் மதுரைக்காஞ்சியில் மதுரை நகரில் அந்திவேளையில் சிவன் கோயிலில், சிவன், திருமால் முருகன் ஆகிய தெய்வங்களுக்கு நடந்த பூசைகளையும், பௌத்த, சமணப் பள்ளிகளில் நிகழ்ந்த வழிபாடுகளையும், அந்தணர்கள் பள்ளிகளில் வேதம் ஓதப்பெற்ற மாண்பையும் மிகச் சிறப்பாகக் கருத்துச் செறிவுடன் பாடியிருப்பதை நோக்கினால் எல்லா சமயக் கடவுள்களின் வழிபாடுகள் நன்றாய் நடைபெற்ற நிலையும், அந்தந்த சமயிகளுக்குள் எந்தவிதப் பூசலும் காழ்ப்பும் இல்லாத நிலையுமே தென்படுகின்றன. சோழர்கள் தலைநகர்களில் ஒன்றாயிருந்த புகாரில், இந்திரனுக்கும், பலதேவனுக்கும், சிவனுக்கும், முருகனுக்கும், அருகக் கடவுளுக்கும் தனிக் கோவில்களும் இருந்ததாக சிலப்பதிகாரம் கூறுகிறது. திருமுருகாற்றுப்படையை சங்ககாலத்திற்குப் பிந்திய நூலாகக் கருதினாலும் அதில் கூறப்பெற்ற முருகன் கோவில்களில் சில மிகப் பழமையானவை. இன்று இந்து சமயத்திற்கு உயிர்நாடிகளாயும் பெருங்கீர்த்தியுடன் மக்களின் வணக்கத்தைப் பெற்றிருக்கும் தெய்வங்களில் சிவன் திருமால் முருகன் ஆகியோரின் வழிபாடும் வியாபகமும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இருந்தன என்பது வெளிப்படை. கொற்றவை வழிபாடு, பின்னர் விரிந்து புனிதத் தன்மைபெற்று அம்பிகை அல்லது சக்திவழிபாடாயிற்று என்று கருதவும் இடமுண்டு.

## II

கி. பி. 6வது நூற்றாண்டில் மக்களின் சமய வாழ்வில் ஒரு புதுயுகம் தொடங்கியது. சைவ வைணவ பக்தி இயக்கங்கள் தோன்றி நாடெங்கும் பரவி வளர்ந்து மக்களிடம் கடவுள் உணர்ச்சியை ஊட்டின. ஆலயங்கள் வெறும் வழிபாட்டுக் கூடங்களாயில்லாமல் கலைக்கூடங்களாயும் திகழ்ந்தன. இதை ஒரு தெய்வீக நிகழ்ச்சியாகவே கருதவேண்டும். வடநாட்டில் குப்தர்களின் ஆட்சியில் பௌத்தமும் சமணமும் பெரிதளவு வலிகுன்றி, வைதிக இந்துசமயம் மீண்டும் தலைதூக்கி ஓங்கியதும் தென்னாட்டில் ஆட்சி செய்த பல்லவர்கள் இதற்கு பேராதரவு கொடுத்ததும், இதிகாச புராண இலக்கியங்களின் அறிவு மக்களிடம் பரவியதும், ஆகமங்களின் அடிப்படையில் ஆலயங்களில் வழிபாட்டு முறைகளும் திருவிழாக்களும் அமைக்கப்பெற்று, பழைய கோவில்கள் புதுப்

பிக்கப்பட்டு பல புதியவை கட்டப் பெற்றதும், தமிழ் நாட்டில் பக்தி இயக்கம் வளர்வதற்குத் துணையாயிருந்தன. நாயன்மார்களும் ஆழ்வார்களும் அருட்புலமை பெற்று, தாங்கள் வணங்கும் பரம்பொருளைப்பற்றி இனிய, எளிய தமிழில் நெஞ்சை உருக்கும் பாடல்களைப்பாடி மக்களிடம் சமய உணர்ச்சியையும் கடவுள்பக்தியையும் வளர்த்தார்கள். சமுதாயத்தில் வைதிக சமயங்கள் தனியாட்சிபுரியத் தொடங்கின. இந்த நிலைமையில் தான் பௌத்தமும் சமணமும் வலி குன்றி செல்வாக்கை இழந்தன. பல்லவ மகேந்திரவர்மன் அப்பரது அருளாலும் கூன்பாண்டியன் திருஞானசம்பந்தரது கருணையாலும் சமணத்தைத் துறந்து சைவத்தைத் தழுவியதுமுதல் அடுத்த இரண்டு மூன்று நூற்றாண்டுகளில் சமயப் பூசல்கள் நிலவின. இறுதியில் பௌத்தமும் சமணமும் சமயத்துறையில் மறைந்தன. சைவசமயாசாரிகள் நால்வரும் ஆழ்வார்களில் சிலரும் சமண பௌத்தங்களை வெறுத்துக் கண்டித்து நூற்றுக்கணக்கான பாடல்களை இயற்றியிருக்கிறார்கள். சமண பௌத்தர்களின் வேத நிந்தனையும் தெய்வ நிந்தனையுமே இவ்வித வெறுப்புக்கும் கண்டனத்திற்கும் காரணங்கள்.

நாளடைவில் சைவத்திற்கும் வைணவத்திற்கும் இருந்தகட்பில் பிளவு ஏற்பட்டு வேற்றுமைகளும் தோன்றின. இருந்தபோதிலும் இரண்டும், வேதங்கள் ஆகமங்கள், புராண இதிகாசங்கள் ஆகியவற்றைத் தழுவியே வளர்ந்ததால், அவரவர்கள் கொண்டாடும் பரமபொருளுக்குக் கொடுக்கப் பெற்ற பெயர்களும், உருவங்களும், பிறவேற்றுமைகளும் பகைமையாகப் பரிணமிக்கவில்லை. சமய வாதங்களுக்கும் வேறுபாடுகளுக்குமிடையே ஓரளவு ஒற்றுமை உணர்ச்சியும் சகிப்புதன்மையும் நிலவின. அத்துடன் சைவ வைணவபுராணங்கள், தங்கள் தங்கள் கடவுளே பரம்பொருள் என்று வாதாடி அதற்கு ஏற்றமும், பிற கடவுளுக்கு ஏற்றகுறைவும் கற்பித்துப் பலகதைகளை வழங்கிய போதிலும், சில புராணங்கள், சிவனும் விஷ்ணுவும் ஒன்று வேறல்ல என்றும், சிவனே பார்வதியிடம் விஷ்ணுவின் மகிமையையும் விஷ்ணுவே இலக்குமிடம் சிவனுடைய பெருமையையும் சக்தியையும் கூறியிருக்கிறார்கள் என்றும் வரைந்து சமரச உணர்ச்சிக்கு ஆதரவு அளித்திருக்கின்றன. இவ்விதக்கருத்துக்களும் அவற்றை விளக்கும் கதைகளும் பாகவதம், வராக புராணம் கூர்மபுராணம் கௌஸிகா புராணம் முதலியவைகளில் காணப்பெறுகின்றன. தவிரவும் மும்மூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு சிவன் சமமானகடவுள்கள் என்ற கருத்தும், பிற்காலத்தில் பிரம்மா வழிபாடு மங்கின போதிலும் ஒரு பழைய வழக்கு பரமசிவ யோகியாகிய திருமூலரின் பாட்டு இது.

ஆதிப்பிரானும் அணிமணிவண்ணனும்
ஆதிக்கமலத்து அலர்மிசை ஆயனும்
சோதிக்கின் மூன்றும் தொடர்ச்சியில்
ஒன்று எனர்
போதித்து உலகம் பிணங்குகின்றாரே.
திருமந்திரம் பாயிரம்-52

திருமூலருக்குப்பின் வந்தவரும் தலையாய ஆழ்வாரான நம்மாழ்வார், ஸ்ரீமந் நாராயணனின் பரத்வத்தையே பாடியிருந்தபோதிலும் மும்மூர்த்திகளையும் வணங்குங்கள் என்று ஒரு அருமையான பாட்டில் கூறுகிறார்.

இறைநிலை
உணர்வு அரிது உயிர்காள்
உணர்ந்து உணர்ந்து, உரைத்து,
உரைத்து அரி அயன்
அரன் என்றும் இவரை
உணர்ந்து, உணர்ந்து, உரைத்து
உரைத்து, இறைஞ்சுமின்
மனப்பட்டது ஒன்றே”.
திருவாய்மொழி 1-3-6.

இந்தக்கருத்து, திருவாய்மொழியின் இறுதிப்பாட்டில் உள்ள "அவா அறச் சூழ் அரியை, அயனை, அரனை அலற்றி, அவர் சுற்று வீடுபெற்ற குருகூர்ச்சட கோபன சொன்ன" என்ற வரிகளிலி ருந்து உறுதிப்படுகிறது.

நாயன் மார்களும் ஆழ்வார்களும் சம ரச நிலைமையை நிறுவ வேறொரு தத்து வத்தைக் கொண்டு அதைப்பரப்பினார்கள் எல்லோருக்கும், தங்கள் தங்கள் இஷ்ட தெய்வத்தை வழிபட உரிமையுண்டென் றும், அந்த தெய்வத்தின் மூலம் பரம பொருள் தோன்றி அந்த வழிபாட்டை ஏற்றுக் கொள்வதால் இஷ்ட தெய்வ வழிபாடு, பரம் பொருள் வழிபாடாகும என்பது இந்த தத்துவம். இது முதலாவ தாக பகவத் கீதையில் காணப்பெறுகி றது. கிருஷ்ணபகவான அர்ச்சுனனிடம் சொல்லியதாவது:-"யாவர் என்னை எங் ஙனம் வழிபடுகிறார்களோ அவர்களுக்கு நான் அங்ஙனமே அருள்வேன், மனிதர் எந்தமார்க்கத்தை அனுசரித்தாலும் அது என்னை அடையும் வழியேயாகும் (4-11) இதையே நாயன்மார்களும் ஆழ் வார்களும் ஏற்றுக்கொண்டார்கள். சைவத்தில் சமயாசாரியார்களுக்கு முன் வாழ்ந்த காரைக்கால் அம்மையார் பாடி யிருப்பதாவது.

எக்கோலத்து எவ்வுருவாய் எத்தவங்
கள் செய்வார்க்கும்
அக்கோலத்து அவ்வுருவே ஆம்-
அற்புதத்திருவந்தாதி—33

சேரமான் பெருமாள் நாயனாரும் நம்மாழ் வாரும் இதை மிகத் தெளிவாகக் கூறி யிருக்கிறார்கள்

— ஒவாதே
எவ்வுருவில் யாரொருவர் உள்குவார்
உள்ளத்துள்
அவ்வுருவாய்த் தோன்றி அருள்
கொடுப்பான் — எவ்வுருவும்
தானேயாய் நின்றளிப்பான். திருக்கை
லாயஞான உலா 13—16

நும்மின் கவிகொண்டு நும் நும் இட்டா
தெய்வம் ஏத்தினல்
செம்மின் சுடர்-முடி என்திருமாலுக்குச்
சேருமே. திருவாய்மொழி 3-9-6.

ஒருவன் எந்த தெய்வத்தை வழிபட் டாலும் சிவபெருமானோ திருமாலோ, அது தமக்குச் செய்த வழிபாடு என்று ஏற்றுக்கொண்டு அவனுக்கு அருள் புரி வாரானல், எவருக்கும் மதமாற்றம் அவசியம் இல்லை என்று ஏற்படும். அத் துடன் எல்லா சமயங்களும் பரம் பொருளை அடையும் எவ்வேறு பாதை கள் என்ற உணர்வும் இருந்தது மக்கள் தங்கள், தங்கள் மதங்களிலேயே இருக்க வேண்டும் என்று திருமூலர்

தத்தம் சமயத்தகுதி நில்லாரை
அத்தன் சிவன்சொன்ன ஆகமநூல்
நெறி
எத்தண்டமும் செயும்
— திருமந்திரம் 247

என்று சற்று கண்டிப்பாகவே மொழிந் திருக்கிறார். இதிலிருந்து திருமூலர் காலத்தில் சமணமும் பௌத்தமும் வை திக சமயத்தாரின் எதிர்ப்புக்குள்ளாக வில்லையோ என்று கருத இடமிருக்கிறது இவ்வளவு கண்டிப்பு இல்லாமல் அன்பு முறையில் சமரசந் தன்மையுடன் திரு வாய்மொழியின் முதல் பாட்டிலேயே சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது.

அவரவர் தமதமது அறிவு அறிவகை
அவரவர் இறையவர் எனஅடி
அடைவார்கள்

அவரவர் இறையவர் குறைவுஇலர்
இறையவர்
அவரவர் விதிவழி அடைய
நின்றனரே 1—1—5

மேலே கூறியவைகளில், நாயன்மார்களும் ஆழ்வார்களும், பௌத்தத்தையும் சமணத்தையும் கண்டித்து ஒதுக்கிய நிலைமையில் வைதிக இந்து சமயத்தின் கடவுள்களையும் உட்பிரிவுகளையுமே மனத்தில் கொண்டிருக்கவேண்டும். நாயன்மார்கள் ஆழ்வார்கள் பாடல்களில் 'ஆறு சமயம்' 'அறுவகைச் சமயம்' என்ற தொடர் பல இடங்களில் வருகின்றது அவர்கள் எந்த சமயங்களைக் குறிப்பிடுகிறார்கள் என்று தெளிவாயில்லை. பொதுவாக பல இடங்களில 'ஷட்தர்சனங்கள்' என்ற சாங்க்யம், நியாயம், வைசேஷிகம் யோகம், ஸ்ரீமாம்சை, வேதாந்தம் என்பவைகளையே மனததில் கொண்டிருக்கிறார்கள். சில இடங்களில் வைதிக இந்து சமயத்தைச்சேர்ந்த சிவன், சக்தி, திருமால், கணபதி, சுப்பிரமணியர் சூரியன் ஆகிய தெய்வங்களின் வழிபாட்டைக் குறிப்பதாகத் தெரிகிறது. திருமூலர் "அறுசமயப் பொருளுமவனலன்" (1533) என்று கூறி அவற்றை ஒதுக்குகிறார். ஆனால் அப்பரடிகள் "சமயமவை ஆறினுக்குந் தலைவன் தான் காண் (6—60 7) என்று சிவபெருமானைப் போற்றுகிறார். இருவரும் அறுசமயம் எவை என்பதைப் பற்றி வெவ்வேறு கருத்துக்கள் கொண்டிருக்கவேண்டும்.

இடைக்காலத்திலும் பிற்காலத்திலும் சமயத்துறையில் வழுவாத அறவுணர்ச்சியும், இடையறாத கடவுள் ஈடுபாடும் மாசற்ற அன்பும் ஆன்ம ஒளியும் நிறைந்தவர்களின் செல்வாக்குகுறைந்து சமயக் கணக்கர்கள் நூலறி புலவர்கள் ஆட்சி ஓங்கினதால், முன்னர் நிலவியிருந்த சமரசத் தன்மைக்கு குந்தகம் விளைந்தது சில அரசர்களும் குறுநில மன்னர்களும் பெரியோர்களும், தங்கள் ஆர்வம் மிகுதியால் சகிப்புத தன்மையை இழந்து செயல்பட்டதும் உண்டு, சமயங்களைத் தழுவிய அறிவியல் துறையில் பல மேதைகளின்வியக்கத்தக்க புலமைநுட்பத்தாலும் அருட் சக்தியாலும் அழியாத பெருமையுடைய சாத்திர நூல்களும் உரைகளும் வடமொழியிலும் தென்மொழியிலும் எழுதப்பெற்றன. அவற்றின்மூலம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம், சைவசித்தாந்தம், த்வைதம், சாக்தம் (பெரும்பாலும் தமிழ்நாட்டிற்கு வெளியே) முழுமையான உருப்பெற்ற தத்துவஞான அமைப்புக்களாகத் திகழ்ந்து பக்தர்களையும் படித்தவர்களையும் கலர்ந்தன. சைவமும் வைணவமும் முன்னாலிருந்ததைவிடஅதிக வலியுற்று மக்களின் வாழ்வைச் செம்மைப் பைப்படுத்தி ஒளியுறச்செய்தன. எனினும் பிளவுகள் ஏற்பட்டு வைவணத்தில் தென்கலை, வடகலை போன்றும் சைவத்தில் சித்தாந்தசைவம் வீரசைவம் போன்றும் உட்பிரிவுகள் தோன்றின. இவற்றாலும் சாதிப்பிரிவுகளாலும மக்களின் கலாசார வாழ்க்கையிலும் வேறுபாடுகள் எழுந்தன. வித்தியாசங்களை விளக்கவும் வலியுறுத்தவும் எண்ணற்ற நூல்களும் அவ்வப்போது எழுதப்பெற்றன தமிழர் சமுதாயத்தில பரவலாக நிலவிவந்த ஒற்றுமையைப் பாதிக்கக் கூடிய அளவில் சமயவேற்றுமைகள் மலிந்திருந்தன.

இருந்த போதிலும் வேறொரு சக்தியால் சமரச உணர்ச்சி முன்னேற்றம் அடைந்து வருகிறது. ஞானிகள் பலர் சமயச் சடங்குகள், வழிபாட்டு முறைகள் முதலியவற்றைப் பொருட்படுத்தாது மனிதன் உய்வதற்கு, தன்னுடைய புலன்களை அடக்கி ஆன்மஞான சக்தியை வளர்க்க வற்புறுத்தினார்கள். நம்மாழ்வார் "அற்றது பற்று எனில், உற்றது வீடு, உயிர்" என்றும் "நீர், உமது என்ற இவை, வேர்முதல் மாய்த்து, இறைசேர்மின்" என்றும் பாடினார். 'சைவசமயமே சமயம்' என்று பகர்ந்த தாயுமானவர் கடவு

ளைக் குறிப்பிடும்போது "வாதமிடுஞ்சமய நெறிக்கு அரிதாகி என்றும் 'சைவமுதலாம் அளவில் சமயமும் வகுத்து, மேற்சமயங்கடந்த மோன சமரசம் வகுத்த நீ" என்றும், 'மதாதீதமான மரபு வாழி' என்றும் கூறுகிறார் சென்ற நூற்றாண்டிலிருந்த இராமலிங்க சுவாமிகள் சிவபெருமானை நோக்கி "அருள் உண்மை காட்டித், தீதுசெறி சமயநெறி செல்லுதலைத் தவிர்த்துத், திரு அருள் மெய்ப் பொதுநெறியில் செலுத்தியும்" என்றும் "சாதிகுலம். சமயம் எலாம்தவிர்த்தெனை மேல் ஏற்றித், தனித்திரு அமுதளித்த தனித்தலைமைப் பொருளே" என்றும் கதறுகிறார். ஆன்மஞானப் பயிற்சியும், புலன்களைக் கட்டுப்படுத்துதலும், கடவுள் பித்தமும ஒரு சிலருக்கே முடியும் எனினும், இந்த தத்துவம் பரவும்போது மக்களிடம் சமரச மனப் பான்மையும், சமயப் பூசல்களில் நாட்டமின்மையும் தானாகவே விளையும். உண்மையான சமய உணர்ச்சியும் பக்திநெறியும் ஓங்கும்.

---

# சங்கநிதி பதுமநிதி

## மயிலை சீனி வேங்கடசாமி

மனிதரின் நல்வாழ்வுக்கு இன்றியமையாமல் வேண்டப்படுவது அறம் பொருள் இன்பம் வீடு என்பவை. இவை நான்கும் புருஷார்த்தம் என்று கூறப்படுகின்றன. அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றும் இம்மைக்கு — இவ்வுலக வாழ்க்கைக்கு உரியவை. வீடு என்பது மறுமைக்கு உரியது. இம்மை வாழ்க்கைக்கு உரிய அறம் பொருள் இன்பம் என்பவற்றில் முக்கியமானது பொருள். பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை. பொருட் செல்வம் உள்ளவர் இவ்வுலகத்தில் சிறந்த வாழ்க்கை வாழ்கிறார்கள். ஆனால், பொருள் எல்லோரிடத்திலும் ஒரே அளவாக இருப்பதில்லை. பெரும் செல்வம் உள்ளவர் இலட்சாதிபதிகள் என்று கூறப்படுகின்றனர். பல இலட்சம் பொருளுள்ளவர் கோடீசுவரர் என்று கூறப்படுகின்றனர். நவகோடி நாராயணர்களைப் பற்றிக் கதைகளில் படித்திருக்கிறோம். உலகத்திலே உண்மையிலேயே பல கோடீசுவரர்கள் இருக்கிறார்கள். நமது தமிழ்நாட்டிலும் கோடீசுவரர்கள் சிலர் இருக்கிறார்கள்.

பாரதநாட்டுக் காவியப் புலவர்கள் செல்வத்தைப்பற்றிக் கற்பனை செய்திருக்கிறார்கள். கோடி, கோடி, கோடி, கோடி
கோடி கோடி கோடி கோடி கோடி
கோடி கோடி கோடி கோடி கோடி
கோடி கோடி கோடி கோடி கோடி
கோடி கோடி கோடி கோடி கோடி
கோடி கோடி கோடி கோடி கோடி.
கோடி கோடி கோடி கோடி கோடி
என்று கற்பனை செய்துகொண்டே போகிறார்கள். இப்படிக் கோடி கோடியாகக் கற்பனை செய்துகொண்டே போனால் இதைப் படிப்பவர் விளங்கிக்கொள்வது அருமை. ஆகவே இந்தக் கணக்குகளை விளங்கிக்கொள்வதற்குக் குறியீடுகளையும் பெயர்களையும் கொடுத்திருக்கிறார்கள்.

இவற்றில் இரண்டு எண்களை மட்டும் இங்கு ஆராய்வோம். அவை சங்கம், பதுமம் என்றும் இரண்டு எண்கள்.

கோடி X கோடி கொண்ட எண்ணுக்குச் சங்கம் என்பது பெயர், அதாவது கோடி, பத்துக்கோடி, நூறு கோடி, ஆயிர

கோடி, இலட்ச கோடி, பத்துலட்சகோடி, சங்கம். இதை எண்ணுல் எழுதும்போது ஒன்றுடன் பதினுன்கு சுன்னம் சேர்த்து எழுத வேண்டும் ; 100000000000000. இவ்வளவு எண்ணிக்கையுள்ள செல்வத்துக்குச் சங்க நிதி என்பது பெயர். இதற்குச் சங்கின் உருவத்தை எழுதிக் காட்டுவார்கள்.

தக்கயாகப் பரணி என்னும் நூலிலே, காளிக்குக் கூளி கூறியது என்னும் பகுதியில் "கொண்டகோடி" என்று தொடங்கும் தாழிசையின் உரையில், உரைகாரர் இதனை நன்ருக விளக்கிக் கூறுகிருர். அவ்வுரைகாரர் எழுதுவது வருமாறு : "கொண்டகோடி" என்றது ஒரு கோடி ஒன்ருகக் கொண்டு எண்ணப்பட்ட ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினுயிரம் நூருயிரம், பத்து நூருயிரம், கோடி என்றவாறு.

கோடி X கோடி X கோடி X கோடி X கோடி கொண்ட எண்ணுக்குப் பதுமம் என்பது பெயர். இந்த எண் முப்பத்தாறு இடங்களைக் கொண்டது. இதை எண்ணுல் எழுதவேண்டுமானுல் ஒன்றுடன் முப்பத்தைந்து சுன்னம் சேர்த்து எழுத வேண்டும். 100000000000000000000 000000000000000. இவ்வளவு எண்ணிக்கையுள்ள செல்வத்துக்குப் பதுமநிதி என்று பெயர் கூறுவார்கள். இதற்குத் தாமரைப் பூவின் உருவத்தை அமைத்துக் காட்டுவார்கள்.

சங்கநிதி, பதுமநிதிகளைப் பற்றிப் புராணங்களிலும் காவியங்களிலும் காணலாம். சக்கரவர்த்திகள் உலகத்திலே எப்எப்பொழுதோ ஒருமுறை அரிதாகத் தோன்றுகிருர்கள் என்பதும் அவர்கள் சக்கரச் செல்வம் படைத்தவர்கள் என்பதும் அவர்களிடத்திலே சங்கநிதிகள் பதுமநிதிகள் இருந்தன என்பதும் காவியப்புலவர்களின் கற்பனை.

திவிட்டன் என்னும் சக்கரவர்த்தியிடம் சங்கநிதி பதுமநிதிகளும் இருந்தன என்று சூளாமணி காவியம் கூறுகிறது.

"சென்றுயர் வலம்புரி செம் பொற்
றுமரை
என்றியல் பெயரின இரண்டு மாநிதி
ஒன்றல மணிகளும் ஒண்பொருள்
மாழையும்
நில் றிவை சொரிந்தொளி நிதற்று
கின்றவே"
(சூளாமணி-அரசியல், 373)

"தேவர்கள் திசைமுகங் காப்ப மாநிதி
ஓவல இரண்டு நின்று ஒருங்குவீழ்தர
மேவிய அருங்கலம் விளங்க நோக்கிய
காவலன் செல்வநீர்க் கடலுள்
மூழ்கினுன்"
[சூளாமணி—அரசியல் 423]

"தேங்கமழ் தெய்வச் செம்பொற்
றுமரை சுரிவெண் சங்கம்
நீங்கியவை நெறிகளாக ஏழரதனங்கள்
எய்தி
ஆங்கமர் செல்வந் தம்மால்
அற்றைக்கன்றமர்ந்த மாதோ
ஓங்கினன் உருவத்தாலும் வில்ஒன்ப
துயர்ந்த தோளான்"
[சூளாமணி சுயம்வரம் 4]

இவ்வாறு சங்கநிதி பதுமநிதிகளைக் கற்பனைச் செய்த காவியப் புலவர்கள் அம்மட்டும் நின்றுவிடவில்லை. இந்த நிதிகள் உயிரற்ற வெறும் சடப்பொருள்கள் தானே. இந்த நிதிகளுக்கு அதிபதியாகத் தெய்வங்களைக் கற்பித்தார்கள். சங்க நிதிக்கும் பதும நிதிக்கும் தலைவர்களாக இரண்டு பூதங்களை [தெய்வங்களைக்] கற்பித்தார்கள். அந்தப் பூதங்களைக் குறள் உருவமாகவும் குடம் போன்ற வயிறும் குறுகிய கைகால்களும் உடையனவாகவும் கற்பித்தனர் மேலும் இரண்டு நிதிகளுக்கும் பெருந்தலைவனுக குபேரன் என்னும் தெய்வத்தையும் கற்

பித்தார்கள். குபேரன் என்றால் அழகில்லாதவன் என்பது பொருள். பேரம் என்றால் உருவம் என்பது பொருள். குபேரன் என்றால் விகாரமான உருவமுடையவன் என்பது பொருள். குபேரனை நிதியின் கிழவன் என்றும் வைசிரவணன் என்றும் கூறுவார்கள். பௌத்த மதத்தார் குபேரனை ஜம்பாலி என்று கூறுவர், ஜம்பாலியின் கையில் கீரிப்பிள்ளையின் தோலினால் செய்யப்பட்ட பணப்பை உண்டு.

நிதியின் கிழவனைக் குள்ளமாகவும் குறுகின கைகால்களையுடையவனாகவும் கற்பித்துக் குபேரனுக்கிய புலவர்கள், அவன் விரும்பும் இடங்களுக்கு அவனைத் தூக்கிச் செல்ல ஒரு இயக்கனை ஊர்தியாக கற்பித்தார்கள். அந்த இயக்கனுடைய பெயர் நரன் என்பது. ஆகவே குபேரனுக்கு நரவாகனன் என்னும் பெயரும் உண்டு. குபேரன் திக்கு பாலகர்களில் ஒருவன்.

"இருநிதிக் கிழவன் இயக்கர் வேந்தன்
வடதிசைத் தலைவன் நரவாகனனே"

என்று பிங்கல நிகண்டு குபேரனைக் கூறுகிறது.

குபேரனுடைய நிதிகளுக்கு அளவில்லை அவனுடைய நிதிகள் வளர்ந்து கொண்டேயிருக்கின்றனவாம், நெல் வயலில் ஆண்டு தோறும் நெல் விளைவது போல. குபேரனுடைய தோட்டத்தில் சங்க நிதியும் பதுமநிதியும் விளைகிற கொடிகள் உள்ளனவாம்! சங்கும் தாமரையும் நீரில் விளையும் பொருள்கள் அல்லவா? குபேரனுடைய தோட்டத்துக் குளங்களில் சங்க நிதிகளும் பதும (தாமரை) நிதிகளும் வளர்ந்துகொண்டே இருக்கின்றனவாம்! [இச்செய்தியைத் தக்கயாகப்பரணி (காளிக்குக் கூளி 195) கூறுகிறது].

நிதியின் கிழவனான குபேரன் சிவபெருமானின் தோழன் என்று திருநாவுக்கரசர் கூறுகிறார்:

"நதியாருஞ் சடையானை நல்லூரானை
நள்ளாற்றின் மேயானை நல்லத்தானை
மதுவாரும் பொழில் புடைசூழ்
வாய்மூரானை
மறைக்காடு மேயானை யாக்கூரானை
நிதியாளன் தோழனை நீடூரானை
நெய்த்தானம் மேயானை யாரு
ரென்னும்
பதியானைப் பள்ளியின்முக் கூடலானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற
வாறே."

(திருப்பள்ளியின் முக்கூடல்—
திருத்தாண்டகம் 7)

"முத்தனைய முகிழ் முறுவலுடையார்
போலும்
மொய்பவளக் கொடியனைய
சடையார்போலும்
எத்தனையும் பத்தி செய்வார்க் கினியர்
போலும்
இருநான்கு மூர்த்திகளு மானார்
போலும்
மித்திர வச்சிரவணற்கு விருப்பர்
போலும்
வியன் வீழி மிழலையமர் விகிர்தர்
போலும்
அத்தனொடு மம்மையெனக் கானார்
போலும்
அடியேனை யாளுடைய அடிகள்
தாமே'

(திருவீழிமிழலை திருத்தாண்டகம் 9)

சில சிவன்கோவில்களில் குபேரனுக்கும் கோயில் அமைக்கப்பட்டுள்ளன. கீழ்வேளூர்க் கோயில் கட்டுமலைமேல் உள்ள கோயில். இது திருவாரூருக்குக் கிழக்கே ஏழு மைல் தூரத்தில் உள்ள இருப்புப் பாதை நிலையத்துக்கு அருகில் உள்ளது. இக்கோயிலில் குபேரனுக்கு ஒரு கோயி

லும் குபேரனுடைய உருவமும் இருக்கின்றன.

திருநாகேச்சரக்கோயிலிலும் சங்கநிதி பதுமநிதி உருவங்கள் உள்ளன. திருநாகேச்சரக்கோயில் திருவிடைமருதூர் இருப்புப்பாதை நிலையத்திலிருந்து இரண்டரை மைல் தூரத்தில் உள்ளது.

வேறு பல பழைய சிவன் கோயில்களில் கோபுரவாயில் முதலானவாயில்களின் இரு புறங்களிலும் சங்கநிதி பதுமநிதி உருவங்களைக் காணலாம். இதன் கருத்து என்ன" ஏன் சங்கநிதி பதுமநிதிகளின் உருவங்கள் கோயில் வாயில்களில் அமைக்கப்பட்டுள்ளன? சங்கநிதி பதுமநிதி முதலான பெரிய செல்வங்களைப் பெற்றிருந்தாலும் அந்தச் செல்வங்கள் கடவுளின் திருவருட் செல்வத்துக்கு (கருணைநிதிக்கு) இணையாகா என்பதைக் கோயிலுக்கு வருபவர்களுக்கு நினைவூட்டுவதற்காகவே இவை அங்கு அமைக்கப்பட்டுள்ளன. ஆனால் கோயிதுக்குச் செல்பவரில் ஒருசிலராவது இந்தப் பதுமநிதி சங்கநிதி உருவங்களைக் கண்டு அவற்றின் கருத்தை உணர்கிறார்களா? ஆயிரத்தில் ஒருவர்கூட இருக்க மாட்டார்கள் என்று கருதுகிறேன் இராமலிங்க வள்ளலாரும், சங்கநிதி பதுமநிதிகளை வேண்டாமல், 'நின்கருணை நிதி வேண்டும்' என்று கடவுளின் திருவருள் நிதியைத்தானே வேண்டினார் !

இறைவனுடைய அருட்செல்வமாகிய கருணைநிதியை மிக நிறையப் பெற்றவர் திருநாவுக்கரசுப்பெருமான் அவர், திருக்கோயில்களில் உழவாரத் திருப்பணி செய்வது வழக்கம். ஒருசமயம் பூம்புகலூர் திருக்கோயிலில் சுற்றுப்பிராகாரத்தில் இருந்த புல்லையும் கல்லையும் உழவாரப் படையினால் களைந்து செப்பனிட்டுக் கொண்டிருந்தபோது பருக்கைக் கற்களுடன் செம்பொன்னும் நவமணிகளும் வெளிப்பட்டன. கடவுளின் திருவருளாகிய கிடைத்தற்கரிய பெருநிதியைப் பெற்றிருந்த அவருக்கு இந்த நிதிகள் படுக்கைக் கற்களும் கூழாங்கற்களும் போலத் தோன்றின. அவர் அவற்றைக் கையினால் தொடாமல் உழவாக்த்தினால் எடுத்து அருகிலிருந்த குளத்தில் வீசி எறிந்தார்.

"செம்பொன்னும் நவமணியும்
  சேண்விளங்க ஆங்கெவையும்
உம்பர் பிரான் திருமுன்றில்
  உருள்பருக்கை யுடன் ஒக்க
எம்பெருமான் வாகீசர்
  உழவாரத்தினில் ஏந்தி
வம்பலர் வெண்பூங்கமல
  வாவியினிற் புக எறிந்தார்"

(திருநாவுக்கரசர்புராணம்—417)

சங்கநிதி பதுமநிதி போன்ற பெருஞ் செல்வங்களைப் பெற்றிருந்தாலும் அவர் கடவுளின் திருவருட் செல்வத்தைப் பெறாதவர்களானால் அவர்களுக்கு மன நிறைவு நிறைமனம் – உண்டா? இல்லையே. ஆகவே, கடவுளின் திருவருட் செல்வத்தைப் பெற்றவர், பெரு நிதிகளைப் பெறாதவராக இருந்தாலும் அவர்களே செல்வராவர். கடவுளின் திருவருட் செல்வத்தைக் குறைவறப்பெற்ற அருட்பெருஞ் செல்வராகிய திருநாவுக்கரசர் இதுபற்றி அருளிச்செய்த சங்கநிதிபதுமநிதிச்செய்யுளைக் கூறி அமர்வோம்.

"சங்கநிதி பதுமதி இரண்டுந் தந்து
  தாணியொடு வானாளத் தருவாரேனும்
மங்குவார் அவர் செல்வம் மதிப்போ
  மல்லோம்
மாதேவர்க் கேகாந்தர் அல்லராகில்
அங்கமெலாம் குறைத்தழுகு
  தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும்
  புலையரேனும்
கங்கை வார்சடைக் கரத்தார்க்கு
  அன்பராகில்
அவர் கண்டீர் நாம் வணங்கும்
  கடவுளாரே."

# நான் கண்ட சிதம்பரம்

மருத்துவமாமணி டாக்டர் — இரத்தினவேல் சுப்பிரமணியம்

அப்போது எனக்கு மூன்று வயது கூட ஆகவில்லையாம். சிறு குழந்தை. என் தகப்பனர் பாலக்காட்டுக்கு அருகில் உள்ள ஆலத்தூரில் இருந்து சிதம்பரத்திற்கு மாற்றலானார். ஆலத்தூரில் இருந்து பாலக்காட்டுக்கு மாட்டு வண்டியில்தான் வரவேண்டும். பாலக்காட்டில் இருந்து ஈரோடு வரை ஒரு வண்டியில் வந்து, அங்கு வண்டிமாறித் திருச்சிவந்து, திருச்சியில் இருந்து சிதம்பரம் வரவேண்டும். சிதம்பரம் வர ஊரைவிட்டுக் கிளம்பும் நேரத்தில் எனக்குப் பேதி கண்டதாம் என் தாயாரும், என் தாயாரின் அத்தையாரும் எவ்வளவோ விழிப்பாக என்னைக் கவனித்து வந்தார்களாம். பேதி அடிக்கடி ஆகிக் கொண்டிருந்ததால் என் உடல்நிலை கவலைக்கிடமாக இருந்ததாம், என் தாயாரும், என் தாயாரின் அத்தையாரும் மாறி மாறி ''நடராஜா! நடராஜா! நடராஜாதான் குழந்தையைக் காப்பாற்ற வேண்டும் என்று சொல்லிக்கொண்டே வந்தார்களாம். இப்படி யான் குழந்தையாக இருந்த நாளில் இருந்தே நடராஜப் பெருமானின் திருநாமம் என்காதில் ஒலிக்கத் தொடங்கிவிட்டது.

என் தந்தை, சிதம்பரத்தில் மூன்று ஆண்டுகள் ஜில்லா முனிசீப்பாக வேலை பார்த்தார். என் தாயார், தந்தையார் இருவருமே தெய்வபக்தி உள்ளவர்கள்; என்றாலும் என் தந்தைக்கு வேலைதான் முதல் கடமை. ஒழிந்து நேரம் கிடைத்தால் அந்த நேரத்தில் கோவிலுக்குச் சென்றால் போதும்'' என்னும் எண்ணம்கொண்டவர் அவர். தாயாரோ, நாள்தோறும் மாலையானால் நடராசர் கோவிலுக்கும் தில்லையம்மன் கோயிலுக்கும் போய்வந்த பிறகுதான் வீட்டு வேலையைக் கவனிக்கத் தொடங்குவார்கள், அவர்களுக்கு வீட்டுவேலையோ, குழந்தைகளைக் கவனிப்பதோ, முக்கியமன்று; கோவில்கள்தான் முக்கியம் சிறுவனாகையால் யானும் நாள்தோறும் தாயாருடனே கோவிலுக்குப் போவதுண்டு முன்னாளில் நடராசர் கோவிலில் யானை ஒன்று இருந்தது, அந்த யானையைப் பார்ப்பதற்காகவே அப்போதெல்லாம் நான் கோயிலுக்குப் போவேன். போகும்போதெல்லாம் நடராசப் பெருமானின் திருவுருவம் என் கண்களில் பட்டுக்கொண்டிருக்கும்.

அடுத்த மூன்றாண்டுகளுக்குப் பிறகு 1918-ஆம் ஆண்டில் முறைப்படி என் தந்தையை வேலூருக்கு மாற்றினார்கள். அதிலிருந்து சில ஆண்டுகள் நடராசர் கோவிலுக்குப்போவதும், நடராசப்பெருமானையும் சிவகாமி அம்மையையும் தரிசிப்பதும் நின்று விட்டன. ஐந்தாறு ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் தரிசனம் கிடைத்தது.

1930 இல் என் தந்தையும், நானும் சென்னைக்கு வரும் வழியில் சிதம்பரத்தில் தங்கி நடராசப் பெருமானையும், சிவகாமி அம்மையையும் தரிசனம்

செய்து வந்தோம். இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு 1932 இல் தென்னாற்காடு மாவட்ட நீதிபதியாக என் தந்தை நியமிக்கப்பெற்றார். அடுத்த நடராசப் பெருமான் தரிசனம் ஆருத்ராவில் கிடைத்தது. அன்றைக்கு நானும் என் தாயாரும் மட்டும் போய் இருந்தோம். அப்போதெல்லாம் பெரிய உத்தியோகஸ்தர்கள் வந்தால் அவர்கள் நின்று பார்ப்பதற்காகக் கயிறு கட்டி வைப்பது வழக்கம். அது எல்லாம் வெள்ளைக்கார அரசாங்கத்தில் நடந்தது. நாடு சுதந்திரம் அடைந்ததில் இருந்து "இவ் வேறுபாடு காட்டக்கூடாது" என்று கருதி கயிறு கட்டுவதை நிறுத்திவிட்டார்கள், அன்று எங்களுக்கென்று தனியாகக் கயிறு கட்டி இடம் ஒதுக்கி இருந்தும் என் தாயார் அக்கம் பக்கம் போகிறவர்களை எல்லாம் அழைத்துக் கயிற்றுக்குள்ளே விட்டு விட்டார்கள் அப்போது அங்குப் பாதுகாப்புக்காக நின்றிருந்த போலீஸ்காரர் ஒருவர், "அம்மா! அப்படி விட்டீர்களானால் உங்களுக்கு நாங்கள் பாதுகாப்புக் கொடுப்பது கஷ்டம்," என்றார். உடனே என் தாயார், "நீ என்ன ஐயா பாதுகாப்பு? எல்லாம் நடராசர் இருக்கிறார். "என்று சொல்லிவிட்டார்கள், அன்றைக்கு அவர்கள் சொன்னது, பசு மரத்தாணி போல் என் உள்ளத்தில் பதிந்துவிட்டது. அன்றையிலிருந்து இன்று வரை கஷ்டமோ, நஷ்டமோ; குறைவோ, நிறைவோ, எதுவாக இருந்தாலும் நான் பிற மனிதரிடம் சென்று," எனக்கு இது வேண்டும். அது வேண்டும். இந்தக் குறை, அந்தக் குறை என்று சொல்லிக் கொள்வதில்லை, எதுவாக இருந்தாலும் நடராசரை நினைத்து, அவரிடத்தில் விண்ணப்பித்து விடுவேன். அவ்வளவுதான். அதற்கு மேல் எதைப் பற்றியும் சிறிதும் கவலைப்படுவதில்லை. இது வெறும் பேச்சுக்காகச் சொல்வது அன்று.

என் மகள் திருமணத்தின்போது எனக்கு மிகவும் வேண்டியவர் ஒருவர் என் அண்ணாரிடம் சென்று, "திருமணத்திற்கு என்னென்ன ஏற்பாடுகள் செய்ய வேண்டும்?' என்று கேட்டாராம்; அவர் தமக்குத் தோன்றியதை எல்லாம் சொல்லிவிட "இவற்றைச் செய்யுங்கள் போதும்" என்றாராம். இதற்கு மேலும் எதுவும் வேண்டாமா? எதற்கும் போய் உங்கள் தம்பியையும் கேட்கட்டுமா?" என்று அவர் சொன்னபோது, "என் தம்பியைப் போய்க் கேட்காதீர்கள், கேட்டால் அவன், 'எல்லாம் நடராசர் பார்த்துக் கொள்வார் என்று தான் சொல்வான்" என்று சொன்னாராம். அதை நம்பாமல் என்வீட்டுக்கு வந்து சேர்ந்தார் அவர்; "தங்கள் மகள் திருமணம் என்றால், கூட்டம் மிகுதியாக இருக்குமே! எப்படி ஏற்பாடு செய்வது?" என்றார். எவ்வளவு கூட்டம் வந்தால் எனக்கென்ன? எல்லாம் நடராசர் பொறுப்பு" என்றேன். "சரியாய்ப் போயிற்று; உங்களிடம் கேட்டால் நீங்கள் இப்படித்தான் சொல்வீர்கள் என்று உங்கள் அண்ணா முன்பே சொல்லிவிட்டார்," என்றார் அவர்.

இந் நிகழ்ச்சி நடந்த ஒரு மாதத்திற்குப் பிறகு திருமணம் நடந்தது. பலவிடங்களில் இருந்தும் வேண்டியவர் கூட்டம் கூட்டமாக வந்து சேர்ந்தார்கள் ஒருவரைக் கூட விடாமல் பார்த்துப் பார்த்துத்தான் அழைப்பிதழ் அனுப்பியிருக்கிறார்கள் என்றாலும் இருபது பேர்களுக்கு மேல், "ஏன் எங்களுக்கு அழைப்பிதழ் அனுப்பவில்லை," என்று என்னிடம் குறைபட்டுக்கொண்டே செய்தி தெரிந்து திருமணத்திற்கு வந்திருந்தார்கள். கட்டுக்கடங்காத கூட்டம்! இருந்தாலும் ஒருகுறையும் இன்றித் திருமணம் நடராசப் பெருமான் திருவருளால் இனிதாக நடந்தேறியது மகள் திருமணத்திற்கு முந்திய நாள் கூட என்னிடம் சிகிச்சைக்கு வந்த நோயாளிகளை நேரில் பார்த்தேன்; மருத்துவ

நிலையத்தற்கும் சென்று வழக்கம் போல என் பணிகளைக் கவனித்தேன் மகள் திருமணம் என்பதற்காக உரிய கடமையைக் கைவிடமுடியுமா? திருமணத்தன்று மட்டும் தான் லீவு எடுத்தேன். மகளும், மருமகனும், இரு குழந்தைகளுடன் சுகமாகத்தான் இருக்கிறார்கள். அவர்கள் எப்போதாவது தாம் நலமில்லை என்று சொன்னாலும் அல்லது தமக்காகப் பிரார்த்தனை செய்ய வேண்டுமென்று சொன்னாலும் திரும்பத் திரும்ப நான் அவர்களுக்குச் சொல்வது "நீங்களே பிரார்த்தனை செய்யுங்கள்; நான் வேண்டினாலும் நீங்கள் வேண்டினாலும் ஒன்றுதான்; ஒருவித வேறுபாடும் இன்றி நடராசர் திருவருள் கிடைக்கும் என்பதுதான்.

ஒரு முறை, இரு முறை அல்ல; பல முறை நடராசப் பெருமான் கருணை காட்டியிருக்கிறார். ஒரு முறை மன்னார்குடியில் இருந்த ஒருவரைப் பார்க்க வேண்டுமென்று என்னை அழைத்தார்கள். அவரைப் பார்த்துவிட்டுத் திரும்புவதற்கு (போகவர) புகைவண்டி அனுமதிச் சீட்டும் (டிக்கட்) வாங்கி 'ரிசர்வேஷனும்' செய்திருப்பதாகச் சொன்னார்கள். "மன்னார்குடிக்கு வரும் வழியில் சிதம்பரத்தில் இறங்கி நடராசர் தரிசனம் செய்துவிட்டு வருகிறேன்." என்று நான் சொன்னேன் அதற்கும் அவர்கள் இசைந்தார்கள். அன்று தைப் பூசம். நடராசர் கோவிலில் கால்கோள் தினமாகும் அதை முன்னிட்டு அன்று நடராசர் வீற்றிருக்கும் பொன்னம்பலச் சபையில் நிறைய தயிர் சாதத்தைப் பரப்பி. பூசை முடிந்த பிறகு முன்பக்கம் இருக்கும் கதவுகளை மூடிவிட்டுப் பக்கத்தில் இருக்கும் கதவு வழியாக ஏழைகளுக்குத் தயிர் சாதத்தை வழங்கிக் கொண்டிருந்தார்கள் (இப்படி ஆண்டு தோறும் செய்வது வழக்கம்) பக்கத்துக் கதவு மட்டும் திறந்திருந்ததால் நடராசரைப் பார்க்க முடியவில்லை அங்கே நின்று கொண்டிருந்த தீட்சிதர் ஒருவரிடம் "நடராசரைப் பார்க்கவேண்டுமே!" என்று ஏக்கத்தோடு கேட்டேன். அப்போது மணி நான்கு. அவர், "இன்னும் இரண்டு மணி நேரம் ஆகும். அந்தத் தயிர் சாதத்தை எல்லாம் வழங்கிவிட்ட பிறகு, தரையைக் கழுவியாக வேண்டும்; பிறகு தான் மேலே அனுப்புவோம்" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டார். பிறகு நான் நடராசரிடமே முறையிட்டேன்.

"கூத்தப் பெருமானே! இப்படிச் செய்யலாமா? உன்னைத் தரிசிக்க வேண்டுமென்றுதானே நான் இந்த வழியாகப் போகிறேன், உம் தரிசனத்திற்காக இங்கே ஆறு மணி வரைக்கும் காத்திருந்தால், எப்படி நான் மன்னார் குடிக்குப் போய் நோயாளியைப் பார்த்து விட்டுத் திரும்ப முடியும்? எல்லாம் உமக்குத் தெரியுமே!" என்று உள்ளத்தால் பிராத்தனை செய்து கொண்டே நின்றிருந்தேன். சில நிமிடங்களுக்குள் மற்றொரு தீட்சிதர் வந்தார். "எப்போது வந்தீர்கள்? எதற்காக இங்கே நிற்கிறீர்கள்?" என்றார் அவர். "இப்போதுதான் வந்தேன்; இங்கே எதற்காக வருவார்கள்? நடராசப் பெருமானைத் தரிசித்து விட்டு அவசரமாகச் செல்ல வேண்டும்," என்றேன் யான். "அதனால் என்ன? நீங்கள் மேலே வாருங்கள். உங்களுக்காகக் கற்பூர ஆராதனை காட்டி விடுகிறேன். பார்த்துவிட்டுச் செல்லலாம்; ஆனால் தயிர் சாதம் பரப்பியிருந்த இடம் அல்லவா? வழுக்கும். கம்பத்தைப் பிடித்துக் கொண்டு வாருங்கள்" என்று சொல்லி அவர் முன்னே செல்ல நான் பின்னே சென்றேன். அப்போது ஏகாந்த சேவை என்று சொல்லக் கூடிய வகையில், நடராசர், சிவகாமி அம்மை, தீட்சிதர், நான் அவ்வளவு தான்-வேறு யாரும் சபையில் இல்லை. ஆனந்தமாக நடராசப் பெருமானையும், சிவகாமி அம்மையையும் தரிசனம் செய்துவிட்டு, என் பிராத்தனைக்கிணங்கி என்னை அழைத்து தரிசனம்

தந்த இறைவனின் திருவருள் திறத்தை எண்ணி அளவு கடந்த மகிழ்ச்சி அடைந்து, நான் செல்லும் பயணமும் நல்ல முறையில் முடியும் என்னும் உறுதியோடு மன்னார்குடி சென்றேன். நோயாளியைப்பார்த்து, அறுவைச் சிகிச்சை செய்தால் தான் குணம் உண்டாகும் எனக் கூறி, அவரைச் சென்னைக்கு வரச்செய்து அறுவைச் சிகிச்சையும் செய்து முடித்தேன்.

1945இல் என்னிடம் பயின்ற டாக்டர் திரு கே. அரங்கசாமி அவர்கள் சிதம்பரம் சென்று சொந்த முறையில் வைத்தியம் செய்யத் தொடங்கினார்கள். அவர் அழைத்த காரணத்தினால் 1946 ஜனவரி முதல் தேதி சிதம்பரம் சென்று நடராசரைத் தரிசித்தேன். அன்று முதல் ஒவ்வொரு ஆண்டும் ஜனவரி முதல் தேதி சிதம்பரத்திற்குச்சென்று நடராசரைத் தரிசித்து வருகின்றேன்;1946 ஜனவரியில் தொடங்கியது, 1971 ஜனவரி முதல்தேதி வரை அவனருளாலே அவன் தாளை வணங்கி வரும் பேறு கிடைத்து வந்திருக்கிறது மருத்துவத் துறையில் என்னிடம் பயின்ற ஆயிரக்கணக்கான மாணவர்களுள் டாக்டர் திரு. அரங்கசாமி அவர்கள் என்னிடம் தனிப்பட்டதொரு அன்பு காட்டி வருகிறார். அதைக்கொண்டு நானும் மிகுந்த பயன் அடைந்து வருகிறேன். நான் சிதம்பரம் போகும்போதெல்லாம் என் சொந்த வீட்டில் நுழைவது போல அவரது வீட்டில் நுழைந்து, அவர் அளிக்கும் வசதிகளை எல்லாம், பெற்று நடராசப் பெருமானையும் சிவகாமி அம்மையையும் வழிபட்டு வருகின்றேன். முதலில் ஆண்டுக்கு ஒருமுறை சென்று வந்தேன். பிறகு ஆருத்திரா தரிசனம், ஆனித் திருமஞ்சனம் போன்ற சிறப்பு நாட்களில் எல்லாம் போய்வரத் தலைப்பட்டேன் 1953இல் எனக்கு ஒரு மகன் பிறந்தான். அதில் இருந்து என் மனைவியின் உடல் நலம் குன்றியது மருத்துவ முறையாலோ, அறுவைச் சிகிச்சையாலோ சிறிதும் குணப்படுத்த முடியாத காரணத்தால் நடராசரிடம்தான் முறையிட்டு வந்தேன். அப்படி இருந்தும் 1959இல் என் மனைவி இறந்துபோனாள். அதன் பிறகு சிதம்பரம் கோவில் தவிர பிற கோவில்களுக்கு நான் வலியச் செல்வதில்லை. ஆனால் போதலை வெறுப்பதும் இல்லை. பார்க்கவேண்டுமென்ற ஆசையோடு விரும்பிச் செல்வது சிதம்பரம் கோவில் ஒன்றுதான். அன்றைய மாணவரும், இன்றைய தோழருமான டாக்டர் திரு அரங்கசாமி அவர்கள், பக்கத்தில் இருந்து வயிறு நிறையச் சாப்பாடு போட்டு விடுவார்கள். அதனால், சிதம்பரம் போனால் எத்தனை முறை முடியுமோ அத்தனை முறையும் நடராசரைத் தரிசனம் செய்வது வழக்கம்.

ஒரு முறை வயிறு நிறையச் சாப்பிட்டுவிட்டு நடராசாவின் அர்த்த ஜாம தீபாராதனைக்குச் சென்றேன். அர்த்த ஜாமத்திற்கு நைவேதனம் வைத்தார்கள் "அந்த நைவேதனப் பிரசாதம் நமக்கும் சிறிது கிடைக்காதா?" என்று நினைத்தேன். அதை நான் யாரிடமும் சொல்லவில்லை, பூஜை முடிந்து கதவைத் தாளிடும் போது தீட்சிதர் ஒருவர் சிறிய பொட்டலம் ஒன்றைக் கொண்டு வந்து, என்னிடம் கொடுத்து, 'இது நடராசாவுக்கு வைத்த நைவேதனம்' என்றார். எனக்கோ, ஆச்சரியமாக இருந்தது. எப்போதும் வயிறு நிறைந்து இருக்கும்போது நான் சாப்பிட விரும்புவது இல்லை. அப்படி இருந்தும் அன்றைக்கு அந்த நடராசரின் பிரசாதத்தின் மேல் ஆசைவந்துவிட்டது இருந்தாலும் அதை எப்படி கேட்பது ஏதோ ஒருவித தயக்கமாக இருந்தது வாய்விட்டு யாரிடமும் சொல்லவும் இல்லை. நடராசரே அளித்ததுபோல அன்றைக்குத் தீட்சிதர் கொடுத்த பிரசாதத்தை நான் என்னுடன் இருந்த டாக்டர் திரு. அரங்கசாமியுடன் மகிழ்ச்சியாகச் சாப்பிட்டேன்.

அற்புத சம்பவங்கள் இந்த நாட்களில் ஏற்படுவதில்லை என்று சொல்கிறார்கள் அது முழுவதும் தவறு. ஒருமுறை ஆருத்ரா தரிசனத்திற்குப் பிரத்யேகமாக போகும் வழியில் செல்லாமல் பொதுமக்கள் போகும் வழியில் செல்லலாம் எனக் கருதிச் சென்றேன், சொல்லமுடியாத கூட்டம்; அடித்துப் பிடித்துக் கொண்டு எவ்வளவு முன்பாக போகமுடியுமோ அவ்வளவு முன்பாகச் சென்றேன். ஆனால் கிடைத்த இடம் ஒரு தூணுக்குப் பின்னால். அங்கிருந்து கிடைக்கக் கூடிய தரிசனம் குஞ்சிதபாதம் ஒன்றுதான். "என்ன இப்படிக் கூத்து அடிக்கிறாரே? இந்தக் குஞ்சித பாதத்தில் தான் மோட்சம் இருக்கிறது இதைப்பார்த்தால் போதும், என்று சொல்கிறார் போல இருக்கிறது; சுந்தர்மூர்த்திப் பெருமானையே, "போடா, போ" என்று சொன்னவருக்கு நான் எந்த மூலை என்றெல்லாம் எண்ணிக்கொண்டிருந்தேன்.

அப்போது ஒருவர், "நீங்கள் இங்கே வாருங்கள், இங்கிருந்து நன்றாகப் பார்க்கலாம்" என்றார்; அவருக்கு நான் முன்பு ஒருமுறை நன் வைத்தியம் செய்ததாகவும் சொன்னார், அவர் கொடுத்த இடத்தில் இருந்து ஓரளவுக்குப் பார்க்க முடிந்தது. ஆனாலும், நந்தி குறுக்கே நிற்பது போலப் போலீஸ்காரர் ஒருவர் நின்று கொண்டிருந்தார். அவரைச் சிறிது விலகச் சொன்னேன் தடிக்கம்பை ஓங்கிக்கொண்டு அடிக்க வந்தார் அவர் இனி. மேலும் ஆசைப் பட்டால் நடராசர் இன்றைக்குக் கம்பால் அடித்தாலும் அடிப்பார் போலிருக்கிறது", என்று நினைத்தேன். அப்போது என்னைப்பார்த்த தீட்சிதர் ஒருவர் ஒரு போலீஸ்காரரிடம், "அதோ இருக்கிறார் பாருங்கள் டாக்டர். அவரை முன்னால் விடச் சொல்லுங்கள்," என்றார். என்னைக் கம்பை ஓங்கி அடிக்க வந்த போலீஸ் கான்ஸ்டபிளே "யாரது டாக்டர்?" என்று கேட்டுக் கொண்டே என்களிடம் வந்தார். "நான் தான் டாக்டர்" என்று புறப்பட்டவுடன் அந்தக் கான்ஸ்டபிளுக்கு உடனே நடுக்கம் எடுத்தது; "என்னைப்பற்றி ஒன்றும் சொல்லாதீர்கள்." என்று கேட்டுக் கொண்டார். "நான் உன்னைப்பற்றிக் குற்றம் ஒன்றும் சொல்லவில்லை. நான் வந்தது நடராச தரிசனத்திற்காக; அவர் என்னைக் கூப்பிட்டு அழைக்கிறார். நான் போகிறேன்" என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றேன் அங்கே இருந்த போலீஸ் சூப்பிரண்டெண்டு, "என்ன டாக்டர் நீங்களே இந்தமாதிரி செய்கிறீர்களே; இந்த நாளில் ஒருவருக்கும் தனியான சலுகை காட்டக் கூடாது. இந்த வழியாக வந்தால் மற்றவர் என்ன சொல்வார்கள்? நீங்கள் பிரத்யேகக் கதவு வழியாக வந்திருக்க வேண்டும்," என்றார், ஆயினும் அவரே ஒரு நல்ல இடமாகப் பார்த்துக் கொடுத்தார். ஆனந்தமாக அன்றைக்கு நடராசப் பெருமானின் அபிஷேகத்தைப் பார்த்துவிட்டு மிக்க மகிழ்ச்சியோடு வீடு வந்து சேர்ந்தேன்,

நடராசரை நெருங்கிப் பார்த்து மகிழ்தற்குரிய காலம் அவர் தேருக்குச் செல்லும் போதும், தேரில் இருந்து கீழே இறங்கி வரும் போதும் தான். அதனால் ஆண்டு தோறும் தேர் அன்றைக்குச் சிதம்பரம் போய் விடுவது வழக்கம் சில வேளைகளில் திடீரென்று தீட்சதர்கள் தேருக்குள் மக்களை விடமாட்டார்கள். சில சமயங்களில் பெரிய மனது வைத்து உள்ளே அனுப்புவார்கள். எந்தச் சமயத்தில் அவர்கள் அனுமதிப்பார்கள், எந்தச் சமயத்தில் அனுமதிக்கப் பட்டர்கள் என்று சொல்ல முடியாது. ஒரு முறை நானும் என் மகளும் நடராஜர் தேர்பார்க்கச் சென்றோம். நடராசரைத் தூக்குவது என்றால், அதற்குப் போட்டி அதிகம். முரட்டு ஆட்கள் தான் தூக்க முடியும். சாதாரண மனிதர்கள் ஆசைப்பட்டாலும்தூக்க விடமாட்டார்கள். அன்று

தேருக்கு நடராசர் போகும் போது "இவர்கள் எல்லாம் தூக்குகிறார்களே, நமக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைக்க வில்லையே' என்று வருத்தப்பட்டேன், நடராசப் பெருமானையே குறை கூறினேன். 'உன்னைத் தூக்கு வதற்கு இவர்களை எல்லாம் அனுமதிக் கிறாயே, என்னை ஏன் அனுமதிக்கக் கூடாது" என்று நொந்து கொண்டேன்,

சுவாமி தேரில் ஏறியவுடன் வீட்டிற்கு வந்துவிட்டோம். அன்று என்றைக்கும் இல்லாத மழை. சோ' வென்று பெய்யத்தொடகிற்று. என் மகள், "அப்பா சுவாமி தரிசனம் ஆகிட்டது. சென்னைக்குப் பகலிலே யே நாம் திருப்பிப் போய்விடுவோம்" என்று கூறினர்; "உன்னை அழைத்து வந்ததே தப்பு; நான் சிதம்பரம் வந்துவிட்டால் அவசரப்படுகிற வழக்கம் இல்லை; எப்போது பார்த்தாலும் நடராசப் பெருமான் ஒருவர் தான் என்னை அன்போடு பார்த்து, "எப்போது வந்தாய்" என்று கேட்பது போல இருக்கிறார்" என்றேன் யான், "ஏன், நாங்கள் எல்லாம் கூட அப்படித்தான் நினைக்கிறோம்" என்று சொல்லி என்னை கேலி செய்தாள் என் மகள்; இப்படி நாங்கள் பேசிக் கொண்டிருக்கும் போது சுமார் பதினொரு மணி இருக்கும். ஒரு ஆள் வந்து, "ஐயாவை உடனே வரச்சொல்கிறார்கள். சுவாமியைத் தேரில் இருந்து இறக்கப் போகிறார்களாம்" என்றான். என் மகளையும், டாக்டர் திரு அரங்கசாமியையும் அழைத்துக் கொண்டு சென்றேன். தேரை விட்டு இறக்கிய சுவாமியை மண்டபத்தில் வைத்திருந்தார்கள். மழை அதிகமாகப் பெய்த காரணத்தினால் ஆட்கள் இல்லை நடராசாவைத் தூக்கும்போது. டாக்டர் நீங்களும் தான் கொஞ்சம் தூக்குங்களேன் என்றார் ஒருவர். நானும் தூக்கினேன். மண்டபத்தில் இருந்து கிட்டத்தட்ட கிழக் கோபுர வாசல் வரை தூக்கிக்கொண்டு வந்தேன். தூக்கி வழக்கம் இல்லாத காரணத்தினால் - நான் சுகவாசியாக இருந்த காரணத்தினால் - தோள் வலித்தது. "தோள் வலிக்கிறதே" என்று நினைக்கும்போது. "உங்களுக்கு ஏன் இந்தக் கஷ்டம்? நான் தூக்குகிறேன்" என்று சொல்லிக்கொண்டே ஒருவர் என்னிடம் இருந்து வாங்கிக் கொண்டார்.

நடராசப் பெருமானைக் கொண்டு போய் இறக்கினார்கள் அன்றைக்குத் தீட்சிதர் என்னைப் பார்த்து டாக்டர் போய்விடாதீர்கள்; அபிஷேகம் நடைபெறும்; இங்கேயே இருந்து பார்த்துவிட்டுப் போகலாம்" என்றார் அப்போது மணி ஒன்று. 'இருக்கிறேன்' என்று நான் சொல்லிவிட்டேன். "என்ன அப்பா, இருக்கிறேன் என்று சொல்லிவிட்டாய்" என்று கேட்டாள் மகள். நடராசர் சொல்கிறார் அம்மா, இருந்து பார்த்துப் போ என்று" என்றேன் நான் "ஆமாம், இன்னொரு தீட்சிதர் வந்து சொல்வார்; நாளைக்கு அபிஷேகம் நன்றாக இருக்கும், அதைப் பார்த்து விட்டுப் போ என்று; திரும்பவும் இதே மாதிரி சொல்வீர்கள்" என்றாள் என் மகள். அதை நான் பொருட்படுத்தவில்லை. நடராசருக்கு அருகில் ஜமுக்காளம் ஒன்று போட்டார்கள், அதில் உட்கார்ந்து பார்த்தேன். அருமையான காட்சி கிடைத்தது. சுமார் ஒன்னரை மணி நேரம் பூசை நடந்திருக்கும். அந்தப் பூசை நடக்கும் வரையில் மழையும் கொட்டு கொட்டு என்று கொட்டிற்று. பிறகு டாக்டர் திரு. அரங்கசாமி வீட்டிற்குச் சென்றுவிட்டுச் சென்னை திரும்பினோம் வரும்போது, ஏன் அம்மா, இன்னொரு தீட்சிதர் வந்து, இன்றைக்கு அபிஷேகம் நன்றாக இருக்கும், இருந்து பார்த்து விட்டுப் போ, " என்று சொன்னாரா?" என்று என் மகளைக் கேட்டேன்."

திரும்பி வரும்போது பெருமழை; காற்று வேறு; என் மகள் "பகனி

லேயே புறப்பட்டு இருந்தால் பயம் இல்லாமல் வந்திருக்கலாம் ; காற்றிலும், மழையிலும் கிளைகள் எல்லாம் முறிந்து விழுகின்றன" என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே வந்தாள் கிளைகள் முறிந்து விழுந்தன என்பது உண்மை தான். ஆனால், எங்கள் கார் மரத்தை தாண்டிய பிறகே கிளைகள் முறிந்து விழுந்தன. எங்களுக்கு முன்பு ஒரு வித இடையூறும் இல்லாமல் நாங்கள் இனிதே சென்னை வந்து சேர்ந்தோம் எப்போதும் தென்னார்க்காடு மாவட்டத்தில் மருத்துவர் சங்கக் கூட்டத்தில் நான்பேசவது என்றால், அதைச் சிதம்பரத்தில் தான் ஏற்பாடு செய்வார்கள்.

என்னுடைய அனுபவங்களை இப்படிச்சொல்லிக்கொண்டேபோகலாம். ஒருமுறை இருமுறை அல்ல பல முறை, கேட்டவை எல்லாம் கொடுத்து வந்திருக்கிறார் நடராசர் ; என்னுடைய வாழ்வில் தெவிட்டாத் தெள்ளமுதமாக இருப்பவர் நடராசரும் சிவகாமி அம்மையும் நான் என்பதைத் தெரிவித்துக் கொண்டு, என்னையும் பொருட்படுத்தி எழுதும்படி கேட்டுக் கொண்ட திருப்பணிக் குழுவினருக்கு என் மனமார்ந்த நன்றியைச் செலுத்தி, இதை எழுதுவதற்கு ஊக்கமும், ஆர்வமும் கொடுத்த சிவகாமி அம்மையைப் போற்றி இக் கட்டுரையை முடித்துக்கொள்கிறேன்



# திருக்கோயில் மூர்த்தம்

திரு, P. S. இராமானுஜாச்சாரியார்

இருள் தரும் இம் மண்டிணி ஞாலத்துப் பிறந்தும் இறந்தும் உழன்று வரும் வாழ்வு, மெய்யறிஞரால் வெறுக்கப் பெற்றமை 'இருள் தருமா ஞாலத்தில் இனிப்பிறவி யாம் வேண்டேம்' என்னும் இன்னோரன்ன மொழிகளால் அறியக் கிடக்கின்றது இவ் வாழ்வு 'ஸம்ஸாரம்' என்ற பெயருடன் நச்சு மரமாக உருவகித்துக் கூறப் பட்டுள்ளது நச்சுத் தன்மையுடைய தாயினும் இம் மரத்தின் அமுதின் சுவை கொண்டுள்ள இரண்டு கனி பழுக்கின்றன:- அவை யாவன:- ஏதேனும் ஒரு பொழுதில் இறைவனிடம் பத்தியேற்படுவதும், அவனடியாரிடம் தொடர்புண்டாவதுமாம் இக் கருத்தை.

ஸம்ஸார விஷவ்ருக்ஷஸ்ய-த்வே
பலே ஹ்யமிருதோபமே |
கதாசித் ஈச்வரே பக்தி : தத்பக்
தைர்வா ஸமாகம: ||

என்ற சுலோகம் கூறுகிறது.

எனவே, இறைவன்பால் பேரன்பும் அவனடியாருடன் தொடர்புமாகிய இவ்விரண்டையும் நல்லூழ்வயத்தால் பெற்றாலல்லது, இவ்வுலக வாழ்வு நஞ்சு நிறைந்த கனிகளை நுகரும் வாழ்வாகும் என்பது பெறப்படும்.

பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி அர்ச்சை என்பதாக ஐந்து வடிவங்களையுடையவன் இறைவன் என்று வைணவ சமய நூல்கள் கூறும் இவற்றுள் முன்னைய நான்கு வடிவங்களும் அருமை மிக்கனவாகலின் அவற்றால் நம்மனோர்க்குப் பயன் கிட்டாது என்றும், இறுதியதான அர்ச்சை என்ற, திருக்கோயில்களும் அவரவர் இல்லங்களிலும் எழுந்தருளப்பண்ணிய மூர்த்தமே மிகச் சிறப்பான வடிவமாக்கும் என்றும் கூறியுள்ளனர் முன்னோர் அஃதாமாறு:- வீட்டுலகின்கண், நித்யசூரிகள் என்றவராலும் இவ்வுலகிலிருந்து முத்திபெற்ற முக்தர்களாலும் கண்டு வணங்கிப் போற்றப் பெறும் இறைவன் வடிவம் 'பரம்' என்ற பெயருடையதாகும். இவ்வடிவத்தை நம்மனோர்கண்டு இன்புறவோ பத்தி முதலியன செய்து உய்யவோ இயலாது என்பதை, நீர்வேட்கை உடையானுக்கு இவ்வண்டத்துக்குப் புறம்பே காணற்கரியதாய் பெருகிக் கிடக்கிறநீர் போலே, 'அப்பால்' முதலாய் நின்ற அளப்பரிய ஆரமுது' என்கிறபடி லீலா விபூதி என்னும் பெயரிய இவ்வுலகத்திற்கு அப்பாற்பட்டிருக்கிறது 'பரம்' என்று விளக்கிக் கூறுப.

வாசுதேவன், சங்கருடணன் பிரத்யும்னன், அநிருத்தன் என்று நால் வகையாகப் பிரிந்த திருவடிவம் 'வியூகம்' என்ற பெயரால் கூறப்படுகிறது. இது, இவ் அண்டத்துக்குட் பட்டிருப்பதால் வீட்டுலகம் போலே மிகத் தொலைவில்லாதிருக்கச் செய்தேயும், நீர் வேட்கையுடையவனுக்குத் திருப்பாற்கடல் போலே விரைந்து கிட்டற்கரியதாய், 'பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும்' என்றபடியே

கேட்டிருக்குமத்தனையல்லது காண அரிதாம்படியிருக்கும் வியூகம்' என்ற ஆன்றோர் கூற்றிற்கிணங்க இவ்வடிவமும் நம் போலியரால் கண்டு களித்து இன்புறுதற்குரிய தன்று என்பது தெள்ளிதின் உணரப்படும்.

இராமன், கண்ணன் முதலிய பெயர் கொண்டு அவதாரஞ் செய்த வடிவம், 'விபவம்' என்று அழைக்கப்படும், முற்கூறப்பட்ட வடிவங்கள் போல் வேற்றுலகத்திலோ, கிட்டுதற்கரிய மிகத் தொலைவிலோ இல்லாமல், இவ் வடிவம், 'மண்மீதுழல்வாய்' என்றபடி நாம் நடமாடும் இந்நிலவுலகத்தே வந்து அவதரித்து எல்லோர்க்கும் எளிய நிலையில் இயங்கியும், அக் காலத்தினர்க்கே உரியதாய், பிற்காலத்தேயுள்ள பாவிகளுக்கு அரியதாய்ப் 'பெருக்காறு போல ஆயிற்று விபவம்' என்று, கூறும்படி காட்டாற்று நீர் சில காலத்திற்கு மட்டும் பயன்பட்டு, ஏனைய காலத்தில் உள்ளவர்க்கு இன்பத்தை யளிக்காத வாறு, இக்காலத்திய நம்மனோர்க்குப் பயனளிக்காத தன்மை யதாயிற்று.

நம்முள் சூக்கும உருவத்துடன் தங்கி எல்லாச் செயல்களையும் சான்றாகக்கண்டு திகழும் இறை வடிவம் 'அந்தர்யாமி' என்று புகலப் படுகின்றது இது, அண்மையிலும் எக்காலத்தும் இருப்பதால் முற்கூறிய வாறு அருமையில்லாது போனாலும், 'நீர்வேட்கை மிக்கவனுக்கு நிற்கிற இடந்தன்னிலே யிருக்கச் செய்தேயும் கொட்டும் குந்தாலியுங் கொண்டு கல்லினாலல்லது குடிக்கக் கிடையாத நிலத்துள்ளிருக்கும் தண்ணீர் போல, கண்டு பற்றவேண்டும் என்று ஆசைப்பட்டவனுக்கு, இருதயத்திலே அமர்ந்திருக்கச் செய்தேயும், 'கட்கில்' என்றபடியே காட்சிக் கெளியனன்றிக்கே, அட்டாங்க யோகம் முதலிய மிக்க முயற்சியாலே காணவேண்டும் படியாயிற்று அந்தர் யாமித்வம் என்ற வாய்மொழியால் நமக்குக் கிடைத்தற்கருமை புலப் படுத்தியவாறாயிற்று.

பரம் முதலிய மூன்றின் பரிணாமமாக, அடியவர்களின் விருப்பத் தற்கியைய, நீரும் பாலும் போல் மூர்த்தங்களில் ஒன்றியுள்ள இறை வடிவம் 'அர்ச்சை' என்று பெயர் பெறுகிறது. திருக்கோயில்களிலும், நம் இல்லங்களிலும் எழுந்தருளியுள்ள அர்ச்சை என்ற இவ்வடிவம், சிறப்பான முறையில் பிரதிட்டை செய்து விதிமுறை தவறாது பூசை முதலியன செய்யப்பட்டுப் போற்றப் படுங்கால், முதற்கண் கூறிய 'பரம்' என்ற மூலவடிவத்தின் வேறுபாடின்றி, 'அப்ராகிருதம்' (பிரகிருதி மண்டலம் என்றழைக்கப்படும் இந்நிலவுலகத் திற்கு அப்பாற்பட்ட வீட்டுலகத்தில் எழுந்தருளியுள்ள பரவடிவம்) என்று பெருமையுடன் போற்றப்படுகிறது. எளிமையின் பேரெல்லைக்கு நிலைக் களனாயுள்ளது; எக்காலத்தும் எல்லோருக்கும் அருள் சுரந்து உய்தியைப் பெறச் செய்கிறது. 'பரம்' என்ற வடிவத்தில், இறைவன் சற்றேறத்தாழ தன்னையொத்த முத்தர் முதலியவர்க்கே முகங் கொடுப்பதாலே இறைக்குணங்கள் பகல் விளக்குப்போலே ஒளி குன்றி யிருக்கும். அர்ச்சையிலோ எனின், அவன் ஸம்ஸாரிகளுக்கு முகங் கொடுத்துக் கொண்டிருக்கிற இருப் பாலே, அக்குணங்கள், இருட்டறை யில் விளக்குப் போலே ஒளிமிக்குத் திகழ்வனவாம். கண்டு பற்றுகைக்கு உறுப்பான எளிமை, மேன்மைகளும், பற்றியபின் அகலாமைக்கு உறுப்பான ஒட்டிப்பழகும் தன்மையும், சார்ந்து வழிபடுதற்கும், குற்றங்கண்டு வெறுவாமைக்கும் உறுப்பான வாற் சல்யமும், இடுக்கண் துடைத்தற்கும் நற்பேறுகளைக் கொடுத்துத் தண்ணளி செய்தற்கும் உறுப்பான அறிவு ஆற்றல்களும், கண்டு அநுபவித்தற்கு உறுப்பான பேரழகும் ஆகிய இன்னோ ரன்ன ஸம்ஸாரிகளுக்கு வேண்டப்

படும் குணங்களனைத்தும் இவ் அர்ச்சையில் குடிகொண்டிருப்பதால், 'பூர்ணம்' (நிறைவுள்ளது) என்று மெய்யறிவாளர்களால் சிறப்பிக்கப் பெற்றுள்ளது.

பெருக்காற்றிலே தேங்கின ஆழ்ந்த மடுக்கள் நீர் வேட்கையை எக்காலத்தும் எல்லாருக்கும் தணித்து இன்புறுத்துமாறு இவ் அர்ச்சை நம் அனைவர்க்கும் பயன் தந்தருளுவதாகும். பெருவிடாய் கொண்டவன், குளிர்ந்து தெளிந்து நிறைந்துள்ள ஏரிகுளங்கள் அருகே இருக்க, அவற்றை விட்டுக் கிணறு கல்லியும், அண்டத்திற் கப்புறத்தெழுதற்குப் பாய்ந்தும், பாற்கடலிற் பாரி புகுந்தும், வற்றின ஆற்றில் ஓடிச்சென்றும் நீர் பருகி விடாய் போக்கத் திரியுமாப்போல, எளிமை நிரம்பிய அர்ச்சையை விட்டு அரிய ஏனைய வடிவங்களை பற்றிஉய்யக் கருதுவது என்பதாக இவ்அர்ச்சையின் தனிச்சிறப்பு நன்கு விளக்கப்பட்டுள்ளது.

இவ் அர்ச்சை வடிவம், காட்சிக்கினிய இயற்கையான வடிவழகாலும் விழாக்களில் சாற்றப்படும் பல்வேறு கோலங்களாலும், அழிதன் மாலையவான மனை மக்கள் முதலியவற்றால் ஏற்படுபவையும் ஆராய்துழி அருவருக்கத்தக்கவையும், மறுமையின்பத்திற்குத் தடையாகவுமுள்ளவற்றிலிருந்து மீட்க வொண்ணாதபடி பெருமிடர் செய்து மண்டியும், இறைவன்பால், கற்றங்கண்டயானை போலே முகம் மாறிக் கொண்டும், அநாதி காலந்தொட்டு இறைவனிடம் ஈடுபடாது உழன்று வருதலால் அறிவின்றிச்சடப்பொருள் போன்று கடுமாறியும் உள்ள நம் மனோரின் மனத்தைத் தன்பால் ஈர்த்து.

'சுரி குழல் மடந்தையர் திறத்துக் காதலே மிகுத்துக் கண்டவாதிரிந்து' என்றும், 'மாதரார் கயற்கணென்னும் வலையுட் பட்டழுந்துவேனை' என்றும், பிற இடத்துப்போந்த போக்கை அறவே தவிர்த்து, 'போதரேயென்று சொல்லிப் புந்தியிற் புகுந்து தன்பால் ஆதரம் வைத்த அழகன்' என்னுமாறு மீண்டு மீண்டும் கண்டு துய்த்தற்குரிய பெரு விருப்பத்தைக் கொடுத்தருளுவதாம்.

திருவிழா முதலியவற்றைத் தலைக்கீடாகக் கொண்டு காட்சிக்கினிய பல்வேறு திறப்பட்ட திருக்கோலங்களுடனும் வாச்சிய ஒலி, வாண வேடிக்கைகளுடனும் எல்லா மக்களையும் அவரவர் இருப்பிடத்திற்குச் சென்று வலிந்து காட்சியளித்து அருள் புரிந்து உய்விக்கும் சிறப்பு இவ்வர்ச்சை வடிவத்துக்கு ஈடிணையில்லாப் பெருமையை நல்குவதாம்.

இறைவன் அருட்கடலென அடியவராற் பாராட்டிப் போற்றப்பட்டவனாயினும், பொறுத்தற்கரிய பெருங் குற்றங்களைச் செய்தவர் பால் தனது ஆண்மைக்கேற்ப, சீற்றத்தைத் தந்தை புதல்வரிடம் போல் மேற்கொள்ளும் போது, தாய்மையன்பு நிறைந்த தாயர்போல், இறைவி, குற்றம் பாராட்டாது அருளை மேற்கொண்டு தண்ணளிபுரியும் தாய்மையால், இறைவனிடம் ஏற்ற பெற்றி இனிய உரைகளை வழங்கிச் சீற்றத்தைத் தண்ணீரால் வெந்நீரை வளாவுவது போல் தணித்து ஆட்கொள்ளச்செய்கிறாள் என்பது மெய்ஞ்ஞானியர் கண்ட நூன்முடிபு.

இக்காலத்தவர், 'அறச்செயல்களாலுண்டாம் பேறுகளை விரும்புகின்றனரேயன்றி, அச்செயல்களை மனத்தாற்கூட விரும்புவதில்லை; (மேற்கொள்வதுயாங்ஙனம்) மேலும், தீவினை (பாவச்செயல்)களின் விளைவான துன்பங்களைச்சிறிதும் விரும்புவதில்லை; துன்பம் நிகழாமல் இன்பவாழ்வு பெற விரும்புகின்றனர். ஆயினும் துன்பங்களை விளைவிக்கும் பாவச்செயல்களை மிக முயன்று மேற் கொள்ளுகின்றனர் என்ற உலகியற்கையை

'தர்மஸ்ய பலம் இச்சந்தி, தர்மம் நேச்
சந்தி மாநவா: |
ந பாபபலம் இச்சந்தி, பாபம்
குர்வந்தி யத்னத: ||

என்ற சுலோகத்தால் அழகுறக் காட்டியுள்ளனர். எனவே, இவ் வியற்கையைக் கொண்டு, குணங்களைந்து குற்றங்களில் மண்டும் தீய சிந்தையோமுக்கு, இறைவியின் திருவருளின்றேல் உய்யும் வண்ணமேது? ஆகையால் இறைவனுக்குச் சீற்றம் பொங்கியெழச் செயற்படும் நம்மனோர்க்கு இறைவியின் திருவருளாலேயே இறைவனுடைய திருவருளைப் பெறவேண்டியுளது.

இராவணனாற் சிறைப்பட்ட அரமகளிரை மீட்டற்குச் சீதாபிராட்டி, தான் வலியவே சிறைப்பட்டு இன்னலுழந்தாள் என்ற உண்மை, 'இதிகாஸ ச்ரேஷ்டமான ராமாயணம் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது' என்ற உரையால் வெளிப்படுத்தப்பட்டுளது. பிராட்டியின் அணுக்கத்தால் மகாபாரதம் செய்தும் காகம் தலைபெற்றது; அஃதின்மையால் சிறிய அபராதம் புரிந்தும் இராவணன் பாண்டான்' எனபதாக விளக்கம் காட்டப்பட்டுள்ளது மக்களிடம் கொண்டுள்ள பேரன்பினுல் இறைவனை விட்டுப் பிரியாமலிருத்தற்கே சிவபிரானின் இடப்பகுதியையே தன் வடிவமாகப் பெற்று இறைவி அருளை வாரி வழங்குகிருள் அன்றே? இராவணன் முதலியோரால் நேர்ந்த துன்பத்தை நீக்கத் திருமாலையன்றே தேவர், நிலவுலகில் சென்று அவதரிக்க வேண்டினர்! திருமகள் அந்த அவதாரங்களில் சீதையாகவும், ருக்மிணியாகவும் அவதரிப்பானேன்? என்ற வினவை எழுப்பி, அடியவரிடம் அன்பு கொண்டு இறைவன் அருளை மேற்கொண்டுழி, அவ்வருளை முன்னினும் பன்மடங்கு மிகுவித்துச் சிறந்த பல நற்பயன்களை அவ்வடியார்க்குப் பயத்தற்கும், அவ இறைவனுக்கு ஏனைய வரிடத்துச் சீற்றம் நேர்ந்துழி, 'உலகில் குற்றமற்றவர் யாவர்' என்பது போன்ற இனிய உரைகளைக்கூறி, அச்சீற்றத்தைத் தணித்து அருளை மேற்கொள்ளச் செய்தற்குமே, 'அகலகில்லேன் இறையும் என்று அலர் மேல்மங்கை உவறமார்பா' என்றபடி தேவி நீங்குதலின்றி உடனிருந்து வருகின்ருள் என்று விளக்குகின்றனர்.

இங்ஙனம், தேவி அண்மையில் இல்லையாயின், இறைவன் தவிர்க்க வேண்டிய சில இழிசெயல்களைக்கூட மேற்கொள்ள நேரிடும் என்பதை தேவியைப் பிரிந்தமையால் முறை திறப்பி, தகாத முறையில் என்பால் அம்பு விடுத்தனை போலும்!' என்று இராமனை வாலி இடித்துக் கூறுமிடம் கண்டு தெளியலாம்.

எனவே, இறைவியின் திருவருளை முன்னிட்டே இறைவன் திருவருளைப் பெறுதல் மிக எளிதாகலால், அங்ஙனம் இறைவியின்பால் நம் மனம் ஈடுபடுதற்குத் திருக்கோயிலில் செவ்விய முறையில் அம்மையின் திருமூர்த்தத்தைப் பிரதிட்டை செய்து விதிமுறைப்படி பூசனை திருவிழா முதலியவற்றைச் செய்தலால், அனைவர்க்கும் அத் திருமூர்த்த வழிபாட்டினுல் பாவங்கள் தொலைந்து பேரின்பம் பெறுதல் உறுதியென்பதை எடுத்து விளக்கத் தேவையில்லை.

'திருவடி முதல் திருமுடி வரை இறையுருவத்தைக் காண்போருடைய பாவங்களனைத்தும் விரைவில் அழிவுறுகின்றன, உபபாதகம் என்னும் சிறிய பாபங்களைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ!' என்ற கருத்துடைய

ஆபீடாத் மௌளிபர்யந்தம் பச்யத:
புருஷோத்தமம்
பாதகான் யாசு நச்சந்தி கிம்
புனஸ்தூப பாதகம்

என்ற சுலோகத்தால் தெளியலாமன்றே?

திருக்கோயிலைக் கட்டுதல், புதுப்பித்தல் முதலியவற்றிற்குக் கூறப்

பட்டிருக்கும் பயன்களைத் தெரிந்து மேற்கொண்டால், நாட்டில் மக்கள் மிக எளிதாகச் சிறந்த பயன்களைப் பெற்றுத்திகழலாம்.

இறைவனுக்கு, உலோகத்தாலோ, கல்லாலோ, மரத்தாலோ, மண்ணாலோ திருக்கோயிலை அமைப்பவன், நாடோறும் சிறந்தவேள்விகளைச் செய்து வருபவன் பெறும்நற்பேறுகளை எய்துகிறான். அவன் தோன்றிய குடியில் முன்னும் பின்னும் நூறுதலைமுறைமக்கள் பாவங்களினின்றும் விடுபடுகின்றனர். கோயிலில் உள்ள கற்கள் எவ்வளவோ, அவ்வளவு ஆயிரம் ஆண்டுகள், துறக்கத்தின் இன்பத்தைத் துய்க்கின்றான்.

பாசக் கயிற்றுடன் தீயவரைப் பிணித்து வருதற்குப்போகும் தன் பணியாளரிடம் கூற்றுவன் கூறுமாறு:-
திருக்கோயிலைக்கட்டிய சிறந்தோருடைய மரபில் நூறு தலைமுறை வரையுள்ளவர்களை எட்டிப்பார்த்தலும் தகாது. கோயிலில், தரையைப் பெருக்கி, மெழுகிக் கோலம் இடுபவர்களை மூன்று தலைமுறை வரை விட்டு வருதல் வேண்டும். கோயிலில் எவ்வளவு அடி தூரம் மெழுகிக்கோலம் இடப்படுகிறதோ, அவ்வளவு யோசனை விஸ்தீர்ணமுடையதான சுவர்க்க இடம் அவர்களாற் பெறுதற்குரியது கோயிலில் விளக்கேற்றி வைத்தால், அழகிய ஆரோக்கிய நிறைந்த உடலுடன் வாழ்வர்; நீண்டதொரு வேள்வியைச் செய்தலால் உண்டாம் பயனைப்பெறுவர். என்னும் இன்னோரன்ன பல சிறந்த பயன்கள் திருக்கோயிற் பணியால் பெறப்படுகின்றன என்று 'விஷ்ணுதர்மம்' என்ற நூலுள் எண்பத்து மூன்றும் அத்தியாயத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

ஆகவே, இவ்வாறு பலப்பல நற்பயன்களைத் தில்லையம்பதியினரும், பிற இடங்களிலிருந்து வந்து வழிபடுபவர்களும் பெறுதற்குரிய நல்லூழின் விளைவாக ஸ்ரீசிவகாமியம்பாள் திருக்கோயில் திருப்பணி சீரிய முறையில் நிறைவுற்றுத் திருக்கும்பாபிஷேகம் நடைபெறுவதோடின்றி, பல பேரறிஞர்களின் சிறந்த நற்கருத்துத் தேன் மல்கிய 'திருக்கும்பாபிஷேக நினைவு மலர்' ஒன்றும் வெளிவருவதால், இது மக்கள் மனதைக் கமழ்வித்துத் தெய்வக் கொள்கையை யூட்டி, ஊன்றச் செய்து இறைவியின் திருவருள் மூலமாக எம்பெருமானை வழிபடும் நற்பேறு வாய்க்கப்பெற்று இருமைப் பயனையும் பெற்று அனைவரும் நல்வாழ்வு பெறும் பேரின்பப் பயனையும் நல்கும் என்பது உறுதியாகும்.



# மூவருக்கும் முதலாய முதல்வன்

வித்துவான், ஜி. எம். முத்துசாமி, ஐ. ஏ. எஸ். ரிட்டையர்டு

சிவபெருமானைத் தெய்வமாகக் கொண்டுள்ள சைவமும் திருமாலைத் தெய்வமாகக் கொண்டுள்ள வைணவமும் இந்து சமயத்திற்கு இருகண்கள் போன்றவை. பிரமனுக்குப்படைப்புத் தொழிலும் திருமாலுக்குக் காத்தல் தொழிலும் உரியன என இந்து சமயத்தில் பொதுவாகக் கூறப்படுகிறது. எனினும் அடிப்படைக் கொள்கையில் இம் முத்தொழில்களுடன் பிற சமயங்களில் கூறப்படாத மறைதல் அருளல் என்னும் இவ்விரு தொழில்களையும் சேர்த்து இவ்வைந்தொழில்களும் சிவபெருமானுக்குரியன எனச் சைவம் கூறுகிறது. இவற்றில் முதல் மூன்றும் உடலைப்பற்றியவை பின்னிரண்டும் உயிரைப்பற்றியவை. படைப்பு, காத்தல் அழித்தல் ஆகிய இம் மூன்று தொழில்களையும் ஆற்றுவதற்காகத் தோன்றிய பிரமன் திருமால் உருத்திரன் ஆகிய இம் மூவருக்கும் முதன்மையாகவுள்ளவர் சிவபெருமானே என்னும் கோட்பாட்டிற்கு ஆதாரங்கள் பலவுள்ளன.

## 1. வேதங்கள் கொண்டுள்ள கருத்துகள்

ஒன்றுடன் ஒன்றாகப் பின்னிப் பிணைந்திருந்த இருக்கு, யசுர், சாமம் அதர்வணம் என்னும் வேதங்கள் நான்கினையும் வகுத்துத்தந்தவர் வியாசர் இது காரணமாக அவருக்கு வேத வியாசர் என்ற பெயர் அமைந்தது. இவ்வாறு வகுக்கப்பட்ட வேதங்களில் பரம்பொருளின் தன்மைகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. இப்பரம்பொருள் சிவபெருமானா திருமாலா என்பதில் கருத்துவேற்றுமை இருந்து வருகிறது இதில், பரம்பொருள் நாராயணன் என வைணவர்கள் கொள்கிறார்கள். சைவர்கள் சிவபெருமானே பரம்பொருள் எனக்கருதிவருகிறார்கள்

### (i) வைணவர் கூறும் காரணங்கள்

வேதங்களில் உருத்திரனுக்குப் புகழ் சூட்டப்பெறுகிறது. வேதகாலத்தில் உருத்திரன் அக்கினியாகப் பாராட்டப்பெறுகிறார். பவன் (உருத்திரன்) ஆகாயத்தை ஆள்வதாகவும் ஆகாயத்தை நிரப்புவதாகவும் அதர்வணவேதம் கூறுகிறது. இவ்வேதத்தில் பவன், சர்வர், சகஸ்ரபரஹு, அகோரர், கிரீசர், நீலக்கிரிவர், உக்கிரர், ஈசானன், மதருத்திரியா, மகாதேவர், பசுபதி, உருத்திரன், கபார்த்தினர், சபாபதி, கணபதி, சேனனி, பீமர், சிகண்டர், சம்பு, சங்கரர் என்னும் பெயர்கள் காணப்பெறுகின்றன வேத வேள்விகளைப் பற்றிய குறிப்புகளில், இந்திரன், அக்கினி என்னும் பெயர்களும் உள்ளன. இங்கு, இந்திரன் என்னும் பெயர் பரம்பொருளைக் குறிக்கும் என யாஸ்கர் தாம் இயற்றிய நிருக்கத்தில் கூறுகிறார் இதே கருத்தைச் சயனாச் சாரியரும் கொள்கிறார். உண்மையான முதற் காரணப் பொருள் நாராயணன் என் இராம உபநிடதமும் நரசிம்ம உபநிடதமும் வலியுறுத்துகின்றன. இந் நிலையிலே, தகராசச் சம்பு தியானத்திற்கு உரியவர் எனவும் இப் பெயர் நாராயணனைக் குறிக்கும் எனவும் சொல்லப்படுகிறது.

"சிவ" "சம்பு" "ஆகாச" என்னும் வேதப் பெயர்கள்

நாராயணனே பரம்பொருள் என்பதைக் காட்டுகின்றன என வியாசர் கருதுகிறார். சகஸ்ரநாம தோத்திரமும் சிவசம்பு, தாணு, மகேசுவரர் என்னும் பெயர்கள் நாராயணனுக்கு உரியன எனக் கூறுகிறது. நாராயணன் பிரமனைப் படைத்தார். எனவும் பிரமனிடமிருந்து முக்கண் உருத்திரன் திரிசூலத்துடன் உதித்தனர் எனவும் தைத்திரீய உபநிடதம் கூறுகிறது. "சர்வம் விஷ்ணுமயம் ஜெகத்" எனக் கேனோ உபநிடதம் தெரிவிக்கிறது. ஆழ்வார்களுள், பெரியாழ்வார் மூவர் (மும்மூர்த்திகளாகிய பிரமன், திருமால், உருத்திரன் ஆகியோர்களின்) காரியமும் திருத்தும் முதல்வன் எம்பெருமான்" எனத் தெரிவிக்கிறார். "நாராயணனே பறைதருவான்" என ஆண்டாள் திருப்பாவை எடுத்துக் காட்டுகிறது. "வேதத்தின் பொருளை அறிந்து கொள்ளுங்கள். இது இயலாவிடில், மாதவனாகிய திருநாமத்தை உச்சரிக்கும் போதே வேதத்தின் சாரம் விளங்கும்" என்ப் பேயாழ்வார் கூறுகிறார், எனவே நாராயணன் வேதமுதற் பொருள் என்பது வைணவக் கொள்கை.

(ii) சைவர் தரும் விளக்கங்கள்:

இருக்கு, யசுர், சாமம் ஆகிய மூன்று வேதங்களுள் நடுவில் திகழ்வது யசுர். இதற்கு ஏழு காண்டங்கள் உள்ளன. இவற்றில் நான்காம் காண்டம் மையமாகவுள்ளது. இக்காண்டத்திற்கு ஏழு சம்ஹிதைகள் உள்ளன. இவ்வேழனுள் நடுவில் உள்ள ஸ்ரீ ருத்திரசம்ஹிதையில் முந்நூறு சிவநாமங்கள் உள்ளன. இம் முந்நூறு சிவநாமங்களுள்ளும் நடுவணதாகவுள்ள நூற்றைம்பத்தொன்றுவதில் சிவாய என்னும் சிவநாமம் உள்ளது "வேதநான்கினும் மெய்ப் பொருளாவது நாதன் நாமம் நமச்சிவாயவே" என்னும் வாக்கு திருஞான சம்பந்தருடையதாகும். (இது போன்றே திருநாவுக்கரசு நாயனர் அருளிய தமிழ்மறையாகிய 4, 5, 6 திருமுறைகளுள் நடுவில் உள்ள 5ஆம் திருமுறையின் நடுத் திருப்பதிகத்தில், நடுப்பாடலில் "சிவாய" என்னும் சிவநாமம் அமைந்துள்ளது மிகப் பொருத்தமாகவுள்ளது. சிவபெருமானே "வேதநாயகன்" "ஆதிநாயகன்" என திருநாவுக்கரசு நாயனர் குறிப்பிடுவதும், "வேதங்கள் ஐயா எனத் சூழ்ந்தகன்ற நுண்ணியனே" எனவும் "வேதப் பொருள்" "வேத விழுப் பொருள்" எனச் சிவபெருமானை மாணிக்கவாசகர் துதிப்பதும் இங்குக் கருத்தில் கொள்ளத் தக்கனவாகும்.

சிவபெருமானே பரம்பொருள் என்னும் கொள்கைக்கு ஆதாரமாக மாதவச் சிவஞான சுவாமிகள் காட்டும் முக்கியமான காரணங்கள் இரண்டு அவை யாவன (1) சுவேதாச்சுவதர உபநிடதம் முழுவதிலும் பரம சிவனுக்குரிய சிறப்புக்குரிய சிறப்புப் பெயர்களால் சிவ பெருமானது பெருமை கூறப்படுகிறது; மற்றும், ஏனைய உபநிடதங்களினினும், சுவேதாச்சுவதரம் வலியுடைத்து (2) சுபாலோப உபநிடதம் முதலிய உபநிடதங்களில், சிறப்புப் பெயராகக் கூறப்பட்ட "நாராயணன் என்னும் பெயர் பரமசிவனை யுணர்த்தும் இதை இலக்கண முறையில் அவர் விளக்குகிறார் "கங்கைக் கண் இடைசேரி" என்பதில், அச்சேரி கங்கை நீரின்பேரில் இருப்பதாகக்கொள்ளாமல், கங்கைக்கரையின்பேரில் இருப்பதாகக் கொள்வது போல் "நாராயணன்" என்னும் சொல் விஷ்ணுவை உணர்த்தும் இடுகுறிப் பெயராகவும் சிவபெருமானை உணர்த்தும்போது காரண இடுகுறியாகவும் அமையும்.

## 2. சம்பு பட்சமும் அனுபட்சமும்

பதியாகிய சிவத்திற்குத் திருமேனி தேவையில்லை. எனினும், படைத்தல் முதலிய ஐந்தொழில்களையும் மேற்கொள்ளும்போது திருமேனி வேண்டப்படும். அப்போது, தம்மிலிருந்து பிரிவில்லாத தம் சத்தியினிடம் சிவம் திருமேனி கொள்ளும். இவ்வாறு சிவம் திருமேனி கொள்வது இருவகைகளில் சிவம் தமது அருட்சத்தியினிடத்தில் வடிவம்கொள்ளும்போது அவ்வடிவங்கள் சம்புபட்சத்தில் அமையும். இது முதல் வகையைச் சேர்ந்தது மற்றவகை, சத்தி அதிட்டமான மாயையிடத்து சிவம் வடிவம் கொள்ளும்போது அனுபட்சத்தில் அமைகிறது. சம்பு பட்சத்தில் பிரமன், விஷ்ணு, உருத்திரன் இருப்பதுபோல், அனுபட்சத்திலும் பிரம்மன் விஷ்ணு உருத்திரன் ஆகிய மூவரும் உள்ளார்கள். சம்பு பட்சத்துப் பிரம விஷ்ணு உருத்திரர்கள் அனுபட்சத்து திருமூர்த்திகளை ஏவும் ஆற்றல் உடையவர்கள் இவ்வுண்மையை,

"ஆதிப்பிரானும் அணி மணி
வண்ணனும்
ஆதிக் கமலந்தவர் மிசை அயனும்
சோதிக்கில் மூன்றும் தொடர்ச்சி
யில் ஒன்றெனர்
பேதித்துலகம் பிணங்குகின்ருர்
களே'

எனத் திருமூலர் அறிவிக்கிருர். "செந்தி" முதலிய சிவசத்திகள் தம் மாட்டுப் பதிக்கப் படுதலாலே அனுபட்சம் பிரமன் திருமால் உருத்திரன் ஆகியோர்கள் படைத்தல் முதலிய தொழில்களை ஆற்ற அதிகாரம் பெறுகிருர்கள் அமைச்சர் முதலாயினேர்க்கு அரசர் இன்றியமையாதவர் போன்று அனுபட்ச பிரமன் முதலியோருக்குச் சிவபெருமான் ஆதாரமாக உள்ளார். இக்கருத்து,

"அயன் தனை ஆதியாக அரன் உரு
என்பதென்னை
பயந்திடும் சத்தி ஆதி பதிலாற்
படைப்பு மூலம்
முயன்றனர் இவரேயாயின்
முன்னவன் என்னைமுற்றும்
நயந்திடும் அவன் இவர்க்கு நண்
ணுவதொரோ வொன்றுமே"

என்னும் சிவஞான சித்தியார் பாடலால் விளங்கும் அனுபட்சத்தவர்கள் அந்த அந்தக் கற்பங்களில் படைக்கப்படுகின்ருர்கள் இவ்வாறு படைக்கப்படுகின்ருர்கள் என்பதாலே அவர்கள் ஒடுங்கி விடுகிருர்கள் என்பது கண்டுகொள்ளவேண்டும்; படைக்கப்படுகிருர்கள் என்பதை,

"அயனைமுன் படைத்திடுமொரு
கற்பத்தரியை முன் படைத்திடு
மொரு கற்பத்
துயருருஉருத்திரன் றனை முனம்
படைப்ப ஞெரு கற்ப மற்றொரு
கற்பந்தனில்
முயலு மூவரை யொருங்குடன்
படைப்பன் முன்பிறந்தவர்
மற்றிருவரையும்
செயலினுற் படைக்கவுமருள்
புரிவன் சிவபெருமான் எனில்
ஏற்றமிங்கெவனே"

என்னும் சிவதத்து விவேகம் விளக்குகிறது. மற்றும் இவர்கள் அந்த அந்தக் கற்பங்களில் மறைந்துவிடுகிருர்கள் என்பது,

நூறுகோடி பிரமர்கள் நொந்தினர்
ஆறுகோடி நாராயணரங்கனே
ஏறு கங்கை மணலெண்ணில்
இந்திரர்
ஈறிலாதவன் ஈசன் ஒருவனே"

என்னும் திருநாவுக்கரசர் ஆதிபுராணத் திருக்குறுந்தொகைப் பாடலால் விளக்கம் பெறுகிறது. இவ்வகையில் சிவபெருமானது முதன்மை தெளிவாகும்

இவ்வாறு படைக்கப்பட்டுச் சத்தி பதிக்கப்பெற்ற பிரமனும் திருமாலும் ஒரு கற்பத்தில் தாம்தாம் பெரியவர் எனத் தம்மிடையே பூசலிட்டார்கள். இதற்குத் தீர்வுகாணும் நோக்கில் கம்முடைய அடியையும் முடியையும் காண்பவர் எவரோ அவரே பெரியவர் எனச் சிவபெருமான் அவர்களிடம் தெரிவித்து, தாம் ஒரு சோதி

மலைப் பிழம்பாக நின்றனர். அவரது முடியைத்தேடப் பிரமன் ஓர் அன்னப் பறவையாய் உயர்ந்து உயர்ந்து பறந்து சென்றனர். திருமாலோ பன்றி வடிவில் நிலத்தைத் தோண்டினர். இருவரும் தோல்வியுற்றனர், இருவர்முன் தோன்றிச் சிவபெருமான் அவர்களுக்கு நல்லறிவு புகட்டி அருளும் புரிந்தார். இந்நிகழ்ச்சி தேவாரத்திலும் எடுத்துக் கூறப்படுவதைப் பல இடங்களில் காணலாம். ஒரு கற்பத்திலிருந்த பிரமனும் திருமாலும் சிவபெருமானுடைய அடிமுடி தேடியதை வெவ்வேறு கற்பகங்களுக்குரிய பிரமன் திருமால் ஆகியோர்கள் செயலாகக் கருதுவது பொருத்தமன்று.

**3 சிவ பரத்துவம் யதுர்ந்தம்,**

வேதம், கர்மகாண்டம், ஞானகாண்டம் என்னும் இரு பிரிவுகளைக் கொண்டுள்ளது. கர்மகாண்டம் பூர்வபாகம் எனவும் ஞானகாண்டம் உத்தர பாகம் எனவும் சொல்லப்படும். ஞான காண்டம் வேதத்தின் முடிவாக உள்ளது இவ்வுத்திர பாகத்தில் நூற்றெட்டு உபநிடதங்கள் உள்ளன. இவற்றுள் முப்பத்திரண்டு உபநிடதங்கள் முதன்மை பெற்றவை. இம் முப்பத்திரண்டனுள்ளும் தசோப உபநிடதம் முக்கியமானது. அதைவிட மாண்டூக யோக உபநிடதம் மிக முக்கியமானது இதில் "முத்தியில் விருப்பமுடையவருக்கு முத்தியின் பொருட்டு மாண்டூக்யோபநிடதம் ஒன்றே போதும் என இராமர் ஆஞ்சநேயருக்கு அறிவுறுத்தியதாகச் சொல்லப் பட்டுள்ளது. "இருதயத்தில் பிரணவத்தின் அர்த்த தேவதை புருடோத்தமோத்தமரான சிவம் எனவும் அச்சிவம் பிரகிருதியின் பாற்பட்ட பிரமன், விஷ்ணு உருத்திரன் என்னும் திரிமூர்த்திகளுக்கும் அப்பாற்பட்ட நான்காம் பொருள்" என்று கூறி அவரை "சதுர்த்த" ஒலியால் இவ்வுபநிடதம் விளக்கியுளது. அதர்வண வேத பஸ்மஜா பாலோப உபநிடதமும், "பிரம விஷ்ணு ருத்திரர்களை கடந்தவரும் உபாசிக்கத் தக்க ஏகநாம் சாட்குண்ய சம்பந்தமான சிவம் நான்காம் தெய்வமாகிய சிவம் என வெளிப்படையாக நிலைநாட்டியுள்ளது.

இக்கருத்தைச் சைவ சமய ஆசிரியர்கள் நால்வரும் தமிழ் மறையாகிய தேவாரத்திலும் திருவாசகத்திலும் எடுத்தியம்பியுள்ளார்கள். சிவபெருமான் "மூவராய முதல்வர்" மூவருமாகி இருவருமாகி முதல்வனுமாய் நின்ற மூர்த்தி" "மூவராய முதலொருவன்" படைத்தளித்து அளிப்ப மும்மூர்த்திகளாயினை" என திருஞானசம்பந்தர் துதிக்கிறர். "முந்தையார் முந்தியுள்ளார்" "மூவர்க்கு முதலானுன்காண் முந்தைகாண் மூவரினும் முதலானுன்காண்" என திருநாவுக்கரசு நாயனர் சிவபெருமானை புகழ்ந்துள்ளது 4, 5, 6 திருமுறைகளில் காணலாம். "மூவரும் தனதாம் மூல முதற்கரு" "மூவராயும் இருவராயும் முதல்வனேயாம்" என சுந்தரமூர்த்தி சுவாமிகள் குறிப்பிடுகிறர்.

சிவபெருமானை மூவரில் ஒருவர் எனக் கருதுதல் பாவம் என்பதை "மூவரென்றே எம்பிரானெடு மெண்ணி விண்ணுண்டு மண்மேல் தேவரென்றே இருமாந்தென்ன பாவந் திரிவரே" என மாணிக்கவாசகர் எச்சரிக்கிறர். மற்றும் "தேவர்கோ வறியாத தேவ தேவன் செழும் பொழில்கள் பயந்து காத்தழிக்கு மற்றை மூவர் கோனய் நின்ற முதல்வன் மூர்த்தி" முன்னை "மூவர்க்கு முற்றுமாய் முற்றுக்கும் பின்னை" "முந்தியு முதனடு விறுதியுமானய் மூவருமறிகிலர் யாவர் மற்றறிவார்," "தேவதேவன் மெய்ச்சேவன் தென் பெருந்துறை நாயக்கன், மூவருலு மறியொணு முத

லாயவானந்த மூர்த்தியான்" மூவரு முப்பத்து மூவருமற்றெழிந்த தேவருங் காணுச் சிவபெருமான்" என அப் பெருமானுர் வாரி வழங்கியுள்ள வாசகங்கள் திருவாசகத்தில் அணி செய்கின்றன.

4. சைவ வைணவ இணைப்பு

சிவபெருமானையும் திருமாலையும் இணைக்கும் வகையில் சில கருத்துக்கள் உள்ளன. "சிவபெருமானுக்குப் பாணமாகவும் அவர் ஏறும் மால் விடையாகவும், அவரைப் பூசிப்பவராகவும். அவருக்குப் பெண்டிராகவும் அப்பெருமானது நிருத்தத்தில், மத்தளசேவை செய்பவராகவும் அன்பு பாராட்டியவர் மாதவன் அல்லவா" எனச் சிவானந்தலகரி சிவபெருமானிடத்துத் திருமால் கொண்ட அன்பைப் பாராட்டுகிறது "மேலும் எல்லா வித்தைகளுக்கும் ஈசானன் ஆதிகுரு, இவருக்குச் சீடராகிய மகாவிஷ்ணு சர்வ ஞானக் கடலாம்" என உபப்பிரஹ்மணம் கூறுகிறது. இதனை ஒன்றே "விஷ்ணுவடிவாகிய ஞான குருவே" எனத் தாயுமானவர் தெரிவித்துள்ளார். அர்ச்சுனன் கண்ணனைச் சிவலிங்கமாகப் பாவித்து வழிபட்டபோது, அக்கண்ணன் மீது அர்ச்சிக்கப்பட்ட பூக்களைச் சிவபெருமான் ஏற்றுக்கொண்டார் என்பதை வில்லிபுத்தூராழ்வார் தமது பாரதத்தில்

'கண்ணன் மேலணி மலரணித்
துங்காயெரி
மன்னன் மேற்கண்டலும்
மகிழ்ந்து மேதினி
யுண்ணும் மாதவன் சிவனுருவ
மென்றுணர்ந்து
அண்ணலுமுடன்
புளகரும்பினனரே." என

எடுத்துக் காட்டுகிருர் மேலும் விஷ்ணுமூர்த்தி உமா தேவியின் அம்சமாகிய புருஷ சக்தியாய் இருப்பதால்,

"அரியலால் தேவியில்லை ஐயன்
ஐயன் ஞர்க்கே"

எனவும் காவியம்

"கண்ணனாகிக் கடல் வண்ணனுகி
நின்ற தேவியைப் பாகம் வைத்தார்
திருபயற்றூரனுரே"

எனவும் திருநாவுக்கரசு நாயனுர் துதிக்கின்ருர். ஆழ்வார்களுள் சிலர் கொண்டுள்ள கருத்தை இனிக்காண்போம்.

"ஒருவருக்கு (சிவபெருமானுக்குப்) பெயர் அரன். மற்றவருக்கு (திருமாலுக்குப்) பெயர் நாராயணன், ஒருவருக்கு வாகனம் இடம், மற்றவருக்குரியது கருடன். ஒருவருக்குப் பிரமாணம் ஆகமம், மற்றவருக்கோ பிரமாணம் வேதம் ஒருவர் வசிக்குமிடம் மலை (கயிலாயம்) மற்றவரது இருப்பிடம் கடல் (பாற்கடல்) ஒருவருக்குத் தொழில் சங்காரம், மற்றவர் தொழில் காத்தல். ஒருவர் கையில் இருப்பது வேல், மற்றவர் கொண்டுள்ளது சக்கரம். ஒருவர் வடிவம் சோதி மற்றவர் மேகம், ஆதலால் திருமால் வடிவத்தோடு சிவன் விளங்குகிருர்." எனப் பொய்கையாழ்வார் பாடியுள்ளார். நம்மாழ்வார் மும்மூர்த்திகளையும் சேர்த்து அவர்கள்மீது பாமாலை சூட்டியுள்ளார். இத்தகைய பாமாலைகளில்,

"நீராய் நிலனாய்த் தீராய்க் காலாய்த்
நெடுவானுய்
சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனுய்
அயனுய்
கூராராழிவெண் சங்கேத்திக்
கொடியோன் பால்
வாராய் ஒருநாள் மண்ணும்
விண்ணும் மகிழவே"
முனியே நான்முகனே முக்கண்
ணப்பா என் பொல்லாக்
கனிவாய்த் தாமரைகண்
கருமாணிக்கமே என் கள்வா
தனியேனுருயிரே என் தலைமிசையாய்
வந்திட்டு
இனிநான் போக வொட்டேன்
ஒன்றும் மாயம் செய்யேல் என்னையே

என்றும் கருத்தமைந்த இவ்விரு பாடல்களைக் காணலாம்.

## 5. ஒன்றே குலமும் ஒருவனே தெய்வமும்

இவ்வாக்கு திருமூலர் தந்த அருள் வாக்கு. எங்கும் கையாளப் பெறுவது யார் யார் எவ்வப் பெயரிட்டழைப் பினும், சிவபெருமான் மாதொரு பாக மாய் அருள் புரிவார் என்பதை "யா தொரு தெய்வங் கொண்டீர் அத் தெய்வமாகி யாங்கே மாதொரு பாக னார் தாம் வருவார்" என சிவஞான சித்தியார் குறிப்பிடுகிறது ஆனல், அவ்வாறு மாதொரு பாகனார் வரும் போது எத்தெய்வத்தின் வடிவத்தில் வழிபாடு செய்யப்படுகிறதோ அத் தெய்வத்திற்குரிய அதிகார வரம்பிலே நலம்பெற இயலும். ஆதலால் முதல் வராகிய சிவபெருமானை வழிபடுவ எல்லையற்ற அவரது ஆற்றல் அடிப் படையில் எல்லா நன்மைகளையும் நாம் பெறலாம் சிவபெருமானது சிறப்புப் பெயர் சிவன் என்பதாகும் "சி" இடத்தில் என்னும் பொருளைத் தரும் ஓரெழுத்து ஒரு மொழி இது மெலிவித்தல் எனவும் மிகுவித்தல் எனவும் பொருள் தரும். பந்த பாசங் களை மெலிவித்துச் சிவசக்தியை மிகு விக்கும் என்பதாகும் "வ" என்னும் ஓரெழுத்து ஒருமொழி சிவசக்தியைக் குறிக்கும். "சிவன்" என்னும் சொல் லுக்குப் பேரின்பத்திற்குக் காரணன் என்றும் முற்றுணர் வினன் என்றும் தூய தன்மையன் என்று மூன்று பொருள்கள் உண்டு என மாதவச்சிவ ஞான சுவாமிகள் விளக்கம் தந்துள் ளார்கள். சிவபெருமானுக்குப் "பவன்" என்னும் பொதுப்பெயரும் உண்டு இப்பெயர் உருத்திரருக்கும் உண்டு "விரிந்துள்ளவன்" என்பது பவன் என்னும் பெயரில் அடங்கியுள் ளது சிவபெருமான் உயிர்களைப் பேரன் போடு ஆட்கொண்டு அருள்பாலிப் பார். இவரை வழிபடும்போது சிவன் என்று துதிக்காமல் "பவன் பவன்" என வழிபட்டால், சிவபெருமான் அருள்புரிய விரைவில் வரமாட்டார். எனினும் "பவன் பவன்" என்னும் பெயரைச் சிலர் விடாப்பிடியாய்ப் பிடித்துத் திரிந்து பல நாள்களும் அலைவதைக் கண்ணுற்று வருத்த முற்று "இவர்கள் இவ்வாறு அழைப் பதை விடமாட்டார்கள் போல் தோன்றுகிறது என எண்ணி கருணை கூர்ந்து அவர்கள்முன் எதிர்ப்படுவார். அது சாயமாவது "சிவன்" என ஓர்ந்து வழிபட்டால் அவர் அருள் பாலிக்கக்கூடும். இத்தகைய நுண் ணிய கருத்தைக் கொண்டுள்ளது.

"சிவன் என்னும் நாமம்
தனக்கேயுடைய செம்மேனி
யெம்மான்
ஆவன் எனை யாட்கொண்டளித்திடு
மாகில் அவன் தனையான்
பவுன் எழுதும் நாமம் பிடித்துத்
திரிந்து பன்னாள் அழைத்தால்
இவள் ஏணப் பனனுள்
அழைப்பொழியான்
என்றெதிர்ப்படுமே"

என்னும் திருநாவுக்கரசுநாயனர் திரு விருத்தத்தில் காணலாம்

யாவர்க்கும் மேலான தேவதேவ ராகிய சிவபெருமான் அருமறையின் உட்பொருளாக இருப்பதோடு நான் முகன் திருமால் ஆகிய இவ்விருவ ருடனும் கலந்து பெரியோராகியும் பெரும்பற்றப்புலியூராகிய சிதம்பரத் தில் ஐந்தொழில்களையும் இயக்குவ ராகியும் நடராஜப்பெருமானுகக் காட்சியளிப்பதைச் சித்தரித்துக்காட் டும் தேவாரம் பாடலுடன் 'மூவருக்கு முதலாய முதல்வன்" பெருமையைக் கூறி அமைதி பெறுவோமாக.

"அறியானை அந்தணர்
தம் சிந்தையானை
அருமறையின் அகத்தானை
அணுவையார்க்கும்
தெரியாத தத்துவனைத்
தேனைப் பாலைத்
திகழ் ஒளியைத் தேவர்கள்
தக்கோனை மற்றைக்
கரியானை நான் முகனைக்
கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக்
கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப்
புலியூரானைப்
பேசாத நாளெல்லாம்
பிறவா நாளே."

—திருநாவுக்கரசுநாயனர்.

# நன்னுமம்

புலவர் பா. செந்தில்நாயகம்

வாழ்வில் எல்லாரும் வேண்டுவது இன்பம். அதுவும் துன்பம் கலவாத இன்பம். இன்னும் சொல்ல வேண்டு மானுல் அழியாத இன்பம். இதனை 'இறவாத இன்பம்' என்ருர் காரைக் காலம்மையார். நோயற்ற இடத்தே தான் இறவாத இன்பம் காணலாம். நோய் மூன்று வகைப்படும். அவை உடலையும், மனத்தையும், உயிரையும் பற்றியதாம். முன்னது இரண்டினும் பின்னது மிகக் கொடுமையானது. விடாது வழிவழி வருவது. இதனைப் பெரியோர்கள் 'பிறவிநோய்' என்பார் கள். 'மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே' 'அல்லற்பிறவி அறுப்பானே' என மாணிக்கவாசகரும்; 'எழுகடல் மணலை அளவிடினதிகம் என திடர் பிறவி' என அருணகிரியாரும் வினை பிறவி, அல்லற்பிறவி, இடர்பிறவியும் எனவும் சுட்டியுள்ளமை அறியலாம். பிறவிப் பெருங்கடலாயிற்று. இதனை கௌரியென்னும் பெண் தனது ஐந்தாவது வயதில் அறிந்தாள் என்பதனை பரஞ்சோதியார்,

"பெருங் கௌரி யென்றழைத்தனர்
பிராயமோரைந்திற்
சாருங் கௌரியும் பிறவிநோய்
தணிப்பதற் குறுதி
தேருஞ் சிந்தையடந்தையை
வணங்கி யிச் சென்னம்
ஈருந் தெய்வத மந்திரமியாதென
வினவ"

என்பதால் பிறவிநோயை உணர வைப்பதுடன், பிறவிநோய் ஒழிக்கும் மந்திரத்தையும் கேட்டதை உணர வைக்கின்ருர்.

இந்த நோயைப் போக்குவதற்கு வழிதேட வேண்டியதே பிறவியின் நோக்கம். இதனை அறிந்து போக்கிக் கொள்ளக் கூடியதும் இம்மானிடப் பிறவியே 'புல்லாகிப் பூடாய்ப் புழு வாய்...... ..........எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான் மெய்யே யுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்' எனும் மணி வாசகப் பெருமான் திருவாக்கும்; குனித்தபுருவமும் கொவ்வைச் செவ் வாயிற் குமிண் சிரிப்பும் - பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறும் -- இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப் பெற்றுல் - மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிந்த மாநிலத்தே' எனும் நாவரசர் தேவாரமும் எல்லாம் வல்ல எம்பெருமானின் ஆனந்தத் தாண்டவத்தைக் காண இப்பிறவி வேண்டும் என்பதை வலியுறுத்திக் கூறுபவையாம். இம்மானுடப் பிறவி தான், இறையுணர்வு பெறுவதற்கும், இறைவனைக் காண்பதற்கும், வழி படுவதற்கும், நாமம்போற்றுவதற்கும் வினையான் வந்து வினைக்கீடாவதான இப்பிறவியின் உயர்வையும், இழிவை யும் எண்ணிப்பார்த்து, ஏற்றது உணர்ந்து, பிறவிநோய் போக்கிக் கொள்ள வழியாய் இருப்பது என்பதை உணரலாம்.

**பிறவிநோய் போக்கிக் கொள்ள வேண்டுவது யாது?**

மந்திரம் - தந்திரம் - மருந்து. இம் மூன்றினையும் தனித்தனியே

தேடியலைந்து பெறுவதினும் இம் மூன்றும் ஒன்ருக ஓரிடத்து கிடைக்கப் பெறுவோமானல், அது நாம் செய்த நற்றவப் பயனன்ருே! இம் மூன்றும் தானேயாகி உயிர்க்குஉதவும்உபகாரி யாக இறைவனுள்ளான், தீராத பிறவிநோயைப் போக்கிக் கொண்டு புள்ளிருக்கு வேளூரில் வைத்திய நாதனுய்யுள்ள தன்மையை ............ 'பேராயிரம் பரவி வானேரேத்தும் பெம்மானைப் பிரிவிலா அடியார்க் கென்றும்-வாராத செல்வம் வருவிப் பானை-மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித் தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னை" என நாவரசர் மருத்துவனை மதியுடையார்க்குக் காட்டி நின்ருர்.

அருந்துணையாய் அடியார்தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தாய் - மந்திரமாய் பிறவிப் பிணிபோக்கும் பெம்மானின் திருப்பெயரே நன்னுமம் என்பார்,

"கல்வினே டெணேப் பூட்டி யமண்
கையர்
ஒல்லை நீர்புக நூக்க வென்
வாக்கினல்
நெல்லை நீன்வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றி உயர்ந்
தேனன்றே"

என நன்னுமம் இன்னதெனச் சுட்டிக் காட்டுகின்ருர் நவரசர். நற்ருள் என்பதற்கு 'பிறவிப் பிணிக்கு மருந்தாகலின்' என உரை கண்டார் பரிமேலழகர். 'இதனல் நன்னுமம் என்பதும் பிறவிப் பிணிக்கு மருந்தாம் என்பது போதரும்.

'இருவினைப்பாசமும் மலக்கல் ஆர்த்தலின்-வருபவக்கடலில் வீழ் மாக்கள் ஏறிட அருளுமெய் அஞ்செழுத்து' என்ருர் சேக்கிழார் 'சொற்றுணை வேதியன்' என்னும் தேவாரத்தில் ......நற்றுணையாவது நமச்சிவாயவே' என இதனை விளங்க வைத்தார் சூலை நோயால் ஆட்கொள்ளப்பட்ட ஆளுடைய அடிகள்.

இந்நாமம் தான் உயர்ந்தது என்பது எப்படி:

முக்கண்ணனுன சிவபெருமான் அமரருள் முதல்வனுவது போல மந்திரங்கள் எல்லாவற்றினுக்கும் தலைமையாக இருப்பது ஐந்தெழுத்தே என்பதை.

முக்கணுயகனமரருள்
முதல்வனுமது போற்
தக்க மந்திர மெவற்றினுந்
தலைமை யைந்தெழுந்தே
தொக்க நான்மறைப் பிரணவ
மாதியாத் தொடங்கி
வொக்க வோதியே பரகதி
யளப்பில ருற்ருர்.

எனக்கூறும் பிரமோத்திர கண்டத்தால் அறியலாம்.

இறைவனே இம்மந்திர வடிவினன்:

"அகரவுகர மகமே விந்து நாத மாகிய வக்கரமைந்துமிலிங்கமாகப் பகருமதன் மிசை சிகரந்துடியதாகப் பரிவினுடன் வீசியகை வகரமாக, யகர மிகுமபயகரமாக நீடுமெரிநகர மாக முயலகனில் பாத மகர நிலையாக மணிமன்றுனூடே வான்கருணை வடிவாகி நடஞ் - செய்வானே"

என்பதால் தில்லை வெளியிலே உயிர்கள் உய்யும் பொருட்டு ஆனந்த நடனம் புரியும் நடேசப் பெருமானே பஞ்சாக்கர வடிவினன் என உணரவைத்திருக்கிருர்கள். பொன்னம்பலத்தில் இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த எல்லையில் தனிப்பெரும் கூத்தினை: ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள, அளப்பரும் காரணங்கள் நான்கும்; சிந்தையே ஆகக், குணம் ஒரு மூன்றும் திருந்து சாத்தவிகமே யாகக் கண்டு கண்டு, அதனல் வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியில் மலரவேண்டும் என்பார் சேக்கிழார். 'கண்காள் காண்மின்களோ கடல் நஞ்சுண்ட கண்டன்தனை' என்ருர் நாவரசர். ஆனந்தக் கூத்தாலும் அவன் திரு

வுருவைக் கண்களால் கண்டும், மந்திரவடிவான அவன் நாமத்தை மனத்தால் எண்ணியும் வழிபடவேண்டும் என்பார் 'ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கூனமில்லை என்றார் வாசீசர் மனம் ஒன்றி, தன்னை மறந்து தலைப்பட்டவிடத்து 'என்று வந்தாய் எனும் அருட்குறிப்பை அறியலாம் எனவும் கூறுவர்.

இறைவனது வடிவான
இவ்வைந்தெழுத்தும் மூவகையாம்

"சந்திரற் சடையில் வைத்த
சங்கரன் சாமவேதி
அந்தரத் தமரர்பெம்மான்
ஆனல்வெள்ளூர்தியான்றன்
மந்திரம் நமச்சிவாய"
என்பதாலும்;
"வைத்தபொருள் நமர்காமென்று
சொல்லி மனத்தடைத்து
சித்தமொருக்கிச் சிவாயநம"
என்பதாலும்;
"விண்ணினர் பணிந்தேத்த
வியப்புறும்
மண்ணினர் மறவாது சிவாய"
என்பதாலும்;

நமச்சிவாய, சிவவாயநம, சிவாய என்னும் இம் மூவகையாகலும் இறைவனது நன்றுமை மந்திரத்தை ஓதலாம் என நமக்கெல்லாம் வழி காட்டினர் அப்பர் பெருமான்.

இதனை எவ்வாறு ஓதவேண்டும்?

வேதம் நான்கினுர் மெய்ப்பொருளாகி விளங்கும் நாதன் நாமமாகிய நமச்சிவாயத்தை "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி 'ஓதவேண்டும் என்பார் ஆளுடையபிள்ளையார். "நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே நிறைந்து நிறைந்து ஊற்றெழுங் கண்ணீரதனல் உடம்பு நனைந்து நனைந்து "ஓதவேண்டும் என்பார் இராமலிங்க அடிகள்' நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளேதான் புக்கு நிற்கும் பொன்னார் சடைப்புண்ணியன்' என்பர் அப்பர்.

இந்நன்னுமம் சொல்வதால்
அடையும் பயன் யாது?

குலந்தரும் நீதிமிக்க
குணந்தரும் வேதஞ்சொல்லும்
பலந்தரும் உயர்ந்த
சாயுச் சியந்தரும் பழுதிலாத
தலந்தரும் எல்லாம் வல்ல
சயந்தரு நிறைந்த செல்வ
நலந்தரும் பெருமை குன்றா
நயந்தரு நமச்சிவாய"

என்ற நம்பி திருவிளையாடல் செய்யுளால் நாம் அடையும் பயன்களை நன்கு அறியலாமல்லவா?

இத்துணை நன்மை செய்யும்
நன்னுமத்தை மறக்கலாமா?

"பெற்றதாய்தனை மகமறந்தாலும்
பிள்ளையைப் பெறுந்தாய்
மறந்தாலும்
உற்றதேகத்தை உயிர் மறந்தாலும்
உயிரைமேவிய உடல் மறந்தாலும்
கற்ற நெஞ்சங் கலை மறந்தாலும்
கண்கள் நின்றிமைப்பது மறந்தாலு
நற்றவத்தவர் உள்ளிருந்தோங்கும்
நமச்சிவாயத்தை நான் மறவேனே"

என மறவாது ஓதியோதி வடலூர் வள்ளலாகி, அற்புதங்கள் பல நிகழ்த்தி நம்மை யெல்லாம் ஆட்கொண்டிருக்கிறார் வள்ளல்.

இதுகாறும் பிறவிநோய் கொடியது—அதனைப் போக்கக் கூடிய மந்திரமும் தந்திரமும் மருந்துமாகி உயிர்களுக்கு அருள் பாலிக்கிறான் இறைவன் என்பதும், அவனது திருப்பெயரே நன்னுமம் என்பதும், அதனைக் கூறும் முறையும், இதனல் பெறும் பயனும் கண்டோம். எல்லாம் தரவல்லது இறைவன் திருப்பெய ரென்பதும் கண்டோம்.

இதனினும் நன்னுமம் உண்டோ?
இல்லை என்பாரை மறுத்து
உண்டு என்பாரும் உண்டு.

திருமயிலையில் திருஞான சம்பந்தப் பெருமான் என்புருவான பூம்பாவையைப் பெண்ணாக்கிய காலத்து, உமையொரு பாகனான சிவபெருமானது அடியார்களுக்கு உணவளித்தலான மகேஸ்வர பூசையையும், அவனது

திருவிழாக்களின் அழகு கண்டு மன நிறைவுறுதலாகிய இரண்டுமே மண்ணில் பிறந்தார் அடையும் உண்மைப் பேறுகளாகக் கூறியுள்ளார்,

'மண்ணினிற் பிறந்தார்
பெறும்பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை
அமுது செய்வித்தல்
கண்ணினால் அவர் நல்விழாப்
பொலிவு கண்டார்தல்
உண்மையாமெனில்
உலகர்முன் வருக'
என உரைப்பார்

என்பது சேக்கிழார் வாக்கு. இவ்விரண்டிலும் மகேஸ்வர பூசையே முதன்மைத் தன்மை வாய்ந்தது என்பதை நாயன்மார்கள் நன்கறிந்திருந்தார்கள் என்பது வெள்ளிடை மலை.

ஒருவன் ஒரு செயலைச் செய்து ஒரு பயனை அடைவதைக் காட்டிலும், ஒரு செயலால் இருவிதப் பயனை அடைவது அறிவுடைமை ஆகுமல்லவா? கொடியசையும்கோயிலில்உள்ளஇறைவனுக்கு ஒரு பொருளைத் தந்தால், அது நடமாடுங் கோயிலாகவுள்ள அடியார்களுக்குக் கொடுத்ததாகாது. ஆனல் நடமாடுங் கோயிலாகவுள்ள அடியார்களுக்குக் கொடுத்தால் அது நடமாடுங் கோயிலில் உள்ள இறைவர்க்குமாகும் என்பதை

படமாடக் கோயின் பகவற்
கொன்றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங்காகா
நடமாடக் கோயில் நம்பர்க்
கொன்றீயில்
படமாடக் கோயில் பகவற்க தாமே"

எனும் திருமந்திரத்தால் மேற்கண்ட உண்மையை விளங்க வைக்கின்றார் திருமூலர் இறைவன் உயிர்களுக்கு குருவழியாகவும், இலிங்க வடிவாகவும், அடியார்கள் மூலமாகவும் அருள் புரிகின்றான் என்பதை விளக்கி நிற்பதே அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாறு

இருவிதப் பயனை ஒருங்கெய்த எண்ணியோ என்னவோ அந்தணராம் அப்பூதியடிகள் ஒரு நெறியாம் திருநெறிபற்றினர். சமணர்கள் கருங்கல்லில பிணைத்து கடலில் வீழ்த்திய காலத்தும், அதனையே தெப்பமாகக் கொண்டு கரையேறிய அப்ப மூர்த்திகளிடத்து, அளவிலாப் பேரன்பு கொண்டு, வடிவுதாங்காணுராயும் மன்னுசீர் வாக்கின் வேந்தர் அடிமையும், செஞ்சடையான் அருளிய அருளுங்கேட்டு, அவர் பெயரான் மடங்கள் தண்ணீர்பந்தல் முதலியன அமைத்தார் மனையிடத்துள்ள அளவைகள், நிறைகோல் மக்கள் ஆவொடு மேதிமற்றும் உள்ள எல்லாவற்றிற்கும் அரசின் நாமம் சூட்டி ஒழுகினர் என்பதறிவோம் தன்மகனை விடந்தீண்டிய காலத்தும் மகனை மறைத்து மகேஸ்வர பூஜை நடத்த முற்பட்டார் அந்தணர் என்பதும் அறிவோம். இதனல் திருநாவுக்கரசு பெருமானல் திருப்பழனத்துத் தேவாரத்தில் 'அஞ்சிப்போய் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி-இஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய் கோடியையே" எனப் பாடப்பெறும் பேறு பெற்றார்.

இவர் செய்ததெல்லாம் மெய்யடியாராகிய அப்பர் பெருமானின் திருப்பெயரைக் கூறியும் எழுதியும் வந்ததுமே இப்படிக் கூறியும் எழுதியுமே துன்பில் பதம் பெற்றார் அப்பூதியடிகள் என்பதை சிவப்பிரகாசர்,

உற்றுனலன்ற வெந்தீயினின்
றுனலன் ஊண்புனலா
வற்றுனலனுகர்வுந் திருநாவுக்கரசு
எனும் ஓர்
சொற்றுன் எழுதியுங் கூறியுமே
என்னுந் துன்பில் பதம்
பெற்றுன் ஒரு நர்பியப்பூதி யென்
னும் பெருந்தகையே"

என்னும் பாசுரத்தால், தவஞ்செய்யாது. தீயில் நில்லாது உணவு முதலியவை தள்ளாது பெற்ற சிவானந்தப் பேற்றைக் கூறுகின்றார். அப்பூதியடிகள் சிவானந்தப் பேறு பெறக் காரணமாக இருந்த மந்திரம் நாவுக்கரசு என்பதாம். இத்திருப்பெயர் நாதன் நாமத்தினும் நன்மைம் என

நான் எழுதின் எவரேனும் நம்புவார் களா? நடனசபேசன் நன்னுமம் என்னபெரும் பயனைத் தருமோ, அப் பயனை ஆளுடைய அடிகளின் திரு நாமமும் தந்தது என்பதனை, திங்களூர் அந்தணர் அடைந்த பேற்ருல் அறிய லாம். இத்துணைச் சிறப்பு இந்நாமத் துக்கேது? நன்னுமம் பெற்ருேனுகிய சிவபெருமான் தானே ஒரு பெயரை நன்னுமம் என்ருன் என்ருல் மறுப் பார் உளரோ?

தெய்வநெறிச் சிவம்பெருக்கும் திரு வாமூரில் வேளாளர் குலத்தில் புகழ னூர்க்கும் மாதினியார்க்கும் மகவாகப் பிறந்து, மருள் நீக்கியார் என்ற பெய ரோடு வளர்ந்து, சமண சமயம் புகுந்து தருமசேனராகி, தமக்கை யாராம் திலவதியாரின் வேண்டு கோளுக்கிரங்கி, சூலப்படையோன் தந்த சூலை நோயால் துன்புற்று, தமக்கையின் அருளால், திருவதிகைக் கோயில் கொடிக்கம்பத்தின் கீழ் நின்று "கூற்ருயினவாறு" பதிகம் பாடினுர். பாடியதைக் கேட்ட பரம் பொருளான திரு வீரட்டத்தெம் பெரு மான் அடிகளுக்கு நாவுக்கரசு என்று பெயரிட்டு, அதனை நன்னுமம் என்றும் கூறியதை "பாவுற்றலர் செந்தமிழின் சொல் வளப்பதிகத் தொடை பாடிய பான்மையினுல் நாவுக்கரசு என்றுலகேழினும் நின் நன்னுமம் நயப்புற மன்னுக" என்றி யாவர்க்கும் வியப்புற மஞ்சுறைவா னிடையே ஒருவாய்மை எழுந்தது வே" என்னும் சேக்கிழார் வாக்கால் அறியலாம் (மன்னுக என்பதை நண்ணுக) என்றும் கொள்வர் சிலர். இறைவனே நாவுக்கரசு எனும் பெயரை நன்னுமம் என்பது நோக்க அதன் சிறப்பு விளங்கும் ஈற்றுவரி யைக் கவனித்தால் வாய்மை எழுந் தது என்பதால் நன்கு விளங்கும் வானிடை ஒரு வாய்மை ஆகாயத்தி னிடை ஓர் உண்மை வாக்கு ஒலி இறைவனது அசரீரி யென்னும் திரு மேனியினின்றும் தோன்றும் சத் தாகிய ஒலி ஏகாரம் வியப்பின்கண் வந்த அசைநிலை சத்துப் பொருளு டைய ஒலி என்றலுமாம்

உலகேழினும் நன்னுமம் மன்னுக (நண்ணுக) என்றது எவ்வுலகத்துள் ளாரும் அதனைப் போற்றியுய்யக் கடவர் என்பதாம் நாயன்மார்கள் திருநாமங்களே தம்மைப்போற்றிய வர்களைக் காத்து உய்விக்க வல்லன என்பது திருத்தொண்டத் தொகை யாற் பெறப்படும் உண்மை. 'ஞான சம்பந்தரென்னு நாமமந்திர முஞ் சொல்ல ஆனபோதயர்வு தன்னை அகன்றிட (திருஞான-புரா-721) என்பதும் திருநாமக் கோவைதனை மந்திரமாக்கொண்டு' என்றதும் சிந்திக்கத்தக்கன நாவுக்கரசு-ஞான சம்பந்தர் என்ற திருநாமங்களை ஒற்று நீக்கி எண்ணுங்கால் திருவைந் தெழுத்தைப்போல ஐந்தெழுத்தாத லும் குறிக்க திருநாவுக்கரசெனும் ஓர் சொற்ருன் எழுதியுங் கூறியுமே துன்பில் பதம் பெற்ருன் ஒரு நம்பியப் பூதி' என்றதுங்காண்க.

இவற்றையெல்லாம் பக்த பஞ்சாக் கரம் என்பர்.

இப்படிக் கூறும் பக்த பஞ்சாக்கரங் களில் பசுபதியால் நன்னுமம் என்று கூறப்பட்டது நாவுக்கரசு எனும் 'திருப் பெயர்தான் என்பது பெற்ரும். சிவானந்தப்பேறு அளிக்கும் நாவுக் கரசு எனும் நற்பெயரே 'நன்னுமம்' என்பது அடியேனின் தாழ்ந்த எண்ணம்.

இந் நன்னுமத்தை எந்நேரமும் அன்பால் கூறி அடியார் உள்ளத் துறை நடராசப் பெருமானின் பேரரு ளும் ஒருங்கு பெற்று சியானந்தப்பேறு பெறுவோமாக.

திருச்சிற்றம்பலம்!

# The Chidambaram Dikshitas and their Administration of the Temple of Sri Nataraja.

*Thiru T. RAMALINGA DIKSHITAR, M.A., M.Litt.*

Sri Nataraja temple at Chidambaram is unique in its having a separate Community of Dikshitas[1] as the sole worshippers as well as the trustees of the same temple from an antique period. They form a small group or a sect called "TILLAI MUVAYIRAVAR" excluded from the other Dikshitas in the Brahmin Community in general.

The local tradition explains great eminence to them. They claim their divine origin and hold the opinion that Lord Nataraja Himself is one of them. It is confirmed with the following textual[2a,b] evidences which prove the above theory.

Lord Siva describes thus in the Chidambara Mahatmya, the vital character and greatness of the Dikshitas to Nandi and inform them that they understand fully the sanctity and greatness of Nataraja at Chidambaram. The presiding deity of this shrine, Lord Nataraja is claimed as one of these "Three thousand Dikshitas". They are well versed in all scriptures and the Sastras. They are familiar for their performance of many Sacrifices like Soma, Vajapeya etc., These Dikshitas, even to-day are worshipping Nataraja, observing the Vaidika form of worship laid down by the sage Patanjali in his 'Puja Patanjalam'. Nataraja is performing His Ananda Tandava at Chit Sabha for ever to bless the Dikshitas and other devotees of this temple.

Besides the Saivite Nayanmars – Sundarar, Appar & others also have described the greatness of these Dikshitas in their Devara hymns[3,a,bc]. These brahmins are placed in the fore-front of the devotees of Siva. It is believed the Lord Thyagesa initiated the first line of the work of Saint Sundara-murty - called 'THIRUTTONDA-TOKAI' as follows[4]. One of the salient features of this great temple is that in no other temple we have a whole community, forming the trustees and Archakas at one and the same time with every member being empowered to manage the temple from his

very birth as in the case of Chidambaram temple.

Edgar Thurston describes the Dikshitas and their administration of this temple thus[5].

"Another name for this section is Tillai Muvayiravar i. e, the three thousand of Tillai (now Chidambaram) They do not give their girls in marriage to the other sections of Brahmins and they do not allow their women to leave Chidambaram. Hence arises the proverb- "A Tillai girl never crosses the boundary line." "The Dikshitas are the priests of the temple of Nataraja at Chidambaram, where they serve by turns. The chief sources of income are the PAVADAI and KATTALAI (heaps of cooked rice piled up or spread on a board which are offered to the God). "The Dikshitas are mostly Yajurvedis, though a few are Rigvedis."

J. H. Garstin, M. C. S. Collector of South Arcot-1878-(Manual of the South Arcot District) says- "The management of the pagoda is singular. It may be described as a democratic hierarchy. One charming peculiarity of the institution is that no accounts are kept."

Prof. M. Raghava Aiyangar- (Some aspects of Kerala and Tamil Literature. Travancore University Extension Lectures 1945-46) says about "Tillai Muvayiravar"-

'We hear of groups of servants of God like the famous Tillai Muvayiravar. This group was one of the learned brahmins engaged in temple services. They had the hereditary right of crowning the Chola kings. What is more important, they had also the right of service in the Visnu temple at Chidambaram and were the devotees of this God too, as is witnessed by the songs of Tirumangai Azhvar and Kulasekhara Azhvar[6].

We are told in the Siva Bhakta vilasa of Upamanyu (Ch-XVIII-70-77) that the Tillai Dikshitas compromised the long-standing antipathy between St. Nilakantha and his wife, when both of them came to the Court of Tillai i.e. DEVA SABHA for judgment.

Now we have only about two hundred Dikshitas worshipping Sri Nataraja. It is interpreted thus according to tradition[7]. thus - Kritayuga - Three Thousand Dikshitas - Tretayuga - two housand, Dvaparayuga - Thousand and in the Kaliyuga-only two hundred.

In this connection it should be mentioned that St. Umapati Sivacharya of Kotravangudi (1290 - 1340 A. D) was one of the Dikshitas of Chidambaram temple. He was an erudite scholar in Sanskrit and Tamil.

He was one of the prominent exponents of Saiva Siddhanta Philosophy and the author of eight Saiva Siddhanta treatises out of total fourteen. He wrote numerous works in Tamil and Sanskrit on Saivism, Agamas and Chidambaram -, notable among his works are Pauskara

Agama Bhasya, Kunchitanghri Stavam,

*Their Administration of the Temple:-*

The Chidambaram Dikshitas form an institution among themselves. They are the heriditary trustees of the temple; and hence their trusteeship is inalienable. They are an endogamous clan. Every married member of the community is eligible to become the trustee and archaka of the temple. In a family both father and son will enjoy equal rights in the management of the temple. The temple was at no time under the governmental management.

This temple does not possess landed property. The routine worship of the temple deities is conducted by the Dikshitas, partly by the contributions by the Dikshitas themselves from their own funds and by the collections of subscriptions from the devotees given periodically. They perform six pujas daily in the central temple of Sri Nataraja, which are met out of the Kattalai funds established by the pious devotees like-Estates of Pachaiyappa Mudaliar, V. S. Estate, Rajah Tondaiman of Puduukottai, Dharmapuram and Tiruvaduturai Adinams, Raja Sir Annamalai Chettiar. The Main festivals of the shrine are also celebrated from out of the contributions of the Ubhayakaras. There is no hundi collection in the Chidambaram temple as inthe case of other big temples.

The Podu Dikshitas will conduct administrative meetings periodically either in the Deva Sabha (Perambalam) or in the Kalyanamandapam. They have their own elaborate rules for the proper and effective management of the temple. A sacred lamp will be brought from the KANAKA SABHA in every meeting by the Common man. This lamp is honoured as the Represntative of Nataraja Himself by the Dikshitas.

The Podu Dikshitas have classified the entire temple of Chidambaram into five main temples for the proper worship and maintenance among themselves by turn. Viz.

1. Nataraja temple, 2. Sivakama-Sundari temple, 3. Pandyanayaka-temple, 4. Sri Mulanatha temple and 5. Deva Sabha (Perambalam). There will be four members in all these five temples who are in charge of the temples and jewels of the deities, during their turn. A turn period covers 20 days.

The Podu Dikshitas select eight members every year among themselves by turn to manage the temple. They will elect one of them as the Secretary of the current year. The Secretary will represent all the Podu Dikshitas in all the temple affairs. He will nominate his Assistant Secretary, who will be in charge of the temple while the Secretary is on leave. This is called managing committee of the Podu Dikshitas. Thus the Chidambaram temple administration by the Dikshitas is a democratic one.

# Foot Notes :-

1. Vide: My Thesis on "A Study of Chidambaram and its Shrine As recorded in Sanskrit Literature - Annamalai University - 1965.

2.a. Chidambara Mahatmyam-Ch. V. Vs. 1–24 &Ch. XXIV - Vs 82 & 83.

महेश्वरः-

"त्रिसहस्त्रद्विजास्तत्र निवसन्ति निरन्तरम् ।
वागेव मधुरा येषां शारदेति निगद्यते ॥
सुदक्षिणैर्महायज्ञैस्तर्पयन्तस्सदा सुरान् ।
अकृत्रिमेण चित्तेन मम पूजां प्रकुर्वते ॥
अहमप्येक एवास्मिन्तेषु नन्दिन् द्विजन्मसु ।
तत्रैव वर्तमानस्तैस्साकं प्रीतो भवामि च ॥

किंच-

"हिरण्यवर्मन्नेतेषु मुनिष्वेको नलक्ष्यते ।
कथं त्विदमिति स्वान्ते मा कृथा महतीं शुचम् ॥
शुध्दान्वयानामेतेषां ज्वलत्पावकरोचिषाम् ।
अहमेकस्त्रिसाहस्रसंख्यासंख्यातिपूरकः ॥ "

b. Siva Bhakta Vilasa of Upamanyu - Purva Bhaga Ch. XXI - 14–19.

उपमन्युः-

"सन्ति तिल्ववने तत्र चिदम्बरपुरे वरे ।
हिरण्यवर्मणानीतास्त्रिसहस्रमहीसुराः ॥
समधीतचतुर्वेदाः षडङ्गाध्ययनोत्सुकाः ।
अभ्यस्तधर्ममीमांसान्यायविस्तरकोविदाः ॥
पुराणज्ञातभूतार्था धर्मशास्त्रप्रवर्तकाः ।
प्रातः स्नानकृतोत्साहा विधिनाहितवन्दयः ॥
चिदम्बरनटेशानपूजोत्सवविधायिन ।
पश्यन्तस्सर्वदाशंभोः परमानन्दताण्डवम् ॥ "

"श्रीमत्तिल्लवनस्थानां त्रिसहस्रद्विजन्मनाम् ।
श्रीमहाशैवमुख्यानां दासदासोऽस्मि सर्वदा ॥ "

*திருவுடையந்தணர், தெய்வ வேதியர்கள், தில்லை மூவாயிரவர், மும்மையாயிரவர், தில்லையந்தணர்*

3a. திருஞானசம்பந்தர்

"கற்றுங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றுர் வாழ்தில்லைச் சிற்றம்பலம்"
"ஆடினுய் நறுநெய் யொடுபால் தயிர்
அந்தணர் பிரியாத சிற்றம்பலம்"

3b. திருநாவுக்கரசர்

"தினைத்தினை வேதங்குன்றுத் தில்லைச் சிற்றம்பலம்
செந்தியார் வேள்வி ஓவாத்தில்லைச் சிற்றம்பலம்"
"பொருவிடை யொன்றுடைப் புண்ணியமூர்த்தி புலியதளன்
உருவுடையம் மலைமங்கை மணுள னுலகுக்கெல்லாந்
திருவுடையந்தணர் வாழ்கின்ற தில்லைச் சிற்றம்பலவன்
திருவடியைக் கண்டகண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே."

3c. சுந்த்ரமூர்த்தி நாயனுர்

"முட்டாத முச்சந்தி மூவாயிரவர்க்கு மூர்த்தி யென்னப்
பட்டானைப் பத்தராய்ப் பாவிப்பார் பாவமும் வினையும்போக."

4. திருத்தொண்டத் தொகை

"தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கு மடியேன்"

5. Castes and tribes of Southern India – Edgar Thurston – Vol I. A & B - Brahmin – 'Dikshita' - P. 338.

6. "மூவாயிர நான்மறையாளர் நாளும்முறையால் வணங்க அணங்காய சோதி,
தேவாதிதேவன் திகழ்கின்ற தில்லைத்திருச் சித்திரகூடஞ் சென்று சேர்மின்களே."
— பெ. தி. 3-2-8

"செந்தளிர்வாய் மலர்நகைசேர் செழுந்தண்சோலைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னு
ளந்தணர் களொருமூவா யிரவரேத்த
வணிமணியா சனத்தமர்ந்தவம் மான்றுனே." — குல தி. 10-12

7. Chidambara Rahasya (Mss.) and Daharavidya Khanda (Mss.)

"त्रिसाहस्रं द्विसाहस्रं
साहस्रं द्विशतं तथा।
सन्त तिल्लवने विप्राः
क्रमात्कृतयुगादिषु ॥"

(ஸ்ரீ உமாபதிசிவாசார்யார் அவர்களின் தமிழ் நூல்கள் சில கொடிக்கவி, கோயிற் புராணம், சேக்கிழார் புராணம், திருத்தொண்டர் புராண சாரம், திருமுறை கண்ட புராணம்)

॥ श्रीशिवकामसुन्दर्यै नमः ।

## —: श्री शिवकामसुन्दरी ताडङ्क महिमा :—

Vyakarana, Nyaya, Vedantha Mimamsa Siromani, Panditha Raja,
*SOMA SETHU DIKSHITAR*

शताधिकवत्सरात्प्राक् प्रवृत्तः कुम्भाभिषेकः। ततःपरं अधुनैव विरोधकृत् पुष्य 23 6—2—72 भानुवासरे कुम्भलग्ने प्रातः अष्टवादनसमये सपरिवारायाः शिवकाम सुन्दरीदेव्याः कुम्भाभिषेकः प्रवर्तते । तत्र प्रथमतः शिवकामसुन्दरीनामनिर्वचनं, ततः देव्याः महिमवर्णनं ततः अस्याः एकान्तस्थितिहेतुनिरुपणं, अथ तदीय ताडङ्कस्य उत्कर्षश्च प्रतिपादनीय इति मनीषा । प्रथमतः शिवशब्दः विचार्यते ।

(1) शिवशब्दः शोभनवचनः। "श्वः श्रेयसं शिवं भद्रं" इत्यमरकोशात्। शिवाः शोभनाः सर्वज्ञत्वादयः गुणाः अस्य सन्तीति शिवः । अर्श आदेः आकृतिगणत्वात् अच्प्रत्ययः ।

(2) अशेषकल्याणगुणैकनिलयः परमेश्वरश्शिवः ।

(3) शेते अस्मिन् सर्वमिति शिवः। सर्वकारणी भूत इतियावत् ।

(4) शाम्यतीति शिवः। सर्वविकार शून्यः इत्यर्थः ।

(5) वेष्टीति शिवः। सर्वव्यापीत्यर्थः ।

(6) वष्टि इच्छति लोकहितमिति शिवः । "वशकान्तौ शिवः स्मृतः। वर्णव्यत्यस्सिद्धः"। इति वचनात् निष्पन्नः शिवशब्दः ।

(7) शिवं मङ्गलं करोतीति शिवः ।

(8) शुद्धत्वात् शिवः । शुद्धत्वंच सर्वजीववृत्याणवकार्माणमायेयारव्यानमलत्रयाभावरूपं नैर्मल्यलक्षणम् ।

अणुः जीवः तस्यानादिजीवतापादकः अविद्यासम्बन्धः आणवमलम् । अनादिकर्मफल वासना रूपं कार्माणं मलम् । अस्ति प्रकाशते इति व्यवहारसामग्र्यां सत्यामपि नास्ति न प्रकाशते इति व्यवहारयोग्यत्वरूपमावरणं मायेयं मलमिति प्रसिध्दम् । तादृशमलत्रयाभावश्च परमात्मनि अकर्मवश्ये सर्वज्ञे संभवती त निर्मलता ज्ञेया इतिशैवमतप्रसिद्धिः ।

(9) वष्टीति शिवः। वशकान्तौ इति धातोः पचाद्यचि रूपसिध्दिः। कान्तिरिच्छा। इच्छाश्रयः। इच्छाशक्तिरूपपराशक्त्यभिन्नदेव्याः आश्रय इत्यर्थः।

(10) शक्तिमत्वात् शिवः। तथा चाहुरभियुक्ताः। शक्तिश्च शक्तिमांश्चैव पदार्थद्वयमुच्यते। शक्तिरेतज्जगत्सर्वं शक्तिमांश्च शिवः स्मृतः। इति।

(11) अन्यदेवावाचकत्वे सति महादेवैकवाचकत्वं शिवशब्दस्य रूढ्यर्थे बोध्यम्।

अथ कामशब्दः विचार्यते।

(1) कमनीयत्वात् कामः। अतिसुन्दर इत्यर्थः।

(2) कामं यथेच्छं रूपं अस्येतिवा कामः।

(3) प्रज्ञानमेव वा कामः। तथाचश्रुतिः—

"यदेतत् हृदयं मनश्च एतत् संज्ञानं अज्ञानं विज्ञानं प्रज्ञानं मेधा दृष्टिः धृतिः मतिः मनीषा जूतिः स्मृतिः संकल्पः क्रतुः असुः कामो वश इति सर्वाण्येवैतानि प्रज्ञानस्य नामधेयानि भवन्ति" इति। अत्र प्रज्ञानशब्देन शिव एवोच्यते। तथाचोक्तं स्कान्दे, ब्रह्मगीतायां "प्रज्ञानस्य शिवस्यास्य नामधेयानि असंशयम्। इति जगत्सिसृक्षावान् ईश्वरः कामपद वाच्यः। तथाच श्रूयते बृहदारण्यके "आत्मैवेदमग्र आसीत् एकएव सोऽकामयत इत्यादि एतावान् वै कामः" इत्यन्तम् शिवश्चासौ कामः च शिवकामः। तस्य सुन्दरी मनोज्ञा पत्नीति यावत् शिवकामसुन्दरी।

(2) शिवा च सा कामा च शिवकामा। शिवकामा च सा सुन्दरी च इति वा समासः। शिवाभिन्ना मङ्गलरूपा कमनीया मनोज्ञा च देवी इत्यर्थो ज्ञेयः।

(3) शिवं कामयते इति शिवकामा। साच सा सुन्दरी च शिवकामसुन्दरी। सदा भक्तानां मङ्गलं कामयमाना वर्तते इत्यर्थः।

(4) शिवं कामी शिवकामी परमशिवजाया सा च सा सुन्दरी च शिवकामिसुन्दरी।

(5) शिवस्य कामा शिवस्य प्रेमास्पदा। साच सा सुन्दरी च शिवकामसुन्दरी।

II

इयं च महादेवी शिवकामसुन्दर्यम्बा ज्ञानशक्तिरूपा चिदम्बर श्री नटराजदेवालय प्रागमप्राकारे शिवगङ्गायाः प्रत्यग्भागे विद्यमाने स्वर्णध्वजस्तम्भालंकृतेशक्तित्रयात्मकप्राकारपरिवृते महति शिकामकोष्टाभिधे स्थाने पद्मपीठे तिष्टन्ती दक्षिणोर्ध्वहस्ते जपमालां, अधोहस्ते श्वेतकुमुदं, वामोर्ध्वहस्ते शुकवत्सं च धरन्ती अधःकरं कटिप्रदेशे न्यस्यन्ती स्वर्णनिभा ऽदिनेता भक्तानां कारुण्यामृतवर्षिणी च चकास्ति। अस्याः उपासनेनैव श्रीमूलेति द्राविड भाषाप्रसिद्धः सिध्दः, आदिशंकरभगवत्पादाचार्याः, पतञ्जलिव्याघ्रपादहयग्रीवादयः

मुनिवर्याश्च परां सिध्दिंलेभिरे। प्रथमप्राकारं वरितः श्री भरतमुनि प्रणीत नाटयशास्त्र लक्ष्य भूताः सुन्दरशिलाप्रतिमाः भित्तिषु परिदृश्यन्ते। पश्चिमप्राकारस्थगुहायां श्रीशंकर-भगवत्पादा योगनिष्ठायां आसन् इति वृध्दाः कथयन्ति। उत्तरप्राकारस्थश्रीचक्रकोष्टे श्री चक्रप्रतिष्टा बहोः कालात्पूर्वं आसीत् इति तत्स्थलदर्शनेन ज्ञायते। अतः अधुना तत्कोष्टं नवीकृत्य तत्र श्रीचक्रप्रतिष्टा क्रियते। चित्रगुप्तदेवालयः पृथक् अत्र वर्तते। चित्रापूर्णिमायां अत्र विशेषतः अभिषेकादिकं प्रचलति। व्दितीयप्राकारे उत्तरभागे शिवानन्दकूपः विद्यते। अनेनैव तोयेन अम्बिकायाः कालत्रयाभिषेकः प्रचलति। नवरात्रदिनमहोत्सवः लक्षार्चना च कन्यामासे प्रवर्तते। तुलामासे एकादशदिनपरिमितमहोत्सवः ध्वजारोहणपूर्वकं प्रचलति। नवमदिने रथोत्सवः दशमदिने धान्योत्सवः एकादशदिने विवाहमहोत्सवश्च महता आडम्बरेण प्रचाल्यते। विशेषदिनेषु अम्बा स्वर्णकवचेन आपादतलमस्तकं अलंक्रियते। महामहिम-शालिन्याः शिवकामसुन्दर्यम्बायाः सन्निधौ तन्मूलमन्त्रपंचदशाक्षरीबालात्रिपुरसुन्दर्यादि मन्त्रजपकरणेत अम्बाप्रसादसिद्धिः जायेत। तथाचोक्तं महेश्वरेण

"यत्रास्ति भोगो नच तत्रमोक्षः यत्रास्ति मोक्षो नच तत्र भोगः ॥

श्री सुन्दरीसेवनतत्पराणां भोगश्चमोक्षश्च करस्थ एव।

इति। श्री शिवकामसुन्दर्याः नामान्तराण्येव ललिता, षोडशीमहाविद्या, श्रीविद्या, बालात्रिपुरसुन्दरी, इत्यादीनि। तस्याः उपासना प्रकारः महिमा च ललितात्रिशती, सहस्रनाम, ललितोपाख्यानं, श्रीविद्यासपर्यापद्धतिः श्रीविद्यार्णवः, त्रिपुरारहस्यं, वरिवस्यारहस्यं, त्रिपुरसुन्दरीमानसपूजापद्धतिः, श्रीकालिदासीयदेवीपञ्चस्तवी, भावनोपनिषद्, त्रिपुरोप-निषद्, देवीउपनिषद्, देवीमाहात्म्यं, देवीभागवतं, सौन्दर्यलहरी, चिदम्बरपुराणं, इत्यादि ग्रन्थरत्नेषु स्पष्टं प्रतिपादितः।

## III

अस्याः पृथक् देवालयं प्रति किञ्चित्कथयामः। शिवालयेषु विष्णवालयेषु च सर्वेषु शिव-लिङ्गस्य विष्णोः च पृथगालयः यथा, तथा देव्याः लक्ष्म्याश्च पृथगालयः परिदृश्यते। तथैव अत्रापि देव्याः पृथगालय इति वक्तव्यलेशो ऽपि नास्ति। अथापि अस्याः नाथः कुत्र वर्तते इति नको ऽपि जानाति। अतः अयमेव अंशः कथनीयः प्रकृते। मन्त्रात्मकः रहस्यरूपी श्री नटराजमूर्तिरेव अस्या देवः। सकलरूपिणः श्रीनटराजराजस्य देवी व्दिकरा पार्वती नाम्नी क्रियाशक्तिरूपा वामभागे लसति। अतः देव्याः पृथगालयावस्थानं समीचीनमेव। तथाचोक्तं चिदम्बरपुराणे, पुण्डरीकपुरमाहात्म्ये" मन्त्रस्वरूपो मन्त्रेशः (अ 9, 108 श्लो) इति यत्रदेवो महादेवः वर्तते मन्त्रविग्रहः (अ 9, 103 श्लो) तथाचोक्तं अभियुक्तैः – श्रीचक्रादिविशेषयन्त्र-घटितं मित्तिस्वरूपं सदानन्दज्ञानमयं नटेशशिवयोः संमेलनं बोधयत्। श्री जाम्बूनदबिल्व-पत्ररचितैः मालागणैः लञ्छितं, कस्तूरीमसृणं चिदबरमिदं स्थानं रहस्यं विदुः इति। अत एव

उक्तं चिदम्बरोत्पन्नैः आदिशङ्कर भगवत्पादाचार्यैः सौन्दर्यलहर्यां 97 श्लो, तुरीया काचित्त्वं दुरधिगमनिस्सीममहिमा, महामाया विश्वं भ्रमयसि परब्रह्ममहिषी। इति, परब्रह्मस्वरूपिणः आकाश लिङ्गात्मकस्य रहस्यदेवस्य श्री नटराजमूर्तेः धर्मपत्नीइत्यर्थः। तथाचोक्तं कालिदासेन – सकलजननीस्तवे श्लो 10, जगत्काये कृत्वा तदपि हृदये तच्च पुरुषे, पुमांसं बिन्दुस्थ तदपि वियदाख्ये च गहने। तदेत् ज्ञानाख्ये तदपि परमानन्दगहने महाव्योमाकारे त्वदनुभवशीलो विजयते॥ इति। अत एव रहस्यदेवदेवालयवाम भागे अस्याः देवालयस्य अवस्थानं समीचीनम् प्रतिभाति। यद्वा शिवगङ्गारूपिणः शिवस्य पत्नी इयं शिवकामसुन्दरी। अत एव अस्याः पुरतः अयश्शलाकानिर्मितगवाक्षः अधुनापि दृश्यते। जलरूपिणं भगवन्तं स्वपतिं पश्यन्तीं तिष्ठति। शिवगङ्गायाः शिवस्वरूपत्वज्ञापनायैव प्रत्यक्तीरेशिवलिङ्गं जले मग्नं दृश्यते। तस्य च अभिषेकः श्री नटराजमूर्तेः षडभिषेकदिनेषु नटराजाभिषेकाचार्यैः नटराज ाभिषेकानन्तरं क्रियते। तच्च लिङ्गं आतपकाले सम्यक् दृष्टिगोचरो भवति। अद्य च रुद्राभिषेकादिकं असकृत् प्रचलति। तथाचोक्तं चिदंबरपुराणे पु मा अ 6-79

स्वभक्तानां कदाचित्तु सर्वतीर्थावगाहने।
वान्छा यदि भवेत्तर्हि तत्पूर्त्यर्थं सभापतिः॥
शिवगङ्गास्वरूपेण वर्तते स्वयमेवतु।
अतः तत्सदृशं तीर्थं त्रैलोक्येऽपि नविद्यते॥ तथाचान्यत्र–9-104

पश्यन्तीं तीर्थवर्यंतु देवी यत्रस्थिता मुने।
सर्वविद्यास्वरूपा सा तत्रैव निवसेत् बुधः॥
यस्याः प्रसादान्मुनिना शब्दशास्त्रं प्रवर्तितम्।
पतञ्जलिसमाख्येन सा सदा यत्र तिष्ठति॥
शिवाभिन्ना परानन्दा तत्रैव निवसेत् बुधः।

तथा तिल्लवन माहात्म्येऽपि 7-39

भवान्याश्चालये देवीं भवानी परिपूजिता।
ज्ञानांबा ज्ञानपूर्णा च ज्ञानज्ञेया विराजते॥
शिवस्य मुख्यकाम्यत्व सुन्दरत्वप्रदायिनी।
सापि मुख्या च काम्या च सुन्दरीति प्रसिद्धितः॥
उभयोरशब्दयोश्चापि सुन्दरत्वं प्रकाशते।
शिवशब्दं चये मर्त्याः तथा च कामशब्दकं॥
सुन्दरीति च तच्छब्दं त्रिविधंमोक्षसाधकं।
नित्यं जपं कुर्वतां च सर्वपापप्रणाशकम्॥
शिवगङ्गाभिधानस्य तीर्थस्य निकटेदिशि।
पश्चिमायां महादेव्याः आलयोऽपि चिरन्तनः॥ इति।

चिदंवरमाहात्म्ये च,

शिवकामां महादेवीं त्रैलोक्यजननीं शिवाम्। 17-66
शिवस्य नटराजस्यशक्तिं पृथगिव स्थितां 17-63

शिवपूर्वपदा नाम्ना भवानी कामसुन्दरी। इति 1-34

"चिदंवरे तु मीनाक्षी" इति देवी भागवतवचनात् शिंवकामसुन्दर्याः मीनाक्षी इतिं च नामप्रसिद्धम्। अत एव मधुरा मीनाक्षीसन्निधौ कर्तव्यप्रार्थनापूजादिकं अत्रैव कुर्वन्ति अभिज्ञाः।

## IV

ताडङ्कमधिकृत्य निरूपयामः। तालं तालपत्रमिव अङ्कथते लक्ष्यते इति, अङ्क, घञ्, लस्य डत्वं, शकन्ध्वादित्वात् साधुः ताडङ्कः कर्ण भूषणं। ताडङ्कं कङ्कणंचैव सौमङ्गल्यस्य सूचकम्। इति वचनात् ताडङ्कस्य प्राधान्यं स्त्रीणां बोधितम्। इदं च पतिस्वरूपमेव। अतएव पतिरहिताभि स्त्रीभिः न ध्रियते। प्रकृते च श्रीचक्राङ्कितं स्वर्णताडङ्कं अम्बायाः कर्णयोः लसति। ताडङ्कयुगली भूततपनोडुपमंडला (22) इति ललितासहस्रनामसु। लसत्काञ्चन-ताडङ्कयुगला (13) ललिताष्टोत्तरशतनामसु। प्रथमनाम्नि ताडङ्कयुगलं, कर्णाभरणद्वयं तस्य स्वर्णादि भवस्यप्रकृतेऽभावात् अभूततद्भावे च्विः। तथा संपद्यमाने तपनस्य सुर्यस्य उडुपस्य चन्द्रस्य मण्डलं यस्याः। तदुक्तं "सूर्यं चन्द्रौ स्तनौ देव्याः तावेव नयने स्मृतौ" इति। "उभौ ताडङ्कयुगलं" इति वैदिकी श्रुतिः। इति भास्कराचार्याः भाष्येकथयन्ति। ताडङ्क-महिमा शंकराचार्यैः सौन्दर्यलहर्यां प्रतिपादितः।

सुधामपि आस्वाद्य प्रति भयजरा मृत्युहरिणीं
विपद्यन्ते विश्वे विधिशतमखाद्या दिविषदः।
करालं यत्क्ष्वेलं कबलितवतः कालकलना
न शंभोः तन्मूलं तवजननि ताडङ्कमहिमा॥ इति। 28 श्लोके।

महाभयदायकजरामृत्युशमनकारिसुधापानकरणेनापि ब्रह्मेन्द्रादि देवगणाः क्षीणपुण्याः विशीर्णाः "क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति" इति श्रुत्युक्तरीत्या भूमण्डलमाविशन्ति। परन्तु करालहालाहलविषं पीत्वा अपि तवपतिश्शिवः अमरोऽभवत्। अस्य च कारणं किमिति विचार्यमाणे तव ताडङ्कस्य महिमा इति ज्ञायते। तथा च सिद्धमिदं ब्रह्मविद्या श्री शिव-कामसुन्दरी, सच्चिदानन्दं सदा अखण्डं अजरं अमरं ब्रह्म शिवः, ब्रह्मज्ञानं सौभाग्यभूषणं ताडङ्कं। येन ताडङ्केन नित्यशिवत्वं सिद्धं भवति। अत एव चिदम्बरोत्पन्नाः आदिशंकराचार्याः शिव-कामसुन्दरीध्यानेन सम्यक् ज्ञानंप्राप्य दिग्विजयप्रयाणे विजित्य वादिनः काञ्चीक्षेत्रं गत्वा कामाक्ष्याः ताडङ्कप्रतिष्टामकुर्वन्निति चरित्रप्रसिद्धम्। तत्ज्ञापनायैव अधुना रत्नताडङ्कसमर्पणं क्रियते। अचेतनस्य ताडङ्कस्प सकलार्थ प्रदत्वं स्याच्चेत् अम्बिकायाः महिमा कैमुदिकन्याय-सिद्धः। ययावा श्री नटराजमूर्तेः कुंचितचरणस्य श्रैष्ठ्यं प्रतिपादितम्।

